உ

சிவமயம்

# சங்க இலக்கியம்

## எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும்

சைவ சித்தாந்த மகா சமாஜம்
திருவருளகம், 22-ஏ, கல்லுக்காரத் தெரு, மயிலாப்பூர்
சென்னை



சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை

1940

உரிமை பதிவு செய்யப்பட்டது

ஒரு பிரதி விலை ரூ. 3-4

பிரதிகள் விலை ரூ. 12



## எட்டுத் தொகை

நற்றிணை[1] நல்ல குறுந்தொகை[2] ஐங்குறுநூறு[3]
ஒத்த பதிற்றுப்பத்[4] தோங்கு பரிபாடல்[5]
கற்றறிந்தா ரேத்துங் கலியே[6] அகம்[7] புறம்[8]என்
றித்திறத்த எட்டுத் தொகை.

## பத்துப்பாட்டு

முருகு[1] பொருநாறு[2] பாணிரண்டு[3 4] முல்லை[5]
பெருகு வளமதுரைக் காஞ்சி[6]—மருவினிய
கோலநெடு நல்வாடை[7] கோல்குறிஞ்சி[8]ப் பட்டினப்

பாலை[9] கடாத்[10] தொடும் பத்து.

## உ ரி மை யு ரை



அமிழ்தினு மினிய தமிழ்க்குவரம் பாகெனத்
தொகையும் பாட்டு மெனுமிரு தொகுதியில்
வான்றோய் பெரும்புகழ்ச் சான்றோ ரருளிய
மெய்யுறு சிறப்பிற் செய்யு ளனைத்தையும்
ஏடுகள் கொண்டு பாடந் திருத்தி
அகர வரிசையிற் புலவர்பெயர் நிறுவி
ஆனாப் புகழ்ப்பெயர் காணா தாரை
இறுதியில் நிறுவியோ ரினிய முறையில்
அறிஞர் கழகம் ஆய்ந்து வழங்கிய
அரியவிப் பதிப்பின் பெரிய வுரிமை
செஞ்சொற் புலமை விஞ்சுநலத் தகையர்
தாயினுஞ் சிறந்த தமிழ்மொழி வளர்தர
உடல்பொரு ளாவி மூன்றும் உதவியோர்
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியத்தொடு
நற்றிணை முதலா நவிலெண் தொகையும்
முருகு முதலா வருபத்துப் பாட்டும்
அரிதிற் கண்டு பொருவறப் பதிப்பித்துத்

தூய வுள்ளமொடு தொண்டுகள் புரிந்த
பேரறி வாளர் தங்கட்கு
ஆர்வ நெஞ்சமொடு அளித்தனம் மகிழ்ந்தே.



உ
சிவமயம்

## முகவுரை



நீல மேனி வாலிழை பாகத்
தொருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே.

அருந்தவத்தோன், ஆதிரை முதல்வன், ஆலமர் செல் வன், ஆனேற்றுக் கொடியோன், கொன்றையலங்கலந் தெரியலான், சீறருமுன்பினோன், செல்விடைப்பாகன், புதுத் திங்கட் கண்ணியான், பைங்கட் பார்ப்பான், மணிமிடற் றெண்கையான், மழுவாள் நெடியோன், முக்கட்செல்வன் எனப் பல்வேறு சிறப்புப் பெயர்களால் சங்கப்புலவர்கள் புகழ்ந்து கூறும் முழுமுதற் கடவுள் திருவருட்டுணைகொண்டு அப்புலவர்கள் பாடிய சங்க

இலக்கியம்,) இன்று நமது சமாஜத்தின் அடக்கவிலைச் சுத்தப்பதிப்பாக உருக்கொண்டு, தமிழன்னையார் செலுத்தும் காணிக்கையாக, நன்பாட்டுப் புலவ ஞய்ச் சங்கமேறி நற்கனகக்கிழி தருமிக்கு அருளிஞேன் திருவடிகளிற் சமர்ப்பிக்கப் பெறுகின்றது.

இப்பதிப்பு, திருத்தமாகவும் செவ்விய முறையிலும் வெளிவருதற்குரிய வேலை தொடங்கி இற்றைக்கு ஏழாண்டுகள் ஆகின்றன. சங்கநூற் புலவர்கள் பெயர் அகராதி 1933-ம் வருஷத்தின் பிற்பகுதியில் தொகுக்கப்பட்டது. அவ்வாண்டின் இறுதியில் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையினர் வெளியிட்ட பொன்மலர்க் கட்டுரையில் அது முதலில் பிரசுரிக்கப்பட்டது. பின்னர் அது நமது சமாஜப் பதிப்பாக 1934-ம் வருஷத்தில் வெளிவந்தது. அவ்வகராதி வெளிவந்தவுடன்,



அதைக் கண்ணுற்ற தமிழாசிரியர் பலரும், தமிழ் மாணவர் பலரும், அவ்வகராதி வரிசையிலேயே, சங்கப்புலவர்கள்

பாடியவற்றை மூலமும் உரையுமாக அச்சிடுதல் வேண்டுமென்று நமது சமாஜத்துக்குத் தெரிவித்தார்கள். பழைய வுரைகளினுடைய திட்பத்தைப் பாதுகாத்து, இக்காலத்தவர் எளிதில் அறியக்கூடிய நடையில் எழுதப்பெறும் புத்துரையே தாங்கள் விரும்புவதென்றும் மேற்கூறிய தமிழாசிரியரும் மாணவர்களும் வற்புறுத்தினர்கள். பல் நண்பர்களோடு இதைப்பற்றி நன்கு ஆலோசித்ததில், இப்பெருந்தொண்டின் முற்பகுதியாக, மூலத்தைமட்டும் செம்மையாக அச்சிடுதல் நலமென்பது விளக்கமாயிற்று. மூலத்தை அச்

சிடுங்கால் கிடைக்கக்கூடிய ஏட்டுப் பிரதிகள், கையெழுத்துப் பிரதிகள், அச்சுப் பிரதிகள் ஆகிய எல்லாவற்றையும் சேகரித்து ஒவ்வொரு பாட்டினையும் பரிசோதித்து, மூலத்

தைச் செப்பஞ் செய்தல் அவசியமாகுமென்று பல தமிழ்ப் பேரறிஞர்கள் அன்போடு தெரிவித்தார்கள்.

ஏட்டுப்பிரதிகளும் கையெழுத்துக் காகிதப்பிரதிகளும் மடிந்தும் ஒடிந்தும் மறைந்தும் மழுங்கியும் இறக்கின்ற தருவாயிலிருப்பதையறிவார், அவற்ருற் கிடைக்கும் முழுப் பயனையும் இன்றே இன்னே பெறுதல் வேண்டுமென்று அவாவுவர். " செயத்தக்க செய்யாமையானும் கெடும்". என்பது வள்ளுவர்

வாய்மொழி. இப்பிரதிகளிற் கிடைக் கும் பாடங்களைக் குறிக்காமலும் வெளியிடாமலும் வாளா விருத்தல் தமிழ்க்கல்வியின் முன்னேற்றத்தைக் கெடுப்பதா கும் ; தமிழாராய்ச்சியின் வளர்ச்சியைத் தடுப்பதாகும் ;

தமிழன்னைக்கே தீங்கிழைப்பதாகும்.

ஏட்டுப்பிரதிகளின் தொகை அருகிவரும் இந்நாளில் அவற்றைப் பயன் படுத்தும் தொண்டர்படை பன்மடங்கு பெருகுதல் வேண்

டும் ; அவற்றாற் கிடைக்கும் பயன் அவ்வப்போது வெளி



வருதல் வேண்டும். இத்தொண்டு மிக இன்றியமையாத தென்பதைத் தமிழ்மக்கள் இன்னும் நன்குணரவில்லை.

அச்சுப் பிரதிகளிற் காணப்படுவன வெல்லாம் திருத்தமானவையென்றே நம்பி, ஆராய்ச்சி யுலகம் மிக

விரைவாக இயங்கும் இந்நாளில், அச்சிடுவோர் பொறுப்பு

மிகப் பெரியதென்பதையும், அச்சுப்பிரதிகளிற் காணப்படும்

பிழைகளைக் களையப் பேரறிஞர் முன்வரும்

கடமை அத
னினும் பெரியதென்பதையும் எவரும்
மறத்தலாகாது. அவ்
வப்போது வெளிவரும் பதிப்புக்களிலுள்ள
பிழைகள் அவ்
வப்போதே களையப்படாவிடின், அவை திருத்தம்
பெற
எத்துணைக் காலம் செல்லுமென்றும், அதுவரை
அவை
விளைவிக்கும் இடையூறு எவ்வளவினதென்றும்
யாவரே
கணிக்கவல்லார்?

ஆகவே, தமிழாசிரியர் முதலியோர்
தெரிவித்ததைக்
கட்டளையாக மேற்கொண்டு, நமது சமாஜ
அன்பர்கள் பிரதி
களைத் தேடிப்பெறும் முயற்சியில் ஈடுபட்டுப் பற்பல
இடங்
கட்குச் சென்று, பல பிரதிகளைச் சேகரித்தனர்.
தமிழ் நாட்
டெல்லையயுங் கடந்து, கன்னட தேசத்திலுள்ள
ச்ரவண
பெள்கொளா என்ற ஊருக்கும் செல்ல

நேர்ந்ததென்னில்,

இம்முயற்சியின் அளவு ஒருவாறு புலப்படும். இம்முயற்சி - யாற் கிடைத்த பிரதிகளின் விவரங்கள் இம்முகவுரையின்

இறுதியில் ஒரு தனி அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

இவ்வாறு பிரதிகளைச் சேகரித்த பின்னர், அவைகளை

ஒப்புநோக்கிச் சிறந்த பாடங்களைக் கொள்ளும் தொண்டு -தொடங்கப் பெற்றது. இத்தொண்டு எவ்வளவு கடுமை

யான தென்பதை என்போலியர் கூறுதல் பொருத்த

மன்று. ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, பரி

பாடல், புறநானூறு ஆகிய ஐந்து நூல்களையும் முதன் முத

லாக அச்சிட்டுத் தமிழ்நாட்டுக்களித்த மூதறிஞரும், எட்டும் viii சங்க இலக்கியம்

பிரதிகளைத் தமது உயிரினும் அரியனவாகப் போற்றிப் பாது காத்து வைத்திருப்பவரும், அவைகளைப் பரிசோதிப்பதி லேயே தமது வாழ்நாள் அனைத்தையும் மனமுவந்து செலுத்தி வருபவரும், சென்னை அரசாங்கக்கல்லூரி மாணவர்களுள் என்னையுள்ளிட்ட ஆயிரக்கணக்கானவர்களால் 'எங்கள் தமி ழாசிரியர்' என்று ஆர்வத்தோடு பாராட்டிக் கூறப் படுபவரும், மகாமகோபாத்தியாயர், தாக்ஷிணாத்ய கலாநிதி, டாக்டர் ஆகிய பட்டங்கள் இந்திய அரசாங்கத் தலைவர், காஞ்சி காமகோடிபீடாதிபதிகள், சென்னைப் பல்கலைக்கழகத்தார் இவர்களால் முறையே அளிக்கப்பெற்றவரும், தமிழ்த்தாயின் தவப்புதல்வரும் ஆகிய ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் கூறுவதை ஈண்டு நினைவு கூர்தல் நமது கடமையாகும். " ஏட்டுச் சுவடியிலுள்ள ஒருநூலை ஆராய்ந்து வெளியிடுவதில் உண்டாகும் துன்பம் மிக அதிகம். அச்சுப் பிரதியிலுள்ளவாறு ஏட்டுச்சுவடி அமைந் திராது; சுவடியில் எழுதுவோரால் நேரும் பிழைகள் பல; குறியீடுகள், கொம்பு, கால், புள்ளி முதலியவை இரா; நெடிலுக்கும் குறிலுக்கும் வேறுபாடு தெரியாது; அடிகளின் வரையறைகளும் இரா; இது மூலம், இஃது உரை, இது

மேற்கோளென்று அறியவும் இயலாது; எல்லாம் ஒன்றாக எழுதப்பட்டிருக்கும்" என்று அவர்கள் தமது பதிப்புக்களுள் ஒன்றின் முகவுரையில் இத்துன்பத்தை வருணித்துள்ளார்கள்.

இத்துன்பத்தை முழுமனத்தோடு மேற்கொண்டு ஒருசில அன்பர்கள் ஒத்துழைத்தார்கள். இத்தொண்டு இடையிடையே எல்லையில்லாதோர் இன்பத்தையும் அளித்தது. சிறந்த பாடங்கள் கிடைத்தபோதெல்லாம் விளைந்த இன்பம் கூறுந்தகையதன்று, அனுபவித்தேயறியத்தக்கது.



இச்சிலரே ஊக்கந்தளராது மிகுந்த ஆர்வத்தோடு பிரதிகளை ஒப்புநோக்கி உபகரித்தனர். இவ்வுபகாரத்தாற் கிடைத்த சிறந்த மூலபாடங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. இப் பாடங்களைக் கொண்ட மூலத்தை வெளியிடுதல் தமிழ் மொழிக்குச் செய்யும் சீரிய தொண்டாகும் என்ற நம்பிக்கை வரவர அதிகரித்து மிக்க ஊக்கத்தை அளித்தது.

இப்பதிப்பை அச்சிடத் தொடங்குமுன், பிரதிகளை ஒப் பிட்டுநோக்கி உண்மைப் பாடத்தைத்

தேர்ந்தெடுப்பதற்காகக் கையாளப்பட்ட முறைகள் மூவகைப்படும்:—(1)உரையின்றி நூல்களின் மூலமட்டுங் கிடைக்குமிடத்து, பிரதிகளிலுள்ள மூலத்தால் மட்டும் திருத்தம் செய்தல் (2) உரைகளுமுள்ள விடத்து அவைகளின் துணைகொண்டு பிரதிகளிலுள்ள மூலத்தை நோக்கிப் பொருத்தமுள்ள பாடங் கொள்ளுதல் (3) தொல்காப்பிய உரை முதலியவற்றில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட விடத்து, அவ்வுரையிற் காணும் பாடத் தோடு ஒப்புநோக்கித் தகுதியான பாடங்கொள்ளுதல். இம் முறைகளாற் கிடைத்த திருத்தங்களும் பலவகைப்படும். ஓரோவிடத்து அச்சுப் பிரதிகளிற் காணப்படாது மறைந்து விட்ட அடிகள் மீண்டும் கிடைத்தன. ஒரு சில விடங்களில் அப்பிரதிகளிற் காணப்படாது மறைந்துவிட்ட சொற்கள் புலப்பட்டன. ஒரு சில விடங்களில் அப்பிரதிகளில் மாறு பட்டுக் காணும் சொற்கள் திருத்தமடைந்தன. ஒரு சில விடங்களில் இலக்கணக்குறிப்பு, பாடினோர் பாடப்பட்டோர் குறிப்பு முதலியவற்றில் திருத்தங்கள் கிடைத்தன. ஒரு சில விடங்களில் அடிவரையறை செம்மையாக அமைந்தது. இவைகளேயன்றி, பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்தென்று ஓரளவு ஊகித்தற்குரிய

பாட்டொன்றும், பரிபாடலைச் சார்ந்ததென்று ஐயுறக்கூடிய பாடற் பகுதியொன்றும் புதியனவாகக் கிடைத்துள்ளன.

## X சங்க இலக்கியம்

இங்குச் சில உதாரணங்களைக் கொண்டு மேற்கூறியவற்றை விளக்குதல் பொருத்தமெனத் தோன்றுகிறது. பிரதிகளிற் கிடைத்த மூலத்தின் உதவியால்மட்டும் ஏற்பட்ட திருத்தத்திற்கும் மறைந்த அடிகள் மீண்டும் புலப்பட்டதற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகவுள்ளது இப்பதிப்பில் 1370-வது பாடல். இப்பாட்டின் ஈற்றயலடி இதுவரை வெளிவந்த அச்சுப்பிரதிகளிற் காணப்படவில்லை; ஓர் அரிய பிரதியின் உதவியாற் கிடைத்தது. உரையின் துணைகொண்டு மூலம் திருந்துவதற்கும் மறைந்த சொற்கள் மீண்டும் விளங்கியதற்கும் தக்கதோர் 1153-வது பாடல் அமைந்துள்ளது.

எடுத்துக்காட்டாக இப்பாடலின் 31, 32-வது அடிகள் ஏட்டுப்பிரதியில் " நிற்பாடிய வயங்கு செங்காப், பிற்பிறரிசை நுவலாமை " என்று காணப்படுகின் றன. இதுவரை வெளிவந்துள்ள அச்சுப்பிரதிகளில் இவ் வடிகள் ' நிற்பாடிய வலங்கு

செங்காப், பிறரிசை நுவலாமை' என்று தரப்பட்டுள்ளன. உரையை நோக்குமிடத்து 'வயங்கு செங்நா' என்பதே பாடம் என்பதும் 'அலங்கு செங்நா' என்பது பாடமன்றென்பதும் தெள்ளிதின் விளங் கும். "பிறபிறரிசை நுவலாமை" என்று ஏட்டுப் பிரதியிற் காணப்படுந் தொடருள் எழுதுவோரது பிழையால் 'பிற' என்ற சொல் இரட்டித்திருத்தல்கூடுமென்று ஐயுற்று நமது பதிப்பில் "பிறரிசை நுவலாமை" என்றே அச்சிடப்பட்டுள்ளது. மற்றொருமுறை உரையின் உதவிகொண்டு இவ் வடியை ஆராய்ந்தபோது ஏட்டுப் பிரதியிலுள்ள பாடம் பொருத்தமேயென்றும் "பிறபிற" என்பது "பிற்பிற" என்றும் புலனாயிற்று. ஏட்டில் ஒற்றுக்குப் புள்ளியில்லாத நிலைமையில் பிற என்ற சொல் இரட்டித்ததென்று முதலில் ஏற்பட்ட ஐயம், உரையில் "பின்னைப் பிறருடைய புகழை" என்று வருவதால் நீங்கி, உரையில் "பின்னை" யென



வருதற்குரிய மூலம் "பிற்" என்பது தெளிவாயிற்று. இப் பதிப்பின் பிழை திருத்தத்தில் "பிற் பிறரிசை" என்பதே திருத்தமான பாடமென்று

குறிக்கப்பட்டுள்ளது. இதி லிருந்து எவ்வளவு நுட்பமாகவும் விழிப்பாகவும் பிரதிகளை ஒப்புநோக்கித் திருத்தமான பாடம் கொள்ளுந் தொண்டு நடைபெற்றுள்ளதென்பது அறியக் கிடக்கின்றது. தொல் காப்பிய வுரை முதலிய விடங்களில் இந்நூலிலுள்ள பாடல் கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டதிலிருந்து மூலம் இலக்கணக் குறிப்பு முதலியன திருந்தினமைக்குச் சான்று பகர்வன இப்பதிப்பின் 93-வது பாடலும், பரிபாடற் கடவுள் வாழ்த்தும் ஆகும். 93-வது பாடலின் மூன்றுவதடி " உரவுக்கட லொலித்திரை போல " என்று இளம்பூரண ருரையிலும் இலக்கண விளக்கவுரையிலும் காணப்படுகிறது. இப்பாடமே அகவலோசை நயம் பொருந்தியிருக்கின்றது; வேறு பாடங்கொள்ளின் ஓசை சிறவாமை நோக்கத்தக்கது.

பரிபாடற் கடவுள் வாழ்த்தின் பதின்மூன்றும் அடியின்கீழ் "இஃது எருத்து" என்ற குறிப்பே இளம்பூரணருரையிற் காணப்படுகின்றது; இதுவே பொருத்தம்.

இவைகளை யெல்லாம் தொகுத்து நமது

பதிப்பில் ஓரட்டவணையாக வெளியிடவேண்டுமென்று எண்ணியதுண்டு. இவற்றின் தொகை நூற்றுக்கணக்கிலிருந்தமையாலும், இவற்றை முழுமையும் வெளியிடுவதால் இப்பதிப்பின் அளவு மிகவும் பெருகும் என்று தோன்றியமையாலும், இவ்வாறு பெருகுவதற்குத் தகப் பெரும்பயன் இல்லாமையாலும் அவ்வட்டவணை வெளியிடப்படவில்லை. பாடிய புலவர்களின் பெயரைப்பற்றிய பாடபேதங்களும், ஒரே பாடலை வெவ்வேறு புலவர்கள் பாடியதாகக் காணப்படும் பிரதிபேதங்களும், சங்கநூற் புலவர்கள் பெயரகராதி என்ற நமது வெளியீட்டில் உள்ளன. அக்காரணம்பற்றி அவை மீண்டும்



இப்பதிப்பில் வெளியிடப்படவில்லை. அவ்வெளியீட்டின் பின்னர்ச் செய்யப்பெற்ற பரிசோதனையால் அதிற் பிழையெனக்

காணப்பட்டவை இப்பதிப்பில் திருத்தப்பட்டுள்ளன.

இவ்வாறு பற்பல வழிகளில் முயன்று நூற்றுக்கணக்கான இடங்களில் செப்பஞ் செய்யப்பெற்ற மூலமே இப்பதிப்பில் தரப்பட்டுள்ளது. இவ்வளவு முயற்சி செய்தும் பொருள் விளங்காத பகுதிகள் பலவுள்ளன. அப் பகுதிகளிற் பாடம் சிதைந்துள்ளதென்பது எளிதில் அறியக் கிடக்கின்றது. பாடம் இவ்வாறிருத்தல்வேண்டுமென்று ஊகிக்கவும் இடமுண்டு. ஊகங்கள் உண்மையெனத் துணிந்தவிடத்தும், அவை இப்பதிப்பிற் பிழைதிருத்தமாக உடுக்குறியுடன் கொடுக்கப்பட்டுள்ளனவேயன்றி, மூலங்கள் திருத்தப்படவில்லை. பிரதிகளின் உதவியின்றிக் கேவலம் ஊகத்தையே

கடைப்பிடித்துப் பாடங்களை மாற்றிவிடுதல் அடாத காரியம். இப்பதிப்பில் ஒரு பாடமேனும் ஊகத்தால் மாற்றப்பட வில்லை. விளங்காத பாடங்கள் திருந்துதற்குரிய வழி ஒன்றேயுள்ளது. அது பெருமுயற்சிகள் செய்து மேன்
மேலும் ஏட்டுப் பிரதிகளைத் தேடிச் சேகரித்து அவற்றின்

துணைகொண்டு ஆராய்ந்து உண்மை காணுவதே.

இனி இப்பதிப்பின் அமைப்பு, வரிசைக்கிரமம் முதலிய வற்றைச் சிறிது விளக்குதல் நலமாகும். புலவர் பெயர்கள் . அகரவரிசையில்

வைக்கப்பட்டுள்ளன. புலவருடைய பாடல் களும்

அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, பரி பாடல், புறநானூறு என்ற நூல் முறையில் அமைந்துள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றிலுமுள்ள பாடல்கள் அதில் அவை பெற்றுள்ள எண் வரிசையிலுள்ளன. உதாரணமாக அம் மூவனார் பாடல்களை எடுத்துக்கொள்வோம். இவர் புலவர் வரிசையில் பத்தாவது இடம் பெற்றுள்ளார். இவர் பாடல்



கள் அகநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகிய நான்கு தொகைகளில் மட்டும் கிடைக்கின்றன. இப்பதிப்பில் இவர் அகநானூற்றுள் பாடியவை யனைத்தும் முதலில் தரப்பட்டுள்ளன. அப்பாடல்கள் ஆறும் அவை அகநானூற்றில் பெற்றுள்ள (10, 35, 140, 280, 370, 390) எண் முறையிலேயே இப்பதிப்பில் 16 முதல் 21 உள்ளிட்ட எண்களோடு அச்சிடப்பட்டுள்ளன. பிறகு இவர் ஐங்குறுநூற்றுள் பாடியவை வைக்கப்பட்டுள்ளன. பிறகு இவர் குறுந்தொகையிலும் நற்றிணையிலும் பாடியவை மேற்கூறிய வரிசைக்கிரமத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இப் பதிப்பு

அமைந்துள்ளபடியால் தொகையிலும் பாட்டிலி முள்ள எந்தப் பாடலையும் எளிதாக எடுத்து விடலாம்.

இந்நூலிற்காணும் புலவர்களின் பெயர்களுள் சிலவற்றில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. உதாரணமாகக் கதப்பிள்ளை, கதப்பிள்ளையார், கருவூர்க் கதப்பிள்ளை, கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார், கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் என்று ஐவகையாகப் பெயர்கள் உள்ளன. இவற்றாற் குறிக்கப்படும் புலவர் ஒருவரா இருவரா பலரா என்பது ஐயத்திற்கிடமின்றித் தெளியக்கூடவில்லை. புறநானூற்றுப் பதிப்பாசிரியர் இப்பெயர்கள் தந்தையும் மைந்தனுமாகிய இருவரைக் குறிக்குமென்கிறார்; நற்றிணைப் பதிப்பாசிரியர் இவையனைத்தும் ஒருவரையே குறிக்குமென்கிறார். நமது பதிப்பில் இப்பெயர்கள் கதப் பிள்ளையார், கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் என்ற இரு புலவர்களைக் குறிப்பனவாகக் கொண்டு பிரதிகளின் சான்றால் சில பாடல்கள் ஒருவருக்கும் ஏனையவை மற்றவர்க்கும் தரப்பட்டுள்ளன. இதிலிருந்து நற்றிணைப் பதிப்பாசிரியர் கொள்கை தவறென்று இப்பதிப்பு முடிவு கட்டி விட்டதாக எவரும் நினைத்தலாகாது. இவ்வாறே நக்கீரர், கந்தரத்தனார்

முதலிய பல பெயர்கட்கும் கொள்க. இப்பதிப்பில் ஒரு புலவருடைய பாடல்களாகத் தரப்பட்டவை இருவர் அல்லது மூவர் பாடல்களாகவும் இருத்தல் கூடும். பாடல்களிலுள்ள அகச்சான்றுகளின் துணைகொண்டும், சங்கநூற் புலவர்கள் பெயர் அகராதியின் துணைகொண்டும், மூலமும் உரையுமாக வெளிவந்துள்ள தொகை நூல்களின் துணைகொண்டும், அவற்றிற் காணப்படும் பாடினோர் வரலாறு பாடப்பட்டோர் வரலாறு முதலியவற்றின் துணைகொண்டும் ஆராய்ந்து உண்மை காண்பதே அறிவுடைமையாகும். இவ்வாராய்ச்சிக்கு ஒருசிறு கருவியாக உதவும் அளவிலேயே இப் பதிப்பு அமைந்துள்ள தென்பதை வற்புறுத்துவது நலமெனத் தோன்றுகிறது.

இப்பதிப்பை ஆராய்ச்சிக்கு ஓரளவு எளியவசதி அளிக்கும் குறிப்பு நூலாகக் கொள்ளவேண்டுமே யொழிய, எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் மூலமும் உரையுமாக வெளிவந்துள்ள அருமையான பதிப்புக்களுக்குப் பதில் இதை உபயோகிக்கலாம் என்று எவரும் கனவிலும் எண்ணி ஏமாற்றமடைதல் கூடாது. அப்பதிப்புக்களிலுள்ள உரை, விஷய அகராதி, பிரதி பேதங்கள், பாடினோர் வரலாறு பாடப்பட்டோர் வரலாறு முதலியன இப்பதிப்பில் இல்லை. உவர்நீர் அருந்தினால் தாகம் மிகும் என்பதை யொப்ப, இப்பதிப்பைப் பயிலுதல் அப்பதிப்புக்களைப் பயன்படுத்தும் வேட்கையைத்

தோற்றிப் பெருக்குமென்பதில் ஐயமில்லை. அவ்வரிய பதிப்புக்களைப் பயின்றபின் அவற்றுட் காணப் படும் நூற்பொருள்களை எளிதில் நோக்கி உணர்தற்குரிய கருவிநூலாகவும் இப்பதிப்பு பயன்படுதல்கூடுமென்று நம்பு வதற்கிடமுண்டு. ஒரு புலவர் பாடிய பாடல்களையெல்லாம் ஒருசேரப் படிக்கக்கூடிய வசதியே இப்பதிப்பாற் சிறப் பாகக் கிடைப்பது. ஒரு புலவருடைய வாக்கின்திறமை,



செய்யுளின் பெற்றி, பொருட்செறிவு, சரிதச் சான்று முதலியவற்றை ஆராய்ந்தறிய விரும்புவோர் அவர் பாடல்களனைத்தையும் ஓரிடத்தே படித்துப் பயன்பெற விரும்புவரேயன்றி, ஒன்பது நூல்களைப் புரட்டிப் புரட்டி ஒவ்வொன்றிலும் வேண்டுவனவற்றைப் பொறுக்கியெடுக்கும் சிரமத்தை மேற்கொள்ளச் சிறிதும் விரும்பார். தொகைநூல் கள் ஒவ்வொன்றனுள்ளும் குறித்த எண்களுடைய பாடல்களை

எளிதில் எடுக்கக்கூடிய வசதியும் இப்பதிப்பிலுண்டு. இப்
பதிப்பின் இறுதியிலுள்ள பல அட்டவணைகளும் அகராதி
களும் ஆராய்ச்சியாளர்கட்குப் பயன் தருவனவாகும்.

இப்பதிப்பில் வெளிவந்துள்ள சில பாடல்களைப் பற்றி
யும் சில பொருள்களைப் பற்றியும் உள்ள சில ஐயப்பாடுகளைக்
குறிப்பது அவசியமாகின்றது. பத்துப்பாட்டுக்கள் ஒவ்
வொன்றின் இறுதியிலும் சில பல பாடல்கள் காணக் கிடக்
கின்றன. அவற்றை இயற்றியவர்கள் யாவர் என்பதுபற்றி ஆராய்ச்சியாளர்கள் பல்வேறு கருத்துக்களைத் தெரிவித்துள்
ளார்கள். இவற்றுள் திருமுருகாற்றுப்படையின் இறுதியி
லுள்ள பாடல்களைப்பற்றித் துணிவாகவே அவை நக்கீரர்
வாக்கல்லவெனக் கூறுவார் தொகை பெரிது. இப்பதிப்பில்
பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்தெனக்

குறிக்கப்பட்ட
பாடல் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்
கினியரால் மேற்கோளாகக் காட்டப்பட்டுளது. இச் செய்யு
ளின் ஓசையை நோக்கும்போது ஒருபால் ஐயமும் இயல்
பாக எழுகின்றது. தொல்காப்பியத்து மெய்ப்பாட்டியல்
11-வது சூத்திர உரையில் இளம்பூரணர்

" வையை வருபுன லாட லினிதுகொல்
செவ்வேற்கோ குன்றம் நுகர்த லினிதுகொல்
வைவேல் நுதியன்ன கண்ணார் துணையாக



எவ்வாறு செய்வாங்கொல் யாமென நாளும்
வழிமயக் குற்று மருடல் நெடியான்
நெடுமாடக் கூடற் கியல்பு "

என்பதை மேற்கோளாகக் காட்டியுள்ளார். இது பரிபாடலைச் சார்ந்ததாகலாமென்று தோன்றுகிறது. உறுதியாகக் கூற இயலவில்லை. கலித்தொகை யாசிரியர்களின் பெயர்களைக்

குறிக்கும் " பெருங்கடுங்கோன் " எனத் தொடங்கும் பாடல் (பக்கம் 1372 பார்க்க) சில ஆண்டுகட்கு முன்பிருந்த அறிஞர் ஒருவராற் பாடப்பட்டதென்றும் பழைய பிரதிகளிற் காணப்பட்டில தென்றும் சில பேரறிஞர்கள் கூறுகின்றனர். எனினும் இப்பாடலிற் காணும் ஆசிரியர்கட்குரிய செய்யுட்களாகவே இப்பதிப்பில் கலித்தொகைப் பாக்கள் வெளியிடப்பட்டுள்ளன. மேற்கூறிய பொருள்களெல்லாம் பேரறிஞர்கள் ஆராய்ச்சிக் குரியனவென்றும் அவ்வாராய்ச் சிக்கு வசதியளிக்கும் நோக்கமொன்றே கொண்டு இப் பதிப்பில் அவை இடங்கொடுக்கப்பெற்றனவென்றும் கூறு வது மிகையாகாது.

இனி, இப்பதிப்புக்குச் சங்க இலக்கியம் என்ற பெயர் பொருந்துமா என்பது நோக்குதற்குரியது. பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் சங்க இலக்கியத்தின் பாற்பட்டவை என்பதை எவரும் மறுக்க இயலாது. சிலப்பதிகாரம், பதினெண்கீழ்க் கணக்கு முதலியவைகட்குச் சங்க இலக் கியம் என்ற பெயர் பொருந்துவதைப்பற்றிப் பலவகை யான கருத்து வேற்றுமைகளுண்டு. தொல்காப்பிய வுரை யுள், பேராசிரியர் மரபியல் 94-ம் சூத்திர உரையிலும், நச்சினார்க்கினியர் அகத்திணையியல் 6-ம்

சூத்திர உரையிலும் புறத்திணையியல் 26-ம் சூத்திர வுரையிலும் கூறுவனவற்றி லிருந்து எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமே சங்க இலக்கிய



மெனக் கருதப்பட்டன என்பது தெளிவாகலாம். வேற்றுமையின்றி அனைவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய பகுதிக்கே சங்க இலக்கியம் என்ற பெயரையிடுதல் பொருந்தும். இதனினும் சிறந்த பெயர் இப்பதிப்புக்குக் காணுதல் இயலாது.

நமது சமாஜம் சங்க இலக்கியத்தை வெளியிடுதல் பொருத்தமாகுமா என்று சிலர் ஐயுறுதல் கூடும். "சங்க நூல்களெல்லாம் புத்தசமண சமயச் சார்புடையன; அவைகளைப் பயிலுதல் கூடாது" என்று எனது இளமைப்பருவத்திற் சில சிவனடியார்கள் கூறியதுண்டு. இக்காலத்தின் நல்வினைப் பயனாக இக்கொள்கை மறைந்துவிட்டது. திருத்தொண்டத்தொகையுள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கூறும் பொய்யடிமையில்லாத புலவர் யாவர் என்பதை விளக்கவந்த நம்பியாண்டார்நம்பிகள் தமது வழிநூலில்,

"தரணியிற் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்க

மதிற்கபிலர்

பரணர்நக் கீரர் முதல்நாற்பத் தோன்பது
பல்புலவோர்

அருள்நமக் கீயுந் திருவால வாய்அரன் சேவடிக்கே
பொருள்அமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே "

என்று கூறுவது நமக்குறுதி தருகின்றது. சேக்கிழார் சுவாமிகள் தமது விரிநூலில் இதை மறுக்காமலும் தழுவாம ·லும் எழுதிச் செல்கிறார். எனினும், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஆற்றிலிட்ட ஏட்டிலெழுதிய பதினோராவது பாடலில் உள்ள " மதுரைத்தோகை யாக்கினன் " என்ற சொற்றொடருக்குச் சேக்கிழார் சுவாமிகள் கூடல் மாநகரத் துச் சங்கம் வைத்தவன் (சிவபெருமான்) என்று தம் பெரிய புராணத்துள் மிக அழகாக உரை கூறியது நோக்கத்தக்கது. இப்பதிப்பில் 1434-வது பாடலாகவும் கலித்தொகையுள் 150-வது பாடலாகவுமுள்ள "

B

அயந்திகழ் நறுங்கொன்றை

யலங்கலந் தெரியலான்" எனத் தொடங்கும் பாடலைப் படிக்குந்தோறும் சிவமணம் கமழ்கின்றது. "அரன் சேவடிக்கே பொருள்அமைத் தின்பக் கவிபல பாடும் புலவர் களே" என்று நம்பியாண்டார்நம்பிகள் மேலே கூறியதற்கு இப்பாடல் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. இப்பாடல்,

"ஈசற்கு யான்வைத்த அன்பி னகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென்ற வன்தில்லை யின்னொளி போன்றவன்தோள்

பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே

"

என்ற

றது.

திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுளை நினைவூட்டுகின்
இதைப்போன்ற செய்யுட்கள் பலவுள்ளன. பன்
னிருதிருமுறைகளுள் காலத்தால் மிக மூற்பட்டது
திருமுரு காற்றுப்படை என்ற பதினொராந்
திருமுறைப்பகுதி. இது சங்க
இலக்கியத்துள்ளதெனில் சங்க இலக்கியம் சைவத்துக்

குப் புறகென்று எவர் கூற இயலும் ? முக்கண் போன்று விளங்கும் சைவபுராணங்கள் மூன்றனுள் ஒன்றாகிய திரு விளையாடற் புராணத்துள் சிவபெருமான் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவித் தாமும் ஒரு புலவராக வீற்றிருந்தது முதலிய செய்திகள் கூறப்படுகின்றன. மாதவச் சிவஞான யோகி கள் தமது உரை நூல்களுள் புறநானூறு முதலிய பல சங்க நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுவதைச் சைவச்சான் றோர் நன்கறிவர். இவைகளை யெல்லாம் நன்கு கருதியே நமது சமாஜம் இந்நூலை வெளியிடத் துணிந்தது.

இனி இப்பதிப்புக்குத் துணை செய்தவர்கட்கு நன்றி கூறுவது மிக்க மகிழ்ச்சியைத் தருகின்றது. பல தமிழறிஞர் களும் அதிகாரிகளும் பல அரிய ஏட்டுப்பிரதிகளையும் காகிதப் பிரதிகளையும் சேகரித்தனுப்பி அன்போடு உபகரித்தார்கள்.



இந்நூல் செம்மையாக வெளிவருதற்குத் துணை செய்தவர் கள் நல்ல தமிழறிவும் சீரிய ஒழுக்கமும் உடைய புலவர்க ளாவர். இவர்கள் எவ்விதக் கைம்மாறுமின்றித் தமிழ்த் தொண்டுகள்

செய்தல்வேண்டுமென்ற ஆர்வமேலீட்டினால் வேண்டும்போதெல்லாம் வேண்டியவாறெல்லாம் உதவி செய்தார்கள். நிரம்பிய அடக்கமுடைய இவர்கள் விருப் பத்துக்கிணங்கி இவர்கள் பெயர்களெல்லாம் விவரமாகக் கொடுக்கப்படவில்லை. இவர்களுள் முக்கியமான ஒருவரை மட்டும் குறிக்காமல் விடுவது அறமாகாது. சென்னைப் பல்கலைக்கழகத் தலைமைத் தமிழாசிரியரும், ஏட்டுப்பிரதிகளைப் பரிசோதிப்பதில் சிறந்த நிபுணரும், சங்க நூல்களில் முப்பதுவருஷ காலமாகப் பயிற்சியுடையவரும், சமாஜ வெளியீடுகள் பலவற்றிற்குப் பிரதிகளைச் சேகரித்து ஒப்பு நோக்கிப் பல வழிகளிலும் துணை புரிந்தவரும், எனது நண்பருமாகிய சைவத்திருவாளர் - ராவ்சாஹிப் - எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் இவ்வெளியீட்டுக்காக இயற்றிய தொண்டு அளவிடற்பாலதன்று. இப்பதிப்புக்கு இவர்களே பதிப்பாசிரியர் என்று சொல்லக்கூடிய அளவிற் பேருதவி செய்துள்ளார்கள். இந்த அன்பர்க்கும், இவர்கள் இவ் வாறு தொண்டு புரிதற்கு அநுமதியளித்த சென்னைப்

பல்கலைக்கழகத்தினர்க்கும், இவர்கள் போன்று ஒத்துழைத்த ஏனைய அன்பர்கட்கும், நமது சமாஜம் மனப்பூர்வமான நன்றி செலுத்துகின்றது. இப்பதிப்புக்குரிய செலவை ஏற்றுக்கொண்ட சைவ இளைஞர் திரு. தி. கி. நாராயணசாமி அவர்கட்கு நமது சமாஜம் பெரிதும் கடப்பட்டுள்ளது. இவ்விளைஞர் நமது சமாஜத்தோடு நெருங்கிய தொடர்புடையவர் ; சமாஜ வளர்ச்சியையே நாடி நிற்ப



வர் ; சமாஜ வெளியீடுகள் பலவற்றிற்கு உதவி புரிந்து புகழ் கொண்டவர். இவர் தமிழிளைஞர்கட்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குபவர்.

வழக்கம்போல் சாது அச்சுக்கூடத்தினர் விரைவாகவும் செம்மையாகவும் இப்பதிப்பை அச்சிட்டு முடித்தனர்.

இப்பதிப்புக்குதவிய மேற்கூறிய அன்பர்களனைவருக்கும் இறைவன் எல்லா நலங்களையும் அருள்புரிவானாக. இந்நூல் தமிழ் மக்கட்குப் பயன்பட்டு நிலவும்படி இறைவன் திருவருள் புரிக.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
விக்கிரமஹு சித்திரைமீ கஉ
13—4—1940

இங்ஙனம்
ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி



# இப்பதிப்பிற்குதவிய எட்டுப் பிரதிகள் முதலியன

| ால் | ஏடு அல்லது கடிதம் | உரியவர் | குறிப்பு |
|---|---|---|---|
| ாறு | | | |
| ழுப்பிரதி ... | ஏடு | கம்பர் விலாசம், வே. இராஜ கோபாலையங்கார் ... | நல்ல நிலையிலுள்ளது |
| ைப்பிரதி ... | கடிதம் | ,, ... | மிகவும் சிதிலமாயுள்ளது; பல பிரதிகளை ஒப்பு நோக்கிப் பாடபேதங் குறிக்கப் பெற்றுள்ளது |
| ழுப்பிரதி ... | ,, | சென்னை, ஸர்வகலாசாலை இந்திய சரித்திர ஆராய்ச்சித் துறை ... | இடையிடையே சில செய்யுட்கள் காணப்பெறவில்லை. |
| ழுப்பிரதி ... | ,, | பவானந்தர் கழகம், சென்னை | |
| நூறு | | | |
| ழுப்பிரதி ... | ,, | சென்னை அரசாங்க நூல்நிலயம் | உரையுடன் கூடியது |
| ழுப்பிரதி ... | ,, | ,, | ,, |

| நூல் | ஏடு அல்லது கடிதம் | உரியவர் | குறிப்பு |
|---|---|---|---|
| தொகை | | | |
| முழுப்பிரதி ... | ஏடு | நெல்லை, அம்பலவாணக் கவிராயர் ... | சிறந்த பிரதி: உரையுடன் கூடியது |
| குறைப்பிரதி ... | கடிதம் | பவானந்தர் கழகம், சென்னை | |
| தொகை | | | |
| முழுப்பிரதி ... | ஏடு | மதுரைத் தமிழ்ச் சங்கம் ... | |
| ,, ... | கடிதம் | தி. த. கனகசுந்தரம் பிள்ளை ... | |
| ,, ... | ,, | ரா. ராகவையங்கார் ... | |
| ,, ... | ,, | முத்துரத்தின முதலியார் ... | |
| ,, ... | ,, | சென்னை அரசாங்க நூல்நிலயம் | பல பிரதிகள் நோக்கிப் பாடபேதங் குறிக்கப்பெற்றது |
| ணை | | | |
| முழுப்பிரதி ... | ஏடு | மதுரைத் தமிழ்ச் சங்கம் ... | |
| ,, ... | கடிதம் | ரா. ராகவையங்கார் ... | |
| ,, ... | ,, | சென்னை அரசாங்க நூல்நிலயம் | |
| (5),, ... | ,, | பவானந்தர் கழகம், சென்னை | |

ரா. ராகவையங்கார் ...

தி. த. கனகசுந்தரம் பிள்ளை ...

தி. த. கனகசுந்தரம் பிள்ளை ...

மதுரைத் தமிழ்ச் சங்கம் ...

சென்னை அரசாங்க நூல்நிலயம்

தி. த. கனகசுந்தரம் பிள்ளை ...

மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை ...

| | | |
|---|---|---|
| 6. பதிற்றுப்பத்து | ,, கடிதம் | கா. |
| (1) 2-ம்பத்து முதல் 9-ம்பத்து முடிய | | |
| (2) ,, ... | ,, | |
| 7. பரிபாடல் | ,, | |
| 2 முதல் 22 முடிய | | |
| 8. புறநானூறு | ,, | எம். |
| (1) குறைப்பிரதி ... | | |
| (2) ,, ... | | |
| (3) ,, ... | | ( |
| (4) ,, ... | ஏடு | |
| | கடிதம் | |
| பத்துப்பாட்டு | ,, | |
| | ,, | |
| மூலம்(முழுவதும்) | | |
| 1. முருகாற்றுப்படை | | |
| முழுப்பிரதி ... | | |
| | ,, | அம் |
| 2. பொருநாற்றுப்படை | | |
| (1) முழுப்பிரதி ... | ஏடு | செ |
| (2) ... | | |

| ல் | ஏடு அல்லது கடிதம் | உரியவர் | குறிப்பு |
|---|---|---|---|
| றாற்றுப்படை | | | |
| ப்பிரதி ... | ஏடு | அம்பலவாணக் கவிராயர் ... | உரையுடன் |
| ,, ... | கடிதம் | சென்னை அரசாங்க நூல்நிலயம் | ,, |
| பாணாற்றுப் | | | |
| ப்பிரதி ... | ஏடு | அம்பலவாணக் கவிராயர் ... | ,, |
| ,, ... | கடிதம் | சென்னை அரசாங்க நூல்நிலயம் | ,, |
| பாட்டு | | | |
| ப்பிரதி ... | ஏடு | அம்பலவாணக் கவிராயர் ... | ,, |
| ,, ... | கடிதம் | சென்னை அரசாங்க நூல்நிலயம் | ,, |
| ,, ... | ,, | ,, ... | மூலமட்டும் |
| க்காஞ்சி | | | |
| ப்பிரதி ... | ,, | ,, ... | உரையுடன் |
| ,, ... | ,, | மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை ... | ,, |
| வாடை ... | ,, | மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை ... | உரையுடன் |
| ட்பாட்டு ... | ,, | ,, ... | ,, |

ம்

| | | | |
|---|---|---|---|
| ... | ” ” | சென்னை அரசாங்க நூல்நிலயம் | |
| ... | ” | மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை ... | பூர்த்தியானது |
| ... | | சென்னை அரசாங்க நூல்நிலயம் | |
| | ” | ரா. ராகவையங்கார் ... | |
| ௰டு | கடித | | |
| | | திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம் ... | சிதிலம் |
| ... | ஏடு | | |
| | | பவானந்தர் கல்விக் கழகம் ... | |
| ... | ” | வ. உ. சிதம்பரம் பிள்ளை ... | பூர்த்தியானது |

| ...ப்<br>...ர | ஏடு அல்லது கடிதம் | உரியவர் | குறிப்பு |
|---|---|---|---|
| ...னியம் | ,, | இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை சோமசுந்தர தேசிகர் ... | பூர்த்தி |
| ...ரக்கம்<br>...ாரம் | ,, | ஆநந்தரங்கப் பிள்ளை வம்சத்தினர் ... | உரையுடன் பூர்த்தி |
| | கடிதம் | சென்னை அரசாங்க நூல்நிலயம் | |



நூல்

5. தொல்காப்பிய பொருளதிகா வுரை நச்சினார்க்கி

6. இலக்கண விள பொருளதிக

7. புறத்திரட்டு

## பிழை திருத்தம்

[உடுக்குறியுற்றன ஊகங்களாம்]

| பக்கம் | வரி | பிழை |
|---|---|---|
| 9 | 1 | அஞ்சில் அஞ்சியார் |
| 31 | 26 | தென்கழிப் |
| 42 | 13 | பவனே |
| 54 | 31 | வினவர் |
| 91 | 20 | நல்லூர் |

| | | |
|---|---|---|
| 94 | 27 | உறவுச்சினங் |
| 105 | 31 | வழிவிருந்தயரும் |
| 114 | 14 | தீங்கிழைக் |
| 128 | 4 | நிறைசெலல் |
| 169 | 21 | சிறப்புறத்தாஞகத் |
| 211 | 2 | வந்தவாறு |
| ,, | 3 | நனி யறிந்தன்ரூ |
| 223 | 8 | னளிபனே' |
| 226 | 13 | கைவர் |
| .317 | 24 | சிறுப்பார்ப்பன்ன |
| 343 | 22 | புணர்த்துடன் |
| 406 | 21 | மாற்ருக்கால் |
| 411 | 9 | போரெழில் |

| | | |
|---|---|---|
| 420 | 12 | தோன்றத |
| 427 | 25 | தேரழி |
| 441 | 21 | 10 |
| 443 | 5 | துக்கு |
| 451 | 20 | வேழுர் |

## திருத்தம்

அஞ்சில் ஆந்தையார்
தெண்கழிப்
பவளே
விலைஞர்
நல்லூர்

உரவுச்சினங்

வருவிருந்தயரும்

தீங்கழைக்

நிரைசெலல்

சிறைப்புறத்தானைகத்

வந்த

ஆறுநனி யறிந்தன்றோ

ளிமனே

கைகவர்

சிறு பார்ப்பன்ன

புணர்ந்துடன்

. . .

| | | |
|---|---|---|
| 499 | 18 | தமர்தடங் |
| 517 | 3 | வேங்கை |
| 521 | 10 | நெஞ்சேர லாதற்கு |
| 528 | 19 | தனிதனி |
| 543 | 7 | இலவந்திகைத் |
| 546 | 8 | யெழிலேறு |
| 558 | 12 | ழுழுவதும் |
| 564 | 2 | 305 |
| 576 | 10 | விளக்கக் |
| 583 | 7 | தொல்லென |
| 590 | 23 | பிறரிசை |
| 619 | 14 | மெரிந்துகைக் |
| 628 | 24 | கதழ்வீழருவி |

| | | |
|---|---|---|
| 629 | 4 | பள்ளஞ் |
| 664 | 16 | சீர்ந்தன்று |
| 710 | 5 | வன்பி னூற்றுத |
| ,, | 6 | சொல்ல கிற்கு |
| 725 | 16 | நடுங்ந |
| 738 | 27 | சொல்வியதூஉமாம் |
| 754 | 29 | விரவுக்கதிர் |
| 773 | 29 | நின்னுயி |
| 790 | 20 | தலைத்தொட்டேன் |
| 806 | 6 | ஒகுதிறம் |
| 818 | 31 | [கப் |
| 820 | 4 | நிற்பப் |
| 850 | 21 | சிறுதலைப் |

# திருத்தம்

திரை நுரை
தமர்கடங்
வேங்கை
நெடுஞ்சேரலாதற்கு
தனித்தனி
இலவந்திகைப் பள்ளித்
யெழாலேறு*
முழுவதும்
315

விளக்கத்
ஒல்லென
பிற்பிறரிசை
மெறிந்துகைக்
கதம் வீழருவி
பழனஞ்*
சீர்த்தன்று*
வற்பி ஞற்றுத*
சொல்ல லாற்று*
நடுங்க
சொல்லியதூஉமாம்

உரவுக்கதிர்
இன்னுயி
தலைதொட்டேன்
ஒருதிறம்
நீக்குக
நிற்ப
சிறுதலைத்



| பக்கம் | வரி | பிழை |
|---|---|---|
| ,, | 23 | ஈர்வாய்ப் பற்றத்து |
| 852 | 22 | நல்லியாதனைப் |

| | | |
|---|---|---|
| 869 | 20 | பாடினி |
| 870 | 6 | மோசிக்கொற்றனார் |
| 882 | 12 | கிழத்திச் |
| 891 | 7 | சேர்த்நிய |
| 893 | 10 | காண்டிசின் |
| 894 | 14 | துறையக் |
| 932 | 2 | முருகுத் தாழ் |
| 957 | 27 | செருமிரு |
| 968 | 15 | சிறுது நீர் |
| 987 | 7 | [வ] ரகுகு நெறி |
| 1008 | 22 | 87 |
| 1061 | 10 | தீப்பாய்வாள் |

| | | |
|---|---|---|
| 1091 | 3 | கடுங்கூ வினளே |
| 1093 | 17 | ஆமிய |
| 1095 | 7 | விளக்கத் |
| 1096 | 24 | கிறுகுடிப் |
| 1101 | 21 | பாப்புக்கடு பன்ன |
| ,, | 21 | வாண்கோட்டுக் |
| 1123 | 29 | யாகுங் |
| 1137 | 9 | பனைத்தோள் |
| ,, | 22 | அரிகிளர் |
| 1142 | 20 | தன்ணறுங் |
| 1182 | 11 | அன்னீர் |
| 1190 | 5 | வினையா |

1195 23 புலப்ப

## திருத்தம்

ஈர்வாய்ப் புற்றத்து
வில்லியாதனைப்
பாடலி
மோசி கொற்றனுர்
கிழத்தி
சேர்த்திய
கண்டிசின்

பாப்புக் கடுப்பன்ன
வான் கோட்டுக்
யாங்கு
பணைத்தோள்
வரிகிளர்
தண்ணறுங்.

நன்னீர்
விளையா
புலம்ப

| பக்கம் | வரி | பிழை |
| --- | --- | --- |
| 1223 | 11 | செலீயர்நின் |
| 1234 | 23 | யானேச் |
| 1241 | 23 | தேஎயம் |
| 1243 | 2 | ஞுள்ளமொடு |
| 1249 | 21 | கவை |
| 1279 | 26 | வியர்த்தெனென் |
| 1287 | 18 | தோன்றி |
| 1301 | 9 | மீண்கண் |
| 1304 | 21 | மாகத் |
| 1315 | 14 | பெர்துமொழி |

1352 31 பினறீ
1354 18 வீண்வீற்

## திருத்தம்

செவீஇயர்நின்
யானை
தேளம்
லுள்ளமொடு
கவ்வை

வியர்த்தனென்
தோன்றிய
மீன்கண்
மாகப்
பொதுமொழி
பினறி
விண்வீற்



உள்ளுறை





பக்கம்

உ

கடவுள் துணை

# சங்க இலக்கியம்

## கடவுள் வாழ்த்து

### க. அகநானூறு

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையி னுண்ஞாண்
நுதல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்

வேலு முண்டத் தோலா தோற்கே
ஊர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே

செவ்வா னன்ன மேனி யவ்வான்
இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்
றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
தாவில் தாணிழற் றவிர்ந்தன்றா லுலகே.

பாரதம் பாடிய பெருந்தேவனார்

## உ. ஐங்குறுநூறு

நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே.

பாரதம் பாடிய பெருந்தேவனார்

## ௩. கலித்தொகை

ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி
;
5 படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ
;
8 மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்க மாடுங்காற் பணையெழி
லணைமென்றோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத்
தருவாளோ ; 11 கொலையுழுவைத் தோலசைஇக்
கொன்றைத்தார் சுவற்
தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்
[புரளத்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ
;
எனவாங்கு ;
15 பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை
மாணிழை யரிவை காப்ப

ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி.

நல்லந்துவனார்

## ச. குறுந்தொகை

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்றா லுலகே.

பாரதம் பாடிய பெருந்தேவனார்

## ரு. நற்றிணை

மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே.

பாரதம் பாடிய பெருந்தேவனார்

## சு. பதிற்றுப்பத்து

எரியெள்ளு வன்ன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தா ரகலத்தன் பொன்றூர்
எயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந் தாடிய வாடல னீடிப்
புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி யார்க்கும் விழவின னுண்ணூற்
சிரந்தை யிரட்டும் விரல னிரண்டுருவா
யீரணி பெற்ற வெழிற்றகைய னேரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன் றேறிய



சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட் குயர்கமா வலனே.

இது பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்தாதல் வேண்டுமென்று ஊகிக்கப்படுகின்றது. தொல். பொருள். புறத்திணை. உசு-ம் சூத்திரவுரை (நச்.) பார்க்க.

## ஏ. பரிபாடல்

ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர
மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
சேயுயர் பணைமிசை யெழில்மேழி யேந்திய
வாய்வாங்கும் வளைநாஞ்சி லொருகுழை யொருவனை ;

(இது தாவு)

அரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி பிறங்கும் பூணினை மால்வரை
எரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்தும்
ஏவ லுழந்தமை கூறும்
நாவ லந்தண ரருமறைப் பொருளே ;

(இஃது எருத்து)

*இணை பிரியணிதுணிபணி யெரிபுரைய
விடரிடு சுடர்படர் பொலம்புனை வினைமலர்
நெரிகிடரெரிபுரை தன மிகுதன முரண் மிகு
கடறரு மணியொடு முதநியா கத்தோன்றி
நெறிசெறி வெறியுறுமுரல்விறல் வணங்கணங்குவிற்
றரணிதுணிமணிவிய வெறுமெழில் புகழலர்மார்பி

---

* இந்த அராகங்கள் நான்கினையும் அடிவரையறை செய்ய இயலவில்லை ; இளம்பூரணருரையின் ஏட்டுப்பிரதியிற் கண்டபடி கொடுக்கப் பட்டுள்ளன.

5

னெரிவயிர் நுதியெறி படையெருத்து மலையிவர்
றுணிபட லிலமணி வெயிலுற ழெழினக்

நவை

[யிற

கிமையிருள கலமுறு கிறுபுரி யொருபுரி நாண்மலர்
மலரிலகினவளர் பருதியி னொளிமணி மார்பணி
மிகநாறுரு வினவிரை வளிமிகுகடு விசை
யுடுவுறுதலைநிரை யிதழணி வயிறிரிய வமரரைப்
பொரெழுந்துடன் றிரைத்துரைஇய தானவர்
சிரமுமிழ் புனல்பொழி பிழிந்து
மூதிர்பதிர்பல தொடவமர் வென்றகணை.

(இவை நான்கும் அராகம்)

பொருவே மென்றவர் மதந்தபக் கடந்து
செருமேம் பட்ட செயிர்தீ ரண்ணல்
இருவர் தாதை யிலங்குபூண் மாஅல்
தெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே.

(இஃது ஆசிரியம்)

அன்ன மரபி னனையோய் நின்னை
யின்னனென் றுரைத்த லெமக்கெவ னெளிது.

(இது பேரெண்)

அருமைநற் கறியினு மார்வ நின்வயிற்
பெருமையின் வல்லா யாமிவண் மொழிபவை
மெல்லிய வெனாஅ வெறாஅ
தல்லியந் திருமார்பநீ யருளல் வேண்டும்.

(இதுவும் ஆசிரியம்)

விறன்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கு
மறனு மார்வலர்க் கருளு நீ ;
திறனிலோர்த் திருத்திய தீதீர் கொள்கை
மறனு மாற்றலர்க் கணங்கு நீ ;
யங்கண் வானத் தணிநிலாத் திகழ்தருந்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ ;



ஐந்தலை யுயரிய வணங்குடை யருந்திறல்
மைந்துடை யொருவனு மடங்கலு நீ ;
நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
புலமும் பூவனு நாற்றமு நீ ;
வலனுய ரெழிலியு மாக விசும்பும்
நிலனு நீடிய விமயமு நீ ;

(இவை ஆறும் பேரெண்)

அதனால், (இது தனிச்சொல்)

இன்னோ ரனையை யினையை யாலென

அன்னோர் யாமிவட் காணா மையிற்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னிய முதல்வனை யாதலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே.
(இது சுரிதகம்)

நின்னொக்கும் புகழ்நிழலவை
பொன்னொக்கு முடையவை
புள்ளின் கொடியவை புரிவளை யினவை
எள்ளுநர்க் கடந்தட்ட விகனேமி யவை
மண்ணுறு மணிபா யுருவினவை
வெண்ணிறந்த புகழவை யெழின்மார்பினவை
(இவை சிற்றெண்ணும் இடையெண்ணும் அளவெண்ணும்)

ஆங்கு,
(இது தனிச்சொல்) காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்

வாய்மொழிப் புலவநின் றாணிழற் றொழுதே.
(இது சுரிதகம்)

(இதைப் பாடியோர் பெயர் கிடைத்திலது)

## அ. புறநானூறு

கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியு மவ்வே றென்ப
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே

பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை

பதினெண் கணனு மேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கு மேம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே.

பாரதம் பாடிய பெருந்தேவனார்



## க. அகம்பன் மாலாதனார்

### 1. நற்றிணை - 81. முல்லை

இருநிலங் குறையக் கொட்டிப் பரிந்தின்
றுதி போகிய வசைவி னேன்றாள்
மன்னர் மதிக்கு மாண்வினைப் புரவி
கொய்ம்மயி ரெருத்திற் பெய்ம்மணி யார்ப்பப்
பூண்கதில் பாகனின் றேரே பூண்டா
ழாக வனமுலைக் கரைவலந் தெறிப்ப
அழுதன ளுறையு மம்மா வரிவை
விருந்தயர் விருப்பொடு வருந்தின ளசைஇய
முறுவ லின்னகை காண்கம்
உறுபகை தணித்தன னுரவுவாழ் வேந்தே.

வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகற் குரைத்தது.

## உ. அஞ்சியத்தை மகள் நாகையார்

### 2. அகநானூறு - 352. குறிஞ்சி

முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமி ழருவிப் பாறை மருங்கின்
ஆடுமயின் முன்ன தாகக் கோடியர்
விழவுகொண் மூதூர் விறலி பின்றை
முழவன் போல வகப்படத் தழீஇ
இன்றுணைப் பயிருங் குன்ற நாடன்
குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியல னன்பின னெனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்
நல்லை காணிற் காதலந் தோழீ

கடும்பரிப் புரவி நெடுந்தே ரஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவற்
றொல்லிசை நிறீஇய வுரைசால் பாண்மகன்



## அஞ்சில் அஞ்சியார்

எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினு மினியனா லெமக்கே.

வரைந்தெய்திய பின்றை மணமனைக்கட்சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது; வரைவுமலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

## ௫. அஞ்சில் அஞ்சியார்

### 3. நற்றிணை - 90. மருதம்

ஆடியல் விழவி னழுங்கன் மூதூர்
உடையோர் பான்மையிற் பெருங்கை தூவா
வறனில் புலத்தி யெல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர வோடிப்

பெருங்கயிறு நாலு மிரும்பனம் பிணையற்
பூங்க ணாய மூக்க வூங்காள்
அழுதனள் பெயரு மஞ்சி லோதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
ஊச லுறுதொழிற் பூசற் கூட்டா
நயனின் மாக்களொடு கெழீஇப்
பயனின் றம்மவிவ் வேந்துடை யவையே.

தோழி தலைமகளுக்குரைப்பாளாய்ப் பாணனை நெருங்கி வாயின் மறுத்தது.

## ௬. அஞ்சில் ஆந்தையார்

### 4. குறுந்தொகை - 294. நெய்தல்

கடலுட னாடியுங் கான லல்கியுந்
தொடலை யாயமொடு தழூஉவணி யயர்ந்தும்
நொதுமலர் போலக் கதுமென வந்து
முயங்கினன் செலினே யலர்ந்தன்று மன்னே
துத்திப் பாந்தட் பைத்தக லல்குற்

றிருந்திழைத் துயல்வுக்கோட் டசைத்த பசுங்குழைத்
தழையினு முழையிற் போகான்
தான்றந் தனன்யாய் காத்தோம் பல்லே.

பகற்குறிக்கண் தலைமகன் வந்த விடத்துத் தோழி செறிப் பறிவுறீஇயது.

## 5. நற்றிணை - 233. குறிஞ்சி

கல்லாக் கடுவ னடுங்கமுள் ளெயிற்று
மடமா மந்தி மாணா வன்பறழ்
கோடுய ரடுக்கத் தாடுமழை யொளிக்கும்
பெருங்கன் னாடனை யருளினை யாயின்
இனியென கொள்ளலை மன்னே கொன்னொன்று
கூறுவன் வாழி தோழி முன்னுற
நாருடை நெஞ்சத் தீரம் பொத்தி
ஆன்றோர் சென்னெறி வழாஅச்
சான்றோ னாதனற் கறிந்தனை தெளிமே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுக இவள் ஆற்றாளென்ப துணர்ந்து சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

## ௫. அடைநெடுங் கல்வியார்

## 6. புறநானூறு - 283.

ஒண்செங் குரலித் தண்கயங் கலங்கி
வாளை நீர்நாய் நாளிரை பெறூஉப்

பௌவ வுறையள வா.... .... ....
.... .... ....வி மயக்கி
மாறுகொண் முதலையொ டேழ்மாறு பெயரும்
அழும்பி லனடாங்கா றகையு மென்றும்
வலம்புரி கோச ரவைக்களத் தானு
மன்று ளென்பது கெட.... .... ....
.... .... ...ரனே பாங்கற்
கதிர்சூழ் குறட்டின் வேனிறத் திங்க

அடைநெடுங் கல்வியார்

11

உயிர்புறப் படாஅ வளவைத் தெறுவரத் தெற்றிப்
பாவை திணிமண லயரு
மென்றோண் மகளிர் நன்று புரப்ப
.... .... ....ண்ட பாசிலைக்
கவிழ்பூந் தும்பை நுதலசைத் தோனே. திணை - தும்பை ; துறை - பாடாண்பாட்டு.

## 7. புறநானூறு - 344.

செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து
துறைநணி மருதத் திறுக்கு மூரொடு
நிறைசால் விழுப்பொருள் தருத லொன்றோ
புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து

பண்பி லாண்மை தருத லொன்றோ
இரண்டினு ளொன்று காமையோ வரிதே
காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி....     ....
கணிமே வந்தவ ளல்குலவ் வரியே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 8. புறநானூறு - 345.

களிறணைப்பக் கலங்கின, காஅ ;
தேரோடத் துகள்கெழுமின, தெருவு ;
மாமறுகலின் மயக்குற்றன, வழி ;
கலங்கழாஅலிற், றுறை, கலக்குற்றன ;
தெறன்மறவ ரிறைகூர்தலிற்
பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பின்
ஓவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
மைய னோக்கிற் றையலை நயந்தோர்
அளியர் தாமேயிவள் தன்னை மாரே

செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவேல்
இன்ன மறவர்த் தாயினு மன்னோ
என்னா வதுகொல் தானே
பன்னல் வேலியிப் பணைநல் லூரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற் காஞ்சி.

## ௮. அணிலாடு முன்றிலார்

## 9. குறுந்தொகை - 41. பாலை

காதல ருழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணிலாடு முன்றிற்
புலப்பில் போலப் புல்லென்
றலப்பென் றோழியவ ரகன்ற ஞான்றே.

பிரிவிடை வேறுபாடு கண்டு கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## எ. அண்டர்மகன் குறுவழுதியார்

## 10. அகநானூறு - 150. நெய்தல்

பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
ஆகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி
எல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள் யாயே கடுஞ்செலல்
வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறைக்

அண்டர்மகன் குறுவழுதியார்

13

கனைத்த நெய்தற் கண்போல் மாமலர்
நனைத்த செருந்திப் போதுவா யவிழ
மாலை மணியிதழ் கூம்பக் காலைக்
கண்ணுறு காவியொடு தண்ணென மலரும்
கழியுங் கானலுங் காண்டொறும் பலபுலந்து
வாரார் கொல்லெனப் பருவரும்
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே.

பகற்குறி வந்து கண்ணுற்று நீங்குந் தலைமகனைத் தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து, செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

## 11. அகநானூறு - 228. குறிஞ்சி

பிரசப் பல்கிளை யார்ப்பக் கல்லென

வரையிழி யருவி யாரந் தீண்டித்
தண்ணென நனைக்கு நளிர்மலைச் சிலம்பிற்
கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளைக்
கன்முகை நெடுஞ்சுனை நம்மொ டாடிப்
பகலே யினிதுடன் கழிப்பி யிரவே

செல்வ ராயினு நன்றுமற் றில்ல
வான்கண் விரிந்த பகன்மரு ணிலவிற்
சூரல் மிளைஇய சார லாராற்
றேங்கன் மிசைய வேங்கை யொள்வீப்
புலிப்பொறி கடுப்பத் தோன்றலிற் கயவா
யிரும்பிடி யிரியுஞ் சோலைப்
பெருங்கல் யாணர்த்தஞ் சிறுகுடி யானே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. இப்பாட்டு, பகலே சிறைப்புறம்.

## 12. குறுந்தொகை - 345. நெய்தல்

இழையணிந் தியல்வருங் கொடிஞ்சி நெடுந்தேர்
வரைமரு ணெடுமணற் றவிர்த்தனி ரசைஇத்
தங்கினி ராயிற் றவறோ தகைய
தழைதா ழல்கு லிவள்புலம் பகலத்

தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங்கழி
இழுமென வொலிக்கு மாங்கட்
பெருநீர் வேலியெஞ் சிறுநல் லூரே.

பகல் வந்து ஒழுகுவானைத் தோழி இரா வா என்றது.

## 13. புறநானூறு - 346.

பிற.... .... ....ள பாலென மடுத்தலின்
ஈன்ற தாயோ வேண்டா ளல்லள்
கல்வியெ னென்னும் வல்லாண் சிறுஅன்
ஒல்வே னல்ல னதுவா யாகுதல்
அழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கற்

பேணுநர்ப் பெறுஅது விளியும்
புன்றலைப் பெரும்பாழ் செயுமிவ ணலனே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற் காஞ்சி.

# அ. அதியன் விண்ணத்தனார்

## 14. அகநானூறு - 301. பாலை

வறனுறு செய்தியின் வாடுபு வருந்திப்
படர்மிகப் பிரிந்தோ ருள்ளுபு நினைதல்
சிறுநனி யான்றிக வென்றி தோழி
நல்குந ரொழித்த கூலிச் சில்பதம்
ஒடிவை யின்றி யோம்பா துண்டு
நீர்வாழ் முதலை யாவித் தன்ன

ஆரை வேய்ந்த வறைவாய்ச் சகடத்
தூரிஃ தென்னுஅர் தீதிலா வாழ்க்கைச்
சுரமுதல் வருத்த மரமுதல் வீட்டிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்வரக்
குவியிண ரெருக்கின் றதர்பூங் கண்ணி
ஆடூஉச் சென்னித் தகைப்ப மகடூஉ
முளரித் தீயின் முழங்கழல் விளக்கத்துக்
களரி யாவிரைக் கிளர்பூங் கோதை

## அந்தி இளங்கீரனார் 15

வண்ண மார்பின் வனமுலைத் துயல்வரச்
செறிநடைப் பிடியொடு களிறுபுணர்ந் தென்னக்
குறுநெடுந் தூம்பொடு முழவுப்புணர்ந் திசைப்பக்
கார்வான் முழக்கி னீர்மிசைத் தெவுட்டுந்
தேரை யொலியின் மாணச் சீரமைத்துச்
சில்லரி கறங்குஞ் சிறுபல் லியத்தொடு
பல்லூர் பெயர்வன ராடி யொல்லெனத்
தலைப்புணர்த் தசைத்த பஃறொகைக் கலப்பையர்
இரும்பே ரொக்கற் கோடிய ரிறந்த
புன்றலை மன்றங் காணின் வழிநாள்
அழுங்கன் மூதூர்க் கின்னா தாகும்
அதுவே மருவின மாலை யதனாற்
காதலர் செய்த காதல்
நீடின்று மறத்தல் கூடுமோ மற்றே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்துந்

தோழிக்குச் சொல்லியது.

## ௯. அந்தி இளங்கீரனார்

### 15. அகநானூறு - 71. பாலை

நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு குறைந்தோர்
பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉ
நயனின் மாக்கள் போல வண்டினஞ்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
மையின் மானின் மருளப் பையென
வெந்தா றுபொன்னி னந்தி பூப்ப
வையறி வகற்றுங் கையறு படரோ
டகலிரு வான மம்மஞ் சீனப்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை
காதலர்ப் பிரிந்த புலம்பி னோதக
ஆரஞ ருறுந ரருநிறஞ் சுட்டிக்
கூரெஃ கெறிஞரி னலைத்த லானா

தெள்ளற வியற்றிய நிழல்காண் மண்டிலத்
துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்
திதுகொல் வாழி தோழி யென்னுயிர்
விலங்குவெங் கடுவளி யெடுப்பத்
துளங்குமரப் புள்ளிற் றுறக்கும் பொழுதே.

பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகட்குத்தோழி சொல்லியது.

## ௧௦. அம்மூவனார்

### 16. அகநானூறு - 10. நெய்தல்

வான்கடற் பரப்பிற் றூவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த
முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்
புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப
நெய்த லுண்கண் பைதல கலுழப்
பிரித லெண்ணினை யாயி னன்றும்
அரிதுற் றனையாற் பெரும வுரிதினிற்
கொண்டாங்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு
குரூஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்
பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவள் நலனே.

இரவுக்குறிவந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்கும்

தலைமகனை
யெதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லியது.

## 17. அகநானூறு - 35. பாலை

ஈன்று புறந்தந்த வெம்மு முள்ளாள்
வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி யிரட்டுந் தாளுடைக் கடிகை

அம்மூவனார் 17

நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந்
தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல

துஞ்சா முழவிற் கோவற் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கும்
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே.

மகட்போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயது.

18. அகநானூறு - 140. நெய்தல்

பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
இருங்கழிச் செறுவி னுழாஅது செய்த
வெண்க லுப்பின் கொள்ளை சாற்றி
என்றூழ் விடர குன்றம் போகும்
கதழ்கோ லுமணர் காதல் மடமகள்
சில்கோ லெல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லி னேரே வெண்க லுப்பெனச்
சேரி விலைமாறு கூறலின் மனைய
விளியறி ஞமலி குரைப்ப வெரீஇய
மதர்கயல் மலைப்பி னன்ன கண்ணெமக்
கிதைமுயல் புனவன் புகைநிழற் கடுக்கு
மாமூ தள்ள லழுந்திய சாகாட்
டெவ்வந் தீர வாங்குந் தந்தை

கைபூண் பகட்டின் வருந்தி
வெய்ய வுயிர்க்கு நோயா கின்றே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற் குரைத்தது.

### 19. அகநானூறு - 280. நெய்தல்

பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்
திணிமண லடைகரை யலவ னாட்டி
அசையின ளிருந்த வாய்தொடிக் குறுமகள்
நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து
நாமுறை தேஎ மரூஉப்பெயர்ந் தவனொ
டிருநீர்ச் சேர்ப்பி னுப்புட னுழுதும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
படுத்தனம் பணிந்தன மடுத்தன மிருப்பிற்
றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்
தேனிமி ரகன்கரைப் பகுக்குங்
கானலம் பெருந்துறைப் பரதவ னெமக்கே.

தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற் குச் சொல்லியது. அல்லகுறிப்பட்டுப் போகாநின்றவன் சொல்லியதூஉமாம்.

## 20. அகநானூறு - 370. நெய்தல்

வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ இளையோர்
செல்ப வெல்லு மெல்லின்
றகலிலைப் புன்னைப் புகரி னீழற்
பகலே யெம்மொ டாடி யிரவே
காயல் வேய்ந்த தேயா நல்லில்
நோயொடு வைகுதி யாயி னுந்தை
அருங்கடிப் படுவலு மென்றி மற்றுநீ

அம்மூவனார் 

செல்ல லென்றலு மாற்றாய் செலினே
வாழலெ னென்றி யாயின் ஞாழல்
வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தற்
றண்ணரும் பைந்தார் துயல்வர வந்திக்
கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு
நீயே கான லொழிய யானே
வெறிகொள் பாவையிற் பொலிந்தவெ னணிதுறந்
தாடுமகள் போலப் பெயர்தல்
ஆற்றேன் றெய்ய வலர்கவிவ் வூரே.

பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

## 21. அகநானூறு - 390. நெய்தல்

உவர்விளை யுப்பின் கொள்ளை சாற்றி
அதர்படு பூழிய சேட்புலம் படருந்
ததர்கோ லுமணர் போகு நெடுநெறிக்

கணநிரை வாழ்க்கைதா னன்று கொல்லோ
வணர்சுரி முச்சி முழுதுமற் புரள
ஐதக லல்குல் கவின்பெறப் புனைந்த
பல்குழைத் தொடலை யொல்குவயி னொல்கி
நெல்லு முப்பு நேரே யூரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொ று நுவலும்
அவ்வாங் குந்தி யமைத்தோ ளாய்நின்
மெய்வா ழுப்பின் விலையெய் யாமெனச்
சிறிய விலங்கின மாகப் பெரியதன்
அரிவே யுண்க ணமர்த்தன னோக்கி
யாரீ ரோவெம் விலங்கி யீஇரென
மூரல் முறுவலள் பேர்வன ணின்ற
சின்னிரை வால்வளைப் பொலிந்த
பன்மாண் பேதைக் கொழிந்ததென்
னெஞ்சே.

தலைமகன் பாங்கற்குச் சொல்லியது ; நெஞ்சிற்குச் சொல் லியதூஉமாம்.



## 22—121. ஐங்குறுநூறு - 101—200. நெய்தல்

### 22—31. தாய்க்குரைத்த பத்து

22. அன்னை வாழிவேண் டன்னை யுதுக்கா
ணேர்கொடிப் பாசடும்பு பரிய வூர்பிழிபு
நெய்தல் மயக்கி வந்தன்று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே.

101

அறத்தொடு நின்றபின்னர் வரைதற்பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவொடு புகுந்தவழித் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது.

23. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்
நீனிறப் பெருங்கடற் புள்ளி னான்றது
துன்புறு துயர நீங்க
இன்புற விசைக்குமவர் தேர்மணிக் குரலே.

102

இதுவுமது.

24. அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்
இவட்கமைந் தனனாற் றானே
தனக்கமைந் தன்றிவள் மாமைக் கவினே.

103

அறத்தொடு நின்றதோழி வதுவைநிகழாநின்றுழித்

தாய்க்குக்
காட்டி உவந்து சொல்லியது.

25. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்
நள்ளென வந்த வியறேர்ச்

செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே.

104

புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கட்சென்ற செவிலிக்கு முன்பு அறத்தொடு நின்று வதுவை கூட்டிய தோழி அவனூர் நன்மை காட்டிச் சொல்லியது.



26. அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடற்
றிரைதரு முத்தம் வெண்மண லிமைக்குந்
தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினுஞ் சிவந்தன் று கண்டிசி னுதலே. 105

அறத்தொடு நின்றபின் வேண்டுவன தருதற்குப் பிரிந்த தலை மகன் வரைவொடுவந்துழி, தலைமகள் நுதற்கண் முன்புள்ள பசப்பு நீங்கும்வண்ணம் தோன்றிய கதிர்ப்புக்காட்டிச் செவிலிக்குத் தோழி சொல்லியது.

27. அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்
துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்குந்
தண்கடல் வளையினு மிலங்குமிவள்
அங்கலி ழாகங் கண்டிசி னினைந்தே.

106

அறத்தொடு நின்றதோழி அது வற்புறுப்பான்
வேண்டிச் செவிலிக்குச் சொல்லியது.

28. அன்னை வாழிவேண் டன்னையென் றோழி
சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து
தண்கடற் படுதிரை கேட்டொறுந்
துஞ்சா ளாகுத லறிகோ யானே.

107

தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக்
கூறியது.

29. அன்னை வாழிவேண் டன்னை கழிய
முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்
எந்தோள் துறந்தன னாயின்

எவன்கொல் மற்றவ னயந்த தோளே.

108

அறத்தொடுநிலை பிறந்தபின்னும் வரைவு நீடிற்றாக மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குச் சொல்லியது.

30. அன்னை வாழிவேண் டன்னை நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்



எந்தோள் துறந்த காலை யெவன்கொல்
பன்னாள் வருமவ னளித்த பொழுதே.

109

அறத்தொடு நின்றபின்பு வரைவான்பிரிந்த தலைமகன் கடிதின் வாராதவழி ஐயுற்றசெவிலி, 'அவன் நம்மைத் துறந்தான்போலும்; நுங்கட்கு அவன்கூறிய திறம் யாது' என்றாட்குத் தோழி சொல்லியது.

31. அன்னை வாழிவேண் டன்னை புன்னைப்
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை யென்றும் யாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறும்
ஆங்கு மாக்குமோ வாழிய பாலே.

110

கொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

### 32—41. தோழிக்குரைத்த பத்து

32. அம்ம வாழி தோழி பாணன்
சூழ்கழி மருங்கி னிரை கொளீஇச்
சினைக்கயல் மாய்க்குந் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
அருந்தவ முயற லாற்றா தேமே.

111

இற்செறிப்பா ரெனக்கேட்ட தலைமகள் வரையாதுவந்து ஒழுகுந் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

33. அம்ம வாழி தோழி பாசிலைச்
செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்
தான்வரக் காண்குவ நாமே
மறந்தோ மன்ற நாணுடை நெஞ்சே.

112

களவுநீடுவழி வரையலன்கொலென்று அஞ்சிய தோழிக்குத் தலைமகன் வரையுந்திறம் தெளிக்கத் தெளிந்த தலைமகள் சொல்லியது.

## அம்மூவனார் - ஐங்குறுநூறு

23

34. அம்ம வாழி தோழி நென்னல்
ஓங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென மொழிய வென்னை
அதுகேட் டன்னா யென்றன ளன்னை
பைபய வெம்மை யென்றனென் யானே. 113

வரையாதுவந்து ஒழுகுந்தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்ப நெருநல் இல்லத்து நிகழ்ந்தது இதுவெனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

35. அம்ம வாழி தோழி கொண்கன்
நேரே மாயினுஞ் செல்குவங் கொல்லோ
கடலி னாரை யிரற்று
மடலம் பெண்ணையவ னுடைய நாட்டே.

114

இடைவிட்டொழுகுந் தலைமகன்வந்து சிறைப்புறத்தானாமை யறிந்த தலைமகள் அவன்கேட்கு மாற்றால் தோழிக்குச் சொல்லியது.

36. அம்ம வாழி தோழி பன்மாண்
நுண்மண லடைகரை நம்மோ டாடிய

தண்ணந் துறைவன் மறைஇ
அன்னை யருங்கடி வந்துநின் றோனே.

115

இற்செறிப்புண்ட பின்னும் வரைந்துகொள்ள நினையாது தலை

மகன் வந்தானாக, அதனையறிந்த தலைமகள் அவன் கேட்குமாற்றால்

தோழிக்குச் சொல்லியது.

37. அம்ம வாழி தோழி நாமழ
நீல விருங்கழி நீலங் கூம்பு
மாலைவந் தன்று மன்ற
காலை யன்ன காலைமுந் துறுத்தே. 116

எற்பாட்டின்கண் தலைமகன் சிறைப்புறத்து நின்றுகேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

38. அம்ம வாழி தோழி நலனே
இன்ன தாகுதல் கொடிதே புன்னை

அணிமலர் துறைதொறும் வரிக்கு
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தோர்க்கே.

117

வரையாது வந்தொழுகுந் தலைமகன்
சிறைப்புறத்தானாகத் தலை
மகள் தோழிக்குச் சொல்லியது.

39. அம்ம வாழி தோழி யானின்

றறனி லாளற் கண்ட பொழுதிற்
சினவுவென் றகைக்குவென் சென்றனென்
பின்னிலைந் திரங்கிப் பெயர்தந் தேனே.

118

சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச்
சொல்லியது ; தோழி
வாயின் மறுத்த தலைமகள் பின்பு தலைமகன் வந்துழி
நிகழ்ந்ததனை
அவட்குக் கூறியதூஉமாம்.

40. அம்ம வாழி தோழி நன்றும்

எய்யா மையி னேதில பற்றி
அன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே.

119

‘ வரைதற்கு வேண்டுவன முயல்வேம் ’
எனச்சொல்லி வரை
யாது செலுத்துகின்ற தலைமகன்
சிறைப்புறத்தானுன்மை யறிந்த
தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

41. அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளியமென் றோளே
மல்ல விருங்கழி மலரு
மெல்லம் புலம்பன் வந்த மாறே.

120

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வந்து
சிறைப்புறத்தா
னாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

42—51. கிழவற்குரைத்த பத்து

42. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே

முண்டகக் கோதை நனையத்
தெண்டிரைப் பௌவம் பாய்ந்துநின்
றோளே. 121

பரத்தை தலைமகற்குச் சொல்லியது;
பெதும்பைப் பருவத்
தாள் ஒரு பரத்தையோடு கூடி மறைந்து
ஒழுகாநின்றா னென்ப

## அம்மூவனார் - ஐங்குறுநூறு

25

தறிந்து தலைவி புலந்துழி, ' இத் தவறு என்மாட்டில்லை ; நீ இப் புலவியை நீக்கவேண்டும் ' என்று தோழிக்குத் தலைமகன் கூறப் புலவியை நீக்கக் கருதிய தோழி அவளிளமை கூறி நகையாடிச் சொல்லியதூஉமாம்.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதிற்கும் இத்துறையாம்.

43. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே.

122

44. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒண்ணுத லாய மார்பத்
தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே.

123

45. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
வண்டற் பாவை வௌவலின்
நுண்பொடி யளைஇக் கடல்தூர்ப் போளே.

124

46. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தெண்டிரை பாவை வௌவ
உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

125

47. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
உண்கண் வண்டின மொய்ப்பத்
தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே.

126 48. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தும்பை மாலை யிளமுலை
நுண்பூ ணாகம் விலங்கு வோளே.

127 49. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யுருஅ வறுமுலை மடாஅ
உண்ணாப் பாவையை யூட்டு வோளே.

128



50. .... .... ....
.... .... ....

129

.... .... ....

(இதன் மூலம் கிடைத்திலது)

51. .... .... ....
.... ... ...

130 .... ... ....

(இதன் மூலம் கிடைத்திலது)

## 52—61. பாணற்குரைத்த பத்து

52. நன்றே பாண கொண்கனது நட்பே
தில்லை வேலி யிவ்வூர்க்
கல்லென் கௌவை யெழாஅக் காலே.

131

வாயில்வேண்டிவந்த பாணன் தலைமகன் காதன்மை கூறினாகத் தலைமகள் வாயில்மறுப்பாள் அவற்குக் கூறியது. 53. அம்ம வாழி பாண புன்னை

அரும்புமலி கான லிவ்வூர்
அலரா கின்றவ ரருளு மாறே.

132

வாயில்வேண்டிவந்த பாணன், ' நீர் கொடுமை கூறவேண்டா; நும்மேல் அருளுடையர் ' என்றாற்குத் தலைமகள் சொல்லியது.

54. யானெவன் செய்கோ பாண வானாது

மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்

புல்லென் றனவென் புரிவளைத் தோளே.

133

வாயிலாய்ப் புகுந்த பாணன் தலைமகள் தோண்மெலிவு கண்டு 'மனைப்புறத்துப் போய்வந்ததனையானே இவ்வாறு வேறுபடுதல் தகாது' என்றாற்கு அவள் சொல்லியது.

அம்மூவனார் - ஐங்குறுநூறு

27

55. காண்மதி பாண விருங்கழிப்...
பாய்பரி நெடுந்தேர்க் கொண்கனொடு
தான்வந் தன்றென் மாமைக் கவினே.

134

பிரிவின்கண் தலைமகள் கவின்தொலைவுகண்டு வெறுத்து ஒழுகுகின்ற பாணற்குத் தலைமகன் வந்துழிக் கவினெய்திய தலைமகள் சொல்லியது.

56. பைதல மல்லேம் பாண பணைத்தோள்
ஐதமைந் தகன்ற வல்குல்
நெய்தலங் கண்ணியை நேர்தனும் பெறினே.

135.

பரத்தை யொருத்தியைத் தலைப்பெய்வான்வேண்டி அதனைத் தலைமகன் மறைத்தொழுகுகின்றதறிந்த தலைமகள் அவன் கேட்கு. மாற்றாற் பாணற்குச் சொல்லியது.

57. நாணிலை மன்ற பாண நீயே
கோணே ரிலங்குவளை நெகிழ்த்த
கானலந் துறைவற்குச் சொல்லுகுப் போயே.

136.

வாயிலாய்ப் புகுந்து தலைமகன் குணங்கூறிய பாணற்கு வாயின்
மறுக்குந் தலைமகள் சொல்லியது.

58. நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்
திண்டேர்க் கொண்கனை நயந்தோர்
பண்டைத் தந்நலம் பெறுபவோ மற்றே.

137

தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்து நீங்கின விடத்தும் அவன்
முன்புசெய்த தீங்குநினைந்து தலைமகள் வேறுபட்டிருந்தாளாக,
'இனி இந்த வேறுபாடு என்' என்று வினவிய பாணற்கு அவள்
சொல்லியது.

59. பண்பிலை மன்ற பாண இவ்வூர்
அன்பில கடிய கழறி

மென்புலக் கொண்கனைத் தாரா தோயே.

138

தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்தது அறியாது வந்த பாணற்
குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது.



60. அம்ம வாழி கொண்க வெம்வயின்
மாணல மருட்டு நின்னினும்
பாண னல்லோர் நலஞ்சிதைக் கும்மே. 139

ஆற்றாமை வாயிலாகப் புகுந்திருந்த தலைமகற்குப் பாணன் வந்
துழித் தலைமகள் சொல்லியது.

61. காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
இறைகே ழெல்வளை நீங்கிய நிலையே.

140

பாணன் தூதாகிச் செல்லவேண்டுங் குறிப்பினனாகிய தலை
மகள் அவற்குத் தன்மெலிவுகாட்டிச் சொல்லியது.

62. எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசலை செய்தன பனிபடு துறையே.

141

வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றளாகின்ற தலைமகள்
'அவன் வரைதற்குப் பிரியவும் நீ ஆற்றாயாகின்றது என்னை'
என்ற தோழிக்குச் சொல்லியது.

63. எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினைப்
புள்ளிறை கூருந் துறைவனை
உள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

142

வரையாது வந்து ஒழுகுந் தலைமகன் இரவுக்குறிக்கட் சிறைப் புறத்தானாக, 'நின்கண் துயிறற்பொருட்டு நீ அவனை மறக்கவேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

64. எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை
இனிய செய்த நின்றுபின்

முனிவு செய்தவிவள் தடமென் றோளே.

143

புறத்துத் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

அம்மூவனார் - ஐங்குறுநூறு 29

65\. எக்கர் ஞாழ லிணர்படு பொதும்பர்த்
தனிக்குரு குறங்குந் துறைவற்
கினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

144

தலைமகன் வரைந்து கோடல் நினையாது களவொழுக்கமே விரும்பி ஒழுகாநின்றா னென்பது அறிந்து வேறுபட்ட தலைமகள், 'அவன் கூறியவாற்றால் இனிக் கடிதின் வரைவன்; ஆற்றா யாகா தொழியவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது. 66. எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை
ஓதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கினன் இனியே.

145

வரைவுமறுத்த தமர் உடம்படுமாற்றாற் சான்றோரைத் தலை மகன் விடுத்ததறிந்ததோழி தலைமகள் கேட்குமாற்றாற் சொல்லியது. 67. எக்கர் ஞாழ லரும்புமுதி ரவிழிணர்

நறிய கமழுந் துறைவற்
கினிய மன்றவென் மாமைக் கவினே.

146

வரைவுகடாவவும் வரையாதொழுகுகின்றுழி, 'நம்மை எவ்வகை நினைத்தார் கொல்லோ' என்று ஐயுற்றிருந்த தலைமகள் வரைவு தலைவந்துழித் தோழிக்குச் சொல்லியது.

68. எக்கர் ஞாழல் மலரில் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கின னாடே.

147

சுற்றத்தார் வேண்டிய கொடுத்துத் தலைமகன் வரைவு மாட்சி மைப்படுத்தமை யறிந்த தோழி உவந்த உள்ளத்தாளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

69. எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

148

களவொழுக்கத்தின் விளைவறியாது அஞ்சிய வருத்தநீங்க வதுவை கரணவகையான் முடித்தபின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்குந் தோழி சொல்லியது.



70. எக்கர் ஞாழற் பூவி னன்ன
சுணங்குவள ரிளமுலை மடந்தைக்
கணங்குவளர்த் தகறல் வல்லா தீமே. 149

வரைந்தெய்திய தலைமகன் தலைவியோடு பள்ளியிடத்திருந்துழித் தோழி வாழ்த்தியது.

71. எக்கர் ஞாழ னறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்குந் துறைவன்
புணர்வி னின்னா னரும்புணர் வினனே. 150

முன்னொருகாற் பிரிந்துவந்த தலைமகன் பின்னும் பிரிந்துவந்துழி அவனை முயங்காளாக, தோழி, 'நீ இவ்வாறு செய்தற்குக் காரணம் என்' என்று வினவியவழித் தலைமகள் தோழிக்குத் தலைமகன் கேட்பச் சொல்லியது.

## 72—81. வெள்ளாங்குருகுப் பத்து

72. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்

காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானாத் துறைவற்கு
நெக்க நெஞ்சம் நேர்கல் லேனே. 151

வாயில்வேண்டிய தோழிக்குத் தலைமகள் வாயின்மறுப்பாள் சொல்லியது.

73. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கையறு பிரற்று கானலம் புலம்பந்
துறைவன் வரையு மென்ப
அறவன் போலு மருளுமா ரதுவே. 152

தலைமகள் வாயின்மறுத்தழி 'இவன் நின்மேல் தொடர்ச்சியிற் குறைவிலன்; அருளுமுடையன்; ஆதலால், நீ இவனோடு புலத்தல் தகாது' என நெருங்கி வாயில்நேர்விக்குந் தோழிக்கு அவள் சொல்லியது.

## அம்மூவனார் - ஐங்குறுநூறு

31

74. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
உளர வொழிந்த தூவி குவவுமணற்
போர்விற் பெறூஉந் துறைவன் கேண்மை
நன்னெடுங் கூந்த னாடுமோ மற்றே.
153

பரத்தையிற் பிரிந்து வாயில்வேண்டிய தலைமகன் கேட்குமாற் றால் வாயிலாய்ப் புகுந்தார்க்குத் தோழி கூறியது.

75. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானற் சேக்குந் துறைவனோ
டியானெவன் செய்கோ பொய்க்குமிவ் வூரே.

154

தோழி வாயில்வேண்டி நெருங்கியவழி வாயின்மறுக்குந் தலைமகள் சொல்லியது.

76. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
ஓதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே.

பலவழியானும் வாயில் நேராளாகிய தலைமகள், 'மகப்பேற்றிற்கு
155 உரித்தாகிய காலங்கழிய ஒழுகுகின்றாய்' என நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.

77. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை

பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி
தென்கழிப் பரக்குந் துறைவன்
எனக்கோ காதல னனைக்கோ வேறே.

156

பரத்தையிடத்து வாயில்விட்டு ஒழுகுகின்ற தலைமகனது வாயிலாய் வந்தார்க்குத் தோழி வாயின்மறுத்தது.

78. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை



காலை யிருந்து மாலைச் சேக்குந்
தெண்கடற் சேர்ப்பனொடு வாரான்
தான்வந் தனனெங் காத லோனே.

157

பரத்தையிற் பிரிந்து வாயில்வேண்டி ஒழுகுகின்ற தலைமகன் புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைமகள் புதல்வன் விளையாடித் தனித்துவந்துழிச் சொல்லியது.

79. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானலம் பெருந்துறைத் துணையொடு கொட்குந்

தணணந துறைவன கணடிகும
அம்மா மேனியெந் தோழியது துயரே.

158

பரத்தை புலந்துழிப் புலவிநீக்குவானாய் அஃது இடமாக வந்தமை யறிந்த தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது.

80. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
நின்னொன் றிரக்குவெ னல்லேன்
தந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே.

159

மருமற்பொருட்டு உண்டிக்காலத்து வாயில்வேண்டிவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

81. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
நொந்ததன் றலையு நோய்மிகுந் துறைவ
பண்டையின் மிகப்பெரி தினைஇ
முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே.

160

புலந்த காதற்பரத்தை புலவிதீராது தலைமகன் வாயில்வேண்டி வந்தானென்றது அறிந்த தலைமகள் வாயின் மறுத்தது.

82—91. சிறுவெண்காக்கைப் பத்து 82.

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்
பசந்துநுத லழியச் சாஅய்
நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே.

161

ஒருவழித் தணந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாளாய்ச் சொல்லியது.

83. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

162

இதுவுமது.

84. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சுந்
துறைவன் றுறந்தெனத் துறந்தென்
இறையேர் முன்கை நீங்கிய வளையே.

163

இதுவுமது.

85. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி மருங்கி னயிரை யாருந்
தண்ணந் துறைவன் றகுதி
நம்மோ டமையா தலர்பயந் தன்றே.

164

தலைமகனுக்குப் புறத்தொழுக்க முளதாகியவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

86. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
அறுகழிச் சிறுமீ னார மாந்துந்
துறைவன் சொல்லிய சொல்லென்
இறையே ரெல்வளை கொண்டுநின் றதுவே.

165

இதுவுமது.



87. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉ
மெல்லம் புலம்பற் றேறி
நல்ல வாயின நல்லோள் கண்ணே.

166

வரையாது வந்தொழுகுந் தலைமகன்

சிறைப்புறத்தானாக, தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற்பழித்துக் கூறியது.

88. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி யினக்கெடி றாரும் துறைவன்
நல்குவன் போலக் கூறி
நல்கா னாயினுந் தொல்கே ளன்னே.

167

பரத்தையிற் பிரிந்த தலைமகன்விட வாயிலாய் வந்தார்க்கு
அவன் கொடுமைகூறித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் சொல்லியது.

89. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமணை யீனுந்
தண்ணந் துறைவ னல்கின்
ஒண்ணுத லரிவை பாலா ரும்மே.

168

கொதுமலர் வரைவுவேண்டி விடுத்தமையறிந்த தலைமகள் ஆற்
றாளாய்ப் பசியடநிற்புழி, 'இதற்குக் காரணமென்' என்று செவிலி
வினவத் தோழி அறத்தொடு நின்றது.

90. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை

பொன்னிணர் ஞாழல் முனையிற் பொதியவிழ்
புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்
நெஞ்சத் துண்மை யறிந்தும்
என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

.169

காதற்பரத்தையைவிட்டு மற்றொருத்தியுடன் ஒழுகாநின்ற தலைமகன் வாயில்வேண்டி விடுத்துழி, வாயினேர்தல் வேண்டி 'நின் கண் பசந்தனகாண்' என்று முகம்புகு தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

அம்மூவனார் - ஐங்குறுநூறு 35

91. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவன்
நல்ல னென்றி யாயிற்
பல்லித ழுண்கண் பசத்தல்மற் றெவனோ.

170

தலைமகற்குப் புறத்தொழுக்க முளதாகியவழி வேறுபட்ட தலைமகள், 'அவற்கு அவ்வாறு நிகழ்ச்சியில்லை; நம்மேல் அன்புடையன்' என்று தெளிக்குந் தோழிக்குச் சொல்லியது.

92—101. தோண்டிப் பத்து

92. திரையிமி ழின்னிசை யளைஇ யயலது
முழவிமி ழின்னிசை மறுகுதொ றிசைக்குந்
தொண்டி யன்ன பணைத்தோள்
ஒண்டொடியரிவையென்னெஞ்சுகொண்டோளே.
171

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்துநீங்குந் தலைமகன் ஆயத்தோடு செல்லும் தலைமகளைக் கண்டு சொல்லியது.

93. ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்கண்
உரவுக்கட லொலித்திரை போல
இரவி னானுந் துயிலறி யேனே. 172

'கண் துயில்கின்றிலை ; இதற்குக் காரணம் என்' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

94. இரவி னானு மின்றுயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
தண்ணறு நெய்த லாளும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே. 173

தலைமகன் குறிவழிச்சென்று தலைமகளைக் கண்ட பாங்கன் தன் னுள்ளே சொல்லியது.

95.
அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கினள்
நுணங்கிழைப்

பொங்கரி பரந்த வுண்கண்
அங்கலிழ் மேனி யசைஇய வெமக்கே.

174

குறிவழிச்சென்று தலைமகளைக் கண்டுவந்த பாங்கன் அவள் நின்றுழி நின்றாளென்று கூறியவழி ஆண்டுச் செல்லக்கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

96. எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்
நன்னுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே.

175

பாங்கற்கூட்டங்கூடி நீங்குந் தலைமகன் இனிவருமிடத்து நின் தோழியோடும் வரவேண்டுமெனத் தலைமகட்குச் சொல்லியது. 97. பண்பும் பாயலுங் கொண்டனள் தொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி
ஐதமைந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே.

176

தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழிச் சென்ற தலைமகன், ‘இவ்ள் என்னை இவைகோடற்குக் காரணம் என்’ என்று தோழியை வினவியது.

98. தவறில் ராயினும் பனிப்ப மன்ற
இவறுதிரை திளேக்கு மிடும்ண னெடுங்கோட்டு

முண்டக நறுமலர் கமழுந்
தொண்டி யன்னோள் தோளுற் றேரே.

177

தலேமகளும் தோழியும் ஒருங்குநின்றுழி 'இவள் என்னே வருத்துதற்குச் செய்த தவறு என்' என்று வினய தலேமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

99. தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்

அம்மூவனூர் - ஐங்குறுநூறு

37

குட்டுவன் தொண்டி யன்ன
எற்கண்டு நயந்துநீ நல்காக் காலே.

178

தலேமகன் தோழியை யிரந்து குறையுறுவான் சொல்லியது.

100. நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப
அலவன் தாக்கத் துறையிறுப் பிறழும்
இன்னெலித் தொண்டி யற்றே

நின்னல தில்லா விவள்சிறு நுதலே.

179

குறியிடத்துவந்து புணர்ந்துநீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப் பட்டு வரைவுகடாயது.

101. சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்

பறைதபு முதுகுரு கிருக்குந்
துறைகெழு தொண்டி யன்னவிவள் நலனே.

180

தாழ்த்து வரையக் கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் கடிதின் வரையவேண்டுமெனச் சொல்லியது.

102—111. நெய்தற் பத்து

102. நெய்த லுண்க ணேரிறைப் பணைத்தோட்
பொய்த லாடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணற் குரவை நிறூஉந்
துறைகெழு கொண்க னல்கின்
உறைவினி தம்மவிவ் வழுங்க லூரே.

181

இக்களவொழுக்கம் நெடிதுசெல்லின் இவ்வூர்க்கண் அலர் பிறக்குமென்று அஞ்சியிருந்த தலைவி, 'தலைமகன் வரைந்துகொள் ளத் துணிந்தான்' என்று கூறிய தோழிக்குச் சொல்லியது.

103. நெய்த லூறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்பன்
அருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே.
182

தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தா லாயிற்றெனத் தமர்நினைந் துழித் தோழி அறத்தொடு நின்றது.



104. *தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே. 183

வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகிய தலைமகள் மாலைக்குச் சொல்லியது.

105. நெய்த லிருங்கழி நெய்த னீக்கி
மீனுண் குருகிளங் கான லல்குங்
கடலணிந் தன்றவ ரூரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே. 184

வாயில் வேண்டிவந்தார் தலைமகன் அன்புடைமை கூறியவழி வாயின் மறுக்குந் தலைமகள் சொல்லியது.

106. அலங்கிதழ் நெய்தற் கொற்கை முன்றுறை
இலங்குமுத் துறைக்கு மெயிறுகெழு துவர்வாய்
அரம்போ ழவ்வளைக் குறுமகள்
நரம்பார்த் தன்ன தீங்கிள வியளே. 185

'ஆயமகளிருள் நின்னால் நயக்கப்பட்டாள் யாவள்' என வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

107. நாரை நல்லினங் கடுப்ப மகளிர்
நீர்வார் கூந்த லுளருந் துறைவ
பொங்குகழி நெய்த லுறைப்ப இத்துறைப்
பல்கால் வரூஉந் தேரெனச்
செல்லா தீமோ வென்றனள் யாயே.

186

பகற்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகனைத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

---

*இவ்வடிக்கு முன்பாக

கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாட னல்வய லூரன்

என்ற அடிகள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன.

39 108. நொதுமலாளர் கொள்ளா ரிவையே
எம்மொடு வந்து கடலாடு மகளிரும்
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்
உடலகங் கொள்வோ ரின்மையிற்
5 றொடலைக் குற்ற சிலபூ வினரே.

187
தோழி கையுறை மறுத்தது.

109.

இருங்கழிச் சேயிறு வினப்புள் ளாருங்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை

வைகறை மலரு நெய்தல் போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே.

188
விருந்து வாயிலாகப் புகுந்த தலைமகன் தலைவி
இல்வாழ்க்கைச் சிறப்புக் கண்டு மகிழ்ந்து சொல்லியது.

110. புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்
பொன்படு மணியிற் பொற்பத் தோன்று
மெல்லம் புலம்பன் வந்தென

நல்ல வாயின தோழியென் கண்ணே.

189

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக் கண்டு உவகையோடு வந்த தோழி, 'நின் கண்மலர்ச்சிக்குக் காரணம் என்' என்று வினவிய தலைவிக்குச் சொல்லியது.

111. தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ
வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கு
மெல்லம் புலம்பன் மன்றவெம்
பல்லித ழுண்கண் பனிசெய் தோனே.

190

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

### 112—121. வளைப் பத்து

112. கடற்கோடு செறிந்த மயிர்வார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த இரும்பல் கூந்தற்
கானல் ஞாழற் கவின்பெறு தழையள்







வரையர மகளிரி னரியளென்
நிறையரு நெஞ்சங் கொண்டொளித்

தோளே. 191

'நின்னாற் காணப்பட்டவள் எவ்விடத்து எத்தன்மையள்' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் கூறியது.

113. கோடுபுலங் கொட்பக் கடலெழுந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்குந்
துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தன
வீங்கின மாதோ தோழியென் வளையே.

192

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வந்துழித் தலைவி முனிந்து கூறுவாள்போலத் தன்மெலிவு நீங்கினமை தோழிக்குச் சொல்லியது.

114. வலம்புரி யுழுத வார்மண லடைகரை
இலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்குந்
துறைகெழு கொண்கநீ தந்த
அறைபுனல் வால்வளை நல்லவோ தாமே.

193

வரையாது வந்தொழுகுந் தலைமகன் தலைமகட்கு வளைகொண்டு வந்து கொடுத்துழி, 'பண்டை வளை போலாவாய் மெலிந்துழி நீங்கா நலனுடையவோ இவை' எனத் தலைமகள் மெலிவு சொல்லித் தோழி வரைவு கடாயது.

115. கடற்கோ டறுத்த அரம்போ ழவ்வளை
ஒண்டொடி மடவரற் கண்டிகுங் கொண்க
நன்னுத லின்றுமால் செய்தெனக்
கொன்னொன்று கடுத்தன ளன்னையது
நிலையே. 194

பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு மனைக்கண் நிகழ்ந்தது கூறிச் செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.

116. வளைபடு முத்தம் பரதவர் பகரும்
கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்



கெடலருந் துயர நல்கிப்
படலின் பாயல் வௌவி யோளே.
195

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் தனித் துறைய ஆற்றானாய்ச் சொல்லியது.

117. கோடீ ரெல்வளைக் கொழும்பல் கூந்தல்
ஆய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்
றெண்கழிச் சேயிறாப் படூஉந்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ.
196

குறைமறுக்கப்பட்ட தலைமகன் பின்னும்

குறைவேண்டியவழித் தோழி சொல்லியது.

118. இலங்குவளை தெளிர்ப்ப அலவ னாட்டி
முகம்புதை கதுப்பின ளிறைஞ்சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே.

197

தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமைகண்டு சொல்லியது.

119. வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை
இளைய ராடுந் தளையவிழ் கானற்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே.

198

பரத்தையர் மனைக்கட் பன்னாட்டங்கிப் பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது.

120. கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வானுயர் நெடுமணன் மேறியா னாது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோ னெறிகட லூரே.

199

தலைமகன் ஒருவழித் தணந்துழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்குந் தோழி சொல்லியது.

121. இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவினப்
பொலந்தேர்க் கொண்கன் வந்தன னினியே
விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி
நலங்கவர் பசலையை நகுகம் நாமே.

200

உடன்போக்குத் துணிந்தவழி அதற்கு இரவின்கண் தலைமகன் வந்தறிந்த தோழி தலைமகளைப் பாயலுணர்த்திச் சொல்லியது.

122. குறுந்தொகை - 49. நெய்தல்

அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரெங் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவனே.

தலைமகன் பரத்தைமாட்டுப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள் அவனைக் கண்டவழி அவ்வாற்றாமை நீங்குமன்றே; நீங்கிய வழிப் பள்ளியிடத்தானாகிய தலைமகற்குச் சொல்லியது.

123. குறுந்தொகை - 125. நெய்தல்

இலங்குவளை நெகிழச் சாஅ யானே
உளேனே வாழி தோழி சாரல்

தழையணி யல்குல் மகளி ருள்ளும்
விழவுமேம் பட்டவென் னலனே பழவிறற்
பறைவலந் தப்பிய பைதல் நாரை
திரைதோய் வாங்குசினை யிருக்குந்
தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே.

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குக் கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகச் சொல்லியது.

## 124. குறுந்தொகை - 163. நெய்தல்

யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் தாழைத் திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்டும்நின் குரலே.

அம்மூவனார் 43

தன்னுட் கையாறெய்திடு கிளவி.

## 125. குறுந்தொகை - 303. நெய்தல்

கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு
கடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்
உடைதிரை யொலியிற் றுஞ்சுந் துறைவ
தொன்னிலை நெகிழ்ந்த வளைய ளீங்குப்
பசந்தனள் மன்னென் றோழி யென்னொடு
மின்னிணர்ப் புன்னையம் புகர்நிழற்
பொன்வரி யலவ னாட்டிய ஞான்றே.

செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.

## 126. குறுந்தொகை - 306. நெய்தல்

மெல்லிய வினிய மேவரு தகுந
இவைமொழி யாமெனச் சொல்லினு மவைநீ
மறத்தியோ வாழியென் னெஞ்சே பலவுடன்
காமர் மாஅத் தாதமர் பூவின்
வண்டுவீழ் பயருங் கானல்
தெண்கடற் சேர்ப்பனைக் கண்ட பின்னே.

காப்பு மிகுதியான் நெஞ்சு மிக்கது வாய்சோர்ந்து கிழத்தி யுரைத்தது.

## 127. குறுந்தொகை - 318. நெய்தல்

எறிசுறாக் கலித்த விலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்

குறியா னாயினுங் குறிப்பினும் பிறிதொன்
றறியார்க் குரைப்பலோ யானே வெய்த்தவிப்



பணைபெழின் மென்றோ ளணைஇய வந்நாட்
பிழையா வஞ்சினஞ் செய்த
களவனுங் கடவனும் புணைவனுந் தானே.

கிழவன் கேட்கும் அண்மையானாகத்
தோழிக்குக் கிழத்தி
-யுரைத்தது.

## 128. குறுந்தொகை - 327. குறிஞ்சி

நல்கின் வாழு நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராகுத லன்றெனவுணர்ந்த
குன்ற நாடன் றன்னினு நன்று
நின்னிலை கொடிதாற் றீங்கலு ழுந்தி
நம்மனை மடமக ளின்ன மென்மைச்
சாய லளிய ளென்னாய்
வாழைதந் தனையாற் சிலம்புபுல் லெனவே.

கிழவன் கேட்கும் அண்மையனாக அவன்

மலையினீன் றுவரும்

யாற்ரோடு உரைப்பாளாய்க் கிழத்தி உரைத்தது.

129. குறுந்தொகை - 340. நெய்தல்

காமங் கடையிற் காதலர்ப் படர்ந்து
நாமவர்ப் புலம்பி னம்மோ டாகி
ஒருபாற் படுதல் செல்லா தாயிடை
அழுவ நின்ற வலர்வேர்க் கண்டல்
கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்

பெயர்தரப் பெயர்தந் தாங்கு
வருந்துந் தோழியவ ரிருந்தவென் னெஞ்சே.

இரவுக்குறி உணர்த்திய தோழிக்குக் கிழத்தி மறுத்தது.

130. குறுந்தொகை - 351. நெய்தல்

வளையோ யுவந்திசின் விரைவுறு
கொடுந்தாள்
அளைவா ழலவன் கூருகிர் வரித்த
ஈர்மணல் மலிர்நெறி சிதைய விழுமென
உருமிசைப் புணரி யுடைதருந் துறைவற்

குரிமை செப்பினர் நமரே விரியலர்ப்
புன்னை யோங்கிய புலாலஞ் சேரி
இன்னகை யாயத் தாரோ
டின்னுமற் றோவிவ் வழுங்க லூரே.

தலைமகன் தமர் வரைவொடு வந்தவழி நமர் அவர்க்கு வரைவு நேரார்கொல்லோ என்று அஞ்சிய தலைமகட்குத் தோழி வரைவு மலிந்தது.

**131. குறுந்தொகை - 397. நெய்தல்**

நனைமுதிர் ஞாழற் றினைமருள் திரள்வீ
நெய்தல் மாமலர்ப் பெய்த போல
ஊதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்
டன்னா யென்னுங் குழவி போல
இன்னா செயினு மினிதுதலை யளிப்பினும்
நின்வரைப் பினளென் றோழி
தன்னுறு விழுமங் களைஞரோ விலளே.

வரைவிடை வைத்து நீங்குந் தலைமகற்குத் தோழி உரைத்தது.

**132. குறுந்தொகை - 401. நெய்தல்**

அடும்பி னாய்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்
ஓரை மகளி ரஞ்சி யீர்ஞெண்டு
கடலிற் பரிக்குந் துறைவனொ டொருநாள்
நக்குவிளை யாடலுங் கடிந்தன்
றைதே கம்ம மெய்தோய் நட்பே.

வேறுபாடு கண்டு இற்செறிக்கப்பட்ட தலைமகள் தன்னுள்ளே சொல்லியது.

**133.** நற்றிணை - **4.** நெய்தல்

கானலஞ் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்



தண்பெரும் பரப்பி னொண்பத நோக்கி
அங்க ணரில்வலை யுணக்குந் துறைவனொ
டலரே, அன்னை யறியி னிவணுறை வாழ்க்கை
அரிய வாகு நமக்கெனக் கூறிற்
கொண்டுஞ் செல்வர்கொல் தோழி யுமணர்
வெண்க லுப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கு நெடுநெறிச் சகட
மணன்மடுத் துரறு மோசை கழனிக்

கருங்கால் வெண்குருகு வெரூஉம்
இருங்கழிச் சேர்ப்பிற்றம் முறைவி னூர்க்கே.

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி அலரச்சந் தோன்றச் சொல்லி வரைவுகடாயது.

## 134. நற்றிணை - 35. நெய்தல்

பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கா னாவற் பொதிப்புற விருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்டகோட் கசாந்து
கொள்ளா நரம்பி னிமிரும் பூசல்
இரைதேர் நாரை யெய்தி விடுக்குந்
துறைகெழு மாந்தை யன்ன விவணலம்
பண்டு மிற்றே கண்டிசிற் றெய்ய
உழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய
ஞெகிழ்ந்த கவினலங் கொல்லோ மகிழ்ந்தோர்
கட்களி செருக்கத் தன்ன
காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே.

மணமனைப் பிற்றைஞான்று புக்க தோழி நன்காற்றுவித்தா யென்ற தலைமகற்குச் சொல்லியது.

### 135. நற்றிணை - 76. பாலை

வருமழை கரந்த வானிற விசும்பின்
நுண்டுளி மாறிய வுலவை யங்காட்

அம்மூவனார்

47

டால நீழ லசைவு நீக்கி
யஞ்சுவழி யஞ்சா தசைவழி யசைஇ
வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள்
இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை
வீமல ருதிர்ந்த தேனாறு புலவிற்
கானல் வார்மணல் மரீஇக்
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி யுயற்கே.

புணர்ந்துடன் போகாநின்ற தலைவன் இடைச்சுரத்துத் தலைவிக் குரைத்தது.

### 136. நற்றிணை - 138. நெய்தல்

உவர்விளை யுப்பின் குன்றுபோல் குப்பை
மலையுய்த்துப் பகரு நிலையா வாழ்க்கைக்
கணங்கொ ளுமண ருயங்குவயி னொழித்த
பண்ணழி பழம்பார் வெண்குரு கீனுந்
தண்ணந் துறைவன் முன்னாள் நம்மொடு
பாசடைக் கலித்த கணைக்கா னெய்தற்
பூவுட னெறிதரு தொடலை தைஇக்
கண்ணறி வுடைமை யல்லது நுண்வினை
இழையணி யல்குல் விழவாடு மகளிர்
முழங்குதிரை யின்சீர் தூங்கும்
அழுங்கல் மூதூ ரறிந்தன்றோ வின்றே.

அலராயிற்றென ஆற்றாளாய்த் தலைமகட்குத் தலைவன் சிறைப் புறமாகத் தோழி சொல்லியது.

**137.** நற்றிணை - **275.** நெய்தல்

செங்கே லரிநர் கூர்வாட் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தெனப் பூவே
படையொடுங் கதிரொடு மயங்கிய படுக்கைத்
தன்னுறு விழும மறியா மென்மெலத்
தெறுகதி ரின்றுயிற் பசுவாய் திறக்கும்
பேதை நெய்தற் பெருநீர்ச் சேர்ப்பற்

கியானினைந் திரங்கே னாக நோயிகந்
தறனி லாளன் புகழவெற்
பெறினும் வல்லேன்மற் றோழி யானே.

சிறைப்புறமாகத் தலைமகனது வரவுணர்ந்து வற்புறுப்ப வன் புறை எதிர்மொழிந்தது.

## 138. நற்றிணை - 307. நெய்தல்

கவர்பரி நெடுந்தேர் மணியு மிசைக்கும்
பெயர்பட வியங்கிய விளையரு மொலிப்பர்
கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த
திதலை யல்கு னலம்பா ராட்டிய
வருமே தோழி வார்மணற் சேர்ப்ப
னிறைபட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாவரை மறைகம் வம்மதி பானாட்
பூவிரி கானற் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணா
அல்ல லரும்படர் காண்கநாஞ் சிறிதே.

குறிநீட ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

## 139. நற்றிணை - 315. நெய்தல்

ஈண்டுபெருந் தெய்வத் தியாண்டுபல

கழிந்தெனப்

பார்த்துறைப் புணரி யலைத்தலிற் புடைகொண்டு
மூத்துவினை போகிய மூரிவா யம்பி
நல்லெருது நடைவளம் வாய்த்தென வுழவர்
புல்லுடைக் காவிற் றொழில்விட் டாங்கு
நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழல்
முழவுமுதற் பிணிக்குந் துறைவ நன்றும்
விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதிற்
றவறுநற் கறியா யாயி னெம்போல்
ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே.

தலைமகனைப் பரத்தை நொந்து சொல்லியது.

49

அம்மூவனார்

**140.** நற்றிணை - **327.** நெய்தல்

நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்
பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்
சாதலு மினிதே காதலந் தோழி
அந்நிலை யல்ல வாயினுஞ் சான்றோர்
கடனிலை குன்றலு மிலரென் றுடனமர்ந்து
உலகங் கூறுவ துண்டென நிலைஇய
தாய மாகலு முரித்தே போதவிழ்
புன்னை யோங்கிய கானற்
றண்ணந் துறைவன் சாயன் மார்பே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாய தலைமகள் வன்புறை எதிரழிந்தது.

## 141. நற்றிணை - 395. நெய்தல்

யாரை யெலுவ யாரே நீயெமக்கு
யாரையு மல்லை நொதும லாளனை
அனைத்தாற் கொண்கநம் மிடையே நினைப்பிற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு மயக்கத்து முரசதிர்ந் தன்ன
ஓங்கற் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை யன்னவெம்
வேட்டனை யல்லையால் நலந்தந்து சென்மே.

நலந்தொலைந்தது [எனத் தலைவனைத் தோழி கூறியது.]

## 142. நற்றிணை - 397. பாலை

தோளு மழியு நாளுஞ் சென்றென
நீளிடை யத்த நோக்கி வாளற்றுக்
கண்ணுங் காட்சி தௌவின வென்னீத்து
அறிவு மயங்கிப் பிறிதா கின்றே
நோயும் பேரு மாலையும் வந்தன்று

4



யாங்கா குவென்கொல் யானே யீங்கோ
சாத லஞ்சே னஞ்சுவல் சாவிற்
பிறப்புப்பிறி தாகுவ தாயின்
மறக்குவேன் கொல்லென் காதல னெனவே.

பிரிவிடை ஆற்றாளாகி நின்ற தலைமகளை வற்புறுகின்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

### கக. அம்மெய்யநாகனார்

### 143. நற்றிணை - 252. பாலை

உலவை யோமை யொல்குநிலை யொடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட் டத்தந்
திறம்புரி கொள்கையொ டிறந்துசெயி னல்லது
அரும்பொருட் கூட்ட மிருந்தோர்க் கில்லென
வலியா நெஞ்சம் வலிப்பச் சூழ்ந்த
வினையிடை விலங்கல போலும் புனைசுவர்ப்

பாவை யன்ன பழிதீர் காட்சி
ஐதேய்ந் தகன்ற வல்குல் மைகூர்ந்து
மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்
முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய்
நன்னாப் புரையுஞ் சீறடிப்
பொம்ம லோதிப் புனையிழை குணனே.

பொருள்வயிற் பிரியுமெனக் கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியது.

### கஉ. அரிசில்கிழார்

**144.** குறுந்தொகை - **193.** முல்லை

மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு நாடன்
தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின்



மணந்தனன் மன்னெந் தோளே
இன்று முல்லை முகைநா றும்மே.

தோழி கடிநகர் புக்கு நலந் தொலையாமே நன்காற்றினாய் என்றாட்குக் கிழத்தி யுரைத்தது.

**145—154.** பதிற்றுப்பத்து - எட்டாம் பத்து - **71—80.**

145. அரூஅ யாண ரகன்கட் செறுவின்
அருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரின்
அலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே
ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வெளவினை யேறொடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றாடா வைகற்பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு
வற்றெனை
அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையொ டருங்கலந்
தராஅர்
மெய்பனி கூரா அணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்

திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் ஊழி
உரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி 52


அறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே.

71

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர் - குறுந்தாண் ஞாயில்.

146. இகல்பெரு மையிற் படைகோ ளஞ்சார்
சூழாது துணித லல்லது வறிதுடன்
காவ லெதிரார் கறுத்தோர் நாடுநின்
முன்றிணை முதல்வர்க் கோம்பின ருறைந்து
மன்பதை காப்ப அறிவுவலி யுறுத்து
நன்றறி யுள்ளத்துச் சான்றோ ரன்னநின்
பண்புநன் கறியார் மடம்பெரு மையின்

துஞ்ச லுறூஉம் பகல்புகு மாலை
நிலம்பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி
உரவுத்திரை கடுகிய உருத்தெழு வெள்ளம்
வரையா மாதிரத் திருள்சேர்பு பரந்து
ஞாயிறு பட்ட அகன்றுவரு கூட்டத்து
அஞ்சாறு புரையு நின்றொழி லொழித்துப்
பொங்குபிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்
மடங்கற் றீயி னனையை
சினங்கெழு குருசினின் னுடற்றிசி னோர்க்கே. 72

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்
ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - உருத்தெழுவெள்ளம்.

147. உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்
பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப்
பிறருவம மாகா வொருபெரு வேந்தே
.... கூந்த லொண்ணுதல் பொலிந்த

நிறந்திகழ் பாசிழை யுயர்திணை மகளிரும்
தெய்வந் தஊஉ நெஞ்சத் தான்றோர்
.... .... ....
மருதஞ் சான்ற மலர்தலை விளைவயற்
செய்யுள் நாரை யொய்யு மகளிர்

இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை யயரும்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்
புகாஅர்ச் செல்வ பூழியர் மெய்ம்மறை
கழைவிரிந்
கொல்லிப்

தெழுதரு மழைதவழ் நெடுங்கோட்டுக்
பொருந கொடித்தேர்ப் பொறையநின்
வளனு மாண்மையுங் கைவண் மையும்
மாந்த ரளவிறந் தனவெனப் பன்னாள்
யான்சென் றுரைப்பவுந் தேறார் பிறருஞ்
சான்றோ ருரைப்பத் தெளிகுவர் கொல்லென
ஆங்குமதி மருளக் காண்குவல்
யாங்குரைப் பேனென வருந்துவல் யானே.

73

இதுவும் அது. பெயர் - நிறந்திகழ்பாசிழை.

148. கேள்வி கேட்டுப் படிவ மொடியாது

வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச்
சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்
கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணிக் குறும்பொறை நாடித்
தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
கவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
எஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்
சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்
எண்ணியல் முற்றி யீரறிவு புரிந்து
சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவுங்

காவற் கமைந்த அரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்கு
அருங்கட னிறுத்த செருப்புகல் முன்ப
அன்னவை மருண்டனெ னல்லே னின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையு மாண்பும் வளனு மெச்சமுந்
தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெருமநின் படிமை யானே. 74

இதுவும் அது. பெயர் - நலம்பெறுதிருமணி.

149. இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்
அரும்பொறி வயமா னனையை பல்வேற்
பொலந்தார் யானை யியறேர்ப் பொறைய
வேந்தரும் வேளிரும் பிறருங் கீழ்ப்பணிந்து
நின்வழிப் படாஅ ராயின் நெல்மிக்கு
அறையுறு கரும்பின் தீஞ்சேற் றியாணர்
வருநர் வரையா வளம்வீங் கிருக்கை
வன்புலந் தழீஇ மென்பால் தோறும்
அரும்பறை வினைஞர் புல்லிகல் படுத்துக்
கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்
வெள்வர குழுத கொள்ளுடைக் கரம்பைச்
செந்நெல் வல்சி யறியார் தத்தம்
பாடல் சான்ற வைப்பின்
நாடுட னாடல் யாவண தவர்க்கே. 75

இதுவும் அது. பெயர் - தீஞ்சேற்றியாணர்.

150. களிறுடைப் பெருஞ்சமந் ததைய எஃகுயர்த்து
ஒளிறுவாள் மன்னர் ததைநிலை கொன்று
முரசுகடிப் படைய வருந்துறை போகிப்
பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய வினைவர் போலப் புண்ணொரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்றுயர் கழிப்பி
இரந்தோர் வாழ நல்கி யிரப்போர்க்கு

## அரிசில்கிழார் - பதிற்றுப்பத்து

55

ஈதல் தண்டா மாசித றிருக்கை
கண்டனென் செல்கு வந்தனென் கால்கொண்டு
கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பி னாடுகிழ வோயே. 76

இதுவும் அது. பெயர் - மாசிதறிருக்கை.

151.

எனைப்பெரும்படையனோ சினப்போர்ப் பொறையன்
என்றனி ராயின் ஆறுசெல் வம்பலிர்
மன்பதை பெயர அரசுகளத் தொழியக்

கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை
மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களும்
எண்ணற் கருமையி னெண்ணின்றோ
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி

விலனே

உகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரல் முரம்பி னீர்ம்படைக் கொங்கர்
ஆபரந் தன்ன செலவிற்பல
யானை காண்பலவன் றானை யானே.

77

துறை - உழிஞையரவம். வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - வென்றாடுதுணங்கை.

152. வலம்படு முரசி னிலங்குவன விழூஉம்
அவ்வெள் ளருவி யுவ்வரை யதுவே
சில்வளை விறலி செல்குவை யாயின்

வள்ளிதழ்த் தாமரை நெய்தலொ டரிந்து
மெல்லியல் மகளி ரொல்குவன ரியலிக்

இளிகடி மேவலர் புறவுதொறு நுவலப்
பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி



பேஎ மன்ற பிறழநோக் கியவர்
ஓடுறு கடுமுரண் துமியச் சென்று
வெம்முனை தபுத்த காலைத் தந்நாட்டு
யாடு பரந்தன்ன மாவின்
ஆபரந் தன்ன யானையோன் குன்றே. 78

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - பிறழநோக்கியவர்.

153. உயிர்போற் றலையே செருவத் தானே
கொடைபோற் றலையே யிரவலர் நடுவண்
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி

நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த ஆண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப
அனைய வளப்பருங் குரையை யதனால்
நின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து
கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென
வில்குலை யறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்
அரசுவா அழைப்பக் கோடறுத் தியற்றிய
அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்ளா அஞ்சுவரு மரபிற்

கடவு ளயிரையின் நிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே.

## 79

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நிறம்படு குருதி.

154. வான்மருப்பிற் களிற்றியானை
மாமலையிற் கணங்கொண்டவர்
எடுத்தெறிந்த விறல்முரசங்

## அரிசில்கிழார் - பதிற்றுப்பத்து

57

கார்மழையிற் கடிதுமுழங்கச்
சாந்துபுலர்ந்த வியன்மார்பின்
தொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடை யெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வாள்
ஓடிவில் தெவ்வ ரெதிர்நின் றுரைஇ
இடுக திறையே புரவெதிர்ந் தோற்கென
அம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
அனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே.

80

துறை - வஞ்சித் துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் -

ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - புண்ணுடையெறுழ்த்தோள்.

## 154-a. பதிகம்

பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக்கோமான் பதுமன் றேவியீன்றமகன்
கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேற் றானை யதிக மானோடு
இருபெரு வேந்தரையு முடனிலை வென்று
முரசுங் குடையுங் கலனுங்கொண்டு
உரைசால் சிறப்பி னடுகளம் வேட்டுத்
துகடீர் மகளி ரிரங்கத் துப்பறுத்துத்
தகடூ ரெறிந்து நொச்சிதந் தெய்திய
அருந்திற லொள்ளிசைப் பெருஞ்சேர லிரும்பொறையை
மறுவில் வாய்மொழி யரிசில்கிழார் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம்: குறுந்தாண்ஞாயில்,
திகழ் பாசிழை, நலம்பெறுதிருமணி,

உருத்தெழுவெள்ளம், நிறந்
திஞ்சேற்றியாணர், மாசித

திருக்கை, வென்றாடுதுணங்கை, பிறழநோக்கியவர், நிறம்படுகுருதி, புண்ணுடையெறுழ்த்தோள். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: தானும் கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலுள்ளவெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தொடு அரசுகட்டிற் கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப் பூண்டார்.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை பதினேழியாண்டு வீற்றிருந்தான்.

## 155. புறநானூறு - 146

அன்ன வாகநின் அருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேஎ மடுபோர்ப் பேக
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட வென்னை நயந்து
பரிசில் நல்குவை யாயிற் குரிசினீ
நல்கா மையின் நைவரச் சாஅய்
அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம். வையாவிக்கோப் பெரும் பேகனை அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாகப் பாடியது.

## 156. புறநானூறு - 230.

கன்றம ராயங் கானத் தல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவுங்
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா எழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோள் நீத்த குழவி போலத்

## அரிசில்கிழார் 59

தன்னமர் சுற்றந் தலைத்தலை யினையக்
கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந்து வைகிய வுலகினு மிகநனி
நீயிழந் தனையே யறனில் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யுழவன் வித்துண் டாஅங்கு
ஒருவ னாருயி ருண்ணா யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னோவவ னமரடு களத்தே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியைப் பாடியது.

## 157. புறநானூறு - 281.

தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச்செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கப்
கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
ஐயவி சிதறி யாம்ப லூதி
இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே.

திணை - காஞ்சி ; துறை - பேய்க்காஞ்சி.

## 158. புறநானூறு - 285.

பாசறை யீரே பாசறை யீரே
துடியன் கையது வேலே யடிபுணர்
வாங்கிரு மருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே காண்வரக்

கடுந்தெற்று மூடையின்.... ....
வாடிய மாலை மலைந்த சென்னியன்
வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு

நெடுநகர் வந்தென விடுகணை மொசித்த
மூரி வெண்டோள்.... .... ....
சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ
மாறுபடு நெடுவேல் மார்புளம் போக
நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
அதுகண்டு, பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்து

இறைஞ்சி யோனே குருசில் பிணங்குகதிர்
அலமருங் கழனித் தண்ணடை யொழிய
இலம்பா டொக்கற் றலைவற்கோர்
கரம்பைச் சீறூர் நல்கின னெனவே.

திணை - வாகை ; துறை.... ...முல்லை.

## 159. புறநானூறு - 300.

தோரூ தோரூ வென்றி தோலொடு
துறுகல் மறையினு முய்குவை போலாய்
நெருந லெல்லைநீ யெறிந்தோன் தம்பி
அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரூ ரட்ட கள்ளிற்
கோரிற் கோரிற் றேருமால் நின்னே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

## 160. புறநானூறு - 304.

கொடுங்குழை மகளிர் கோதை சூட்டி

நடுங்குபனிக் களைஇயர் நாரரி பருகி
வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை
எம்முற் றப்பியோன் தம்பியொ டொராங்கு

நாளைச் செய்குவென் அமரெனக் கூறிப்
புன்வயி றருத்தலுஞ் செல்லான் வன்மான்
கடவு மென்ப பெரிதே யதுகேட்டு
வலம்படு முரசின் வெல்போர் வேந்தன்

அல்லங் கீரனார் 61

இலங்கிரும் பாசறை நடுங்கின்று
இரண்டா காதவன் கூறிய தெனவே.

திணை - தும்பை ; துறை - குதிரைமறம்.

## 161. புறநானூறு - 342.

கானக் காக்கைக் கலிச்சிற கேய்க்கு
மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள்
ஏனோர் மகள்கொ லிவளென விதுப்புற்று
என்னொடு வினவும் வென்வேல் நெடுந்தகை
திருநயத் தக்க பண்பினிவள் நலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே
பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை
மென்சேற் றடைகரை மேய்ந்துண் டதற்பின்

ஆர வீன்ற ஐயவி முட்டை
கூர்ந விறவின் பிள்ளையொடு பெறாஉந்
தண்பணைக் கிழவனிவள் தந்தையும் வேந்தரும்
பெறாஅ மையிற் பேரமர் செய்தலிற்
கழிபிணம் பிறங்குபோர் பழிகளி றெருதா
வாள்தக வைகலு முழக்கு
மாட்சி யவரிவள் தன்னை மாரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## கரு. அல்லங் கீரனார்

### 162. நற்றிணை - 245. நெய்தல்

நகையா கின்றே தோழி தகைய
அணிமலர் முண்டகத் தாய்பூங் கோதை
மணிமரு ளைம்பால் வண்டுபடத் தைஇத்
துணிநீர்ப் பௌவந் துணையோ டாடி
ஒழுகுநுண் ணுசுப்பி னகன்ற வல்குல்
தெளிதீங் கிளவி யாரை யோவென்
அரிதுபுண ரின்னுயிர் வெளவிய நீயெனப்

பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித்
தானம் மணங்குத லறியான் நம்மில்
தானணங் குற்றமை கூறிக் கானற்
சுரும்பிமிர் சுடர்நுதல் நோக்கிப்
பெருங்கடற் சேர்ப்பன் தொழுதுநின் றதுவே.

குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது.

## கச. அழிசி நச்சாத்தனார்

### 163. குறுந்தொகை - 271. மருதம்

அருவி யன்ன பருவுறை சிதறி
யாறுநிறை பகரு நாடனைத் தேறி
உற்றது மன்னு மொருநாள் மற்றது
தவப்பன் னாடோள் மயங்கி
வௌவும் பண்பி னோயா கின்றே.

தலைமகற்கு வாயினேர்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## கரு. அள்ளூர் நன்முல்லையார்

### 164. அகநானூறு - 46. மருதம்

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி

நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று

உறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறரு மொருத்தியை நம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப அஃதியாம்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்

அள்ளூர் நன்முல்லையார் 63

களிறுடை யருஞ்சமந் ததைய நூறும்
ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென்
ஒண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே.

வாயில்வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.

**165.** குறுந்தொகை - **32.** குறிஞ்சி

காலையும் பகலுங் கையறு மாலையும்

ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்
மாவென மடலொடு மறுகிற் றோன்றித்
தெற்றெனத் தூற்றலும் பழியே
வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.

*பின்னின்றான் கூறியது.*

## 166. குறுந்தொகை - 67. பாலை

உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
புதுநா ணுழைப்பான் நுதிமாண் வள்ளுகிர்ப்
பொலங்கல வொருகா சேய்க்கு
நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே.

*பிரிவிடை யாற்றாத தலைமகள் தோழிக்கு உரைத்தது.*

## 167. குறுந்தொகை - 68. குறிஞ்சி

பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்
ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்
அரும்பனி யற்சிரந் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே.

*பிரிவிடைக் கிழத்தி மெலிந்து கூறியது.*

**168.** குறுந்தொகை - **93.** மருதம்

நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினு முரையல் அவர்நமக்கு
அன்னையு மத்தனு மல்லரோ
புலவிய தெவனோ அன்பிலங் கடையே.

வாயிலாகப் புக்க தோழிக்கு வாயின் மறுத்தது.

**169.** குறுந்தொகை - **96.** குறிஞ்சி

அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு
யானெவன் செய்கோ என்றி யானது

நகையென வுணரே னாயின்
என்னா குவைகொல் நன்னுதல் நீயே.

தலைமகனை இயற்பழித்துத் தெருட்டுந் தோழிக்குத்
தலைமகள்

இயற்படச் சொல்லியது.

## 170. குறுந்தொகை - 140. பாலை

வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்துஞ்
சுரனே சென்றனர் காதல ருரனழிந்து
ஈங்கியா னழுங்கிய எவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே.

பொருள்வயிற் பிரிந்தவிடத்து நீ
ஆற்றுகின்றிலை யென்ற
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 171. குறுந்தொகை - 157. மருதம்

குக்கூ என்றது கோழி யதனெதிர்
துட்கென் றன்றென் றூஉ நெஞ்சம்
தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே.

பூப்பெய்திய தலைமகள் உரைத்தது.

### அள்ளூர் நன்முல்லையார்

65

## 172. குறுந்தொகை - 202. மருதம்

நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு
இனிய செய்தநங் காதலர்
இன்னா செய்தல் நோமென் னெஞ்சே.

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது.

## 173. குறுந்தொகை - 237. பாலை

அஞ்சுவ தறியா தமர்துணை தழீஇ
நெஞ்சுநப் பிரிந்தன் றாயினு மெஞ்சிய
கைபிணி நெகிழினஃ தெவனோ நன்றுஞ்
சேய அம்ம விருவா மிடையே
மாக்கடற் றிரையின் முழங்கி வலனேர்பு
கோட்புலி வழங்குஞ் சோலை
எனைத்தென் றெண்ணுகோ முயக்கிடை மலைவே.

பொருள்முற்றிமீள்வான் தேர்ப்பாகற்கு உரைத்தது.

## 174. புறநானூறு - 306.

களிறுபொரக் கலங்கு கழல்முள் வேலி
அரிதுண் கூவ லங்குடிச் சீறூர்

ஒலிமென் கூந்த லொண்ணுத லரிவை
நடுகற் கைதொழுது பரவு மொடியாது
விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையு
மோ.... .... ....வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

5

## ௧௬. அறிவுடை நம்பி

### 175. அகநானூறு - 28. குறிஞ்சி

மெய்யிற் றீரா மேவரு காமமொடு
எய்யா யாயினு முரைப்பல் தோழி
கொய்யா முன்னுகுங் குரல்வார்பு தினையே
அருவி யான்ற பைங்கால் தோறும்
இருவி தோன்றின பலவே நீயே
முருகுமுரண் கொள்ளுந் தேம்பாய் கண்ணிப்
பரியல் நாயொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலொ டமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி

ஆங்காங் கொழுகா யாயின் அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றா ளிவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயின்
உறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவா ளாய்த் தோழி சொல்லியது. இது பகலே சிறைப்புறம்.

## 176. குறுந்தொகை - 230. நெய்தல்

அம்ம வாழி தோழி கொண்கன்
தானது துணிகுவ னல்லன் யானென்
பேதை மையாற் பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததொன் றுடையேன்
கொல்லோ
5 வயச்சுறா வழங்குநீ ரத்தந்
தவச்சின் னாளினன் வரவறி யானே.

வலிதாகக் கூறிக் குறை நயப்பித்தது.

## 177. நற்றிணை - 15. நெய்தல்

முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்
நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணங்கொள

ஊதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
பூவி னன்ன நலம்புதி துண்டு
நீபுணர்ந் தனையே யன்மையின் யாமே
நேர்புடை நெஞ்சந் தாங்கத் தாங்கி
மாசில் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட் டாங்குச்
சேணு மெம்மொடு வந்த
நாணும் விட்டேம் அலர்கவிவ் வூரே.

வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்குச் சொல்லி வரைவு கடாயது.

**178. புறநானூறு - 188.**

படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக் காஞ்சி.

## கஎ. ஆசிரியன் பெருங்கண்ணன்

### 179. குறுந்தொகை - 239. குறிஞ்சி

தொடிநெகிழ்ந் தனவே தோள்சா யினவே
விடுநா ணுண்டோ தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்
நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியிற் றோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே.

சிறைப்புறம்.

## கஅ. ஆடுதுறை மாசாத்தனார்

### 180. புறநானூறு - 227.

நனிபே தையே நயனில் கூற்றம்
விரகின் மையின் வித்தட் டுண்டனை

இன்னுங் காண்குவை நன்வா யாகுதல்
ஒளிறுவாள் மறவருங் களிறு மாவுங்
குருதியங் குரூஉப்புனற் பொருகளத் தொழிய
நாளு மானான் கடந்தட் டென்றுநின்
வாடுபசி யருத்திய வசைதீ ராற்றல்
நின்னோ ரன்ன பொன்னியற் பெரும்பூண்
வளவ னென்னும் வண்டுமூசு கண்ணி
இனையோற் கொண்டனை யாயின்
இனியார் மற்றுநின் பசிதீர்ப் போரே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியது.

## ௧௧௯. ஆதிமந்தி

### 181. குறுந்தொகை - 31. மருதம்

மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்தக் கோனை
யானுமோ ராடுகள மகளே யென்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோ ராடுகள மகனே.

நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது.

## ௨௰. ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன்

### 182. குறுந்தொகை - 184. நெய்தல்

அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே
இதற்கிது மாண்ட தென்னா ததற்பட்டு
ஆண்டொழிந் தன்றே மாண்தகை நெஞ்சம்
மயிற்கண் ணன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉங் கான லானே.

கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

## ௨௧. ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்

### 183. அகநானூறு - 64. முல்லை

களையு மிடனாற் பாக உளையணி
உலகுகடப் பன்ன புள்ளியற் கலிமா
வகையமை வனப்பின் வள்புநீ தெரியத்
தளவுப்பிணி யவிழ்ந்த தண்பதப் பெருவழி
ஐதிலங் ககலிலை நெய்கனி நோன்காழ்
வென்வே லிளையர் வீங்குபரி முடுகச்
செலவுநா மயர்ந்தன மாயிற் பெயல
கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி யீர்மணல் வாரணஞ் சிதரப்
பாம்புறை புற்றத் தீர்ம்புறங் குத்தி
மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயிற் பெயரும் பொழுதிற் சேர்புடன்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்
ஆபூண் தெண்மணி யையியம் பின்னிசை



புலம்புகொள் மாலை கேட்டொறுங்
கலங்கின ளுறைவோள் கையறு நிலையே.

வினைமுற்றிமீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## ௨௨. ஆலங்குடி வங்கனார்

## 184. அகநானூறு - 106. மருதம்

எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிர லசைபுவந் திருக்குந்
துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை
நம்மொடு புலக்கு மென்ப நாமது
செய்யா மாயினும் உய்யா மையிற்
செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவண்
உலமந்து வருகஞ் சென்மோ தோழி
ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
வெளிறில் கற்பின் மண்டம ரடுதொறுங்
களிறுபெறு வல்சிப் பாண னெறியுந்
தண்ணுமைக் கண்ணின் அலைஇயர் தன்
வயிறே.

தலைமகள் தன்னைப் புறங்கூறினளாகக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

## 185. குறுந்தொகை - 8. மருதம்

கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்

பழன வாளை கதூஉ மூரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
. . . . . .

கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடியிற் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.

கிழத்தி தன்னைப் புறனுரைத்தாள் எனக் கேட்ட காதற் பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது. ஆலங்குடி வங்கனர் 71

## 186. குறுந்தொகை - 45. மருதம்

காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் தாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே.

தலைமகற்குப் பாங்காயினர் வாயில் வேண்டியவழித் தோழி வாயில் நேர்ந்தது.

## 187. நற்றிணை - 230. மருதம்

மூயப்பிடிச் செவியி னன்ன பாசடைக்
கயக்கணக் கொக்கின் கூம்புமுகை யன்ன
கணைக்கா லாம்ப லமிழ்துநாறு தண்போது
குணக்குத்தோன்று வெள்ளியி னிருள்கெட விரியுங்
கயற்கணங் கலித்த பொய்கை யூர
முனிவில் பரத்தையை யெற்றுறந் தருளாய்
நனிபுலம் பலைத்த வேலை நீங்கப்
புதுவறங் கூர்ந்த செறுவிற் றண்ணென
மலிபுனல் பரத்தந் தாஅங்கு
இனிதே தெய்யநிற் காணுங் காலே.

தோழி வாயின் மறுத்தது.

## 188. நற்றிணை - 330. மருதம்

தடமருப் பெருமைப் பிறழ்சுவ லிரும்போத்து
மடநடை நாரைப் பல்லின மிரிய
நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து
நாட்டொழில் வருத்தம் வீடச் சேட்சினை
இருள்புனை மருதின் இன்னிழல் வதியும்
யாண ரூரநின் மாணிழை மகளிரை
எம்மனைத் தந்துநீ தழீஇயினு மவர்தம்
புன்மனத் துண்மையோ அரிதே அவரும்

பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
நன்றி சான்ற கற்போடு
எம்பா டாத லதனினு மரிதே.

தோழி தலைமகனை வாயின் மறுத்தது.

## 189. நற்றிணை - 400. மருதம்

வாழைமென் றோடு வார்புறு பூக்கும்
நெல்விளை கழனி நேர்கட் செறுவின்
அரிவன ரிட்ட சூட்டயற் பெரிய
இருஞ்சுவல் வாளை பிறழு மூர
நின்னின் றமைகுவெ னாயின் இவணின்று
இன்னா நோக்கமொ டெவன்பிழைப் புண்டோ
மறங்கெழு சோழ ருறந்தை யவையத்து
அறங்கெட லறியா தாங்குச் சிறந்த
கேண்மையொ டளைஇ நீயே
கெடுவறி யாயென் னெஞ்சத் தானே.

பரத்தை தலைவனைப் புகழ்ந்தது. முன்பு நின்று யாதோ புகழ்ந்தவாறெனின் நின்னின் றமையாமென்று சொன்னமையா னென்பது.

## 190. புறநானூறு - 319.

பூவற் படுவிற் கூவற் றொடிய
செங்கட் சின்னீர் பெய்த சீறில்

முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி
யாங்கஃ துண்டென வறிது மாசின்று
படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
புறவு மிதலு மறவு முண்டெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனான்

முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் புகுதந்து
ஈங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண
கொடுங்கோட் டாமான் நடுங்குதலைக் குழவி
புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டுஞ்



சீறூர் மன்ன னொருநை ஞாங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன்

வந்துநின்
பாடினி மாலை யணிய
வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

உ௩. ஆலத்தூர் கிழார்

191. குறுந்தொகை - 112. குறிஞ்சி

கௌவை யஞ்சிற் காம மெய்க்கும்
எள்ளற விடினே யுள்ளது நாணே

பெருங்களிறு வாங்க முறிந்து நிலம்படாஅ
நாருடை யொசிய லற்றே
கண்டிசின் தோழியவ ருண்டவென் னலனே.

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 192. குறுந்தொகை - 350. பாலை

அம்ம வாழி தோழி முன்னின்று
பனிக்கடுங் குரையஞ் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் செல்லார் கொல்லோ
ஆற்றய விருந்த இருங்கோட் டஞ்சிறை
நெடுங்காற் கணந்துள் ஆளறி வுறீஇ
யாறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கானம் நீந்தி
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே.

பிரிவு நேர்ந்த தலைமகன் அவனது நீக்கத்துக்கண் வேறுபட்டாளைத் தோழி வற்புறீஇயது.

## 193. புறநானூறு - 34.

ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டின்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு
இரத்தி நீடிய அகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியது.

## 194. புறநானூறு - 36.

அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்லன் அரஞ்செ யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின் நிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங்
கடிமரந் தடியு மோசை தன்னூர்

## ஆலத்தூர் கிழார் 75

நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
ஆங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கருவூர் முற்றியிருந்தானைப் பாடியது.

## 195. புறநானூறு - 69.

கையது கடனிறை யாழே மெய்யது
புரவல ரின்மையிற் பசியே அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்

ஓம்பி யுடுத்த வுயவற் பாண
பூட்கை யில்லோன் யாக்கை போலப்
பெரும்புல் லென்ற இரும்பே ரொக்கலை
வையக முழுதுடன் வளைஇப் பையென
என்னை வினவுதி யாயின் மன்னர்
அடுகளி றுயவுங் கொடிகொள் பாசறைக்
குருதிப் பரப்பிற் கோட்டுமா தொலைச்சிப்
புலாக்களஞ் செய்த கலாஅத் தானையன்
பிறங்குநிலை மாடத் துறந்தை யோனே
பொருநர்க் கோக்கிய வேல னொருநிலைப்
பகைப்புலம் படர்தலு முரியன் தகைத்தார்
ஒள்ளெரி புரையு முருகெழு பசும்பூட்
கிள்ளி வளவற் படர்குவை யாயின்
நெடுங்கடை நிற்றலு மிலையே கடும்பகல்
தேர்வீ சிருக்கை யார நோக்கி
நீயவற் கண்ட பின்றைப் பூவின்
ஆடுவண் டிமிராத் தாமரை
சூடா யாத லதனினு மிலையே.

திணை - பாடாண்டிணை; துறை - பாணாற்றுப்படை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியது.



## 196. புறநானூறு - 225.

தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்துபீ டழித்த ஏந்துவேற் றானையோடு
ஆற்ற லென்பதன் தோற்றங் கேளினிக்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
முள்ளுடை வியன்காட் டதுவே நன்றுஞ்
சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென
இன்னிசைப் பறையொடு வென்றி நுவலத்
தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினும் நோகோ யானே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 197. புறநானூறு - 324.

வெருக்குவிடை யன்ன வெருணோக்குக்
கயந்தலைப்
புள்ளூன் தின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் வேட்டுவர் வீழ்துணை மகாஅர்

சிறியிலே யுடையின் சுரையுடை வான்முள் ஊக
நுண்கோற் செறித்த அம்பின்
வலாஅர் வல்விற் குலாவரக் கோலிப்
பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்
புன்புலந் தழீஇய அங்குடிச் சீறூர்க்

குமிழுண் வெள்ளை பகுவாய் பெயர்த்த
வெண்காழ் தாய வண்காற் பந்தர்
இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை



வலம்படு தானை வேந்தற்கு
உலந்துழி யுலக்கும் நெஞ்சறி துணையே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.
'வேந்தற்குத் துணையாகச் செல்வோரைக் கூறியது'
(தொல். புறத். 5, நச்.)

## உச. ஆலம்பேரி சாத்தனுர்

### 198. அகநானூறு - 47. பாலை

அழிவி லுள்ளம் வழிவழிச் சிறப்ப
வினையிவண் முடித்தன மாயின் வல்விரைந்து
எழுவினி வாழிய நெஞ்சே யொலிதலை
அலங்குகழை நரலத் தாக்கி விலங்கெழுந்து
கடுவளி யுருத்திய கொடிவிடு கூரெரி
விடர்முகை யடுக்கம் பாய்தலி னுடனியைந்து
அமைக்கண் விடுநொடி கணக்கலை யகற்றும்
வெம்முனை யருஞ்சுரம் நீந்திக் கைம்மிக்கு
அகன்சுடர் கல்சேர்பு மறைய மனைவயின்
ஒண்டொடி மகளிர் வெண்டிரிக் கொளாஅலிற்
குறுநடைப் புறவின் செங்காற் சேவல்
நெடுநிலை வியனகர் வீழ்துணைப் பயிரும்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
யாண்டுளர் கொல்லெனக் கலிழ்வோ ளெய்தி
இழையணி நெடுந்தேர்க் கைவண் செழியன்
மழைவிளை யாடும் வளங்கெழு சிறுமலைச்
சிலம்பிற் கூதளங் கமழும் வெற்பின்
வேய்புரை பணைத்தோட் பாயும்
நோயசா வீட முயங்குகம் பலவே.

தலைமகன் இடைச்சுரத்து அழிந்த நெஞ்சிற்குச் சொல்லியது.

## 199. அகநானூறு - 81. பாலை

நாளுலா வெழுந்த கோள்வ லுளியம்
ஓங்குசினை யிருப்பைத் தீம்பழ முனையிற் 78

புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
ஒருங்குமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோடு
இரும்பூது குருகின் இடந்திரை தேரும்
மண்பக வறந்த ஆங்கண் கண்பொரக்
கதிர்தெறக் கவிழ்ந்த வுலறுதலை நோன்சினை
நெறியயல் மராஅ மேறிப் புலம்புகொள
எறிபருந் துயவு மென்றாழ் நீளிடை
வெம்முனை யருஞ்சுரம் நீந்திச் சிறந்த
செம்ம லுள்ளந் துரத்தலிற் கறுத்தோர்
ஒளிறுவே லழுவங் களிறுபடக் கடக்கும்
மாவண் கடலன் விளங்கி லன்னவெம்
மையெழி லுண்கண் கலுழ
ஐய சேறிரோ அகன்றுசெய் பொருட்கே.

*பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து சொல்லியது.*

## 200. அகநானூறு - 143. பாலை

செய்வினைப் பிரித லெண்ணிக் கைம்மிகக்
காடுகவி னொழியக் கடுங்கதிர் தெறுதலின்
நீடுசினை வறிய வாக ஒல்லென
வாடுபல் லகவிலை கோடைக் கொய்யுந்
தேக்கம லடுக்கத் தாங்கண் மேக்கெழுபு
மூளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச்

சுடர்மிமிர் நெடுங்கொடி விடர்முகை
வெம்மலை யருஞ்சுரம் நீந்தி யைய

முழங்கும்

சேறு மென்ற சிறுசொற் கிவட்கே
வசையில் வெம்போர் வானவன் மறவன்

நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்
பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்
மைதவ ழுயர்சிமைக் குதிரைக் கவாஅன்
அகலறை நெடுஞ்சுனைத் துவலையின்

மலர்ந்த

## ஆலம்பேரி சாத்தனார்

79

தண்கமழ் நீலம் போலக்
கண்பனி கலுழ்ந்தன நோகோ யானே.

பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமை கண்டு செலவழுங்குவித்தது.

## 201. அகநானூறு - 175. பாலை

வீங்குவிளிம் புரீஇய விசையமை நோன்சிலை
வாங்குதொடை பிழையா வன்க ணாடவர்
வீடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி
ஆறுசெல் வம்பல ருயிர்செலப் பெயர்ப்பிற்
பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்
வெஞ்சுர மிறந்த காதலர் நெஞ்சுணர
அரிய வஞ்சினஞ் சொல்லியும் பன்மாண்
தெரிவளை முன்கை பற்றியும் வினைமுடித்து
வருது மென்றன ரன்றே தோழி
காலியல் நெடுந்தேர்க் கைவண் செழியன்
ஆலங் கானத் தமர்கடந் துயர்த்த
வேலினும் பல்லூழ் மின்னி முரசென
மாயிரு விசும்பிற் கடியிடி பயிற்றி
நேர்கதிர் நிரைத்த நேமியஞ் செல்வன்
போரடங் ககலம் பொருந்திய தார்போல்
திருவில் தேஎத்துக் குலைஇ யுருகெழு
மண்பயம் பூப்பப் பாஅய்த்
தண்பெய லெழிலி தாழ்ந்த போழ்தே.

பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது; பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றதூஉமாம்.

## 202. நற்றிணை - 152. நெய்தல்

மடலே காமந் தந்த தலரே

மிடைபூ எருக்கின் அலர்தந் தன்றே
இலங்குகதிர் மழுங்கி யெல்விசும்பு படரப்
புலம்புதந் தன்றே புகன்றுசெய் மண்டிலம்



எல்லாந் தந்ததன் றலையும் பையென
வடந்தை துவலை தூவக் குடம்பைப்
பெடைபுண ரன்றில் இயங்குகுர லளைஇக்

கங்குலுங் கையறவு தந்தன்று
யாங்கா குவென்கொ லளியென் யானே.

மடல்வலித்த தலைவன் முன்னிலைப்
புறமொழியாகத் தோழி
கேட்பச் சொல்லியது.

## 203. நற்றிணை - 255. குறிஞ்சி

கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே
உருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக்
கடியுடை வியனகர்க் கானவர் துஞ்சார்
வயக்களிறு பொருத வாள்வரி யுழுவை
கன்முழைச் சிலம்பிற் குழுமு மன்னே
மென்றோள் நெகிழ்ந்துநாம் வருந்தினு மின்றவர்
வாரா ராயினோ நன்றுமற் றில்ல
உயர்வரை யடுக்கத் தொளிறுபு மின்னிப்
பெயல்கால் மயங்கிய பொழுதுகழி பானாள்

திருமணி யரவுத்தேர்ந் துழல
உருமுச்சிவந் தெறியு மோங்குவரை யாறே.

ஆறுபார்த் துற்றது.

**204.** நற்றிணை - **303.** நெய்தல்

ஒலியவிந் தடங்கி யாமம் நள்ளெனக்
கலிகெழு பாக்கந் துயில்மடிந் தன்றே
தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுண ரன்றி லுயவுக்குரல் கேட்டொறுந்

துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்
நம்வயின் வருந்தும் நன்னுத லென்பது
உண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவ ரிட்ட செங்கோற்



கொடுமுடி யவ்வலை பரியப் போக்கிக்
கடுமுரண் எறிசுறு வழங்கு
நெடுநீர்ச் சேர்ப்பன்றன் னெஞ்சத் தானே.

வேட்கை தாங்கலில்லாளாய்த் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. சிறைப்புறத்தானென்பது மலிந்ததூஉமாம்.

**205.** நற்றிணை - **338.** நெய்தல்

கடுங்கதிர் ஞாயிறு மலைமறைந் தன்றே
அடும்புகொடி துமிய ஆழி போழ்ந்தவர்
நெடுந்தே ரின்னொலி யிரவுந் தோன்றா
இறப்ப எவ்வ நலியும் நின்னிலை
நிறுத்தல் வேண்டு மென்றி நிலைப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே மால்கொள
வியலிரும் பரப்பின் இரையெழுந் தருந்துபு
புலவுநா று சிறுகுடி மன்றத் தோங்கிய
ஆடரைப் பெண்ணைத் தோடுமட லேறிக்
கொடுவாய்ப் பேடைக் குடம்பைச் சேறிய
உயிர்செலக் கடைஇப் புணர்துணைப்
பயிர்த லானா பைதலங் குருகே.

ஒருவழித் தணந்தகாலை ஆற்றாத தலைமகள் வன்புறை எதிர் மொழிந்தது.

௨௫. ஆலியார்

## 206. புறநானூறு - 298.

எமக்கே கலங்கல் தருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே யினியே
நேரா ராரெயில் முற்றி
வாய்மடித் துரறிநீ முந்தென் னானே.

திணை - கரந்தை ; துறை - நெடுமொழி.

## ௨௬. ஆவூர் கிழார்

### 207. புறநானூறு - 322.

உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவரகு அரிகாற் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பின் அயலது
இருஞ்சுவல் வாளை பிறழு மாங்கண்
தண்பணை யாளும் வேந்தர்க்குக்
கண்படை யீயா வேலோ னூரே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

## ௨௭. ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்

### 208. அகநானூறு - 202. குறிஞ்சி

வயங்குவெள் ளருவிய குன்றத்துக் கவாஅற்
கயந்தலை மடப்பிடி யினன் ஏமார்ப்பப்
புலிப்பகை வென்ற புண்கூர் யானை
கல்லகச் சிலம்பிற் கையெடுத் துயிர்ப்பின்
நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற இரும்புதற் றாவு நாட
யாமே யன்றியும் உளர்கொல் பானாள்
உத்தி யரவின் பைத்தலை துமிய
உரவுரு முரறும் உட்குவரு நனந்தலைத்
தவிர்வி லுள்ளமொ டெஃகுதுணை யாகக்
கனையிருள் பரந்த கல்லதர்ச் சிறுநெறி

ஆவூர்க்காவிதிகள் சாதேவனார்

83

தோராது வரூஉம் நின்வயின்
ஆரஞ ரரும்படர் நீந்து வோரே.

இரவுக்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவுகடாயது.

உஅ. ஆவூர்க்காவிதிகள் சாதேவனார்

209. அகநானூறு - 159. பாலை

தெண்கழி விளைந்த வெண்க லுப்பின்
கொள்ளை சாற்றிய கொடுநுக வொழுகை
உரனுடைச் சுவல பகடுபல பரப்பி
உமணுயிர்த் திறந்த வொழிக லடுப்பின்
வடியுறு பகழிக் கொடுவி லாடவர்
அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்
பல்லான் நெடுநிரை தழீஇக் கல்லென
வருமுனை யலைத்த பெரும்புகல் வலத்தர்
கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி
உவலைக் கண்ணிய ரூன்புழுக் கயருங்
கவலைக் காதல ரிறந்தன ரெனநனி
அவலங் கொள்ளன்மா காதலந் தோழி
விசும்பின் நல்லேறு சிலைக்குஞ் சேட்சிமை
நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணாஅது
வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்
மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்
தொடியுடைத் தடமருப் பொடிய நூறிக்
கொடுமுடி காக்குங் குரூஉக்க ணெடுமதிற்
சேண்விளங்கு சிறப்பி னாமூ ரெய்தினும்
ஆண்டமைந் துறையுந ரல்லர்நின்
பூண்டாங் காகம் பொருந்துதல் மறந்தே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி

வற்புறுத்தியது.



## 210. நற்றிணை - 264. பாலை

பாம்பளைச் செறிய முழங்கி வலனேர்பு
வான்தளி பொழிந்த காண்பின் காலை
அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும்
மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போலநின்
வீபெய் கூந்தல் வீசுவளி யுளர
ஏகுதி மடந்தை யெல்லின்று பொழுதே
வேய்பயில் இறும்பிற் கோவலர் யாத்த
ஆபூண் தெண்மணி யியம்பும்
உதுக்காண் தோன்றுமெஞ் சிறுநல் லூரே.

உடன்போகா நின்ற தலைமகன் தலைமகளை வற்புறீஇயது. உடன்போய் மறுத்தரா நின்றான் ஊர்காட்டி வற்புறீஇயதுமாம்.

## உகூ. ஆவூர் மூலங்கிழார்

## 211. அகநானூறு - 24. முல்லை

வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன

தளைபிணி யவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலரும்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குல் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமியள் நீந்தித்
தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலின் தொடிபிளந்து
நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிப்பிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்புத்
தழங்குகுரன் முரசமொடு முழங்கும் யாமத்துக்
கழித்துறை செறியா வாளுடை யெறுழ்த்தோள்

## ஆவூர் மூலங்கிழார் 85

இரவுத்துயில் மடிந்த தானை
உரவுச்சின வேந்தன் பாசறை யேமே.

தலைமகன் பருவங்கண்டு சொல்லியது.

வினைமுற்றுந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

## 212. அகநானூறு - 156. மருதம்

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்
மூதா தின்ற லஞ்சிக் காவலர்
பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்க ணிவளும் யானுங்
கழுநீ ராம்பல் முழுநெறிப் பைந்தழை
காயா ஞாயிற் றாகத் தலைப்பெயப்
பொய்த லாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியாள் யாயழ
மணிமருள் மேனி பொன்னிறங் கொளலே.

தலைமகளை இடத்துய்த்துவந்த தோழி தலைமகனை வரைவு கடாயது. இப்பாட்டு மருதத்துக்களவு.

## 213. அகநானூறு - 341. பாலை

உய்தகை யின்றால் தோழி பைபயக்
கோங்குங் கொய்குழை யுற்றன குயிலுந்
தேம்பாய் மாஅத்து ஓங்குசினை விளிக்கும்
நாடார் காவிரிக் கோடுதோய் மலிர்நிறைக்
கழையழி நீத்தஞ் சாஅய வழிநாள்



மழைகழிந் தன்ன மாக்கால் மயங்கறல்
பதவுமேய லருந்து துளங்கிமில் நல்லேறு
மதவுடை நாக்கொடு அசைவீடப் பருகிக்
குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்லிணர்ப்
பொற்றகை நுண்டா துறைப்பத் தொக்குடன்
குப்பை வார்மண லெக்கர்த் துஞ்சும்
யாணர் வேனில் மன்னிது
மாணலம் நுகருந் துணையுடை யோர்க்கே.

பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**214. புறநானூறு - 38.**

வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்கும் வகையபோல
விரவுருவின கொடிநுடங்கும்
வியன்றானை விறல்வேந்தே
நீ, உடன்றுநோக்கும்வா யெரிதவழ
நீ, நயந்துநோக்கும்வாய் பொன்பூப்பச்

செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்

வேண்டியது விளைக்கும் ஆற்றலை யாகலின்
நின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த

எம்மள வெவனோ மற்றே இன்னிலைப்
பொலம்பூங் காவின் நன்னாட் டோருஞ்

செய்வினை மருங்கின் எய்த லல்லதை
உடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங்
கடவ தன்மையிற் கையற வுடைத்தென
ஆண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலின்
நின்னா டுள்ளுவர் பரிசிலர்

ஒன்னார் தேஎத்தும் நின்னுடைத் தெனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

‘ எம்முள்
ளீர் எந்நாட்டீர் ’ என்றாற்குப் பாடியது.



## ஆவூர் மூலங்கிழார்

### 215. புறநானூறு - 40.

நீயே, பிறரோம்புறு மறமன்னெயில்
ஓம்பாது கடந்தட்டவர்
முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழல்தைஇய
வல்லாளனை வயவேந்தே
யாமேநின், இகழ்பாடுவோ ரெருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற
இன்று கண்டாங்குக் காண்குவ மென்றும்
இன்சொலெண் பதத்தை யாகுமதி பெரும
ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியது.

### 216. புறநானூறு - 166.

நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த வொருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
உரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த அருங்கற்பின்
அறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குல்
சிலசொல்லிற் பலகூந்தல்நின்

வெளிறுகண் போகப் பன்னாள் திரங்கிப்
பாடிப் பெற்ற பொன்னணி யானை
தமரெனின் யாவரும் புகுப அமரெனின்
திங்களும் நுழையா எந்திரப் படுபுழைக்
கள்மாறு நீட்ட நணிநணி யிருந்த
குறும்பல் குறும்பிற் றதும்ப வைகிப்
புளிச்சுவை வேட்ட செங்க ணாடவர்
தீம்புளிக் களாவொடு துடரி முனையின்
மட்டறல் நல்யாற்று எக்க ரேறிக்

## ஆவூர் மூலங்கிழார் 89

கருங்கனி நாவ லிருந்துகொய் துண்ணும்
பெரும்பெய ராதி பிணங்கரிற் குடநாட்டு
எயினர் தந்த எய்ம்மான் எறிதசைப்
பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

மல்லிகிழான் காரியாதியைப் பாடியது.

**218. புறநானூறு - 178.**

கந்துமுனிந் துயிர்க்கும் யானையொடு பணைமுனிந்து
காலியற் புரவி யாலும் ஆங்கண்
மணல்மலி முற்றம் புக்க சான்றோர்
உண்ணு ராயினுந் தன்னொடு சூளுற்று
உண்மென இரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்
ஈண்டோ இன்சா யலனே வேண்டார்
எறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பிற்
கள்ளுடைக் கலத்த ருள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபே ராளர்
அஞ்சி நீங்குங் காலை
ஏம மாகத் தான்முந் துறுமே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

பாண்டியன் கீரஞ்சாத்தனைப் பாடியது.

## 219. புறநானூறு - 196.

ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலும் இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
ஒல்லா தொல்லு மென்றலு மொல்லுவது
இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே
இரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயில் அத்தை

அனைத்தா கியரினி யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டனம் அதனால்
நோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் நல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன்பரிசில் நீட்டித்தானைப் பாடியது.

## 220. புறநானூறு - 261.

அந்தோ எந்தை யடையாப் பேரில்
வண்டுபடு நறவிற் றண்டா மண்டையொடு
வரையாப் பெருஞ்சோற்று முரிவாய் முற்றம்
வெற்றுயாற் றம்பியின் எற்றற் றாகக்
கண்டனென் மன்ற சோர்கவென் கண்ணே
வையங் காவலர் வளங்கெழு திருநகர்
மையல் யானை அயாவுயிர்த் தன்ன
நெய்யுலை சொரிந்த மையூ னோசை
புதுக்கண் மாக்கள் செதுக்கண் ஆரப்
பயந்தனை மன்னால் முன்னே யினியே
பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை யழைப்ப ஆட்டி
நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட
நிரையிவண் தந்து நடுக லாகிய
வென்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்
கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்
புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை ;

பாண்பாட்டுமாம். இடைக்கழி... நத்தத்தனார் -
சிறுபாணாற்றுப்படை 91

221. புறநானூறு - 301.

பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
அமரி னிட்ட அருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே

முரசுமுழங்கு தானைநும் அரசு மோம்புமின்
ஒளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமின்

எனைநாள் தங்குநும் போரே அனைநாள்
எறியா ரெறிதல் யாவண தெறிந்தோர்

எதிர்சென் றெறிதலுஞ் செல்லான் அதனால்
அறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே

பல[ரே]மென் றிகழ்த லோம்புமின் உதுக்காண்
நிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்லது
ஏந்துவன் போலான்றன் இலங்கிலை வேலே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

௩௦. இடைக்கழி நாட்டு நல்லூர்
நத்தத்தனார்

**222.** பத்துப்பாட்டு - **3**-வது
சிறுபாணாற்றுப்படை

மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போலச்
செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கறல்
அயிலுருப் பனைய வாகி யைதுநடந்து
வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப
வேனில் நின்ற வெம்பத வழிநாள்
காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறப்பப்

பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதல் மராஅத்த வரிநிழ லசைஇ
ஐதுவீ ழிகுபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பிற் கதுப்பென
மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயில்மயிற் குளிக்குஞ் சாயற் சாஅய்
உயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ
வயங்கிழை யுலறிய அடியின் அடிதொடர்ந்து
ஈர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த ஓதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்து
யாணர்க் கோங்கின் அவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சே றிகுதரு மெயிற்றின் எயிறெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமா னோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி

கல்லா இளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்

துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவா யிரவல
கொழுமீன் குறைய ஒதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
பைங்கறி நிவந்த பலவின் நீழல்



மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
விளையா இளங்கள் நாற மெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்

குடபுலங் காவலர் மருமான் ஒன்னார்
வடபுல இமயத்து வாங்குவிற் பொறித்த

எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே, அதாஅன்று
நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்து
அறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத
கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுதல் திருத்தி
நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பின்
உளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடும்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
தென்புலங் காவலர் மருமான் ஒன்னார்
மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே, அதாஅன்று
நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை
ஓவத் தன்ன வுண்டுறை மருங்கிற்
கோவத் தன்ன கொங்குசேர்பு உறைத்தலின்
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை

ஆசில் அங்கை யரக்குத்தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை
ஏம இன்றுணை தழீஇ யிறகுளர்ந்து



காமரு தும்பி காமரஞ் செப்பும்
தண்பணை தழீஇய தளரா இருக்கைக்
குணபுலங் காவலர் மருமான் ஒன்னார்
ஓங்கெயிற் கதவம் உருமுச்சுவல் சொறியும்
தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே, அதாஅன்று
வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும் சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்
பறம்பிற் கோமான் பாரியும் கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேற்
கழல்தொடித் தடக்கைக் காரியும் நிழல்திகழ்
நீல நாகம் நல்கிய கலிங்கம்

ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆயும் மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த
உறவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல்
அரவக்கடற் றானை அதிகனும் கரவாது
நட்டோ ருவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும் நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்

குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த



காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரியும் எனவாங்கு
எழுசமங் கடந்த எழுவுறழ் திணிதோள்
எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க

ஒருதான் தாங்கிய வுரனுடை நோன்தாள்
நறுவீ நாகமு மகிலு மாரமும்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய
பொருபுனல் தரூஉம் போக்கரு மரபின்
தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
களிற்றுத்தழும் பிருந்த கழல்தயங்கு திருந்தடிப்
பிடிக்கணஞ் சிதறும் பெயல்மழைத் தடக்கைப்
பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை
நல்லியக் கோடனை நயந்த கொள்கையொடு
தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை
வான்பொரு நெடுவரை வளனும் பாடி
முன்னாட் சென்றன மாக இந்நாள்
திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பால்முலை கவர்தல் நோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி
ஒல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து
இரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையும்
அழிபசி வருத்தம் வீடப் பொழிகவுள்

தறுகட் பூட்கைத் தயங்குமணி மருங்கிற்
சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி



யாமவ ணின்றும் வருதும் நீயிரும்
இவண்நயந் திருந்த இரும்பே ரொக்கற்
செம்ம லுள்ளமொடு செல்குவி ராயின்
அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவும்
தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்
கடுஞ்சூல் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்
நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்
கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்
பாடல் சான்ற நெய்தல் நெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரின்
ஓங்குநிலை யொட்டகந் துயில்மடிந் தன்ன
வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்
கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோள்
மதியேக் கறாஉம் மாசறு திருமுகத்து
நுதிவேல் நோக்கின் நுளைமக ளரித்த
பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்
கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்
தளையவிழ் தெரியற் றகையோற் பாடி
அறற்குழற் பாணி தூங்கி யவரொடு
வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்
பைந்நனை யவரை பவழங் கோப்பவும்

கருநனைக் காயாக் கணமயி லவிழவும்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்
கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
முல்லை சான்ற முல்லையம் புறவின்
விடர்கா லருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கால் மாறிய செவ்வி நோக்கித்

திறல்வேல் நுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூ ரெய்தின்
உறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
எயிற்றிய ரட்ட இன்புளி வெஞ்சோறு



தேமா மேனிச் சில்வளை யாயமொடு
ஆமான் சூட்டின அமைவரப் பெறுகுவிர்
நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி

நிலையருங் குட்டம் நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்

வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது

கொங்குகவர் நீலச் செங்கட் செலவு
மதிசே ரரவின் மானத் தோன்றும்
மருதஞ் சான்ற மருதத் தண்பணை
அந்தண ருகா அருங்கடி வியனகர்
அந்தண் கிடங்கினவன் ஆமூ ரெய்தின்
வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தின்
உரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப

இருங்கா ழுலக்கை யிரும்புமுகந் தேய்த்த
அவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு
கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்
எரிமறிந் தன்ன நாவின் இலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்
நிணனுண்டு சிரித்த தோற்றம் போலப்
பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தாள்
அண்ணல் யானை யருவிதுகள் அவிப்ப
நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்
சேய்த்து மன்று சிறிதுநணி யதுவே
பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்
அருமறை நாவின் அந்தணர்க் காயினும்

கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன
அடையா வாயிலவன் அருங்கடை குறுகிச்
செய்ந்நன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையும்
இன்முக முடைமையும் இனிய னாதலும்





செறிந்துவிளங்கு சிறப்பி னறிந்தோ ரேத்த
அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையும்
ஆணணி புகுதலும் அழிபடை தாங்கலும்
வாள்மீக் கூற்றத்து வயவ ரேத்தக்
கருதியது முடித்தலுங் காமுறப் படுதலும்
ஒருவழிப் படாமையும் ஓடிய துணர்தலும்
அரியே ருண்கண் அரிவைய ரேத்த

அறிவுமடம் படுதலும் அறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்தப்
பன்மீ னடுவட் பான்மதி போல
இன்னகை யாயமொ டிருந்தோற் குறுகிப்
பைங்கண் ஊகம் பாம்புபிடித் தன்ன

அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து

வயிறுசேர் பொழுகிய வகையமை யகளத்துக்
கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்து
அமிழ்துபொதிந் திலிற்றும் அடங்குபுரி நரம்பிற்
பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்விக்
கூடுகொ ளின்னியங் குரல்குர லாக
நூல்நெறி மரபிற் பண்ணி யானாது
முதுவோர்க்கு முகிழ்த்த கையினை யெனவும்
இளையோர்க்கு மலர்ந்த மார்பினை யெனவும்
ஏரோர்க்கு நிழன்ற கோலினை யெனவும்
தேரோர்க் கழன்ற வேலினை யெனவும்
நீசில மொழியா வளவை மாசில்
காம்புசொலித் தன்ன அறுவை யுடீஇப்
பாம்புவெகுண் டன்ன தேறல் நல்கிக்
காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்
பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்

வாள்நிற விசும்பிற் கோள்மீன் சூழ்ந்த
இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
ஆனா விருப்பிற் றானின் றூட்டித்
திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புல மகற்றி
விறல்வேல் மன்னர் மன்னெயில் முருக்கி
நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு
பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி
உருவ வான்மதி யூர்கொண் டாங்குக்
கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்டு
ஆரஞ் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு
சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல
உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி
ஊர்ந்துபெயர் பெற்ற எழில்நடைப் பாகரொடு
மாசெல வொழிக்கு மதனுடை நோன்றாள்
வாண்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ
அன்றே விடுக்குமவன் பரிசில் மென்றோள்
துகிலணி யல்குற் றுளங்கியல் மகளிர்
அகிலுண விரித்த அம்மென் கூந்தலின்

மணிமயிற் கலாப மஞ்சிடை பரப்பித்
துணிமழை தவழுந் துயல்கழை நெடுங்கோட்டு
எறிந்துரு மிறந்த ஏற்றருஞ் சென்னிக்
குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்விசை நிலைஇய பண்பின் [illegible]
நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே.

ஓய்மானாட்டு நல்லியக்கோடனை இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது.

**222-a** அணியிழையார்க் காரணங் காகிமற்
றந்நோய்
தணிமருந்துந் தாமேயா
மென்ப—மணிமிடைபூண்



இம்மென் முழவி னெயிற்பட் டினநாடன்
செம்மல் சிலைபொருத தோள்.

**222-b** நெடுவரைச் சந்தன நெஞ்சங் குளிர்ப்பப்
படுமடும் பாம்பேர் மருங்குல்—இடுகொடி
ஓடிய மார்ப னுயர்நல் லியக்கோடன்
சூடிய கண்ணி சுடும்.

## ௩௧. இடைக்காடனார்

## 223. அகநானூறு - 139. பாலை

துஞ்சுவது போல இருளி விண்பக
இமைப்பது போல மின்னி யுறைக்கொண்டு
ஏறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலம்நெஞ் சுட்க ஓவாது சிலைத்தாங்
கார்தளி பொழிந்த வார்பெயற் கடைநாள்
ஈன்றுநா ளுலந்த வாலா வெண்மழை
வான்தோ யுயர்வரை யாடும் வைகறைப்
புதலொளி சிறந்த காண்பின் காலைத்
தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
வெண்புறக் குடைய திரிமருப் பிரலை
வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் துணையொ டேமுற வதிய
அரக்குநிற வுருவின் ஈயல் மூதாய்
பரப்பி யவைபோற் பாஅய்ப் பலவுடன்
நீர்வார் மருங்கின் ஈரணி திகழ
இன்னும் வாரா ராயின் நன்னுதல்
யாதுகொல் மற்றவர் நிலையே காதலர்

கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்னவர் வருதுமென் றதுவே.

பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இப்பாட்டுத் தொழிலாற் பாலையாயிற்று.

## 224. அகநானூறு - 194. முல்லை

பேருறை தலைஇய பெரும்புலர் வைகறை
ஏரிடம் படுத்த இருமறுப் பூழிப்
புறமாறு பெற்ற பூவ லீரத்து
ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்
வித்திய மருங்கின் விதைபல நாறி
இரலை நன்மா னினம்பரந் தவைபோற்
கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்
கறங்குபறைச் சீரி னிறங்க வாங்கிக்
களைகால் கழீஇய பெரும்புன வரகின்
கவைக்கதி ரிரும்புறங் கதூஉ வுண்ட
குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி யேமுறக்
கொல்லை யுழவர் கூழ்நிழ லொழித்த
வல்லிலைக் குருந்தின் வாங்குசினை யிருந்து
கிளிகடி மகளிரின் விளிபடப் பயிருங்
கார்மன் இதுவால் தோழி போர்மிகக்
கொடுஞ்சி நெடுந்தேர் பூண்ட கடும்பரி
விரியுளை நன்மான் கடைஇ
வருது மென்றவர் தெளித்த போழ்தே.

பருவங்கண்டு ஆற்றாமைமீதூரத் தலைமகள் சொல்லியது.

இப்பாட்டின் பயன் தோழிகேட்பின் தூதுவிடுவது; அன்றெனின் சொல்லியாற்றுவது.

## 225. அகநானூறு - 274. முல்லை

இருவிசும் பதிர முழங்கி யரநலிந்து
இகுபெய லழிதுளி தலைஇ வானம்
பருவஞ் செய்த பானாட் கங்குல்
ஆடுதலைத் துருவின் தோடு ஏமார்ப்பக்
கடைகோற் சிறுதீ யடைய மாட்டித்
திண்கா லுறியன் பானையன் அதளன்
நுண்பல் துவலை யொருதிறம் நனைப்பத்



தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்
மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்பத்
தெறிமறி பார்க்குங் குறுநரி வெரீஇ
முள்ளுடைக் குறுந்தூ றிரியப் போகுந்
தண்ணறும் புறவி னதுவே நறுமலர்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியற் குறுமக ளுறைவி னூரே.

தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 226. அகநானூறு - 284. முல்லை

சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
முடந்தை வரகின் வீங்குபீ ளருந்துபு

குடந்தையஞ் செவிய கோட்பவ ரொடுங்கி
இன்துயி லெழுந்து துணையொடு போகி
முன்றிற் சிறுநிறை நீர்கண் டுண்ணும்
புன்புலந் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்
தினைக்கள் ளுண்ட தெறிகோல் மறவர்
விசைத்த வில்லர் வேட்டம் போகி
முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டுங்
காமர் புறவி னதுவே காமம்
நம்மினுந் தான்தலை மயங்கிய
அம்மா அரிவை யுறைவி னூரே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச்
சொல்லியது ; தன் நெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

**227.** அகநானூறு - **304.** முல்லை

இருவிசும் பிவர்ந்த கருவி மாமழை
நீர்செறி நுங்கின் கண்சிதர்ந் தவைபோற்
சூர்பனிப் பன்ன தண்வரல் ஆலியொடு
பரூஉப்பெய லழிதுளி தலைஇ வான்நவின்று
குரூஉத்துளி பொழிந்த பெரும்புலர் வைகறை

செய்துவிட் டன்ன செந்நில மருங்கிற்
செறித்துநிறுத் தன்ன தெள்ளறல் பருகிச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு
அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல் வதியச்
சுரும்பிமிர்பு ஊதப் பிடவுத்தளை யவிழ
அரும்பொறி மஞ்ஞை யால வரிமணல்
மணிமிடை பவளம் போல அணிமிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதா யீர்ம்புறம் வரிப்பப்
புலனணி கொண்ட காரெதிர் காலை
ஏந்துகோட் டியானை வேந்தன் பாசறை
வினையொடு வேறுபுலத் தல்கி நன்று

மறவ ரல்லர்நம் அருளா தோரென
நந்நோய் தன்வயின் அறியாள்
எந்நொந்து புலக்குங்கொல் மாஅ யோளே.

பாசறைக்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**228.** அகநானூறு - **374.** முல்லை

மாக்கடல் முகந்து மாதிரத் திருளி
மலர்தலை யுலகம் புதைய வலனேர்பு
பழங்கண் கொண்ட கொழும்பல் கொண்மூப்
போழ்ந்த போலப் பலவுடன் மின்னித்
தாழ்ந்த போல நனியணி வந்து
சோர்ந்த போலச் சொரிவன பயிற்றி
இடியு முழக்கு மின்றிப் பாணர்
வடியுறு நல்யாழ் நரம்பிசைத் தன்ன
இன்குர லழிதுளி தலைஇ நன்பல
பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறைச்
செறிமணல் நிவந்த களர்தோன்று இயவிற்
குறுமோட்டு மூதாய் குறுகு றோடி
மணிமண்டு பவளம் போலக் காயா
அணிமிகு செம்ம லொளிப்பன மறையக்



கார்கவின் கொண்ட காமர் காலைச்
செல்க தேரே நல்வலம் பெறுந
பெருந்தோள் நுணுகிய நுசுப்பின்
திருந்திழை யரிவை விருந்தெதிர் கொளவே.

பாசறைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 229. குறுந்தொகை - 251. முல்லை

மடவ வாழி மஞ்ஞை மாயினங்
கால மாரி பெய்தென அதனெதிர்
ஆலலு மாலின பிடவும் பூத்தன
காரன் றிகுளை தீர்கநின் படரே
கழிந்த மாரிக் கொழிந்த பழநீர்
புதுநீர் கொளீஇய வுகுத்தரும்
நொதுமல் வானத்து முழங்குகுரல் கேட்டே.

பிரிவிடைத் தோழி 'பருவமன்று, பட்டது வம்பு' என்று வற்புறுத்தியது.

## 230. நற்றிணை - 142. முல்லை

வானிகுபு சொரிந்த வயங்குபெயற் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல்லுறி
ஞெலிகோற் கலப்பை யதனொடு சுருக்கிப்
பறிப்புறத் திட்ட பால்நொடை யிடையன்
நுண்பல் துவலை யொருதிறம் நனைப்பத்
தண்டுகால் வைத்த வொடுங்குநிலை மடிவிளி
சிறுதலைத் தொழுதி யேமார்த் தல்கும்
புறவி னதுவே பொய்யா யாணர்
அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியற் குறுமக ளுறைவி னூரே.

வினைமுற்றிமீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## இடைக்காடனார் 105

### 231. நற்றிணை - 316. பாலை

மடவ தம்ம மணிநிற எழிலி
மலரின் மௌவல் நலம்வரக் காட்டிக்
கயலே ருண்கட் கனங்குழை யிவைநின்
எயிறேர் பொழுதின் எய்தரு வேமெனக்
கண்ணகன் விசும்பின் மதியென வுணர்ந்தநின்
நன்னுதல் நீவிச் சென்றோர் தந்நசை
வாய்த்துவரல் வாரா வளவை யத்தக்
கல்மிசை யடுக்கம் புதையக் கால்வீழ்த்துத்
தளிதரு தண்கார் தலைஇ
விளியிசைத் தன்றால் வியலிடத் தானே.

பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தது.

### 232. புறநானூறு - 42.

ஆனா ஈகை யடுபோ ரண்ணல்நின்

யானையு மலையிற் றோன்றும் பெருமநின்
தானையுங் கடலென முழங்குங் கூர்நுனை
வேலு மின்னின் விளங்கு முலகத்து
அரைசுதலை பனிக்கு மாற்றலை யாதலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே

தண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ என்றுநின்
முனைதரு பூசல் கனவினும் அறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோல் நீபுறங் காப்பப்

பெருவிறல் யாணர்த் தாகி அரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையும் உழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையும் அறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு வழிவிருந் தயரும்
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந

மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே
நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## ௩௨. இடைக்குன்றூர்கிழார்

## 233. புறநானூறு - 76.

ஒருவனை யொருவன் அடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
இன்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியல் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் தெண்கிணை கறங்கக் காண்தக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலும் அறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியது.

## 234. புறநானூறு - 77.

கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்டளிர்

நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்க அவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்டு
அயினியு மின்றயின் றனனே வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே அவரை
அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர அட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்றும் அதனினு மிலனே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனைப் பாடியது.

## 235. புறநானூறு - 78.

வணங்குதொடைப் பொலிந்த வலிகெழு நோன்தாள்
அணங்கருங் கடுந்திற லென்னை முணங்குநிமிர்ந்து
அளைச்செறி யுழுவை யிரைக்குவந் தன்ன
மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்து
விழுமியம் பெரியம் யாமே நம்மிற்
பொருநனும் இளையன் கொண்டியும் பெரிதென
எள்ளி வந்த வம்ப மள்ளர்
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர

ஈண்டவ ரடுதலு மொல்லான் ஆண்டவர்
மாணிழை மகளிர் நாணினர் கழியத்
தந்தை தம்மூ ராங்கண்
தெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனைப் பாடியது.



## 236. புறநானூறு - 79.

மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி
வெம்போர்ச் செழியனும் வந்தனன் எதிர்ந்த
வம்ப மள்ளரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகல்தவச் சிறிதே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யனைப் பாடியது.

## ௯௯. இடையன்சேந்தன் கொற்றனார்

### 237. அகநானூறு - 375. பாலை

சென்று நீடுந ரல்லர் அவர்வயின்
இனைத லானா யென்றிசின் இகுளை
அம்புதொடை யமைதி காண்மார் வம்பலர்
கலனில ராயினுங் கொன்றுபுள் ளூட்டுங்
கல்லா இளையர் கலித்த கவலைக்
கணநரி யினனொடு குழீஇ நிணனருந்து
நெய்த்தோ ராடிய மல்லன் மொசிவிரல்
அத்த எருவைச் சேவல் சேர்ந்த
அரைசேர் யாத்த வெண்டிரள் வினைவிறல்
எழூஉத் திணிதோட் சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி
குடிக்கட னாகலிற் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப் பாழி நூறி
வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்
கொன்ற யானைக் கோட்டிற் றோன்றும்
அஞ்சுவரு மரபின் வெஞ்சுர மிறந்தோர்
நோயிலர் பெயர்த லறியின்
ஆழல மன்னே தோழியென் கண்ணே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## ௩௪. இடையன் நெடுங்கீரனார்

## 238. அகநானூறு - 166. மருதம்

நன்மரங் குழீஇய நனைமுதிர் சாடி
பன்னா ளரித்த கோஒ யுடைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்
நறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்
பொறிவரி யினவண் டூதல கழியும்
உயர்பலி பெறாஉ முருகெழு தெய்வம்
புனையிருங் கதுப்பின் நீகெடுத் தோள்வயின்
அனையே னாயின் அணங்குக வென்னென
மனையோட் டேற்று மகிழ்ந னாயின்
யார்கொல் வாழி தோழி நெருநல்
தார்பூண் களிற்றிற் றலைப்புணை தழீஇ
வதுவை யீரணிப் பொலிந்து நம்மொடு
புதுவது வந்த காவிரிக்
கோடுதோய் மலிர்நிறை யாடி யோரே.

பரத்தையொடு புனலாடிய தலைமகன் தலைமகளிடைப்புக்கு, யான் ஆடிற்றிலனென்று சூளுற்றானென்பது கேட்ட பரத்தை தன்

பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

## ௯௫. இம்மென்கீரனார்

## 239. அகநானூறு - 398. குறிஞ்சி

இழைநிலை நெகிழ எவ்வங் கூரப்
படர்மலி வருத்தமொடு பலபுலந் தசைஇ
மென்றோள் நெகிழச் சாஅய்க் கொன்றை
ஊழுறு மலரிற் பாழ்பட முற்றிய
பசலை மேனி நோக்கி நுதல்பசந்து
இன்னே மாகிய எம்மிவண் அருளான்
நும்மோன் செய்த கொடுமைக் கிம்மென்று



அலமரல் மழைக்கண் தெண்பனி மல்க
நன்றுபுற மாறி யகறல் யாழநின்
குன்றுகெழு நாடற் கென்னெனப் படுமோ
கரைபொரு நீத்தம் உரையெனக் கழறி
நின்னொடு புலத்த லஞ்சி யவர்மலைப்
பன்மலர் போர்த்து நாணுமிக வொடுங்கி
மறைந்தனை கழியு நிற்றந்து செலுத்தி
நயனறத் துறத்தல் வல்லி யோரே
நொதும லாள ரதுக ணோடாது
அழற்சினை வேங்கை நிழற்றவிர்ந் தசைஇ

மாரி புறந்தர நந்தி ஆரியர்
பொன்படு நெடுவரை புரையு மெந்தை
பல்பூங் கானத் தல்கி இன்றிவண்
சேந்தனை செலினே சிதைகுவ துண்டோ
குயவரி யிரும்போத்துப் பொருத,புண்கூர்ந்து
உயங்குபிடி தழீஇய மதனழி யானை
வாங்கமைக் கழையின் நரலுமவர்
ஓங்குமலை நாட்டின் வரூஉ வோயே.

காமமிக்க கழிபடர்கிளவியால்
தலைமகன் வரையினின்றும் போந்த
வரைவிடத்துக்கண் தலைமகள்
ஆற்றொடுபுலந்து சொல்லியது.

## [illegible]கூ. இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்

## 240. பத்துப்பாட்டு - 10-வது மலைபடுகடாம்

திருமழை
விண்ணதி

தலைஇய இருணிற விசும்பின்
ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத்

திண்வார் விசித்த முழவொ டாகுளி
நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில்

மின்னிரும் பீலி யணித்தழைக் கோட்டொடு
கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பின்
இளிப்பயி ரிமிருங் குறும்பரந் தூம்பொடு



விளிப்பது கவருந் தீங்குழல் துதைஇ
நடுவுநின் றிசைக்கும் அரிக்குரற் றட்டை
கடிகவர்பு ஒலிக்கும் வல்வா யெல்லரி
நொடிதரு பாணிய பதலையும் பிறவும்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்
கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பிற்
படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்
எடுத்துநிறுத் தன்ன இட்டருஞ் சிறுநெறி
தொடுத்த வாளியர் துணைபுணர் கானவர்

இடுக்கண் செய்யா தியங்குந ரியக்கும்
அடுக்கல் மீமிசை யருப்பம் பேணாது
இடிச்சுர நிவப்பின் இயவுக்கொண் டொழுகித்
தொடித்திரிவு அன்ன தொண்டுபடு திவவின்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்
அரலை தீர வுரீஇ வரகின்
குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
இலங்குதுளை செறிய ஆணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை
வதுவை நாறும் வண்டுகம ழைம்பால்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்து
அடங்குமயி ரொழுகிய அவ்வாய் கடுப்ப
அகடுசேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது
கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
நுணங்கரம் நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்
அமைவரப் பண்ணி யருநெறி திரியாது
இசைபெறு திருவின் வேத்தவை யேற்பத்
துறைபல முற்றிய பைதீர் பாணரொடு

உயர்ந்தோங்கு பெருமலை யூறின்று
பகங்கப ஞமலி நாவி னன்ன
ஏறலின்

துளங்கியல் மெலிந்த கல்பொரு சீறடிக்
கணங்கொள் தோகையிற் கதுப்பிகுத் தசைஇ
விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்து
இலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்றக்
கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழற்
புனல்கால் கழீஇய மணல்வார் புறவிற்
புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்
கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ
தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின்
மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்கு
யாமவ ணின்றும் வருதும் நீயிரும்
கனிபொழி கானங் கிளையொ டுணீஇய
துனைபறை நிவக்கும் புள்ளின மானப்
புனைதார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்
வனைபுனை யெழில்முலை வாங்கமைத் திரள்தோள்
மலர்போல் மழைக்கண் மங்கையர் கணவன்

முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பின்
இசைநுவல் வித்தின் நசையே ருழவர்க்குப்
புதுநிறை வந்த புனலஞ் சாயல்
மதிமா றோரா நன்றுணர் சூழ்ச்சி
வில்நவில் தடக்கை மேவரும் பெரும்பூண்
நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு
உள்ளினிர் சேறி ராயிற் பொழுதெதிர்ந்த
புள்ளினிர் மன்ற எற்றாக் குறுதலின்
ஆற்றி னளவும் அசையுநற் புலமும்
வீற்றுவளஞ் சுரக்குமவன் நாடுபடு வல்சியும்

மலையுஞ் சோலையு மாபுகல் கானமும்
தொலையா நல்லிசை யுலகமொடு நிற்பப்
பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரீஇப்
புலவோர்க்குச் சுரக்குமவன் ஈகை மாரியும்
இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும்

புகழுநர்க்கு.

இரணிய...பெருங்கௌசிகனார் -
மலைபடுகடாம் 113

அரசுமுழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்குமவன் நாள்மகி ழிருக்கையும்
நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்குமவன் சுற்றத் தொழுக்கமும்
நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பேரிசை நவிர மேஎ யுறையும்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும்
பாயிருள் நீங்கப் பகல்செய்யா எழுதரும்
ஞாயி றன்னஅவன் வசையில் சிறப்பும்
இகந்தன வாயினுந் தெவ்வர் தேஎம்
நுகம்படக் கடந்து நூழி லாட்டிப்
புரைத்தோல் வரைப்பின் வேல்நிழற் புலவோர்க்குக்
கொடைக்கடன் இறுத்தவவன் தொல்லோர் வரவும்
இரைதேர்ந்து இவருங் கொடுந்தாள் முதலையொடு
திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்
வரைபுரை நிவப்பின் வான்தோ யிஞ்சி
உரைசெல வெறுத்தஅவன் மூதூர் மாலையும்
கேளினி வேளைநீ முன்னிய திசையே
மிகுவளம் பழுநிய யாணர் வைப்பிற்
புதுவது வந்தன் றிதுவதன் பண்பே
வானமின்னு வசிவு பொழிய ஆனாது
இட்ட வெல்லாம் பெட்டாங்கு விளையப்
பெயலொடு வைகிய வியன்கண் இரும்புனத்து

அகலிரு விசும்பின் ஆஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை
நீலத் தன்ன விதைப்புன மருங்கின்
மகுளி பாயாது மலிதுளி தழாலின்
அகளத் தன்ன நிறைசுனைப் புறவிற்
கௌவை போகிய கருங்காய்ப் பிடியேழ்
நெய்கொள வொழுகின பல்கவ ரீரெண்

8

பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக்
கொய்பத முற்றன குலவுக்குரல் ஏனல்
விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக்கு இருவிதொறும்
குளிர்புரை கொடுங்காய் கொண்டன அவரை
மேதி யன்ன கல்பிறங்கு இயவின்
வாதி கை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி
இரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே
பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு
வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்
வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்னக்
காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சிக்
குறையறை வாரா நிவப்பின் அறையுற்று
ஆலைக் கலமரும் தீங்கழைக் கரும்பே
புயற்புனிறு போகிய பூமலி புறவின்
அவற்பதங் கொண்டன அம்பொதித் தோரை
தொய்யாது வித்திய துளர்படு துடவை
ஐயவி யமன்ற வெண்காற் செறுவில்
மையென விரிந்தன நீணறு நெய்தல்
செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக்
காயங் கொண்டன இஞ்சி மா இருந்து
வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை
காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென
ஊழ்மல ரொழிமுகை யுயர்முகந் தோயத்
துறுகல் சுற்றிய சோலை வாழை
இறுகுகுலை முறுகப் பழுத்த பயம்புக்கு
ஊழுற் றலமரும் உந்தூழ் அகலறைக்
கால மன்றிய மாம்பயன் கொடுத்தலிற்

காவின் உதிர்ந்தன கருங்கனி நாவல்
மாறுகொள வொழுகின ஊறுநீர் உயவை
நூறொடு குழீஇயின கூவை சேறுசிறந்து
உண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண்ணரிந்து
அரலை யுக்கன நெடுந்தாள் ஆசினி



விரலூன்று படுகண் ஆகுளி கடுப்பக்
குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக்
கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச்
சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி
முரஞ்சுகொண் டிறைஞ்சின அலங்குசினைப் பலவே
தீயின் அன்ன வொண்செங் காந்தட்
டூவற் கலித்த புதுமுகை யூன்செத்து
அறியா தெடுத்த புன்புறச் சேவல்
ஊஉ னன்மையின் உண்ணாது உகுத்தென
நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய்
வெறிக்களங் கடுக்கும் வியலறை தோறும்
மணவில் கமழு மாமலைச் சாரல்
தேனினர் கிழங்கினர் ஊனார் வட்டியர்

சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கிப்
பொருதுதொலை யானைக் கோடு சீராகத்
தூவொடு மலிந்த காய கானவர்
செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே
இரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்
அன்றவண் அசைஇ அற்சேர்ந் தல்கிக்
கன்றெரி யொள்ளிணர் கடும்பொடு மலைந்து
சேந்த செயலைச் செப்பம் போகி
அலங்குகழை நரலும் ஆரிப் படுகர்ச்
சிலம்படைந் திருந்த பாக்க மெய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்
மான விறல்வேள் வயிரிய மெனினே
நும்மில் போல நில்லாது புக்குக்
கிழவிர் போலக் கேளாது கெழீஇச்

சேட்புலம் பகல இனிய கூறிப்
பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவிர்
ஏறித் தரூஉம் இலங்குமலைத் தாரமொடு
வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்
குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைகறைப்

பழஞ்செருக் குற்றநும் அனந்தல் தீர
அருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்
வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ
வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனின்
இன்புளிக் கலந்து மாமோ ராகக்
கழைவளர் நெல்லின் அரியுலை யூழ்த்து
வழையமை சாரல் கமழத் துழைஇ
நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்
குறமக ளாக்கிய வாலவிழ் வல்சி
அகமலி யுவகை யார்வமொ டளைஇ
மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்
செருச்செய் முன்பிற் குருசில் முன்னிய
பரிசில் மறப்ப நீடலும் உரியிர்
அனைய தன்றவன் மலைமிசை நாடே
நிரையிதழ்க் குவளைக் கடிவீ தொடினும்
வரையர மகளி ரிருக்கை காணினும்
உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியிர்
பலநாள் நில்லாது நிலநாடு படர்மின்

விளைபுனம் நிழத்தலிற் கேழ லஞ்சிப்
புழைதொறு மாட்டிய இருங்கல் அடாஅர்
அரும்பொறி உடைய ஆறே நள்ளிருள்
விரிந்த விடியல் வைகினிர் கழிமின்
நளிந்துபலர் வழங்காச் செப்பந் துணியின்
முரம்புகண் ணுடைந்த பரலவற் போழ்விற்
கரந்துபாம் பொடுங்கும் பயம்புமா ருளவே
குறிக்கொண்டு மரங் கொட்டி நோக்கிச்
செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச
வறிதுநெறி யொரீஇ வலஞ்செயாக் கழிமின்
புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவர்
உயர்நிலை யிதண மேறிக் கைபுடையூஉ
அகல்மலை யிறும்பிற் றுவன்றிய யானைப்

பகல்நிலை தளர்க்குங் கவணுமிழ் கடுங்கல்
இருவெதி ரீர்ங்கழை தத்திக் கல்லெனக்
கருவிர லூகம் பார்ப்போ டிரிய
உயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன
வரும்விசை தவிராது மரமறையாக் கழிமின்
உரவுக்களிறு கரக்கும் இடங்க ரொடுங்கி
இரவி னன்ன இருள்தூங்கு வரைப்பின்
குமிழி சுழலுங் குண்டுகய முடுக்கர்
அகழிழிந் தன்ன கான்யாற்று நடவை
வழூஉமருங் குடைய வழாஅ லோம்பிப்
பரூஉக்கொடி வலந்த மதலை பற்றித்
துருவின் அன்ன புன்றலை மகாரோடு
ஒருவி ரொருவிர் ஓம்பினிர் கழிமின்
அழுந்துபட்டு அலமரும் புழகுஅமல் சாரல்
விழுந்தோர் மாய்க்குங் குண்டுகயத்து அருகா
வழும்புகண் புதைத்த நுண்ணீர்ப் பாசி
அடிநிலை தளர்க்கும் அருப்பமும் உடைய
முழுநெறி பிணங்கிய நுண்கோல் வேரலொடு
எருவை மென்கோல் கொண்டனிர் கழிமின்
உயர்நிலை மாக்கற் புகர்முகம் புதைய
மாரியின் இகுதரு வில்லுமிழ் கடுங்கணைத்
தாரொடு பொலிந்த வினைநவில் யானைச்

சூழியிற் பொலிந்த சுடர்ப்பூ இலஞ்சி
ஓர்யாற்று இயவின் மூத்த புரிசைப்
பராவரு மரபிற் கடவுட் காணின்
தொழாநிர் கழியின் அல்லது வறிது
நும்இயந் தொடுத லோம்புமின் மயங்குதுளி
மாரி தலையுமவன் மல்லல் வெற்பே
அலகை யன்ன வெள்வேர்ப் பீலிக்
கலவ மஞ்ஞை கட்சியிற் றளரினும்
கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன
நெடுங்கழைக் கொம்பர்க் கடுவன்
உகளினும்
நேர்கொள் நெடுவரை நேமியிற் றொடுத்த

சூர்புக லடுக்கத்துப் பிரசங் காணினும்
ஞெரேரென நோக்க லோம்புமின் உரித்தன்று
நிரைசெலல் மெல்லடி நெறிமாறு படுகுவிர்
வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே
கழுதிற் சேணோன் ஏவொடு போகி
இழுதின் அன்ன வால்நிணஞ் செருக்கி
நிறப்புண் கூர்ந்த நிலந்தின் மருப்பின்
நெறிக்கெடக் கிடந்த இரும்பிண ரெருத்தின்
இருள்துணிந் தன்ன ஏனங் காணின்
முளிகழை யிழைந்த காடுபடு தீயின்
நளிபுகை கமழாது இறாயினிர் மிசைந்து
துகளறத் துணிந்த மணிமருள் தெண்ணீர்
குவளையம் பைஞ்சுனை யசைவிடப் பருகி
மிகுத்துப்பதங் கொண்ட பரூஉக்கண் பொதியினிர்
புட்கை போகிய புன்றலை மகாரோடு
அற்கிடை கழித லோம்பி ஆற்ற நும்
இல்புக் கன்ன கல்லளை வதிமின்
அல்சேர்ந் தல்கி அசைத லோம்பி
வான்கண் விரிந்த விடியலேற் றெழுந்து
கானகப் பட்ட செந்நெறிக் கொண்மின்

கயங்கண் டன்ன அகன்பை யங்கண்
மைந்துமலி சினத்த களிறுமதன் அழிக்கும்
துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் விலங்கி
இகந்துசேண் கமழும் பூவும் உண்டோர்
மறந்தமை கல்லாப் பழனும் ஊழிறந்து
பெரும்பயங் கழியினு மாந்தர் துன்னார்
இருங்கால் வீயும் பெருமரக் குழாமும்
இடனும் வலனும் நினையினிர் நோக்கிக்
குறியறிந் தவையவை குறுகாது கழிமின்
கோடுபல முரஞ்சிய கோளி யாலத்துக்
கூடியத் தன்ன குரல்புணர் புள்ளின்
நாடுகாண் நனந்தலை மென்மெல அகன்மின்
மாநிழற் பட்ட மரம்பயில் இறும்பின்

ஞாயிறு தெரூஅ மாக நனந்தலைத்
தேஎ மருளும் அமைய மாயினும்
இரூஅ வன் சிலையர் மாதேர்பு கொட்கும்
குறவரு மருளுங் குன்றத்துப் படினே
அகன்கட் பாறைத் துவன்றிக் கல்லென
இயங்க லோம்பிநும் இயங்கள் தொடுமின்
பாடின் அருவிப் பயங்கெழு மீமிசைக்
காடுகாத் துறையுங் கானவ ருளரே
நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்
புனற்படு பூசலின் விரைந்துவல் லெய்தி
உண்டற் கினிய பழனுங் கண்டோர்
மலைதற் கினிய பூவுங் காட்டி

ஊறு நிரம்பிய ஆறவர் மூத்துற
நும்மின் நெஞ்சத் தவலம் வீட
இம்மென் கடும்போ டினியி ராகுவிர்
அறிஞர் கூறிய மாதிரங் கைக்கொள்பு
குறியவும் நெடியவும் ஊழிழிபு புதுவோர்
நோக்கினும் பனிக்கு நோய்கூ ரடுக்கத்து
அலர்தாய வரிநிழல் அசையினி ரிருப்பிற்
பலதிறம் பெயர்பவை கேட்குவிர் மாதோ
கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந் தூறலின்
மலைமுழு துங் கமழு மாதிரந் தோறும்
அருவி நுகரும் வான்அர மகளிர்
வருவிசை தவிராது வாங்குபு குடைதொறும்
தெரியிமிழ் கொண்டநும் இயம்போ லின்னிசை
இலங்கேந்து மருப்பின் இனம்பிரி யொருத்தல்
விலங்கல் மீமிசைப் பணவைக் கானவர்
புலம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்
சேயளைப் பள்ளி யெஃகுறு முள்ளின்
எய்தெற இழுக்கிய கானவ ரழுகை
கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பின்
நெடுவசி விழுப்புண் தணிமார் காப்பென
அறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல்

தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை
மலைமா ரிடூஉம் ஏமப் பூசல்
கன்றரைப் பட்ட கயந்தலை மடப்பிடி
வலிக்குவரம் பாகிய கணவன் ஓம்பலின்
ஒண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் கிளையொடு
நெடுவரை யியம்பும் இடியுமிழ் தழங்குகுரல்
கைக்கோள் மறந்த கருவிரல் மந்தி
அருவிடர் வீழ்ந்த தன் கல்லாப் பார்ப்பிற்கு
முறிமே யாக்கைக் கிளையொடு துவன்றிச்
சிறுமை யுற்ற களையாப் பூசல்
கலை கை யற்ற காண்பின் நெடுவரை
நிலைபெய் திட்ட மால்புநெறி யாகப்
பெரும்பயன் தொகுத்த தேங்கொள் கொள்ளை
அருங்குறும் பெறிந்த கானவ ருவகை
திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென
நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்தோற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்தோய் மீமிசை யயருங் குரவை
நல்லெழில் நெடுந்தே ரியவுவந் தன்ன
கல்யா றொலிக்கும் விடர்முழங் கிரங்கிசை
நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத்து
உரவுச்சினந் தணித்துப் பெருவெளிற் பிணிமார்

விரவுமொழி பயிற்றும் பாக ரோதை
ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்
கிளிகடி மகளிர் விளிபடு பூசல்
இனத்திற் றீர்ந்த துளங்கிமில் நல்லேறு
மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை

மாறு மைந்தின் ஊறுபடத் தாக்கிக்
கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப
வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய

நல்லேறு பொரூஉங் கல்லென் கம்பலை
காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி
வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழம்

உண்டுபடு மிச்சிற் காழ்பயன் கொண்மார்
கன்று கடாஅ வுறுக்கு மகாஅ ரோதை
மழைகண் டன்ன ஆலைதொறும் ஞெரேரெனச்
கழைகண் ணுடைக்குங் கரும்பி னேத்தமும்
இனைகுறு மகளி ரிசைபடு வள்ளையும்
சேம்பு மஞ்சளு மோம்பினர் காப்போர்
பன்றிப் பறையுங் குன்றகச் சிலம்பும்
என்றிவ் வனைத்தும் இயைந்தொருங் கீண்டி
அவலவு மிசையவுந் துவன்றிப் பலவுடன்
அலகைத் தவிர்த்த எண்ணருந் திறத்த
மலைபடு கடாஅம் மாதிரத் தியம்பக்
குரூஉக்கண் பிணையற் கோதை மகளிர்
முழவுத்துயி லறியா வியலு ளாங்கண்
விழவின் அற்றுஅவன் வியன்கண் வெற்பே
கன்எண் தண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்
உண்டற் கினிய பலபா ராட்டியும்
இன்னும் வருவ தாக நமக்கெனத்
தொன்முறை மரபினி ராகிப் பன்மாண்
செருமிக்குப் புகலுந் திருவார் மார்பன்
உருமுரறு கருவிய பெருமலை பிற்பட
இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர்
நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்
கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின்
மைபடு மாமலைப் பனுவலிற் பொங்கிக்
கைதோய் வன்ன கார்மழைத் தொழுதி
தூஉ யன்ன துவலை துவற்றலின்

தேஎந் தேரூக் கடும்பரிக் கடும்பொடு
காஅய்க் கொண்டநும் இயந்தோய் படாமற்
கூவ லன்ன விடரகம் புகுமின்
இருங்க லிகுப்பத்து இறுவரை சேராது
குன்றிடம் பட்ட ஆரிட ரழுவத்து
நின்று நோக்கினுங் கண்வாள் வௌவும்
மண்கனை முழவின் தலைக்கோல் கொண்டு


தண்டுகா லாகத் தளர்த லோம்பி
ஊன்றினிர் கழிமின் ஊறுதவப் பலவே
அயில்காய்ந் தன்ன கூர்ங்கற் பாறை
வெயில்புறந் தரூஉம் இன்னல் இயக்கத்துக்
கதிர்சினந் தணிந்த அமயத்துக் கழிமின்
உரைசெல வெறுத்தஅவன் நீங்காச் சுற்றமொடு
புரைதவ வுயரிய மழைமருள் பல்தோல்
அரசுநிலை தளர்க்கும் அருப்பமு முடைய
பின்னி யன்ன பிணங்கரில் நுழைதொறும்
முன்னோன் வாங்கிய கடுவிசைக் கணைக்கோல்
இன்னிசை நல்யாழ்ப் பத்தரும் விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணு மோம்பிக்
கைபிணி விடாஅது பைபயக் கழிமின்

களிறுமலைந் தன்ன கண்கூடு துறுகற்
றளிபொழி கானந் தலைதவப் பலவே
ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட
கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே

இன்புறு முரற்கைநும் பாட்டுவிருப் பாகத்
தொன்றொழுகு மரபின் நும் மருப்பிகுத்துத் துணைமின்
பண்டுநற்கு அறியாப் புலம்பெயர் புதுவிர்

சந்து நீவிப் புல்முடிந் திடுமின்
செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்
கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த

கடவு ளோங்கிய காடேசு கவலை
ஒட்டா தகன்ற ஒன்னாத் தெவ்வர்
சுட்டினும் பனிக்குஞ் சுரந்தவப் பலவே
தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை

ஓம்பா வள்ளற் படர்ந்திகு மெனினே
மேம்பட வெறுத்தஅவன் தொல்திணை மூதூர்
ஆங்கன மற்றே நம்ம னோர்க்கே
அசைவுழி யசைஇ யஞ்சாது கழிமின்

இரணிய...பெருங்கௌசிகனர் - மலைபடுகடாம்

123

புலியுற வெறுத்த தன் வீழ்பிணை யுள்ளிக்
கலைநின்று விளிக்குங் கானம் ஊழிறந்து
சிலையொலி வெரீஇய செங்கண் மரைவிடை
தலையிறும்பு கதழும் நாறுகொடிப் புறவின்
வேறுபுலம் படர்ந்த ஏறுடை யினத்த
வளையான் தீம்பால் மிளைசூழ் கோவலர்
வளையோ ருவப்பத் தருவனர் சொரிதலிற்
பலம்பெறு நசையொடு பதிவயின் தீர்ந்தநும்
புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர்
பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன
தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்
கல்லென் கடத்திடைக் கடலின் இரைக்கும்
பல்யாட் டினநிரை யெல்லினிர் புகினே
பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்
துய்ம்மயி ரடக்கிய சேக்கை யன்ன

மெய்யுரித் தியற்றிய மிதியதட் பள்ளித்
தீத்துணை யாகச் சேந்தனிர் கழிமின்
கூப்பிடு கடக்குங் கூர்நல் அம்பிற்
கொடுவிற் கூளியர் கூவை காணிற்
படியோர்த் தேய்த்த பணிவி லாண்மைக்
கொடியோள் கணவற் படர்ந்திகு மெனினே
தடியுங் கிழங்குந் தண்டினர் தரீஇ
ஓம்புந ரல்லது உடற்றுந ரில்லை
ஆங்குவியங் கொண்மின் அதுவதன் பண்பே
தேம்பட மலர்ந்த மராஅமெல் லிணரும்
உம்பல் அகைத்த ஒண்முறி யாவும்
தளிரொடு மிடைந்த காமரு கண்ணி
திரங்குமரல் நாரிற் பொலியச் சூடி
முரம்புகண் ணுடைந்த நடவை தண்ணென
உண்டனி ராடிக் கொண்டனிர் கழிமின்
செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன
வேய்கொ ளரிசி மிதவை சொரிந்த
சுவல்விளை நெல்லின் அவரையம் புளிங்கூழ்

அற்கிடை யுழந்தநும் வருத்தம் வீட
அகலு ளாங்கட் கழிமிடைந் தியற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவிர்
பொன்அறைந் தன்ன நுண் நேரரிசி
வெண் எறிந் தியற்றிய மாக்கண் அமலை
தண்ணென் நுண்ணிழுது உள்ளீ டாக
அசையினிர் சேப்பின் அல்கலும் பெறுகுவிர்
விசையங் கொழித்த பூழி யன்ன
உண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை
நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசேண் நீங்க இனிதுடன் துஞ்சிப்
புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்
புல்லரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
மெல்லவ விருந்த வூர்தொறும் நல்லியாழ்ப்
பண்ணுப்பெயர்த் தன்ன காவும் பள்ளியும்
பன்னாள் நிற்பினுஞ் சேந்தனிர் செலினும்
நன்பல வுடைத்தவன் தண்பணை நாடே
கண்புமலி பழனங் கமழத் துழைஇ
வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை
நிலையோ ரிட்ட நெடுநாண் தூண்டிற்

பிடிக்கை யன்ன செங்கண் வராஅற்
றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்
பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்
ஞெண்டாடு செறுவிற் றராய்க்கண் வைத்த
விலங்க லன்ன போர்முதற் றொலைஇ
வளஞ்செய் வினைஞர் வல்சி நல்கத்
துளங்குதசும்பு வாக்கிய பசும்பொதித் தேறல்
இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள்தொறும் பெறுகுவிர்
முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு
வண்டுபடக் கமழுந் தேம்பாய் கண்ணித்
திண்டேர் நன்னற்கும் அயினி சான்மெனக்
கண்டோர் மருளக் கடும்புட னருந்தி

எருதெறி களம ரோதையொடு நல்யாழ்



மருதம் பண்ணி யசையினிர் கழிமின்
வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇச்

செங்கண் எருமை யினம்பிரி யொருத்தல்
கனைசெலல் முன்பொடு கதழ்ந்துவரல் போற்றி
வனைகலத் திகிரியிற் குமிழி சுழலும்
துணைசெலற் றலைவாய் ஓவிறந்து வரிக்கும்
காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்
யாண ரொருகரைக் கொண்டனிர் கழிமின்
நிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற்
பதியெழ லறியாப் பழங்குடி கெழீஇ
வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து
யாறெனக் கிடந்த தெருவிற் சாறென
இகழுநர் வெரூஉங் கவலை மறுகிற்
கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மையொடு
மலையென மழையென மாட மோங்கித்
துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும்
பனிவார் காவிற் பல்வண் டிமிரும்
நனிசேய்த் தன்றவன் பழவிறல் மூதூர்
பொருந்தாத் தெவ்வர் இருந்தலை துமியப்
பருந்துபடக் கடக்கும் ஒள்வாள் மறவர்
கருங்கடை யெஃகஞ் சாத்திய புதவின்
அருங்கடி வாயில் அயிராது புகுமின்
மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்
வெல்போர்ச் சேஎய்ப் பெருவிற லுள்ளி
வந்தோர் மன்ற அளியர் தாமெனக்
கண்டோ ரெல்லாம் அமர்ந்தினிது நோக்கி
விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப்
பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட
எரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத்
தொழுதி போக வலிந்தகப் பட்ட
மடநடை யாமான் கயமுனிக் குழவி

ஊமை யெண்கின் குடாவடிக் குருளை
மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்



வரைவாழ் வருடை வன்தலை மாத்தகர்
அரவுக்குறும் பெறிந்த சிறுகட் டீர்வை
அளைச்செறி யுழுவை கோளுற வெறுத்த
மடக்கண் மரையான் பெருஞ்செவிக் குழவி
அரக்குவிரித் தன்ன செந்நில மருங்கிற்
பரற்றவ ழுடும்பின் கொடுந்தா ளேற்றை
வரைப்பொலிந் தியலு மடக்கண் மஞ்ஞை
கானக் கோழிக் கவர்குரற் சேவல்
கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்
இடிக்கலப் பன்ன நறுவடி மாவின்
வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம்
தூவற் கலித்த இவர்நனை வளர்கொடி
காஅய்க் கொண்ட நுகமருள் நூறை
பரூஉப்பளிங்கு உதிர்த்த பலவுறு திருமணி
குரூஉப்புலி பொருத புண்கூர் யானை
முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்
வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்
நாகந் திலகம் நறுங்கா ழாரம்
கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி
திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்
கான்நிலை யெருமைக் கழைபெய் தீந்தயிர்
நீல்நிற வோரி பாய்ந்தென நெடுவரை
நேமியிற் செல்லு நெய்க்கண் இறாஅல்

உடம்புணர்பு தழீஇய ஆசினி யனைத்தும்
குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி
கடல்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப
நோனாச் செருவின் நெடுங்கடைத் துவன்றி
வானத் தன்ன வளமலி யானைத்
தாதெருத் ததைந்த முற்ற முன்னி
மழையெதிர் படுகண் முழவுகண் இகுப்பக்
கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவாது உடன்புணர்ந் தொன்றிக்

கடவ தறிந்த இன்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது
அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை
விருந்திற் பாணி கழிப்பி நீண்மொழிக்
குன்றா நல்லிசைச் சென்றோ ரும்பல்
இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப
இடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக்
கொடைக்கடன் இறுத்த செம்ம லோயென
வென்றிப் பல்புகழ் விறலோ டேத்திச்
சென்றது நொடியவும் விடாஅன் நசைதர
வந்தது சாலும் வருத்தமும் பெரிதெனப்
பொருமுரண் எதிரிய வயவரொடு பொலிந்து
திருநகர் முற்ற மணுகல் வேண்டிக்
கல்லென் ஒக்கல் நல்வலத் திரீஇ
உயர்ந்த கட்டில் உரும்பில் சுற்றத்து
அகன்ற தாயத்து அஃகிய நட்பத்து
இலமென மலர்ந்த கைய ராகித்
தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை யிழிதரு நீத்தஞ்சா லருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவா ழெக்கர் மணலினும் பலரே
அதனால், புகழொடுங் கழிகநம் வரைந்த நாளெனப்
பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு
நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரிது
உவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி
இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்
எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ
முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு

நெடுவெ ணெல்லின் அரிசி முட்டாது
தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து
பலநாள் நிற்பினும் பெறுகுவிர் நில்லாது
செல்வேந் தில்ல எந்தொல்பதிப் பெயர்ந்தென

மெல்லெனக் கூறி விடுப்பின் நும்முள்



தலைவன் தாமரை மலைய விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை அணிய
நீரியக் கன்ன நிரைசெலல் நெடுந்தேர்
வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்
கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை
பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நிலந்தினக் கிடந்த நிதியமொ டனைத்தும்
இலம்படு புலவர் ஏற்றகைந் நிறையக்
கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கையின்
வளம்பிழைப் பறியாது வாய்வளம் பழுநிக்
கழைவளர் நவிரத்து மீமிசை ஞெரேரென
மழைசுரந் தன்ன ஈகை நல்கித்
தலைநாள் விடுக்கும் பரிசில் மலைநீர்
வென்றெழு கொடியிற் றோன்றும்
குன்றுசூ ழிருக்கை நாடுகிழ வோனே.

இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னனைப் பாடியது. இது கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கும்.

240-a. தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்
மாஅ மிசையான்கோ னன்ன னறுநுதலார் [கொல்
மாஅமை யெல்லாம் பசப்பு.

## ௧௭. இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார்

### 241. அகநானூறு - 279. பாலை

நட்டோ ரின்மையுங் கேளிர் துன்பமும்
ஒட்டா துறையுநர் பெருக்கமுங் காணூஉ
ஒருபதி வாழ்த லாற்றுப தில்ல
பொன்னவிர் சுணங்கொடு செறிய வீங்கிய
மென்முலை முற்றங் கடவா தோரென

இரும்பிடர்த்தலையார்



நள்ளென் கங்குலும் பகலும் இயைந்தியைந்து
உள்ளம் பொத்திய உரஞ்சுடு கூரெரி
ஆள்வினை மாரியின் அவியா நாளும்
கடறு உழந்து இவண மாகப் படருழந்து
யாங்கா குவள்கொல் தானே தீந்தொடை

விளரி நரம்பின் நயவரு சீறியாழ்
மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு
புணர்துயில் எடுப்பும் புன்தெளி காலையும்

நம்முடை மதுகைய ளாகி யணிநடை
அன்னமாண் பெடையின் மென்மெல இயலிக்
கையறு நெஞ்சினள் அடைதரு
மையீ ரோதி மாஅ யோளே.

பொருள்வயிற் பிரிந்துபோகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## ௫௮. இருந்தையூர்க் கொற்றன் புலவன்

### 242. குறுந்தொகை - 335. குறிஞ்சி

நிரைவளை முன்கை நேரிழை மகளிர்
இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்
சுனைபாய் சோர்விடை நோக்கிச் சினையிழிந்து
பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்
வெற்பயல் நண்ணி யதுவே வார்கோல்
வல்விற் கானவர் தங்கை
பெருந்தோட் கொடிச்சி இருந்த வூரே.

இரவுக்குறி நயவாமைத் தோழி செறிப்பறிவுறீஇயது.

## ௱௯. இரும்பிடர்த்தலையார்

### 243. புறநானூறு - 3

உவவுமதி யுருவின் ஓங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற

9



ஏம முரசம் இழுமென முழங்க
நேமி யுய்த்த நேஎ நெஞ்சின்
தவிரா ஈகைக் கவுரியர் மருக
செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ
பொன்னோடைப் புகரணிநுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாஅத்து
எயிறுபடை யாக எயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து
மருந்தில் கூற்றத்து அருந்தொழில் சாயாக்
கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி
நிலம்பெயரினும் நின்சொற்பெயரல்
பொலங்கழற்காற் புலர்சாந்தின்
விலங்ககன்ற வியன்மார்ப
ஊரில்ல உயவரிய

நீரில்ல நீளிடைய
பார்வல் இருக்கைக் கவிகண் நோக்கிற்
செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந்து உயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை
நின்நசை வேட்கையின் இரவலர் வருவரது
முன்ன முகத்தின் உணர்ந்து அவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ ; வாழ்த

தியலுமாம்.

பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதியைப்

பாடியது.

## ௪௦. இளங்கீரந்தையார்

## 244. குறுந்தொகை - 148. முல்லை

செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த
தவளை வாஅய பொலஞ்செய் கிண்கிணிக்

காசின் அன்ன போதீன் கொன்றை
குருந்தோடு அலம்வரும் பெருந்தண் காலையும்
காரன்று என்றி யாயிற்
கனவோ மற்றிது வினவுவல் யானே.

பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி
பருவமன்றென்று வற்புறுத்தத் தலைமகள் சொல்லியது.

## ௪௧. இளங்கீரனார்

## 245. அகநானூறு - 3. பாலை

இருங்கழி முதலை மேஎந்தோல் அன்ன
கருங்கால் ஓமைக் காண்பின் பெருஞ்சினைக்

கடியுடை நனந்தலை ஈன்று இளைப் பட்ட
கொடுவாய்ப் பேடைக்கு அல்கிரை தரீஇய
மான்றுவேட்டு எழுந்த செஞ்செவி யெருவை
வான்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
ஒண்செங் குருதி யுவறியுண்டு அருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
கொள்ளை மாந்தரின் ஆனுது கவரும்
புல்லிலை மராஅத்த அகன்சேண் அத்தங்
கலந்தரல் உள்ளமொடு கழியக் காட்டிப்

பின்னின்று தூக்கும் நெஞ்சம் நின்வாய்
வாய்போற் பொய்ம்மொழி எவ்வமென் களைமா
கவிரிதழ் அன்ன காண்பின் செவ்வாய்
அந்தீங் கிளவி யாயிழை மடந்தை
கொடுங்குழைக்கு அமர்த்த நோக்கம்
நெடுஞ்சேண் ஆரிடை விலங்கு ஞான்றே.

முன்னொருகாலத்து நெஞ்சினாற் பொருள்வலிக்கப் பட்டுப் பிரிந்தான் தலைமகன். பிரிந்து இடைச்சுரத்தினின்று அவள் நலம் நயந்து மீளலுற்ற நெஞ்சினைக் கழறிப்போய்ப் பொருள் முடித்து வந்த தலைமகன் பின்னும் பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.



## 246. அகநானூறு - 225. பாலை

அன்பும் மடனுஞ் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி
இன்றே இவண மாகி நாளைப்
புதலிவர் ஆடமைத் தும்பி குயின்ற
அகலா அந்துளை கோடை முகத்தலின்
நீர்க்கு இயங்கு இனநிரைப் பின்றை வார்கோல்
ஆய்க்குழற் பாணியின் ஐதுவந்து இசைக்குந்
தேக்கமல் சோலைக் கடறோங்கு அருஞ்சுரத்து
யாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த இருப்பைக் குழைபொதி குவியிணர்
கழல்துளை முத்திற் செந்நிலத்து உதிர
மழைதுளி மறந்த அங்குடிச் சீறூர்ச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே பூப்புனை
புயலென ஒலிவருந் தாழிருங் கூந்தற்
செறிதொடி முன்கைநங் காதலி
அறிவஞர் நோக்கமும் புலவியும் நினைந்தே

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

## 247. அகநானூறு - 239. பாலை

அளிதோ தானே எவனா வதுகொல்
மன்றுந் தோன்றாது மரனும் மாயும்
புலியென உலம்புஞ் செங்கண் ஆடவர்
ஞெலியொடு பிடித்த வார்கோல் அம்பினர்
எல்லூர் எறிந்து பல்லாத் தழீஇய

விளிபடு பூசல் வெஞ்சுரத்து இரட்டும்
வேறுபல் தேஎத்து ஆறுபல நீந்திப்
புள்ளித் தொய்யிற் பொறிபடு சுணங்கின்
ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்
புல்லென் மாலை யாமிவண் ஒழிய
ஈட்டருங் குரைய பொருள்வயிற் செலினே

## இளங்கீரனார் 133

நீட்டுவி ரல்லிரோ நெடுந்தகை யீரெனக்
குறுநெடும் புலவி கூறி நம்மொடு
நெருநலுந் தீம்பல மொழிந்த
சிறுநல் லொருத்தி பெருநல் லூரே.

பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 248. அகநானூறு - 289. பாலை

சிலையே றட்ட கணைவீழ் வம்பலர்
உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல் நெடுநிலை
நடுகல் நாட்பலிக் கூட்டுஞ்
சுரனிடை விலங்கிய மரனோங்கு இயவின் வந்துவினை
வலித்த நம்வயின் என்றுந்
தெருமர லுள்ளமொடு வருந்த லானாது
நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறிது

அவிழினும் உயவும் ஆய்மடத் தகுவி
சேணுறை புலம்பின் நாள்முறை யிழைத்த
திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி
நெகிழ்நூல் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப
மையற விரிந்த படையமை சேக்கை
ஐமென் தூவி யணைசேர்பு அசைஇ
மையல் கொண்ட மதனழி யிருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொல் தானே. பிரிந்து

போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**249.** அகநானூறு - **299.** பாலை

எல்லையும் இரவும் வினைவயிற் பிரிந்த
முன்ன முன்னுறுபு அடைய உள்ளிய
பதிமறந் துறைதல் வல்லின மாயினும்



அதுமறந் துறைதல் அரிதா கின்றே
கடுவளி யெடுத்த கால்கழி தேக்கிலை

நெடுவிளிப் பருந்தின் வெறியெழுந் தாங்கு
விசும்புகண் புதையப் பாஅய்ப் பலவுடன்
அகலிடஞ் செல்லுநர் அறிவுகெடத் தாஅய்க்

கவலை கரக்குங் காடகல் அத்தஞ்
செய்பொருள் மருங்கிற் செலவுதனக்கு உரைத்தென
வைகுநிலை மதியம் போலப் பையெனப்
புலம்புகொள் அவலமொடு புதுக்கவின் இழந்த
நலங்கெழு திருமுகம் இறைஞ்சி நிலங்கிளையா
நீரொடு பொருத ஈரிதழ் மழைக்கண்
இகுதரு தெண்பனி யாகத்து உறைப்பக்
கானிலை செல்லாது கழிபடர்க் கலங்கி
நாநடுக் குற்ற நவிலாக் கிளவியொடு
அறல்மருள் கூந்தலின் மறையினள் திறன்மாண்டு
திருந்துக மாதோ நுஞ் செலவென வெய்துயிராப்
பருவரல் எவ்வமொடு அழிந்த
பெருவிதுப் புறுவி பேதுறு நிலையே.

இடைச்சுரத்துப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 250. அகநானூறு - 361. பாலை

தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண்
மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன
திருமுகத்து அலமரும் பெருமதர் மழைக்கண்
அணிவளை முன்கை ஆயிதழ் மடந்தை
வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினுங்
கவவுப்புலந்து உறையுங் கழிபெருங் காமத்து
இன்புறு நுகர்ச்சியிற் சிறந்ததொன்று இல்லெனா
அன்பால் மொழிந்த என்மொழி கொள்ளாய்
பொருள்புரி வுண்ட மருளி நெஞ்சே
கரியாப் பூவிற் பெரியோ ரார

இளங்கீரனார் 135

அழலெழு தித்தியம் அடுத்த யாமை
நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங்கு
உள்ளுதல் ஓம்புமதி யினிநீ முள்ளெயிற்றுச்
சின்மொழி யரிவை தோளே பன்மலை
வெவ்வறை மருங்கின் வியன்சுரம்
எவ்வங் கூர இறந்தனம் யாமே.

பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 251. அகநானூறு - 371. பாலை

அவ்விளிம்பு உரீஇய விசையமை நோன்சிலைச்
செவ்வாய்ப் பகழிச் செயிர்நோக்கு ஆடவர்
கணையிடக் கழிந்த தன் வீழ்துணை யுள்ளிக்

குறுநெடுந் துணைய மறிபுடை யாடப்
புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை
மேய்பத மறுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
நெய்தலம் படுவிற் சின்னீர் உண்ணாது
எ[ஃ]குறு மாந்தரின் இனைந்துகண் படுக்கும்
பைதற வெம்பிய யாழ்சேர் அத்தம்
எமியம் நீந்தும் எம்மினும் பனிவார்ந்து
என்ன ஆங்கொல் தாமே தெண்ணீர்
ஆய்சுனை நிகர்மலர் போன்மென நசைஇ
வீதேர் பறவை விழையும்
போதார் கூந்தல்நங் காதலி கண்ணே.

பொருள்வயிற் பிரிந்துபோகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**252.** அகநானூறு - **395.** பாலை

தண்கயம் பயந்த வண்காற் குவளை
மாரி மாமலர் பெயற்கேற் றன்ன
நீரொடு நிறைந்த பேரமர் மழைக்கண்
பனிவார் எவ்வந் தீர இனிவரின்



நன்றுமன் வாழி தோழி தெறுகதிர்
ஈரம் நைத்த நீரறு நனந்தலை

அழல்மேய்ந் துண்ட நிழல்மாய் இயவின்
வறன்மரத் தன்ன கவைமருப்பு எழிற்கலை
அறலவிர்ந் தன்ன தேர் நசைஇ யோடிப்
புலம்புவழிப் பட்ட உலமர லுள்ளமொடு
மேய்பிணைப் பயிரும் மெலிந்தழி படர்குரல்
அருஞ்சுரஞ் செல்லுநர் ஆட்செத்து ஓர்க்குந்
திருந்தரை ஞெமைய பெரும்புனக் குன்றத்து

ஆடுகழை யிருவெதிர் நரலுங்
கோடுகாய் கடற்ற காடிறந் தோரே.

பிரிவிடைத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**253.** அகநானூறு - **399.** பாலை

சிமையக் குரல சாந்தருந்தி யிருளி
இமயக் கானம் நாறுங் கூந்தல்
நன்னுதல் அரிவை யின்னுற லாகம்
பருகு வன்ன காத லுள்ளமொடு
திருகுபு முயங்க லின்றியவண் நீடார்
கடற்றடை மருங்கிற் கணிச்சியிற் குழித்த
உடைக்க ணீடமை ஊற லுண்ட

பாடின் தெண்மணிப் பயங்கெழு பெருநிரை
வாடுபுலம் புக்கெனக் கோடுதுவைத்து அகற்றி

ஒல்குநிலைக் கடுக்கை அல்குநிழல் அசைஇப்
பல்லான் கோவலர் கல்லாது ஊதுஞ்

சிறுவெதிர்ங் தீங்குழற் புலம்புகொள் தெள்விளி
மையில் பளிங்கின் அன்ன தோற்றப்
பல்கோள் நெல்லிப் பைங்கா யருந்தி
மெல்கிடு மடமரை யோர்க்கும் அத்தங்
காய்கதிர் கடுகிய கவினழி பிறங்கல்

வேய்கண் உடைந்த சிமைய
வாய்படு மருங்கின மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. இளங்கீரனார் 137

## 254. குறுந்தொகை - 116. குறிஞ்சி

யான்நயந்து உறைவோள் தேம்பாய் கூந்தல்
வளங்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை
நுண்மணல் அறல்வார்ந் தன்ன
நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 255. நற்றிணை - 3. பாலை

ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங்கு இழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினென் அல்லனே யானே உள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே.

முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் பின்னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

### 256. நற்றிணை - 62. பாலை

வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரல்இசை
கந்துபிணி யானை அயாவுயிர்த் தன்ன
என்றூழ் நீடிய வேய்பயில் அழுவத்துக்
குன்றூர் மதியம் நோக்கி நின்றுநினைந்து
உள்ளினென் அல்லனே யானே
முள்ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
எமதும் உண்டோர் மதிநாட் டிங்கள்
உரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழல்தப



உலவை யாகிய மரத்த

கல்பிறங்கு உயர்மலை யும்பரஃ தெனவே.

முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்துவந்த தலைவன், பின்னும் பொருள்வலிக்கப்பட்ட நெஞ்சிற்குச்செலவழுங்குவித்தது.

## 257. நற்றிணை - 113. பாலை

உழையணந் துண்ட இறைவாங்கு உயர்சினைப்
புல்லரை யிரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்காடு இறந்தும் எய்தவந் தனவால்
அருஞ்செயற் பொருட்பிணி முன்னி யாமே
சேறு மடந்தை யென்றலின் தான்தன்
நெய்தல் உண்கண் பைதல் கூரப்
பின்னிருங் கூந்தலின் மறையினள் பெரிதழிந்து
உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பலங் குழலின் ஏங்கிக்
கலங்கஞர் உறுவோள் புலம்புகொள் நோக்கே.

இடைச்சுரத்து ஆற்றானாய தலைவன் சொல்லியது.

## 258. நற்றிணை - 269. பாலை

குரும்பை மணிப்பூட் பெருஞ்செங் கிண்கிணிப்
பாலார் துவர்வாய்ப் பைம்பூட் புதல்வன்
மாலைக் கட்டின் மார்பு ஊர்பு இழிய
அவ்வெயிறு ஒழுகிய அவ்வாய் மாணகைச்
செயிர்தீர் கொள்கைநம் உயிர்வெங் காதலி

திருமுகத்து அலமருங் கண்ணினைந்து அல்கலும்.
பெரும வள்ளியிற் பிணிக்கும் என்னோர்
சிறுபல் குன்றம் இறப்போர்
அறிவார் யாரவர் முன்னி யவ்வே.

தோழி வாயின் மறுத்தது. செலவழுங்குவித்ததூஉமாம்.

## இளங்கீரனார் 139

### 259. நற்றிணை - 308. பாலை

செலவிரை வுற்ற அரவம் போற்றி
மலரேர் உண்கண் பனிவர ஆயிழை
யாம் தற் கரையவும் நாணினள் வருவோள்
வேண்டா மையின் மென்மெல வந்து
வினவலுந் தகைத்தலுஞ் செல்லா ளாகி
வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்
பொறியழி பாவையிற் கலங்கி நெடிதுநினைந்து
ஆகம் அடைதந் தோளே அதுகண்டு
ஈர்மட் செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற் றாங்கெம்
பொருள்மலி நெஞ்சம் புணர்ந்துவந் தன்றே.

நெஞ்சினாற் பொருள் வலிக்கப்பட்ட தலைமகன் தலைமகளை யெய்தி ஆற்றானாய் நெஞ்சினைச் சொல்லிச் செலவழுங்கியது.

## 260. நற்றிணை - 346. பாலை

குணகடல் முகந்து குடக்கேர்பு இருளித்
தண்கார் தலைஇய நிலந்தணி காலை
அரசுபகை நுவலும் அருமுனை யியவின்
அழிந்த வேலி அங்குடிச் சீறூர்
ஆளில் மன்றத்து அல்குவளி யாட்டத்
தாள்வலி யாகிய வன்க ணிருக்கை
இன்றுநக் கனைமன் போலா வென்று
நிறையுறு மதியின் இலங்கும் பொறையன்
பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவிக்
கடிபதங் கமழுங் கூந்தல்
மடமா அரிவை தடமென் தோளே.

பொருள்வயிற் பிரிந்த தலைமகன் ஆற்றானாய்த் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## சஉ. இளநாகனார்

## 261. நற்றிணை - 151. குறிஞ்சி.

நன்னுதல் பசப்பினும் பெருந்தோள் நெகிழினுங்
கொல்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை

கல்மிசை யருவியிற் கழூஉஞ் சாரல்
வாரற்க தில்ல தோழி கடுவன்

முறியார் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்
கறிவளர் அடுக்கத்திற் களவினிற் புணர்ந்த
செம்முக மந்தி செல்குறி கருங்காற்
பொன்னிணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
குண்டுநீர் நெடுஞ்சுனை நோக்கிக் கவிழ்ந்துதன்
புன்தலைப் பாறுமயிர் திருத்துங்
குன்ற நாடன் இரவி னானே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

**262.** நற்றிணை - **205.** பாலை

அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்துவெண் கோடு வயக்களிறு இழுக்குந்
துன்னருங் கானம் என்னாய் நீயே
குவளை யுண்கண் இவள் ஈண் டொழிய

ஆள்வினைக்கு அகறி யாயின் இன்றொடு
போயின்று கொல்லோ தானே படப்பைக்
கொடுமுள் ஈங்கை நெடுமா அந்தளிர்

நீர்மலி கதழ்பெயல் தலைஇய
ஆய்நிறம் புரையுமிவள் மாமைக் கவினே.

தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.
தோழி செலவழுங்கச் சொல்லியதூஉமாம்.

## இளந்திரையன் 141

### 263. நற்றிணை - 231. நெய்தல்

மையற விளங்கிய மணிநிற விசும்பிற்
கைதொழு மரபின் எழுமீன் போலப்
பெருங்கடற் பரப்பின் இரும்புறந் தோயச்
சிறுவெண் காக்கை பலவுடன் ஆடுந்
துறைபுலம்பு உடைத்தே தோழி பண்டும்
உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாட் புன்னைக்
கானலங் கொண்கன் தந்த
காதல் நம்மொடு நீங்கா மாறே.

சிறைப்புறமாகத் தோழி சொல்லி வரைவுகடாயது.

## சஉ. இளந்திரையன்

### 264. நற்றிணை - 94. நெய்தல்

நோயலைக் கலங்கிய மதன்அழி பொழுதிற்
காமஞ் செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானே, பெண்மை தட்ப நுண்ணிதிற் றாங்கிக்
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணுப் பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வ முடைய ராகி
மார்பு அணங் குறுநரை அறியா தோனே.

தலைமகன் சிறைப்புறமாகத் தலைவி தோழிக்குரைப்பாளாய்ச் சொல்லியது.

## 265. நற்றிணை - 99. முல்லை

நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில்விரித் தன்ன வெயில்அவிர் உருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
தாம்வரத் தெளித்த பருவங் காண்வர



இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று
மறந்துகடல் முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவமுங் கொன்றையுங் கோடலும்

மடவ ஆகலின் மலர்ந்தன பலவே.

பருவங்கண்டு ஆற்றாளாய தலைவியைத் தோழி பருவமன்றென்று வற்புறுத்தியது.

## 266. நற்றிணை - 106. நெய்தல்

அறிதலும் அறிதியோ பாக பெருங்கடல்
எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள
ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது
அசைஇ யுள்ளொழிந்த வசைதீர் குறுமகட்கு
உயவினென் சென்றியான் உண்ணேய் உரைப்ப
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞ ருறுவி யாய்மட நிலையே.

பருவவரவின்கண் பண்டு நிகழ்ந்ததோர் குறிப்புணர்ந்த தலைவன், அதனைக் கண்டு தாங்ககில்லானாய் மீள்கின்றான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 267. புறநானூறு - 185.

கால்பார் கோத்து ஞாலத்து இயக்குங்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்
ஊறின் றாகி ஆறினிது படுமே

உய்த்தல் தேற்ரு ஞயின் வைகலும்
பகைக்கூ ழுள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக் காஞ்சி.

## ௪௪. இளந்தேவனார்

### 268. அகநானூறு - 58. குறிஞ்சி

இன்னிசை உருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாட் கங்குற்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது
வரியதட் படுத்த சேக்கைத் தெரியிழைத்
தேன்நாறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை
கூதிரிற் செறியுங் குன்ற நாட
வனைந்துவரல் இளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே
நும்மில் புலம்பின் நும் உள்ளுதொறும் நலியுந்
தண்வரல் அசைஇய பண்பில் வாடை
பதம்பெறு கல்லாது இடம்பார்த்து நீடி
மனைமரம் ஒசிய வொற்றிப்
பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே.

சேட்படுத்துவந்த தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

### 269. அகநானூறு - 298. குறிஞ்சி

பயங்கெழு திருவிற் பல்கதிர் ஞாயிறு
வயங்குதொழில் தரீஇயர் வலனேர்பு விளங்கி
மல்குகடற் றோன்றி யாங்கு மல்குபட
மணிமருள் மாலை மலர்ந்த வேங்கை
ஒண்தளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினைத்
தண்துளி யசைவளி தைவரு நாட
கொன்றுசினந் தணியாது வென்றுமுரண் சாம்பாது
இரும்பிடித் தொழுதியின் இனந்தலை மயங்காது

பெரும்பெயற் கடாஅஞ் செருக்கி வளமலை
இருங்களிறு இயல்வரும் பெருங்காட்டு இயவின்
ஆரிருள் துமிய வெள்வே லேந்தித்
தாழ்பூங் கோதை யூதுவண் டிரீஇ

மென்பிணி யவிழ்ந்த அரைநா ளிரவிவண்
நீவந் ததனினும் இனிதா கின்றே
தூவற் கள்ளிற் றுணைத்தேர் எந்தை
கடியுடை வியனகர் ஓம்பின னுறையும்
யாயறி வுறுதல் அஞ்சிப் பானாட்
காவல் நெஞ்சமொடு காமஞ் செப்பேன்
யான்நின் கொடுமை கூற நினைபுஆங்கு
இனையல் வாழி தோழிநத் துறந்தவர்
நீடல ராகி வருவர் வல்லெனக்
கங்குல் உயவுத்துணை யாகிய
துஞ்சா துறைவி இவணுவந் ததுவே.

இரவுக்குறிக்கண் தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

## 270. அகநானூறு - 328. குறிஞ்சி

வழை அமல் அடுக்கத்து வலனேர்பு வயிரியர்
முழவதிர்ந் தன்ன முழக்கத்து ஏறோடு
உரவுப்பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து
அரவின் பைந்தலை யிடறிப் பானாள்
இரவின் வந்தெம் மிடைமுலை முயங்கித்
துனிகண் அகல வளைஇக் கங்குலின்
இனிதின் இயைந்த நண்புஅவர் முனிதல்

தெற்று குதல்நற்கு அறிந்தன மாயின்
இலங்குவளை நெகிழப் பரந்துபடர் அலைப்பயாம்
முயங்குதொறு முயங்குதொறு முயங்க முகந்துகொண்டு
அடக்குவ மன்னோ தோழி மடப்பிடி
மழைதவழ் சிலம்பிற் கடுஞ்சூல் ஈன்று
கழைதின் யாக்கை விழைகளிறு தைவர

வாழையஞ் சிலம்பிற் றுஞ்சுஞ்
சாரல் நாடன் சாயல் மார்பே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.

## இளம்புல்லூர்க் காவிதி 145

## 271. நற்றிணை - 41. பாலை

பைங்கண் யானைப் பரூஉத்தாள் உதைத்த
வெண்புறக் களரி விடுநீ றாடிச்
சுரன்முதல் வருந்திய வருத்தம் பைபயப்
பா[அ]ர் மலிசிறு கூவலிற் றணியும்
நெடுஞ்சேண் சென்று வருந்துவர் மாதோ
எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்

கிளரிழை அரிவை நெய்துழந்து அட்ட
விளரூன் அம்புகை யெறிந்த நெற்றிச்
சிறுநுண் பல்வியர் பொறித்த
குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே.

பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி உலகியல் கூறி வற்புறுத்தியது.

## சரு. இளம்புல்லூர்க் காவிதி

### 272. நற்றிணை - 89. முல்லை

கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
திரைப்பிதிர் கடுப்ப முகடுகந்து ஏறி
நிரைத்துநிரை கொண்ட கமஞ்சூல் மாமழை
அழிதுளி கழிப்பிய வழிபெயற் கடைநாள்
இரும்பனிப் பருவத்த மயிர்க்கா யுழுந்தின்
அகலிலை யகல வீசி அகலாது
அல்கலும் அலைக்கும் நல்கா வாடை
பரும யானை அயாவுயிர்த் தாஅங்கு
இன்னும் வருமே தோழி வாரா
வன்க ணாளரோடு இயைந்த
புன்கண் மாலையும் புலம்புமுந் துறுத்தே.

பொருள்முற்றி மறுத்தந்தானெனக் கேட்ட தோழி தலைவிக்கு

உரைத்தது.

10

## சசு. இளம்பூதனார்

### 273. குறுந்தொகை - 334. நெய்தல்

சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோடு
எறிதிரைத் திவலை ஈர்ம்புறம் நனைப்பப்
பனிபுலந்து உறையும் பல்பூங் கானல்
இருநீர்ச் சேர்ப்பன் நீப்பின் ஒருநம்
இன்னுயி ரல்லது பிறிதொன் று
எவனோ தோழி நாமிழப் பதுவே.

'வரைவிடை ஆற்றகிற்றியோ' என்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

## சஎ. இளம்பெருவழுதி

### 274. பரிபாடல் - 15.

புலவரை அறியாப் புகழொடு பொலிந்து

நில்வரைத் தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்லிசை யமையும்
புலவராய்பு உரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே பலவினும்
நிலவரை ஆற்றி நிறைபயன் ஒருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறு
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினுஞ்
சிறந்தது, கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவேறு உருவின் ஒருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை ஓங்கிருங் குன்றம்
நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுத லெளிதோ வீறுபெறு துறக்கம்
அரிதிற்பெறு துறக்கம் மாலிருங் குன்றம்
எளிதிற்பெற லுரிமை யேத்துகஞ் சிலம்ப



அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி

அலங்கும் அருவி யார்த்திமிழ்பு இழியச்
சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றந்
தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையிவ் வையிருங் குன்றத்து
மன்புனல் இளவெயில் வளாவ இருள் வளர்வெனப்
பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர் கேண்மின் கமழ்சீர்
சுனையெலாம் நீல மலரச் சுனைசூழ்
சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி

உறழ நனைவேங்கை யொள்ளிணர் மலர
மாயோன் ஒத்த இன்னிலைத்தே

சென்று தொழுகல்லீர் கண்டு பணிமினமே
இருங்குன் றென்னும் பெயர்பரந் ததுவே
பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது
கண்டுமயர் அறுக்குங் காமக் கடவுள்
மகமுயங்கு மந்தி வரைவரை பாய
முகிழ்மயங்கு முல்லை முறைநிகழ்வு காட்ட
மணிமருள் நன்னீர்ச்சினை மடமயில் அகவக்
குருகிலை யுதிரக் குயிலினங் கூவப்
பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்
நாநவில் பாடல் முழவெதிர்ந் தன்ன
சிலம்பிற் சிலம்பிசை யோவாது ஒன்னார்க்
கடந்தட்டான் கேழிருங் குன்று

தைய லவரொடுந் தந்தா ரவரொடுங்
கைம்மக வோடுங் காத லவரொடுந்

தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்
புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
வௌவற் காரிருள் மயங்குமணி மேனியன் 148
சங்க இல்க்கியம்

எவ்வயி னுலகத்துந் தோன்றி அவ்வயின் மன்பது
மறக்கத் துன்பங் களைவோன் அன்பது மேஎயிருங்
குன்றத்தான்

கள்ளணி பசுந்துளவினவை கருங்குன் றனையவை

ஒள்ளொளியவை யொருகுழையவை
புள்ளணி பொலங்கொடியவை
வள்ளணி வளைநாஞ்சிலவை
சலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வயநேமியவை
வரிசிலை வயஅம்பினவை
புகரிணர்சூழ் வட்டத்தவை புகர்வாளவை

எனவாங்கு
நலம்புரீஇ யஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென வுரைத்த[வி]னெம் உள்ளமர்ந் திசைத்திறை
இருங்குன்றத்து அடியுறை யியைகெனப்
பெரும்பெயர் இருவரைப் பரவுதுந் தொழுதே.

கடவுள் வாழ்த்து. மருத்துவன் நல்லச்சுதனார் இசை. பண் கோதிறம்.

## 275. புறநானூறு - 182.

உண்டால் அம்ம இவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்

தமியர் உண்டலு மிலரே முனிவிலர்

துஞ்சலு மிலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.

திணை - பொதுவியல்; துறை - பொருள்மொழிக்காஞ்சி.

## ௪௮. இளம்போதியார்

### 276. நற்றிணை - 72. நெய்தல்

பேணுப பேணார் பெரியோர் என்பது
நாணுத்தக் கன்றது காணுங் காலை
உயிரோ ரன்ன செயிர்தீர் நட்பின்
நினக்குயான் மறைத்தல் யாவது மிகப்பெரிது
அழிதக் கன்றால் தானே கொண்கன்
யான்யாய் அஞ்சுவ லெனினுந் தான் எற்
பிரிதல் சூழான் மன்னே இனியே
கான லாயம் அறியினும் ஆனது
அலர்வந் தன்றுகொ லென்னும் அதனாற்
புலர்வது கொல் அவன் நட்பெனா
அஞ்சுவல் தோழியென் னெஞ்சத் தானே.

தோழி சிறைப்புறமாகத் தலைவிக்குரைப்பாளாய்ச் சொல்லியது.

## ௪௯. இளவெயினனார்

### 277. நற்றிணை - 263. நெய்தல்

பிறைவனப்பு இழந்த நுதலும் யாழநின்
இறைவரை நில்லா வளையும் மறையாது
ஊரலர் தூற்றுங் கௌவையும் நாணிட்டு
உரையவற்கு உரையா மாயினும் இரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானல் எய்தாது
கழனி யொழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்
மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக்
கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக்கு
உரைத்த தோழி உண்கண் நீரே.

சிறைப்புறமாகத் தோழி தலைமகனை வரைவுகடாயது.

## ௫௦. இறங்குகுடிக் குன்றநாடன்

### 278. அகநானூறு - 215. பாலை

விலங்கு இருஞ் சிமையக் குன்றத்து உம்பர் வேறுபல்
மொழிய தேஎ முன்னி
வினைநசைஇப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு
புனைமாண் எஃகம் வலவயி னேந்திச்

செலல்மாண் புற்ற நும்வயின் வல்லே
வலனா கென்றலும் நன்றுமன் தில்ல
கடுத்தது பிழைக்குவ தாயின் தொடுத்த
கைவிரற் கவ்வுங் கல்லாக் காட்சிக்
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆளழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கைக் கூர்நுதிச்
செவ்வா யெருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லல் மொசிவிர லொற்றி மணிகொண்டு
வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்
கழிந்தோர்க்கு இரங்கு நெஞ்சமொடு
ஒழிந்திவண் உறைதல் ஆற்று வோர்க்கே.

செலவுணர்த்திய தோழி தலைமகள் குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தது.

## ௫௧. இறையனார்

### 279. குறுந்தொகை - 2. குறிஞ்சி

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி காமஞ்
செப்பாது கண்டது மொழிமோ பயிலியது கெழீஇய
நட்பின் மயிலியற்

செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகளை இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடுபட்டு நின்ற தலைமகன் நாணின் நீக்குதற்

பொருட்டு மெய்தொட்டுப் பயிறல் முதலாயின நிகழ்த்திப் பாடுமாற்றாற் கூடிய தனது அன்பு

அவள்மாட்டு தோற்ற நலம் பாராட்டியது.

## ௫௨. இனிசந்த நாகனார்

### 280. நற்றிணை - 66. பாலை

மிளகுபெய் தனைய சுவைய புன்காய்
உலறுதலை யுகாஅய்ச் சிதர்சிதர்த்து உண்ட
புலம்புகொள் நெடுஞ்சினை யேறி நினைந்துதன்
பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப்
புன்புறா உயவும் வெந்துகள் இயவின்
நயந்த காதலற் புணர்ந்தன ளாயினுஞ்
சிவந்து ஒளி மழுங்கி அமர்த்தன கொல்லோ
கோதை மயங்கினுங் குறுந்தொடி நெகிழினுங்
காழ்பெய லல்குற் காசுமுறை திரியினும்
மாணலங் கையறக் கலுழும் என்
மாயக் குறுமகள் மலரேர் கண்ணே.

மனைமருட்சி.

## ௫௩. ஈழத்துப் பூதன்தேவனார்

### 281. அகநானூறு - 88. குறிஞ்சி

முதைச்சுவற் கலித்த மூரிச் செந்தினை
ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்
கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய

நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்துநம்
நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்
சென்றனன் கொல்லோ தானே குன்றத்து
இரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்
கவுள்மலிபு இழிதரும் காமர் கடாஅம்
இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்து
இருங்கல் விடரளை அசுணம் ஓர்க்குங்
காம்பு பயில் இறும்பிற் பாம்புபடத் துவன்றிக்
கொடுவிரல் உளியங் கெண்டும்
வடுவாழ் புற்றின வழக்கரு நெறியே.

இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

## 282. அகநானூறு - 231. பாலை

செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்கு
உறுமிடத்து உவக்கு முதவி யாண்மையும்
இல்லிருந்து அமைவோர்க்கு இல்லென்று எண்ணி
நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்
கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர்
படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கைக்
கள்ளியம் பறந்தலைக் களர்தொறுங் குழீஇ
உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை
வெஞ்சுரம் இறந்தன ராயினும் நெஞ்சுருக
வருவர் வாழி தோழி பொருவர்
செல்சமங் கடந்து செல்லா நல்லிசை
விசும்பு இவர் வெண்குடைப் பசும்பூட்

பாண்டியன்

பாடுபெறு சிறப்பிற் கூட லன்னநின்
ஆடுவண்டு அரற்று முச்சித்
தோடார் கூந்தல் மரீஇ யோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

## ஈழத்துப் பூதன்தேவனார்

153

### 283. அகநானூறு - 307. பாலை

சிறுநுதல் பசந்து பெருந்தோள் சாஅய்

அகலெழில் அல்குல் அவ்வரி வாடப்
பகலுங் கங்குலு மயங்கிப் பையெனப்
பெயலுறு மலரிற் கண்பனி வார
ஈங்கிவள் உழக்கும் என்னாது வினைநயந்து
நீங்கல் ஒல்லுமோ ஐய வேங்கை
அடுமுரண் தொலைத்த நெடுநல் யானை
மையலங் கடாஅஞ் செருக்கி மதஞ்சிறந்து
இயங்குநர்ச் செகுக்கு மெய்ப்படு நனந்தலைப்
பெருங்கை யெண்கினங் குரும்பி தேரும்
புற்றுடைச் சுவர புதல் இவர் பொதியிற்
கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து
உடனுறை பழமையிற் றுறத்தல் செல்லாது
இரும்புறாப் பெடையொடு பயிரும்
பெருங்கல் வைப்பின் மலைமுத லாறே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகனைச் செலவுவிலக்கியது.

## 284. குறுந்தொகை - 189. பாலை

இன்றே சென்று வருதும் நாளைக்
குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக
இளம்பிறை யன்ன விளங்குசுடர் நேமி
விசும்புவீழ் கொள்ளியிற் பைம்பயிர் துமிப்பக்
காலியற் செலவின் மாலை யெய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மாண் ஆகம் மணந்து உவக்குவமே.

வினை தலைவைக்கப்பட்டிடத்துத் தலைமகன்

பாகற்குஉரைத்தது.

## 285. குறுந்தொகை - 343. பாலை

நினையாய் வாழி தோழி நனைகவுள்

அண்ணல் யானை அணிமுகம் பாய்ந்தென



மிகுவலி இரும்புலிப் பகுவா யேற்றை
வெண்கோடு செம்மறுக் கொளீஇய விடர்முகைக்
கோடை யொற்றிய கருங்கால் வேங்கை
வாடுபூஞ் சினையிற் கிடக்கும்
உயர்வரை நாடனொடு பெயரு மாறே.

தோழி கிழத்தியை உடன்போக்கு நயப்பக் கூறியது.

## 286. குறுந்தொகை - 360. குறிஞ்சி

வெறியென உணர்ந்த வேலன் நோய்மருந்து
அறியா னாகுதல் அன்னை காணிய
அரும்பட ரெவ்வம் இன்றுநாம் உழப்பினும்
வாரற்க தில்ல தோழி சாரற்
பிடிக்கை யன்ன பெருங்குரல் ஏனல்
உண்கிளி கடியுங் கொடிச்சி கைக் குளிரே
சிலம்பிற் சிலம்புஞ் சோலை

இலங்குமலை நாடன் இரவி னானே.

தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியஞ்சிய தோழிக்குச்

சொல்லுவாளாய்ச் சொல்லியது.

## 287. நற்றிணை - 366. பாலை

அரவுக்கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்
வீடுறு நுண் துகில் ஊடுவந்து இமைக்குந்
திருந்திழை யல்குற் பெருந்தோட் குறுமகள்
மணியேர் ஐம்பால் மாசறக் கழீஇக்
கூதிர் முல்லைக் குறுங்கால் அலரி
மாதர் வண்டொடு சுரும்புபட முடித்த
இரும்பல் மெல்லணை யொழியக் கரும்பின்
வேல்போல் வெண்முகை விரியத் தீண்டி
முதுக்குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை
மூங்கி லங்கழைத் தூங்க ஒற்றும்



வடபுல வாடைக்குப் பிரிவோர்
மடவர் வாழி இவ் வுலகத் தானே.

உலகியல் கூறிப் பொருள்வயிற் பிரிய வலித்த நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

## ௫௪. உகாய்க்குடிகிழார்

### 288. குறுந்தொகை - 63. பாலை

ஈதலுந் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு
அம்மா வரிவையும் வருமோ
எம்மை யுய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே.

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

## ௫௫. உக்கிரப்பெருவழுதி

### 289. அகநானூறு - 26. மருதம்

கூர்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்
பொய்தல் மகளிர் விழவணிக் கூட்டும்
அவ்வயின் நண்ணிய வளங்கே ழூரனைப்
புலத்தல் கூடுமோ தோழி அல்கற்
பெருங்கதவு பொருத யானை மருப்பின்
இரும்புசெய் தொடியின் ஏர வாகி
மாக்கண் அடைய மார்பகம் பொருந்தி
முயங்கல் விடாஅல் இவையென மயங்கி
யான் ஓமென்னவும் ஒல்லார் தாமற்று
இவைபா ராட்டிய பருவமு முளவே, இனியே,
புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொள் மென்முலை
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிள ரகலம்
வீங்க முயங்கல் யாம் வேண்டினமே

தீம்பால் படுதல் தாம் அஞ்சினரே, ஆயிடைக்
கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர் இஃதோ
செல்வற்கு ஒத்தனம் யாமென மெல்ல என்
மகன்வயிற் பெயர்தந் தேனே அதுகண்டு
யாமுங் காதலம் அவற்கெனச் சாஅய்ச்
சிறுபுறங் கவையின னாக உறுபெயற்
றண்டுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
மண்போல் நெகிழ்ந்து அவற் கலுழ்ந்தே
நெஞ்சு அறைபோகிய அறிவி னேற்கே.

தலைமகன் தோழியை வாயில்வேண்டி, அவளால் தான் வாயில் பெறாது ஆற்றாமையே வாயிலாகப் புக்குக்கூடிய தலைமகன் நீக்கத் துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 290. நற்றிணை - 98. குறிஞ்சி

எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்திற்
செய்ம்ம் மேவற் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர்
வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதிற் றாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென

மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்

கல்லளைப் பள்ளி வதியும் நாடன்
எந்தை யோம்புங் கடிப்புடை வியனகர்த்
துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி
இரவின் வரூஉ மதனினுங் கொடிதே
வைகலும் பொருந்தல் ஒல்லாக்
கண்ணொடு வாரா என் நாரில் நெஞ்சே.

இரவுக்குறிவந் தொழுகுந் தலைவனைத் தோழி வரைவு கடாயது.

ருசா. உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்

**291.** அகநானூறு - **69.** பாலை

ஆய்நலந் தொலைந்த மேனியும் மாமலர்த்
தகைவனப்பு இழந்த கண்ணும் வகையில
வண்ணம் வாடிய வரியும் நோக்கி
ஆழ லான்றிசின் நீயே உரிதினின்
ஈத லின்பம் வெஃகி மேவரச்
செய்பொருட் டிறவராகிப் புல்லிலைப்
பராரை நெல்லி யம்புளித் திரள்காய்
கான மடமரைக் கணநிரை கவரும்
வேனில் அத்தம் என்னாது எமுற்று
விண்பொரு நெடுங்குடை இயல்தேர் மோரியர்

பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
அறையிறந்து அகன்றன ராயினும் எனையதூஉம்
நீடலர் வாழி தோழி ஆடியல்
மடமயில் ஒழித்த பீலி வார்ந்துதஞ்
சிலைமாண் வல்விற் சுற்றிப் பலமாண்

அம்புடைக் கையர் அரண்பல நூறி
நன்கலந் தரூஉம் வயவர் பெருமகன்

சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்துத்
தலைநாள் அலரி நாறும்நின்
அலர்முலை யாகத்து இன்துயில் மறந்தே.

பொருள் வயிற்பிரிந்து நீட்டித்தான் தலைமகனெனக் கவன்ற தலைமகட்கு வருவனென்பதுபடச் சொல்லித் தோழி ஆற்றுவித்தது.

## ௫௭. உம்பற்காட்டு இளங்கண்ணனார்

### 292. அகநானூறு - 264. முல்லை

மழையில் வானம் மீன்அணிந் தன்ன
குழையமல் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்



பெரிய சூடிய கவர்கோற் கோவலர்
எல்லுப்பெயல் உழந்த பல்லா னிரையொடு
நீர்திகழ் கண்ணியர் ஊர்வயிற் பெயர்தர
நனிசேட் பட்ட மாரி தளிசிறந்து
ஏர்தரு கடுநீர் தெருவுதொறு ஒழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கூதிர்நின் றன்றாற் பொழுதே காதலர்
நம்நிலை அறியா ராயினுந் தம்நிலை
அறிந்தனர் கொல்லோ தாமே ஓங்குநடைக்

காய்சின யானை கங்குற் சூழ
அஞ்சுவர இறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே.

பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

## ருஅ. உருத்திரனார்

### 293. குறுந்தொகை - 274. பாலை

புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்து
இறவுச்சினை யன்ன நளிகனி யுதிர
விடுகணை வில்லொடு பற்றிக் கோடிவர்பு
வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்
நீர்நசை வேட்கையின் நா மென்று தணியும்
இன்னாக் கானமும் இனிய பொன்னொடு
மணிமடை யல்குல் மடநதை
அணிமுலை யாகம் முயங்கினஞ் செலினே.

பொருள் வலித்த நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

## ருகூ. உலோச்சனார்

### 294. அகநானூறு - 20. நெய்தல்

பெருநீர் அழுவத்து எந்தை தந்த
கொழுமீன் உணங்கற் படுபுள் ஓப்பி

எக்கர்ப் புன்னை இன்னிழல் அசைஇச்
செக்கர் ஞெண்டின் குண்டு அளை கெண்டி
ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற்று ஊசல் தூங்கிக்
கொண்ட விடுமணற் குரவை முனையின்
வெண்தலைப் புணரி ஆயமொடு ஆடி
மணிப்பூம் பைந்தழை தைஇ அணித்தகப்
பல்பூங் கானல் அல்கினம் வருதல்
கவ்வை நல்லணங்கு உற்ற இவ்வூர்க்
கொடிது அறி பெண்டிர் சொற்கொண்டு அன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
எல்லையும் இரவும் என்னாது கல்லென
வலவன் ஆய்ந்த வண்பரி
நிலவுமணற் கொட்குமோர் தேருண்டு எனவே.

பகற்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய், தலைமகன் கேட்பச் சொல்லியது.

**295. அகநானூறு - 100. நெய்தல்**

அரையுற்று அமைந்த ஆரம் நீவிப்
புரையப் பூண்ட கோதை மார்பினை
நல்லகம் வடுக்கொள முயங்கி நீவந்து
எல்லினிற் பெயர்தல் எனக்குமா ரினிதே
பெருந்திரை முழக்கமொடு இயக்கு அவிந்திருந்த
கொண்ட லிரவின் இருங்கடல் மடுத்த
கொழுமீன் கொள்பவர் இருள்நீங்கு ஒண்சுடர்
ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை
ஆடியல் யானை அணிமுகத்து அசைத்த
ஓடை யொண்சுடர் ஒப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்
புன்னையங் கானற் புறந்தை முன்துறை
வம்ப நாரை யினன் ஒலித் தன்ன



அம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்
வைகுறு விடியற் போகிய எருமை
நெய்தலம் புதுமலர் மாந்தும்
கைதையம் படப்பையெம் அழுங்க லூரே.

தோழி வரைவுகடாயது.

**296.** அகநானூறு - **190.** நெய்தல்

திரையுழந்து அசைஇய நிரைவளை யாயமொடு

உப்பின் குப்பை யேறி எற்பட
வருதிமில் எண்ணுந் துறைவனொடு ஊரே
ஒருதன் கொடுமையின் அலர்பா டும்மே
அலமரல் மழைக்கண் அமர்ந்து நோக்காள்
அலையல் வாழிவேண்டு அன்னை உயர்சிமைப்
பொதும்பிற் புன்னைச் சினைசேர்பு இருந்த
வம்ப நாரை யிரிய ஒருநாட்
பொங்குவரல் ஊதையொடு புணரி யலைப்பவும்
உழைக்கடல் வழங்கலும் உரியன் அதன்றலை
இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப
எழில்பயங் குன்றிய சிறையழி தொழில
நிரைமணிப் புரவி விரைநடை தவிர
இழுமென் கானல் விழுமணல் அசைஇ
ஆய்ந்த பரியன் வந்திவண்
மான்ற மாலைச் சேர்ந்தன்றோ இலனே.
தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.

## 297. அகநானூறு - 200. நெய்தல்

நிலாவின் இலங்கு மணல்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை
ஊரென வுணராச் சிறுமையொடு நீருடுத்து
இன்னா வுறையுட் டாயினும் இன்பம்
ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்

தம் பதி மறக்கும் பண்பின் எம் பதி
வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப
பொம்மற் படுதிரை கம்மென உடைதரு
மரனோங்கு ஒருசிறை பலபா ராட்டி
எல்லை யெம்மொடு கழிப்பி எல்லுற

நற்றேர் பூட்டலும் உரியீர் அற்றன்று
சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமும்
எம்வரை யளவையிற் பெட்குவம்
நும்மொப் பதுவோ உரைத்திசின் எமக்கே.

தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறை நயப்பக் கூறியது.

**298.** அகநானூறு - **210.** நெய்தல்

குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறியுளி பொருத ஏமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பு அணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்
திரைபயில் அழுவம் உழக்கி உரனழிந்து
நிரை திமில் மருங்கிற் படர்தரும் துறைவன்
பானாள் இரவில்நம் பணைத்தோள் உள்ளித்
தான் இவண் வந்த காலை நம்மூர்க்
கானலம் பெருந்துறைக் கவின்பா ராட்டி
ஆனாது புகழ்ந்திசி னோனே இனித்தன்
சாயல் மார்பிற் பாயல் மாற்றிக்
கைதையம் படுசினைக் கடுந்தேர் விலங்கச்
செலவரிது என்னும் என்பது
பலகேட் டனமால் தோழி நாமே.

தோழி தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

## 299. அகநானூறு - 300. நெய்தல்

நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்குமண லங்கண் உணங்கப் பெய்ம்மார்

11

பறிகொள் கொள்ளையர் மறுக வுக்க
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
எல்லை தண்பொழிற் சென்றெனச் செலீஇயர்
தேர்பூட்டு அயர ஏஎய் வார்கோற்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்
செல்இனி மடந்தைநின் தோழியொடு மனையெனச்
சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து
தீங்கா யினள்இவ ளாயின் தாங்காது
நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப்
பிறிதொன்று ஆகலும் அஞ்சுவல் அதனால்
சேணின் வருநர் போலப் பேணா
இருங்கலி யாணரெஞ் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் விளைஇத்
துறையு மான்றின்று பொழுதே சுறவும்
ஓத மல்கலின் மாறா யினவே
எல்லின்று தோன்றல் செல்லா தீமென
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்லுறை நல்விருந்து அயர்தல்
ஒல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே.

பகற்குறிவந்து நீங்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

**300.** அகநானூறு - **330.** நெய்தல்

கழிப்பூக் குற்றுங் கானல் அல்கியும்
வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்
இன்புறப் புணர்ந்தும் இளிவரப் பணிந்துந்
தன்துயர் வெளிப்படத் தவறி நந்துயர்
அறியா மையின் அயர்ந்த நெஞ்சமொடு
செல்லு மன்னோ மெல்லம் புலம்பன்
செல்வோன் பெயர்புறத்து இரங்கி முன்னின்று
தகைஇய சென்ற என் நிறையில் நெஞ்சம்
எய்தின்று கொல்லோ தானே எய்தியுங்

உலோச்சனார் 163

காமஞ் செப்ப நாணின்று கொல்லோ
உதுவ காண் அவர் ஊர்ந்த தேரே
குப்பை வெண்மணற் குவவுமிசை யானும்
எக்கர்த் தாழை மடல்வயி னானும்

ஆய்கொடிப் பாசடும்பு பரிய வூர்பிழிபு
சிறுகுடிப் பரதவர் பெருங்கடல் மடுத்த
கடுஞ்செலற் கொடுந்திமில் போல
நிவந்துபடு தோற்றமொடு இகந்துமா யும்மே.

தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப் பக்கூறியது.

## 301. அகநானூறு - 400. நெய்தல்

நகைநன் றம்ம தானே அவனொடு

மனையிறந்து அல்கினும் அலரென நயந்து
கானல் அல்கிய நங்களவு அகலப்
பல்புரிந் தியற லுற்ற நல்வினை
நூலமை பிறப்பின் நீல வுத்திக்
கொய்ம்மயி ரெருத்தம் பிணர்படப் பெருகி
நெய்ம்மிதி முனைஇய கொழுஞ்சோற்று ஆர்கை
நிரலியைந்து ஒன்றிய செலவிற் செந்தினைக்

குரல்வார்ந் தன்ன குவவுத்தலை நன்னான்கு
வீங்குசுவல் மொசியத் தாங்குநுகந் தழீஇப்
பூம்பொறிப் பல்படை யொலிப்பப் பூட்டி
மதியுடை வலவன் ஏவலின் இகுதுறைப்
புனல்பாய்ந் தன்ன வாமான் திண்டேர்க்
கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரி
பால்கண் டன்ன ஊதை வெண்மணற்
கால்கண் டன்ன வழிபடப் போகி
அயிர்ச்சேற்று அள்ள லழுவத்து ஆங்கண்
இருள்நீர் இட்டுச்சுரம் நீந்தித் துறைகெழு
மெல்லம் புலம்பன் வந்த ஞான்றைப்
பூமலி யிருங்கழித் துயல்வரும் அடையொடு
நேமி தந்த நெடுநீர் நெய்தல்

விளையா இளங்கள் நாறப் பலவுடன்
பொதியவிழ் தண்மலர் கண்டு நன்றும்
புதுவ தாகின் றம்ம பழவிறற்
பாடெழுந்து இரங்கு முந்நீர்
நீடிரும் பெண்ணைநம் அழுங்க லூரே.

தலைமகன் வரைந்தெய்திய பின்றைத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

## 302. குறுந்தொகை - 175. நெய்தல்

பருவத்தேன் நசைஇப் பல்பறைத் தொழுதி
உரவுத்திரை பொருத திணிமணல் அடைகரை
நனைந்த புன்னை மாச்சினை தொகூஉம்
மலர்ந்த பூவின் மாநீர்ச் சேர்ப்பற்கு
இரங்கேன் தோழி யீங்கென்கொல் என்று
பிறர்பிறர் அறியக் கூறல்
அமைந்தாங்கு அமைக அம்பலஃ தெவனே.

பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்துவாட்குக் கிழத்தி யுரைத்தது.

## 303. குறுந்தொகை - 177. நெய்தல்

கடல்பா டவிந்து கானல் மயங்கித்
துறைநீ ரிருங்கழி புல்லென் றன்றே
மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும் இன்றுஅவர்
வருவர்கொல் வாழி தோழி நாம்நகப்
புலப்பினும் பிரிவாங்கு அஞ்சித்
தணப்பருங் காமந் தண்டி யோரே.

கிழவன் வரவுணர்ந்து தோழி கிழத்திக்கு உரைத்தது.

### 304. குறுந்தொகை - 205. நெய்தல்

மின்னுச்செய் கருவிய பெயல்மழை தூங்க
விசும்பாடு அன்னம் பறைநிவந் தாங்குப்



பொலம்படைப் பொலிந்த வெண்தேர் ஏறிக்
கலங்குகடற் றுவலை ஆழி நனைப்ப
இனிச்சென் றனனே இடுமணற் சேர்ப்பன்
யாங்கறிந் தன்றுகொல் தோழியென்
தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

### 305. குறுந்தொகை - 248. நெய்தல்

அதுவா லன்மையோ அரிதே அவன்மார்பு
உறுக வென்ற நாளே குறுகி
ஈங்கா கின்றே தோழி கானல்
ஆடரை புதையக் கோடை யிட்ட
அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனை
குறிய வாகுந் துறைவனைப்
பெரிய கூறி யாய் அறிந் தனளே.

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி ஆற்றுவித்தது.

## 306. நற்றிணை - 11. நெய்தல்

பெய்யாது வைகிய கோதை போல
மெய்சா யினை அவர் செய்குறி பிழைப்ப
உள்ளி நொதுமலர் நேர்புரை தெள்ளிதின்
வாரா ரென்னும் புலவி யுட்கொளல்
ஒழிக மாளநின் நெஞ்சத் தானே
புணரி பொருத பூமணல் அடைகரை
ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்புஆய்ந் தூர
நிலவுவிரிந் தன்றால் கான லானே.

காப்புமிகுதிக்கண் இடையீடுபட்டு ஆற்றாளாய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

**307.** நற்றிணை - **38.** நெய்தல்

வேட்டம் பொய்யாது வலைவளஞ் சிறப்பப்
பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும்பனந் தீம்பிழி யுண்போர் மகிழும்
ஆர்கலி யாணர்த் தாயினுந் தேர்கெழு
மெல்லம் புலம்பன் பிரியிற் புல்லெனப்
புலம்பா கின்றே தோழி கலங்குநீர்க்
கழிசூழ் படப்பைக் காண்ட வாயில்
ஒலிகா வோலை முள்மிடை வேலிப்
பெண்ணை யிவரும் ஆங்கண்
வெண்மணற் படப்பையெம் அழுங்க லூரே.

தலைவி வன்புறை யெதிரழிந்து சொல்லியது.

**308.** நற்றிணை - **63.** நெய்தல்

உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்
மிகுமீன் உணக்கிய புதுமண லாங்கண்
கல்லென் சேரிப் புலவற் புன்னை
விழவுநாறு விளங்கிணர் அவிழ்ந்துடன் கமழும்
அழுங்க லூரோ அறனின்று அதனால்
அறனில் அன்னை அருங்கடிப் படுப்பப்
பசலை யாகி விளிவது கொல்லோ

புள்ளுற ஒசிந்த பூமயங்கு அள்ளற்
கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை யிவுளி
திரைதரு புணரியிற் கழூஉம்
மலிதிரைச் சேர்ப்பனொடு அமைந்தநந் தொடர்பே.

அலரச்சத்தால் தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.

### 309. நற்றிணை - 64. குறிஞ்சி

என்ன ராயினும் இனிநினை வொழிக
அன்ன வாக இனையல் தோழியாம்
இன்ன மாக நத் துறந்தோர் நட்பெவன்



மரனார் உடுக்கை மலையுறை குறவர்
அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற்று ஆர முருக்கிப் பையென
மரம்வறி தாகச் சோர்ந்துஉக் காங்கென்
அறிவும் உள்ளமும் அவர்வயிற் சென்றென
வறிதால் இகுளையென் யாக்கை இனியவர்
வரினும் நோய்மருந் தல்லர் வாராது
அவண ராகுக காதலர் இவண்நம்

காமம படரட வருநதுய
நோய்மலி வருத்தங் காணன்மார் எமரே.

பிரிவிடைத் தலைவியது அருமை கண்டு
தூதுவிடக் கருதிய
தோழிக்குத் தலைவி சொல்லியது.

## 310. நற்றிணை - 74. நெய்தல்

வடிக்கதிர் திரித்த வன்ஞாட் பெருவலை
இடிக்குரற் புணரிப் பௌவத்து இடுமார்
நிறையப் பெய்த அம்பி காழோர்
சிறையருங் களிற்றிற் பரதவர் ஒய்யுஞ்
சிறுவீ ஞாழற் பெருங்கடற் சேர்ப்பனை
ஏதி லாளனும் என்ப போதவிழ்
புதுமணற் கானற் புன்னை நுண் தாது
கொண்டல் அசைவளி தூக்குதொறுங் குருகின்
வெண்புற மொசிய ஆர்க்குந் தெண்கடற்
கண்டல் வேலிய வூரவன்
பெண்டென அறிந்தன்று பெயர்த்தலோ அரிதே.

தலைவி பாணற்கு வாயின் மறுத்தது.

## 311. நற்றிணை - 131. நெய்தல்

ஆடிய தொழிலும் அல்கிய பொழிலும்
உள்ள லாகா உயவு நெஞ்சமொடு
ஊடலும் உடையமோ உயர்மணற் சேர்ப்ப
திரைமுதிர் அரைய தடந்தாட் டாழைச்

சுறவுமருப்பு அன்ன முட்டோடு ஒசிய
இறவார் இனக்குருகு இறைகொள இருக்கும்
நறவுமகி ழிருக்கை நற்றேர்ப் பெரியன்
கட்கமழ் பொறையாறு அன்ன என்
நற்றோள் நெகிழ மறத்தல் நுமக்கே.

மணமனையிற் பிற்றை ஞான்று புக்க தோழியைத் தலைவன் 'வேறுபடாமை யாற்றுவித்தாய் பெரியைகாண்' என்றாற்குத் தோழி சொல்லியது.

## 312. நற்றிணை - 149. நெய்தல்

சிலரும் பலருங் கட்கண் நோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை யலைப்ப
அலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவுஅயர்ந் திசினால் யானே
அலர்சுமந்து ஒழிகஇவ் வழுங்க லூரே.

தோழி தலைவியை உடன்போக்கு வலித்தது. சிறைப்புறமாகச் சொல்லியதூஉமாம்.

## 313. நற்றிணை - 191. நெய்தல்

சிறுவீ ஞாழற் றேன்தோ யொள்ளிணர்
நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த
வண்டற் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅம்
கண்டல் வேலிக் காமர் சிறுகுடி
எல்லிவந் தன்றோ தேரெனச் சொல்லி
அலரெழுந் தன்றிவ் வூரே பலருளும்



என்னோக் கினளே அன்னை நாளை
மணிப்பூ முண்டகங் கொய்யே னாயின்
அணிக்கவின் உண்மையோ அரிதே மணிக்கழி
நறும்பூங் கானல் வந்து அவர்
வருந்தேர் போதல் அதனினும் அரிதே.

தோழி தலைமகன் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுப்பான் வேண்டிச் சொல்லியது.

## 314. நற்றிணை - 203. நெய்தல்

முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்த்
தடந்தாட் டாழை முள்ளுடை நெடுந்தோட்டு
அகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூங்
கோடுவார்ந் தன்ன வெண்பூத் தாழை
எறிதிரை யுதைத்தலிற் பொங்கித் தாதுசோர்பு

சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலாம் அறுக்கும்
மணங்கமழ் கானல் இயைந்தநங் கேண்மை
ஒருநாள் பிரியினும் உய்வரிது என்னாது
கதழ்பரி நெடுந்தேர் வரவுஆண் டழுங்கச்
செய்த தன் தப்ப லன்றியும்
உயவுப்புணர்ந் தன்று இவ் வழுங்க லூரே.

தலைமகன் சிறப்புறத்தானாகத் தோழி சொல்லி வரைவு கடாயது.

## 315. நற்றிணை - 223. நெய்தல்

இவள்தன், காமம் பெருமையிற் காலையென் னாள்நின்
அன்புபெரி துடைமையின் அளித்தல் வேண்டிப்

பகலும் வருதி பல்பூங் கானல்
இந்நீ ராகலோ இனிதா லெனின் இவள்
அலரின் அருங்கடிப் படுகுவள் அதனால்
எல்லி வம்மோ மெல்லம் புலம்ப
சுறவினங் கலித்த நிறையிரும் பரப்பிற்

றுறையினுந் துஞ்சாக் கண்ணர்
பெண்டிரும் உடைத்திவ் வம்ப லூரே.

பகற்குறி வந்து மீள்வானைத் தோழி இரவுக்குறி நேர்வான் போன்று அதுவும் மறுத்து வரைவுகடாயது.

**316.** நற்றிணை - **249.** நெய்தல்

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத் தன்ன பாசிலை யகந்தொறும்
வெள்ளி யன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தாது உதிரப்
புலிப்பொறிக் கொண்ட பூநாறு குரூஉச்சுவல்
வரிவண்டு ஊதலிற் புலிசெத்து வெரீஇப்
பரியுடை வயங்குதாள் பந்திற் றுவத்
தாங்கவுந் தகைவரை நில்லா ஆங்கண்
மல்லலஞ் சேரி கல்லெனத் தோன்றி
அம்பல் மூதூர் அலரெழச்
சென்ற தன்றோ கொண்கன் தேரே.

வரைவிடை மெலிந்தது.

**317.** நற்றிணை - **254.** நெய்தல்

வண்டல் தைஇயும் வருதிரை யுதைத்துங்
குன்றோங்கு வெண்மணற் கொடியடும்பு கொய்துந்
துனியில் நன்மொழி யினிய கூறியுஞ்
சொல்லெதிர் பெறாஅ யுயங்கி மெல்லச்
செலீஇய செல்லும் ஒலியிரும் பரப்ப
உமணர் தந்த உப்புநொடை நெல்லின்
அயினி மாவின்று அருந்த நீவிக்
கணநாறு பெருந்தொடை புரளு மார்பிற்
றுணையிலை தமியை சேக்குவை யல்லை
நேர்கட் சிறுதடி நீரின் மாற்றி
வானம் வேண்டா விழவின்எங்
கானலஞ் சிறுகுடிச் சேர்ந்தனை செலினே.

தோழி படைத்து மொழிந்தது.

உலோச்சனார் 171

## 318. நற்றிணை - 278. நெய்தல்

படுகாழ் நாறிய பராஅரைப் புன்னை
அடுமரன் மொக்குளின் அரும்புவா யவிழப்
பொன்னின் அன்ன தாதுபடு பன்மலர்

சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறு
நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை
இனியறிந் திசினே கொண்கன் ஆகுதல்
கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
குளம்பினுஞ் சேயிரு ஒடுங்கின
கோதையு மெல்லாம் ஊதைவெண் மணலே. தோழி

தலைமகட்கு வரைவு மலிந்தது.

### 319. நற்றிணை - 287. நெய்தல்

விசும்புறழ் புரிசை வெம்ப முற்றிப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்த
நல்லெயி லுடையோர் உடைய மென்னும்
பெருந்தகை மறவன் போலக் கொடுங்கழிப்
பாசடை நெய்தற் பனிநீர்ச் சேர்ப்பன்
நாம முதலை நடுங்குபகை யஞ்சான்
காமம் பெருமையின் வந்த ஞான்றை
அருகா தாகிய வன்கணெஞ்ச

நள்ளென் கங்குற் புள்ளொலி கேட்டொறுந்
தேர்மணித் தெள்ளிசை கொல்லென
ஊர்மடி கங்குலுந் துயில்மறந் ததுவே.

காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

### 320. நற்றிணை - 311. நெய்தல்

பெயினே, விடுமான் உழையினம் வெறுப்பத்
தோன்றி இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே

வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்



அழியா மரபினம் மூதூர் நன்றே
கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கிச்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
ஒன்றே தோழிநங் கானலது பழியே
கருங்கோட்டுப் புன்னை மலரிற் றாதருந்தி
இருங்களிப் பிரசம் ஊத அவர்
நெடுந்தே ரின்னொலி கேட்டலோ அரிதே.

அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

**321.** நற்றிணை - **331.** நெய்தல்

உவர்விளை யுப்பின் உழாஅ வுழவர்
ஓகை யுமணர் வருபதம் நோக்கிக்
கான லிட்ட காவற் குப்பைப்
புலவுமீன் உணங்கற் படுபுள் ளோப்பி
மடநோக் காயமொடு உடனூர்பு வறி
எந்தை திமிலிது நுந்தை திமிலெனை
வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்
திண்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப
இனிதே தெய்யவெம் முனிவில் நல்லூர்
இனிவரின் தவறு மில்லை எனையதூஉம்
பிறர்பிற ரறிதல் யாவது
தமர்தமர் அறியாச் செறிவும் உடைத்தே.

தோழி இரவுக்குறி நேர்ந்தது.

## 322. நற்றிணை - 354. நெய்தல்

தான் அது பொறுத்தல் யாவது கானல்
ஆடரை யொழித்த நீடிரும் பெண்ணை
வீழ்கா வோலைச் சூழ்சிறை யாத்த
கானல் நண்ணிய வார்மணல் முன்றில்
எல்லி யன்ன இருள்நிறப் புன்னை
நல்லரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த

தூங்கல் அம்பித் தூவலஞ் சேர்ப்பிற்
கடுவெயிற் கொதித்த கல்விளை யுப்பு
நெடுநெறி யொழுகை நிரைசெலப் பார்ப்போர்
அளம்போகு ஆகுலங் கடுப்பக்
கௌவையா கின்றது ஐயநின் நட்பே.

தோழியாற் செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது. மனைவயின் தோழியைத் தலைமகன் புகழ்ந்தாற்கு மறுத்துச் சொல்லியதூஉமாம்.

## 323. நற்றிணை - 363. நெய்தல்

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்
தெண்கடல் நாட்டுச் செல்வன் யானென
வியங்கொண் டேகினை யாயின் எனையதூஉம்
உறுவினைக்கு அசாஅவா வுலைவில் கம்மியன்
பொறியறு பிணைக்கூட்டுந் துறைமணற் கொண்டு
வம்மோ தோழி மலிநீர்ச் சேர்ப்ப
பைந்தழை சிதையக் கோதை வாட
நன்னர் மாலை நெருநை நின்னொடு
சிலவிலங்கு எல்வளை ஞெகிழ
வலவன் ஆட்டுவோள் சிலம்புஞெமிர்ந் தெனவே.

பகற்குறி வந்து நீங்குந் தலைமகனைத் தோழி 'தலைமகளை என்னை யாற்றுவிக்குமென்றாகாதோ எம்பெருமான் கவலாது செல்வது :: யான் ஆற்றுவிக்குமிடத்துக் கவன்றால் நீ ஆற்றுவி' எனச் சொல்லியது. கையுறை நேர்ந்த தோழி தலைமகட்குக் கையுறை யுரைத்ததூஉமாம்.

## 324. நற்றிணை - 372. நெய்தல்

அழிதக் கன்றே தோழி கழிசேர்பு
கானற் பெண்ணைத் தேனுடை யளிபழம்
வள்ளிதழ் நெய்தல் வருந்த மூக்கிறுபு
அள்ள லிருஞ்சேற்று ஆழப் பட்டெனக்
கிளைக்குருகு இரியுந் துறைவன் வளைக்கோட்டு
அன்ன வெண்மணற்று அகவயின் வேட்ட



அண்ண லுள்ளமொடு அமர்ந்தினிது நோக்கி
அன்னை தந்த அலங்கல் வான்கோடு
உலைந்தாங்கு நோதல் அஞ்சி யடைந்ததற்கு
இனைய லென்னு மென்ப மனையிருந்து
இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்
திண்திமில் விளக்க மெண்ணுங்
கண்டல் வேலிக் கழிநல் லூரே.

மேல் இற்செறிப்பான் அறிந்து ஆற்றாளாகி நின்ற தலைமகள் ஆற்றவேண்டி உலகியல்மேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறியா ரெனச் சொல்லியது.

### 325. நற்றிணை - 398. நெய்தல்

உருகெழு தெய்வமுங் கரந்துறை யின்றே
விரிகதிர் ஞாயிறுங் குடக்குவாங் கும்மே
நீரலைக் கலைஇய கூழை வடியாச்

சாஅய் அவ்வயி றலைப்ப உடனியைந்து
ஓரை மகளிரும் ஊரெய் தினரே
பன்மலர் நறும்பொழில் பழிச்சி யாமுன்
சென்மோ சேயிழை யென்றனம் அதனெதிர்
சொல்லாள் மெல்லியல் சிலவே நல்லகத்து
யாணர் இளமுலை நனைய
மாணெழில் மலர்க்கண் தெண்பனி கொளவே.

முன்னுறவுணர்ந்து பகற்குறிவந்து மீளுந் தலைமகனை ' நீதான் இவளது தன்மையை ஆற்றுவி ' எனச் சொல்லியது.

## 326. புறநானூறு - 258.

முட்காற் காரை முதுபழன் ஏய்ப்பத்
தெறிப்ப விளைந்த தீங்கந் தாரம்
நிறுத்த ஆயந் தலைச்சென்று உண்டு
பச்சூன் தின்று பைந்நிணம் பெருத்த
எச்சில் ஈர்ங்கை விற்புறந் திமிரிப்
புலம்புக் கனனே புல்லணற் காளை



ஒருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை
ஊர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
ஆதரக் கழுமிய துகளன்
காய்தலும் உண்டு அக் கள்வெய் யோனே.

திணை - வெட்சி ; துறை - உண்டாட்டு

## 327. புறநானூறு - 274.

நீலக் கச்சைப் பூவார் ஆடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேல்துரந் தினியே
தன்னுந் துரக்குவன் போலும் ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே.

திணை - தும்பை ; துறை - எருமைமறம்.

## 328. புறநானூறு - 377.

பனிபழுனிய பல்யாமத்துப்
பாறுதலை மயிர்நனைய
இனிது துஞ்சுந் திருநகர் வரைப்பின்
இனையல் அகற்றஎன் கிணைதொடாக் குறுகி
அவியுணவினோர் புறங்காப்ப
அறநெஞ்சத்தோன் வாழநாளென்று
அதற்கொண்டு வரலேத்திக்
கரவில்லாக் கவிவண்கையான்
வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
பிறர்க்குவமந் தானல்லது
தனக்குவமம் பிறரில்லென
அதுநினைந்து மதிமழுகி
ஆங்குநின்ற எற்காணூஉச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை

நீபுரவலை எமக்கென்ன
மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னுங்
கடல்பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்ட உடையுஞ் சேறுபட்ட தசும்புங்
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப
நனவின் நல்கியோன் நசைசால் தோன்றல்
நாடென மொழிவோரவன் நாடென மொழிவோர்
வேந்தென மொழிவோரவன் வேந்தென மொழிவோர்
... ... பொற்கோட்டு யானையர்
கவர்பரிக் கச்சைநன்மான்
வடிமணி வாங்குருள
... ... நற்றேர்க் குழுவினர்
கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்நர் ஆர்வமொடு ஈண்டிக்
கடலொலி கொண்ட தானை
அடல்வெங் குருசில் மன்னிய நெடிதே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியைப் பாடியது.

## சூ0. உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்

## 329. அகநானூறு - 146. மருதம்

வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு

பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி
மடக்கண் எருமை மாண்நாகு தழீஇப்
படப்பை நண்ணிப் பழனத்து அல்குங்
கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்
ஒள்ளிழை மகளிர் சேரிப் பன்னாள்
இயங்க லானா தாயின் வயங்கிழை
யார்கொல் அளியள் தானே எம்போல்
மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி
வளிபொரத் துயல்வரும் தளிபொழி மலரிற்
கண்பனி யாகத் துறைப்பக் கண்பசந்து
ஆயமு மயலு மருளத்
தாயோம் பாய்நலம் வேண்டா தோளே.

உறையனார் 177

வாயில் வேண்டிச்சென்ற பாணற்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

௬௧. உழுந்தினைம்புலவர்

330. குறுந்தொகை - 333. குறிஞ்சி

குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்
புனமுண்டு கடிந்த பைங்கண் யானை
நறுந்தழை மகளி ரோப்புங் கிள்ளையொடு
குறும்பொறைக் கணவுங் குன்ற நாடன்
பணிக்குறை வருத்தம் வீடத்
துணியி னெவனோ தோழிநம் மறையே.

அறத்தொடு நிற்பல் எனக் கிழத்திக்குத் தோழி

உரைத்தது.

## ௩௨. உறையனார்

### 331. குறுந்தொகை - 207. பாலை

செப்பினஞ் செலினே செலவரி தாகுமென்று
அத்த வோமை யங்கவட் டிருந்த
இனந்தீர் பருந்தின் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்சென் மாக்கட் குயவுத்துணை யாகும்
கல்வரை யயலது தொல்வழங்கு சிறுநெறி
நல்லடி பொறிப்பத் தாஅய்ச்
சென்றெனக் கேட்டநம் ஆர்வலர் பலரே.

செலவுக் குறிப்பறிந்து அவர்செல்வாரென்று தோழி சொல்லக் கிழத்தி உரைத்தது.

12

## ௩௩. உறையூர் இளம்பொன்வாணிகனார்

### 332. புறநானூறு - 264.

பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்து
இனிநட் டனரே கல்லும் கன்றொடு
கறவை தந்து பகைவர் ஓட்டிய
நெடுந்தகை கழிந்தமை யறியாது
இன்றும் வருங்கொல் பாணரது கடும்பே.

திணை - காந்தை ; துறை - கையறுநிலை.

## ௬௪. உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார்

### 333. புறநானூறு - 13.

இவன்யா ரென்குவை யாயின் இவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழில் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே
களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீன் நாப்பண் திங்கள் போலவுஞ்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே
நோயில னாகிப் பெயர்கதில் அம்ம
பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்குங்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி கருவூரிடஞ் செல்வானைக் கண்டு சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையோடு வெண்மாடத்து மேலிருந்து பாடியது.

### 334. புறநானூறு - 127.

களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப் பாடின்
பனுவற் பாணர் உய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கு ஈவின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுகழ் ஓரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே. திணை -

பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
ஆயைப் பாடியது.

### 335. புறநானூறு - 128.

மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் தெண்கண் கனிசெத்து அடிப்பின்
அன்னச் சேவல் மாறெழுந்து ஆலும்
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்

ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்து ; இயன் மொழியு மாம்.
ஆயைப் பாடியது.

## 336. புறநானூறு - 129.

குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்குஅமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை யயருந்
தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்



ஆஅ யண்டிரன் அடுபோர் அண்ணல்
இரவலர்க்கு ஈத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பின் ஆனாது
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஆயைப் பாடியது.

## 337. புறநானூறு - 130.

விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய் நின்னாட்டு
இளம்பிடி யொருசூல் பத்து ஈனும்மோ
நின்னும்நின் மலையும் பாடி வருநர்க்கு
இன்முகங் கரவாது உவந்துநீ யளித்த
அண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஆயைப் பாடியது.

## 338. புறநானூறு - 131.

மழைக்கணஞ் சேக்கும் மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடைய இக் கவின்பெறு காடே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஆயைப் பாடியது.

## 339. புறநானூறு - 132.

முன்உள்ளு வோனைப் பின்உள்ளி னேனே
ஆழ்கென் உள்ளம் போழ்கென் நாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே

உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார்

நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி அயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்

வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆஅய் குடியின் றாயிற்
பிறழ்வது மன்னோ இம் மலர்தலை யுலகே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி. ஆயைப் பாடியது.

## 340. புறநானூறு - 133.

மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பு அறியலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே.

திணை - பாடாண்டிணை ; துறை - விறலியாற்றுப்படை. ஆயைப் பாடியது.

## 341. புறநானூறு - 134.

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்
பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப்பட் டன்றவன் கைவண் மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

ஆயைப் பாடியது.

## 342. புறநானூறு - 135.

கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
அருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்

தடவரல் கொண்ட தகைமெல் ஒதுக்கின்
வளைக்கை விறலியென் பின்ன ளாகப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந்து இசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்
ஒல்க னுள்ளமொடு ஒருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பின்நின் நல்லிசை யுள்ளி
வந்தனென் எந்தை யானே என்றும்
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை இரியல் போக்கும்
மலைகெழு நாடன் மாவேள் ஆஅய்
களிறும் அன்றே மாவும் அன்றே
ஒளிறுபடைப் புரவிய தேரும் அன்றே
பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயின் எமதெனப்
பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயமொடு
அன்ன வாகநின் ஊழி நின்னைக்
காண்டல் வேண்டிய அளவை வேண்டார்
உறுமுரண் கடந்த ஆற்றற்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
ஆயைப் பாடியது.

**343.** புறநானூறு - **241.**

திண்தேர் இரவலர்க்கு ஈத்த தண்தார்
அண்டிரன் வரூஉ மென்ன ஒண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
ஆயைப் பாடியது.

## உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார்

183

## 344. புறநானூறு - 374.

கானல் மேய்ந்து வியன்புலத்து அல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலம்இலங்கு சென்னிய பாறுமயிர் அவியத்
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
இருங்கலை யோர்ப்ப இசைஇக் காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்தலைச் சிறுஅர்
மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றுவா

சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடும் ஊன்றும்
இருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
விருந்திறை நல்கு நாடன் எங்கோன்
கழல்தொடி ஆஅ யண்டிரன் போல
வண்மையும் உடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.

ஆய் அண்டிரனைப் பாடியது.

## 345. புறநானூறு - 375.

அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த ஒல்குநிலைப் பல்காற்
பொதியில் ஒருசிறை பள்ளி யாக
முழாஅரைப் போந்தை யரவாய் மாமடல்
நாரும் போழுங் கிணையொடு சுருக்கி
ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஊழிரந்து உண்ணும் உயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கும் அறாஅ யாணர்

வரையணி படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா ஈகைக் கழல்தொடி ஆஅய்
யாவரும் இன்மையிற் கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங்கு யானும்
ஒருநின் உள்ளி வந்தனென் அதனாற்
புலவர் புக்கில் ஆகி நிலவரை
நிலீஇயர் அத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
பெரிய ஓதினுஞ் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்
ஆய் அண்டிரனைப் பாடியது.

## ௯௫. உறையூர்க் கதுவாய்ச்சாத்தனார்

## 346. நற்றிணை - 370. மருதம்

வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூல் நங்குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கு மையவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அவ்வரித்
திதலை யல்குல் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோமெல் அஞ்சி லோதியெனப்
பன்மாண் அகட்டிற் குவளை யொற்றி
உள்ளினெ னுறையு மெற்கண்டு மெல்ல
முகைநாண் முறுவல் தோற்றித்
தகைமல ருண்கண் கைபுதைத் ததுவே.

ஊடல்நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது. முன் நிகழ்ந்ததனைப் பாணர்க்குச் சொல்லியதூஉமாம்.

சா சா. உறையூர்ச் சல்லியங்குமரனார்

347. குறுந்தொகை - 309. மருதம்

கைவினை மாக்கள்தஞ் செய்வினை முடிமார்

சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட
நீடிய வரம்பின் வாடிய விடினுங் [ர்த்துங்
கொடியரோ, நிலம்பெயர்ந் துறைவே மென்னாது பெய
கடிந்த செறுவிற் பூக்கும் நின்னூர்
நெய்த லனையம் பெரும நீயெமக்கு
இன்னா தனபல செய்யினும்
நின்னின் றமைதல் வல்லா மாறே.

பரத்தையிற் பிரிந்துவந்த கிழவற்குத் தோழிவாயில் நேர்ந்தது.

## சுஎ. உறையூர்ச் சிறுகந்தனார்

## 348. குறுந்தொகை - 257. குறிஞ்சி

வேரு முதலுங் கோடும் ஓராங்குத்
தொடுத்த போலத் தூங்குபு தொடரிக்
கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின்
ஆர்கலி வெற்பன் வருதொறும் வரூஉம்
அகலினும் அகலா தாகி
இகலுந் தோழிநங் காமத்துப் பகையே.

வரைவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## சுஅ. உறையூர்ப் பல்காயனார்

## 349. குறுந்தொகை - 374. குறிஞ்சி

எந்தையும் யாயும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப
நன்றுபுரி கொள்கையி னொன்றா யின்றே

முடங்கல் இறைய தூங்கணங் குரீஇ
நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூட்டினும் மயங்கிய மைய லூரே.

அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது.

௬௬. உறையூர்
மருத்துவன் தாமோதரனார்

**350.** அகநானூறு - **133.** பாலை

குன்றி யன்ன கண்ண குரூஉமயிர்ப்
புன்தாள் வெள்ளெலி மோவா யேற்றை
செம்பரல் முரம்பிற் சிதர்ந்த பூழி
நன்னாள் வேங்கைவீ நன்களம் வரிப்பக்
கார்தலை மணந்த பைம்புதற் புறவின்

வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழுங்
கொல்லை யிதைய குறும்பொறை மருங்கிற்
கரிபரந் தன்ன காயாஞ் செம்மலொடு
எரிபரந் தன்ன இலமலர் விரைஇப்
பூங்கலுழ் சுமந்த தீம்புனற் கான்யாற்று
வான்கொள் தூவல் வளிதர உண்கும்

எம்மொடு வருதல் வல்லையோ மற்றெனக்
கொன்னென்று வினவினர் மன்னே தோழி
இதல்முள் ளொப்பின் முகைமுதிர் வெட்சி
கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅம்
இளைநாட் டத்தது ஈர்ஞ்சுவற் கலித்த
வரிமரற் கறிக்கு மடப்பிணைத்
திரிமருப்பு இரலைய காடு இறந்தோரே.

பிரிவிடை யாற்றாளாயினளெனக் கவன்ற தோழிக்குத்
தலைமகள் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

## 351. அகநானூறு - 257. பாலை

வேனிற் பாதிரிக் கூனி ம்மாமலர்
நறைவாய் வாடல் நாறு நாட்சுரம்

உறையூர் மருத்துவன்தாமோதரனர்

187

அரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப
எம்மொடு ஓராறு படூஇயர் யாழநின்
பொம்ம லோதி பொதுள வாரி
அரும்பற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச்
சுரும்புசூழ் அலரி தைஇ வேய்ந்தநின்
தேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும்
வண்டுகடிந்து ஓம்பல் தேற்றாய் அணிகொள
நுண்கோல் எல்வளை தெளிர்க்கு முன்கை
மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி

வல்லுவை மன்னால் நடையே கள்வர்
பகைமிகு கவலைச் செல்நெறி காண்மார்
மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து
நாரரை மருங்கின் நீர்வரப் பொளித்துக்
களிறுசுவைத் திட்ட கோதுடைத் ததரல்
கல்லா உமணர்க்குத் தீமூட் டாகுந்
துன்புறு தகுவன வாங்கட் புன்கோட்டு
அரிலிவர் புற்றத்து அல்கிரை நசைஇ
வெள்அரா மிளிர வாங்கும்
பிள்ளை யெண்கின் மலைவயி னானே.

உடன்போகாநின்ற தலைமகட்குத் தலைமகன் சொல்லியது.

## 352. புறநானூறு - 60.

முந்நீர் நாப்பண் திமிற்சுடர் போலச்
செம்மீன் இமைக்கு மாக விசும்பின்
உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதென மல்லமோ பலவே கானற்
கழியுப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன எங்கோன்
வலன்இரங்கு முரசின் வாய்வாள் வளவன்

வெயில்மறைக் கொண்ட உருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை யொக்குமால் எனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - குடைமங்கலம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய
பெருந்திருமாவளவனை பாடியது.

## 353. புறநானூறு - 170.

மரைபிரித்து உண்ட நெல்லி வேலிப்
பரலுடை முன்றில் அங்குடிச் சீறூர்
எல்லடிப் படுத்த கல்லாக் காட்சி
வில்லுழுது உண்மார் நாப்பண் ஒல்லென
இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோடு இரட்டு
மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டற்
குறுக வோம்புமின் தெவ்விர் அவனே
சிறுகண் யானை வெண்கோடு பயந்த
ஒளிதிகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து
நார்பிழிக் கொண்ட வெங்கட் டேறல்
பண்ணமை நல்யாழ்ப் பாண்கடும்பு அருத்தி
நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்க்கு
இரும்பு பயன்படுக்குங் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் அன்ன வல்லா ளன்னே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை ; தானைமறமுமாம்.

பிட்டங்கொற்றனைப் பாடியது.

## 354. புறநானூறு - 321.

பொறிப்புறப் பூழின் போர்வல் சேவல் மேந்தோல்
களைந்த தீங்கோள் வெள்ளெட் சுளகிடை யுணங்கற்
செவ்வி கொண்டுடன் வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன

உறையூர் முதுகண்ணன்சாத்தனர்

189

குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீள் ஒளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசியி... ...னஞே பாண
வாள்வடு விளங்கிய சென்னிச்
செருவெங் குருசில் ஓம்பு மூரே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

## எ௦. உறையூர் முதுகண்ணன்சாத்தனர்

## 355. குறுந்தொகை - 133. குறிஞ்சி

புனவன் தொடவைப் பொன்போற் சிறுதினைக்
கிளிகுறைத்து உண்ட கூழை யிருவி
பெரும்பெய லுண்மையின் இலையொலித் தாஅங்கென்
உரஞ்செத்து முளேனே தோழியென்
நலம்புத் துண்ட புலம்பி னானே.

வரைவு நீடித்த விடத்துத் தலைமகள் சொல்லியது.

## 356. புறநானூறு - 27.

சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே

மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்

வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்ப தஞ்செய்வினை முடித்தெனக்
கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்

அறியா தோரையும் அறியக் காட்டித்

திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி அருளிலர்
கொடாஅமை வல்ல ராகுக
கெடாஅத் துப்பினின் பகையெதிர்ந் தோரே.

திணை - பொதுவியல் ; துறை - முதுமொழிக்காஞ்சி. சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 357. புறநானூறு - 28.

சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமுங்
கூனுங் குறளும் ஊமுஞ் செவிடும்
மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு
எண்பே ரெச்சம் என்றிவை யெல்லாம்
பேதைமை யல்லது ஊதியம் இல்லென
முன்னும் அறிந்தோர் கூறினர் இன்னும்
அதன்திறம் அத்தை யான் உரைக்க வந்தது
வட்ட வரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போர் உணர்த்திய கூஉங்
கானத் தோர்நின் தெவ்வர் நீயே

புறஞ்சிறை மாக்கட்கு அறங்குறித்து அகத்தோர்
புயத்து எறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கு மகநாட் டையே

அதனால், அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்றா மைந்நிற் போற்றா மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - பொதுவியல் ; முதுமொழிக் காஞ்சியுமாம்.

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

உறையூர் முதுகண்ணன்சாத்தனார்

191

## 358. புறநானூறு - 29.

அழல்புரிந்த அடர்தாமரை
ஐதடர்ந்த நூற்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலன்நறுந் தெரியல்

பாறுமயிர் இருந்தலை பொலியச் சூடிப்
பாண்முற் றுகநின் நாள்மகி ழிருக்கை
பாண்முற்று ஒழிந்த பின்றை மகளிர்
தோள்முற் றுக நின் சாந்துபுலர் அகலம், ஆங்க
முனிவில் முற்றத்து இனிதுமுரசு இயம்பக்
கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க்கு அளித்த[லும்
ஓடியா முறையின் மடிவிலை யாகி
நல்லதன் நலனுந் தீயதன் தீமையும்
இல்லை யென்போர்க்கு இனனா கிலியர்
நெல்விளை கழனிப் படுபுள் ளோப்புநர்

ஒழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு
வெங்கட் டொலைச்சியும் அமையார் தெங்கின்
இளநீர் உதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றனர் உவக்குநின் படைகொள் மாக்கள்
பற்றா மாக்களிற் பரிவுமுந் துறுத்துக்
கூவை துற்ற நாற்காற் பந்தர்ச்
சிறுமனை வாழ்க்கையின் ஒரீஇ வருநர்க்கு
உதவி யாற்று நண்பிற் பண்புடை
ஊழிற் றாகநின் செய்கை விழவிற்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
நகைப்புற னாகநின் சுற்றம்
இசைப்புற னாகநீ யோம்பிய பொருளே.

திணை - பாடாண்டிணை ; துறை - பொதுவியல் ;

முதுமொழிக் காஞ்சியுமாம்.

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.



## 359. புறநானூறு - 30.

செஞ்ஞாயிற்றுச் செலவும்
அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமும் என்றிவை
சென்றளந்து அறிந்தோர் போல என்றும்
இனைத்து என்போரு முளரே அனைத்தும்
அறிவறி வாகாச் செறிவினை யாகிக்
களிறுகவுள் அடுத்த எறிகற் போல
ஒளித்த துப்பினை யாதலின் வெளிப்பட
யாங்கனம் பாடுவர் புலவர் கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியுங்
கடற்பல் தாரத்த நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 360. புறநானூறு - 325.

களிறு நீருடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்துசொரிந்து

இறந்தெனக்

குழிகொள் சின்னீர் குராஅல் உண்டலிற்
சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ஊறல்

முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை
முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்
உடும்பிழுது அறுத்த ஒடுங்காழ்ப் படலைச்
சீறில் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்
மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து
அலந்தலை யிரத்தி யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிறாஅர் கணைவிளை யாடும்
அருமிளை யிருக்கை யதுவே வென்வேல்

ஊட்டியார் 193

வேந்துதலை வரினுந் தாங்குந்
தாங்கா ஈகை நெடுந்தகை யூரே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை.

எக. ஊட்டியார்

## **361.** அகநானூறு - **68.** குறிஞ்சி

அன்னாய் வாழிவேண்டு அன்னைநம் படப்பைத்
தண்அயத்து அமன்ற கூதளங் குழைய
இன்னிசை யருவிப் பாடும் என்னதூஉங்
கேட்டியோ வாழிவேண்டு அன்னைநம் படப்பை
ஊட்டி யன்ன ஒண்டளிர்ச் செயலை
ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென
முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே
பின்னுங் கேட்டியோ வெனவும்அஃ தறியாள்
அன்னையுங் கனைதுயில் மடிந்தனள் அதன்றலை
மன்னுயிர் மடிந்தன்றாற் பொழுதே காதலர்
வருவ ராயிற் பருவம் இதுவெனச்
சுடர்ந்திலங்கு எல்வளை நெகிழ்ந்த நம்வயிற்
படர்ந்த உள்ளம் பழுதன் றாக
வந்தனர் வாழி தோழி அந்தரத்து
இமிழ்பெயல் தலைஇய இனப்பல கொண்மூத்
தவிர்வில் வெள்ளந் தலைத்தலை சிறப்ப
கன்றுகால் ஒய்யுங் கடுஞ்சுழி நீத்தம்
புன்தலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட்டு யானை விளிபடத் துழவும்
அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.

தலைமகன் இரவுக்குறி வந்தமை யறிந்த தோழி தலைமகட்குச்
சொல்லியது.

13



## 362. அகநானூறு - 388. குறிஞ்சி

அம்ம வாழி தோழி நம் மலை
அமையறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்
நறுவிரை யாரம் அறவெறிந் துழுத
உளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல்
பெருவரை யடுக்கத்துக் குரீஇ யோப்பி
ஓங்கிருஞ் சிலம்பின் ஒள்ளிணர் நறுவீ
வேங்கையங் கவட்டிடை நிவந்த இதணத்துப்
பொன்மருள் நறுந்தாது ஊதுந் தும்பி
இன்னிசை யோரா இருந்தன மாக
மையீ ரோதி மடநல் லீரே
நொவ்வியற் பகழி பாய்ந்தெனப் புண்கூர்ந்து
எவ்வமொடு வந்த உயர்மருப்பு ஒருத்தல்நும்
புனத்துழிப் போக லுறுமோ மற்றெனச்
சினவுக்கொள் ஞமலி செயிர்த்துப்புடை யாடச்
சொல்லிக் கழிந்த வல்விற் காளை
சாந்தார் அகலமுந் தகையும் மிகநயந்து

ஈங்குநாம் உழக்கும் எவ்வம் உணராள்
நன்னர் நெஞ்சமொடு மயங்கி வெறியென
அன்னை தந்த முதுவாய் வேலன்
எம்மிறை யணங்கலின் வந்தன் றிந்நோய்
தணிமருந்து அறிவ லென்னு மாயின்
வினவின் எவனோ மற்றே கனல்சின
மையல் வேழ மெய்யுளம் போக
ஊட்டி யன்ன ஊன்புரள் அம்பொடு
காட்டுமான் அடிவழி யொற்றி
வேட்டஞ் செல்லுமோ நும்மிறை யெனவே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லி
யது; தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

## எஉ. ஊண்பித்தை

### 363. குறுந்தொகை - 232. பாலை

உள்ளார் கொல்லோ தோழி உள்ளியும்
வாய்ப்புணர் வின்மையின் வாரார் கொல்லோ
மரற்புகா அருந்திய மாவெருத்து இரலை
உரற்கால் யானை யொடித்துண்டு எஞ்சிய
யாஅ வரிநிழற் றுஞ்சும்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

## எரு. ஊன்பொதி பசுங்குடையார்

### 364. புறநானூறு - 10.

வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழி தேறலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி
வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே
அமிழ்தட்டு ஆனாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை
மகளிர் மலைத்த லல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப
செய்துஇரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்
நெய்தலங் கானல் நெடியோய்
எய்த வந்தனம் யாம் ஏத்துகம் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி ; பூவைநிலையு மாம்.

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியைப் பாடியது.

## 365. புறநானூறு - 203.

கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்
தொல்லது விளைந்தென நிலம்வளங் கரப்பினும்
எல்லா வுயிர்க்கும் இல்லால் வாழ்க்கை
இன்னுந் தம்மென எம்மனோர் இரப்பின்
முன்னுங் கொண்டிரென நும்மனோர் மறுத்தல்
இன்னா தம்ம இயல்தே ரண்ணல்
இல்லது நிரப்பல் ஆற்றா தோரினும்
உள்ளி வருநர் நசையிழப் போரே
அனையையு மல்லை நீயே ஒன்னார்
ஆரெயில் அவர்கட் டாகவும் நுமதெனப்
பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்
பூண்கடன் எந்தைநீ யிரவலர் புரவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியைப் பாடியது.

## 366. புறநானூறு - 370.

... ... ... ...ளி
நாரும் போழுஞ் செய்துண்டு ஓராங்குப்
பசிதினத் திரங்கிய இரும்பே ரொக்கற்கு
ஆர்பதங் கண்ணென மாதிரந் துழைஇ
வேருழந்து உலறி மருங்குசெத் தொழியவந்து
அத்தக் குடிஞைத் துடிமருள் தீங்குரல்
உழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலோடு இசைக்கும் ஆங்கண்
கழைகாய்ந்து உலறிய வறங்கூர் நீளிடை
வரிமரற் றிரங்கிய கானம் பிற்படப்
பழுமர முள்ளிய பறவை போல
ஒண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
துவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
விளைந்த செழுங்குரல் அரிந்துகால் குவித்துப்

## ஊன்பொதி பசுங்குடையார்

197

படுபிணப் பல்போர்பு அழிய வாங்கி
எருதுகளி றாக வாள்மட லோச்சி
அதரி திரித்த ஆளுகு கடாவின்
அகன்கட் டடாரி தெளிர்ப்ப ஒற்றி
வெந்திறல் வியன்களம் பொலிகென்று ஏத்தி

இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழில் மருப்பின்
வரைமருள் முகவைக்கு வந்தனென் பெரும
வடிநவில் எஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவார்
இனத்தடி விராய வரிக்குடர் அடைச்சி
அழுகுரற் பேய்மகள் அயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரும்
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - வாகை ; துறை - மறக்களவழி ; ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னியைப் பாடியது.

## 367. புறநானூறு - 378.

தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்
நற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்

பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
அரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்டு
இலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்



செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்
அரைக்கமை மரபின மிடற்றி யாக்குநரும்
மிடற்றமை மரபின அரைக்கியாக் குநருங்
கடுந்தெற லிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந்
அறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே

தாஅங்கு

இருங்கிளைத் தலைமை யெய்தி
அரும்படர் எவ்வ முழந்ததன் றலையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னியைப்
பாடியது.

## எச. எயிற்றியனார்

### 368. குறுந்தொகை - 286. குறிஞ்சி

உள்ளிக் காண்பென் போல்வல் முள்ளெயிற்று
அமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகில்
ஆர நாறு மறல்போற் கூந்தல்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே.

இரந்து பின்னின்ற கிழவன் குறைமறுமற் கூறியது. பாங்கற்குச் சொல்லியதூஉமாம்.

## எரு. எயினந்தையார்

### 369. நற்றிணை - 43. பாலை

துகில்விரித் தன்ன வெயிலவி ருருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்
ஓய்பசிச் செந்நா யுயங்குமரை தொலைச்சி
ஆர்ந்தன வொழிந்த மிச்சில் சேய்நாட்டு

அருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சி யாகும்
வெம்மை யாரிடை யிறத்த னுமக்கே
மெய்ம்மலி யுவகை யாகின் றிவட்கே
அஞ்ச லென்ற விறைகை விட்டெனப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்தலிற்
களையுநர்க் காணாது கலங்கிய வுடைமதில்
ஓரெயின் மன்னன் போல
அழிவுவந் தன்றா லொழிதல் கேட்டே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனைச் செலவழுங்குவித்தது.

## எசு. எருமைவெளியனார்

### 370. அகநானூறு - 73. பாலை

பின்னொடு முடித்த மண்ணா முச்சி
நெய்கனி வீழ்குழ லகப்படத் தைஇ
வெருகிரு ளோக்கி யன்ன கதிர்விடு
பொருகாழ் முத்த மிடைமுலை விளங்க
வணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையு மல்லை தெறுவர

என்னா குவள்கொ லளிய டானென
என்னழி பிரங்கு நின்னெ டியானு
மாறன் றென்னா வேறல் காட்சி
இருவே நம்படர் தீர வருவது
காணிய வம்மோ காதலந் தோழி
கொடிபிணங் கரில விருள்கொ ளுகை
மடிபதம் பார்க்கும் வயமான் றுப்பின்
ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்
பிடிக்கை யமைந்த கனல்வாய்க் கொள்ளி
விடுபொறிச் சுடரின் மின்னியவர்
சென்ற தேஎத்து நின்றதால் மழையே.

தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான் குறித்த பருவவரவு கண்டு அழிந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.



## 371. புறநானூறு - 273

மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
இருபேர் யாற்ற வொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
உலந்தன்று கொல்லவன் மலைந்த மாவே.

திணை - தும்பை ; துறை - குதிரைமறம்.

**372.** புறநானூறு - **303.**

நிலம்பிறக் கிடுவது போலக் குளம்புகுடையூஉ
உள்ள மழிக்குங் கொட்பின் மான்மேல்
எள்ளுநர்ச் செருக்குங் காளை கூர்த்த
வெந்திற லெஃகு நெஞ்சுவடு விளைப்ப
ஆட்டிக் காணிய வருமே நெருநை
உரைசால் சிறப்பின் வேந்தர் முன்னர்க்
கரைபொரு முந்நீர்த் திமிலிற் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
இலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.

திணை - தும்பை ; துறை - குதிரைமறம்.

## எஎ. எருமைவெளியனார்மகனார் கடலனார்

**373.** அகநானூறு - **72.** குறிஞ்சி

இருள்கிழிப் பதுபோன் மின்னி வானந்
துளிதலைக் கொண்ட நளிபெய னடுநாள்

மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்
குரும்பி கெண்டும் பெருங்கை யேற்றை
இரும்புசெய் கொல்லெனத் தோன்று மாங்கண்
எழூஉப்பன்றி நாகன்குமரனார்

ஆறே யருமா பினவே யாறே
சுட்டுநர்ப் பனிக்குஞ் சூருடை முதலைய
கழைமாய் நீத்தங் கல்பொரு திரங்க
அஞ்சுவந் தமிய மென்னாது மஞ்சுசுமந்து
ஆடுகழை நரலு மணங்குடைக் கவாஅன்
ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
இருங்களி றட்ட பெருஞ்சின வுழுவை
நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த
மேய்மணி விளக்கிற் புலர வீர்க்கும்
வாணடந் தன்ன வழக்கருங் கவலை
உள்ளுந ருட்குங் கல்லடர்ச் சிறுநெறி
அருள்புரி நெஞ்சமொ டெஃகுதுணை யாக
வந்தோன் கொடியனு மல்லன் றந்த
நீதவ றுடையையு மல்லை நின்வயின்
ஆறு வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே.

தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தோழி தலைமகட்குச் சொல்லியதூஉ மாம்.

எஅ. எழூஉப்பன்றி நாகன்குமரனார்

**374.** அகநானூறு - **138.** குறிஞ்சி

இகுளை கேட்டிசிற் காதலந் தோழி
குவளை யுண்கண் டெண்பனி மல்க
வறிதியான் வருந்திய செல்லற் கன்னை
பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்
வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி
உடலுநர்க் கடந்த கடலந் தானைத்
திருந்திலை நெடுவேற் றென்னவன் பொதியில்
அருஞ்சிமை யிழிதரு மார்த்துவர லருவியிற்
றதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழுது
உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்



கடம்புங் களிறும் பாடி நுடங்குபு
தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலு
மாடின ராத னன்றோ நீடு
நின்னொடு தெளித்த நன்மலை நாடன்
குறிவர லரைநாட் குன்றத் துச்சி
நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருட்
டிருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட்
கொழுமடற் புதுப்பூ ஊதுந் தும்பி
நன்னிற மருளு மருவிடர்
இன்னா நீளிடை நினையுமென் னெஞ்சே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

## 375. அகநானூறு - 240. நெய்தல்

செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
இனிப்புலம் பின்றே கானலு நளிகடற்
றிரைச்சுர முழந்த திண்டிமில் விளக்கிற்
பன்மீன் கூட்ட மென்னையர்க் காட்டிய
எந்தையுஞ் செல்லுமா ரிரவே யந்தில்
அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமோ டயரு நீயுந்
தேம்பா யோதி திருநுத னீவிக்
கோங்குமுகைத் தன்ன குவிமுலை யாகத்து
இன் றுயி லமர்ந்தனை யாயின் வண்டுபட
விரிந்த செருந்தி வெண்மணல் முடுக்கர்ப்
பூவேய் புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே.

தோழி இரவுக்குறிவந்த தலைமகற்குப்
பகற்குறிநேர்ந்தது

## ௭௩. ஐயாதிச் சிறுவெண்டேரையார்

## 376. புறநானூறு - 363.

இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடை பிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக் காடுபதி யாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயாது
உடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
உப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்காது
இழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே.

திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.

## ௮௦. ஐயூர்முடவனார்

### 377. அகநானூறு - 216. மருதம்

நாண்கொளுண் கோலின் மீன்கொள் பாண்மகள்

தான்புன லடைகரைப் படுத்த வராஅல்
நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு
வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்
தண்டுறை யூரன் பெண்டி ரெம்மைப்
பெட்டாங்கு மொழிப வென்ப வவ்வலர்ப்
பட்டன மாயி னினியெவ னாகியர்



கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்
கழனி யுழவர் குற்ற குவளையுங்
கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரு
மல்லல் யாணர்ச் செல்விக் கோமான்
எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல்
ஆத னெழினி யருநிறத் தழுத்திய
பெருங்களிற் றெவ்வம் போல
வருந்துப மாதவர் சேரியாஞ் செலினே.

தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தனக்குப் பாங்காயினார்க்குப் பரத்தை சொல்லியது.

378. குறுந்தொகை - 123. நெய்தல்

இருடிணிந் தன்ன வீர்ந்தண் கொழுநிழல்
நிலவுக் குவித்தன்ன வெண்மண லொருசிறைக்
கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே.

பகற்குறியிடத்து வந்த தலைமகனைக் காணாத தோழி அவன் சிறைப்புறத்தானாதல் அறிந்து தலைமகட்குச் சொல்லியது.

## 379. குறுந்தொகை - 206. குறிஞ்சி

அமிழ்தத் தன்ன வந்தீங் கிளவி
அன்ன வினியோள் குணனு மின்ன
இன்னா வரும்படர் செய்யு மாயின்
உடனுறை வரிதே காமம்
குறுக லோம்புமி னறிவுடை யீரே.

கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

## 380. குறுந்தொகை - 322. குறிஞ்சி

அமர்க்க ணாமா னஞ்செவிக் குழவி
கானவ ரெடுப்ப வெரீஇ யினந்தீர்ந்து

ஐயூர்முடவனார்



கான நண்ணிய சிறுகுடிப் பட்டென
இளைய ரோம்ப மரீஇயவ ணயந்து
மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு

மருவி னினியவு முளவோ
செல்வாந் தோழி யொல்வாங்கு நடந்தே.

தலைமகன் வரைவுணர்ந்து தோழிக்குத் தலைமகள் இயற்பட
மொழிந்தது.

## 381. நற்றிணை - 206. குறிஞ்சி

துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார் பிறைஞ்சித்
தோடலைக் கொண்டன வேன லென்று
துறுகன் மீமிசைக் குறுவன குழீஇச்
செவ்வாய்ப் பாசினங் கவருமென் றவ்வாய்த்
தட்டையும் புடைத்தனை கவணையுந் தொடுக்கென
எந்தைவந் துரைத்தன னாக வன்னையு
நன்னாள் வேங்கையு மலர்கமா வினியென
என்முக நோக்கின ளெவன்கொல் தோழி
செல்வா ளென்றுகொல் செறிப்ப லென்றுகொல்
கல்கெழு நாடன் கேண்மை
அறிந்தனள் கொல்லஃ தறிகலென் யானே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

## 382. நற்றிணை - 334. குறிஞ்சி

கருவிரன் மந்திச் செம்முகப் பெருங்கிளை

பெருவரை யடுக்கத் தருவி யாடி
ஓங்குகழை யூசற் றூங்கி வேங்கை
வெற்பணி நறுவீ கற்சுனை யுறைப்பக்
கலையொடு திளைக்கும் வரையக நாடன்
மாரி நின்ற வாரிரு ணடுநாள்
அருவி யடுக்கத் தொருவே லேந்தி
மின்னுவசி விளக்கத்து வருமெனின்
என்னோ தோழிநம் மின்னுயிர் நிலையே.

தோழி இரவுக்குறி முகம்புக்கது.



## 383. புறநானூறு - 51.

நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்கு
அவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
அளியரோ வளியரவ னளியிழந் தோரே
நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்
வழுதியைப் பாடியது.

## 384. புறநானூறு - 228.

கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
இருடிணிந் தன்ன குரூஉத்திரட் பரூஉப்புகை
அகலிரு விசும்பி னூன்றுஞ் சூளை
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே
அளியை நீயே யாங்கா குவைகொல்
நிலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந் தன்ன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்
தேவ ருலக மெய்தின னாதலின்
அன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி
வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉம்

ஐயூர்முடவனார் 207

இருநிலந் திகிரியாப் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே.

திணை - பொதுவியல் ; துறை - ஆனந்தப்பையுள்.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப்

பாடியது.

## 385. புறநானூறு - 314.

மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வே னெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
குடியு மன்னுந் தானே கொடியெடுத்து
நிறையழிந் தெழுதரு தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

## 386. புறநானூறு - 399.

அடுமகண் முகந்த வளவா வெண்ணெற்
றொடிமா ணுலக்கைப் பரூஉக்குற் றரிசி
காடி வெள்ளுலைக் கொளீஇ நீழல்
ஓங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை
செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ... ...
மூழ்ப்பப் பெய்த முழுவவிழ்ப் புழுக்கல்
அழிகளிற் படுநர் களியட வைகிற்
பழஞ்சோ றயிலு முழங்குநீர்ப் படப்பைக்

காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்துஞ்
செல்லேன் செல்லேன் பிறர்முக நோக்கேன்
நெடுங்கழைத் தூண்டில் விடுமீ னெடுத்துக்
கிணைமக ளட்ட பாவற் புளிங்கூழ்



பொழுதுமறுத் துண்ணு முண்டியே னழிவுகொண்டு
ஒருசிறை யிருந்தே னென்னே யினியே
அறவ ரறவன் மறவர் மறவன்
மள்ளர் மள்ளன் றொல்லோர் மருகன்
இசையிற் கொண்டா னசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோன் மண்ணி
வள்பரிந்து கிடந்த... ...மணக்க
விசிப்புறுத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
அலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
கடுந்தே ரள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
ஒன்றியான் பெட்டா வளவை யன்றே
ஆன்று விட்டன னத்தை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
ஊர்தியொடு நல்கி யோனே சீர்கொள
இழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர்சிமைத் தோன்றிக் கோவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை.

தாமான் தோன்றிக்கோனைப் பாடியது.

## அக. ஐயூர் மூலங்கிழார்

### 387. புறநானூறு - 21.

புலவரை யிறந்த புகழ்சா றோன்றல்
நிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
அருங்குறும் புடுத்த கானப்பே ரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்பு ணீரினு மீட்டற் கரிதென



வேங்கை மார்ப னிரங்க வைகலும்
ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே
இகழுந ரிசையொடு மாயப்
புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியைப் பாடியது.

## அஉ. ஒக்கூர்மாசாத்தனுர்

அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய
அங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத்

திரிமருப் பிரலை புல்லருந்தி யுகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்
குறும்பொறை மருங்கி னறும்பூ வயரப்

பதவுமேய லருந்து மதவுநடை நல்லான்
வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு

மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்

செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்து
அவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே

விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்
கல்பொரு திரங்கும் பல்லார் நேமிக்
கார்மழை முழக்கிசை கடுக்கு
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே.

பாணன் தனக்குப் பாங்காயினோர் கேட்பச் சொல்லியது.

14



## 389. புறநானூறு - 248.

அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே [துமறுத்து
இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப்பொழு
இன்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே.

திணை - பொதுவியல்; துறை - தாபதநிலை.

## அ௩. ஒக்கூர் மாசாத்தியார்

## 390. அகநானூறு - 324. முல்லை

விருந்தும் பெறுகுநள் போலுந் திருந்திழைத்
தடமென் பணைத்தோள் மடமொழி யரிவை
தளிரியற் கிள்ளை யினிதினி னெடுத்த
வளராப் பிள்ளைத் தூவி யன்ன

உளர்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவிற்
பறைக்க ணன்ன நிறைச்சுனை தோறுந்
துளிபடு மொக்கு டுள்ளுவன சாலத்
தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய
வளிசினை யுதிர்த்தவின் வெறிகொள்பு தாஅய்ச்

சிரற்சிற கேய்ப்ப வறற்கண் வரித்த
வண்டு ணறுவீ துமித்த நேமி
தண்ணில மருங்கிற் போழ்ந்த வழியுள்
நிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லு நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புக லாய்ந்தே.

வினைமுற்றிய தலைமகன் கருத்துணர்ந்து உழையர்சொல்லியது.

391. அகநானூறு - 384. முல்லை

இருந்த வேந்த னருந்தொழின் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஒக்கூர் மாசாத்தியார் 211

ஏறிய தறிந்தன் றல்லது வந்தவாறு

நனியறிந் தன்றோ விலனே தாஅய்
முயற்பற ழுகளு முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூ ராங்கண்
மெல்லிய லரிவை யில்வயி னிறீஇ
இழிமி னென்றநின் மொழிமருண் டிசினே
வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
உரைமதி வாழியோ வலவ வெனத்தன்
வரைமருண் மார்பி னளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்கன னெடுந்தகை
விருந்தேர் பெற்றன டிருந்திழை யோளே.

வினைமுற்றிய தலைமகனது வரவுகண்டு உழையர் சொல்லியது.

**392.** குறுந்தொகை - **126.** முல்லை

இளமை பாரார் வளநசைஇச் சென்றோர்
இவணும் வாரா ரெவணரோ வெனப்
பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை யிலங்கெயி றாக
நகுமே தோழி நறுந்தண் காரே.

பருவங் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**393.** குறுந்தொகை - **139.** மருதம்

மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகின மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇப்
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்கு
இன்னா திசைக்கு மம்பலொடு
வாரல் வாழிய ரையவெந் தெருவே.

வாயில் வேண்டிப் புக்க தலைமகற்குத் தோழி வாயின்மறுத்தது.



### 394. குறுந்தொகை - 186. முல்லை

ஆர்கலி யேற்றொடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி
எயிறென முகையு நாடற்குத்
துயிறுறந் தனவாற் றோழியெங் கண்ணே.

பருவ வரவின்கண் ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## 395. குறுந்தொகை - 220. முல்லை



பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை
அருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணிக்
குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவின்
வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசிற் றோழி பொருட்பிரிந் தோரே.

பருவவரவின்கண் கிழத்தி தோழிக்கு உரைத்தது.

## 396. குறுந்தொகை - 275 முல்லை



முல்லை யூர்ந்த கல்லுயர் பேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
எல்லூர்ச் சேர்தரு மேறுடை யினத்துப்
புல்லார் நல்லான் பூண்மணி கொல்லோ
செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு
வல்வில் இளையர் பக்கம் போற்ற
ஈர்மணற் காட்டாறு வரூஉம்
தேர்மணி கொல்லாண் டியம்பிய வுளவே.

பருவவரவின்கண் வரவு நிமித்தந் தோன்றத் தோழி தலை

மகட்கு உரைத்தது.



## 397. புறநானூறு - 279.

கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவள்தன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே

இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

## அச. ஒருசிறைப்பெரியனார்

## 398. குறுந்தொகை - 272. குறிஞ்சி

தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட
வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த
புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்
குருதியொடு பறித்த செங்கோல் வாளி
மாறுகொண் டன்ன வுண்கண்
நாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே.

கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

## 399. நற்றிணை - 121. முல்லை

விதையர் கொன்ற முதையற் பூழி

இடுமுறை நிரப்பிய வீரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
அரலை யங்காட் டிரலையொடு வதியும்



புறவிற் றம்மநீ நயந்தோ ளூரே
எல்லிவிட் டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்குசெலற் கலிமா
வண்பரி தயங்க வெழீஇத் தண்பெயற்
கான்யாற் றிடுமணற் கரைபிறக் கொழிய

எவ்விருந் தயரு மனைவி
மெல்விறைப் பணைத்தோள் துயிலமர் போயே.

வினைமுற்றி மறுத்தருந் தலைமகற்குத் தேர்ப்பாகன் சொல்லியது.

## 400. புறநானூறு - 137.

இரங்கு முரசி னினஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை
இன்னு மோர்யா னவாவறி யேனே
நீயே, முன்யா னறியு மோனே துவன்றிய
கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பி னொலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினுங்
கண்ணன்ன மலர்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரி னாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படருஞ்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்கல் நாடனை
நீவா ழியர்நின் தந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி;
பரிசிற்றுறையு மாம்.

நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது.

## அரு. ஒரூஉத்தனார்

### 401. புறநானூறு - 275.

கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலும்
ஒத்தன் று மாதோ விவற்கே செற்றிய
திணிநிலை யலறக் கூவை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
ஓம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே.

திணை - தும்பை ; துறை - எருமைமறம்.

## அசா. ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்

### 402. அகநானூறு - 25. பாலை

நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்
அவிரறல் கொண்ட விரவுமண லகன்றுறைத்
தண்கய நண்ணிய பொழில்தொறுங் காஞ்சிப்
பைந்தா தணிந்த போதுமலி யெக்கர்

வதுவை நாற்றம் புதுவது கஞல
மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்
படுநா விளியா னடுநின் றல்கலும்
உரைப்ப போல வூழ்கொள்பு கூவ
இனச்சிதர் நுகுத்த விலவத் தாங்கட்
சினைப்பூங் கோங்கி னுண்டாது பகர்நர்
பவளச் செப்பிற் பொன்சொரிந் தன்ன
இகழுந ரிகழா விளநா ளமையஞ்
செய்தோர் மன்ற குறியென நீநின்
பைத லுண்கண் பனிவார் புறைப்ப
வாரா மையிற் புலந்த நெஞ்சமொடு



நோவல் குறுமகள் நோயியரென் னுயிரென
மெல்லிய வினிய கூறி வல்லே
வருவர் வாழி தோழி பொருநர்
செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்
இன்னிசை யியத்திற் கறங்குங்
கன்மிசை யருவிய காடிறந் தோரே.

பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

403. புறநானூறு - 71.

மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்து
அடங்காத் தானை வேந்த ருடங்கியைந்து
என்னொடு பொருது மென்ப வவரை
ஆரம ரலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரம ருண்க ணிவளினும் பிரிக
அறனிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனு மன்னெயி லாந்தையு முரைசால்
அந்துவஞ் சாத்தனு மாத னழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறருங்
கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள் குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப்பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.

திணை - காஞ்சி ; துறை - வஞ்சினக்காஞ்சி.

அள. ஒதலூானி

404. குறுந்தோகை - 71. பாலை

மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ளுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே.

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

**405.** குறுந்தொகை - **227.** நெய்தல்

பூண்வனைந் தன்ன பொலஞ்சூட்டு நேமி
வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த
கூழை நெய்தலு முடைத்திவண்
தேரோன் போகிய கான லானே.

சிறைப்புறம்.

## அஅ. ஓதலாந்தையார்

**406—505.** ஐங்குறுநூறு - **301—400.** பாலை

406—415. செலவழுங்குவித்த பத்து

406 மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்
அருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டும்
அவ்வரை யிறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.

301

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது.

407. அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே
பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்

செல்லா யாயினோ நன்றே
மெல்லம் புலம்ப இவளழப் பிரிந்தே.

302

பொருள்வயிற் பிரியுந் தலைமகன் பிரிவுடன்படுத்தவேண்டு மென்றானாக, அவற்குத் தோழி சொல்லியது.

408. புதுக்கலத் தன்ன கனிய வாலம்
போகின்நினைத் தடுக்கும் வேனி லருஞ்சுரந்
தண்ணிய வினிய வாக
எம்மொடுஞ் சென்மோ விடலை நீயே.

303

சுரத்தருமைகூறி உடன்செலவு மறுக்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

409. கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய
வானீர்ப் பத்தல் யானை வெளவுங்
கல்லதர்க் கவலை செல்லின் மெல்லியற்
புயனெடுங் கூந்தல் புலம்பும்
வயமான் றோன்றல் வல்லா தீமே.

304

பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

410. களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்த்தொடிக் குறுமக ளிளைய
எனைப்பயஞ் செய்யுமோ விடலைநின் செலவே.

305

உடன்போக்கொழித்துத் தனித்துச்செல்வலென்ற தலைமகற் குத் தோழி கூறியது.

411. வெல்போர்க் குரிசினீ வியன்சுர னிறப்பிற்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
விழவொலி கூந்தன் மாஅ யோளே.

306 பிரியுந் தலைமகற்குத் தோழி தலைமகள் கூறியது.

பிரிவாற்றாமை

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

219

412. ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉங்

குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே
நன்றில கொண்கநின் பொருளே
பாவை யன்னநின் றுணைப்பிரிந்து வருமே.

307

பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் அதன் சிறப்புக்கூறிய வழித் தோழி அதனை இழித்துக் கூறியது.

413. பல்லிருங் கூந்தன் மெல்லிய லோள்வயிற்
பிரியா யாயினு நன்றே விரியிணர்க்
காலெறு ழொள்வீ தாஅய
முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே.

308

'பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி, 'பிரியாதொழியப் பெறின் நன்று; பிரிவையாயின் இப்பருவத்து இம்மாமலை எங்களை விட்டுப் பிரிந்தாற் பிரி' எனச் சொல்லியது.

414. வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையா னீயே நன்று
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
இறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே.

309 'பொருள்வயிற் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

415. பொலம்பசும் பாண்டிற் காசுநிரை யல்குல்
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே.

310 பிரிகின்ற தலைமகற்குத் தோழி, 'நீ நினைக்கின்ற கருமம் முடித் தாயாயினும் இவள்நலம் மீட்டற்கு அரிது' எனச்சொல்லிச் செல வழுங்குவித்தது.



## 416—425. செலவுப் பத்து

416. வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்
ஆரிடைச் செல்வோ ரா றுநனி வெரூஉங்
காடிறந் தனரே காதலர்
நீடுவர் கொல்லென நினையுமென் னெஞ்சே. 311

'ஆற்றது அருமை நினைந்து நீ ஆற்றாயாதல் வேண்டா; அவர் அவ்வழி முடியச்சென்றார்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

417. அறஞ்சா லியரோ அறஞ்சா லியரோ
வறனுண் டாயினும் அறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வ லென்னையை மறைத்த குன்றே.

உடன்போயின தலைமகள் மீண்டுவந்துழி, 'நின் ஐயன்மார் பின் தூர்ந்து வந்தவிடத்து நிகழ்ந்தது என்னை' என்ற தோழிக்கு நிகழ்ந் ததுகூறித் தலைமகன் மறைதற்கு உதவிசெய்த மலையை வாழ்த்தி யது.

418. தெறுவ தம்ம நும்மகள் விருப்பே
உறுதுய ரவலமொ டுயிர்செலச் சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க
நாடிடை விலங்கிய வைப்பிற்
காடிறந் தனள்நங் காத லோளே.

313

தலைமகள் புணர்ந்துடன் போகியவழிச் செவிலியாற்றாமை கண்ட நற்றாய் அவட்குச் சொல்லியது.

419. அவிர்தொடி கொட்பக் கழுதுபுக வயரக்
கருங்கட்
சிறுகண்

காக்கையொடு கழுகுவிசும் பகவச்
யானை யாள்வீழ்த்துத் திரிதரு

நீளிடை யருஞ்சுர மென்பநந்
தோளிடை முனிநர் சென்ற வாறே.

314

தலைமகன் பிரிந்துழி அவனுடன்போய் மீண்டார்

வழியதருமை தங்களிற் கூறக்கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

221

420. பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்
பூசல் கேளார் சேய ரென்ப
இழைநெகிழ் செல்ல லுறீஇக்
கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே.

315

சொல்லாது தலைமகன் பிரிந்துழித் தலைமகள் வேறுபாடுகண்ட தோழி இரங்கிச் சொல்லியது.

421. பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்
தேரக லல்கு லவ்வரி வாட
இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
புலிவழங் கதர கானத் தானே.

316

தலைமகள் மெலிவிற்கு நொந்து, தலைமகன் பிரிவின்கண் தோழி கூறியது.

422. சூழ்கம் வம்மோ தோழி பாழ்பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்டு
அருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்

சென்ற நெஞ்ச நீடிய பொருளே.

317

தலைமகன் பிரிந்து நீட்டித்துழி, நெஞ்சினைத் தூதுவிட்ட தலைமகள் அது வாராது தாழ்த்துழித் தோழிக்குச் சொல்லியது.

423. ஆய்நலம் பரப்ப வரும்படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற விசைநிமிர்ந்து
ஓடெரி நடந்த வைப்பிற்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

318

'நம்மைப் பிரியார்' என்று கருதியிருந்த தலைமகள் அவன் பிரிந்துழி இரங்கிச் சொல்லியது.

424. கண்பொர விளங்கிய கதிர்தெறு வைப்பின்
மண்புரை பெருகிய மாமுளி கானம்



இறந்தன ரோநங் காதலர்
மறந்தன ரோதி மறவா நம்மே.

319

தலைமகன் பிரிந்துழி அவன் உணர்த்தாது பிரிந்தமை கூறிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

425 முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்து
உருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலி லருநோய் தலைத்தந் தோரே. 320

தலைமகன் பிரிந்துழிச் சுரத்துவெம்மை நினைந்து தலைமகள் சொல்லியது.

## 426—435. இடைச்சுரப் பத்து

426. உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
அலறுதலை யோமை யங்கவட் டேறிப்
புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து
மொழிபெயர் பன்மலை யிறப்பினும்
ஒழிதல் செல்லா தொண்டொடி குணனே. 321

பிரிந்துபோகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச்சொல்லியது.

427. நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
ஒண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே.
322

இடைச்சுரத்துக்கண் தலைமகன் தலைமகள்குணம் நினைத்தலில் தனக்குற்ற வெம்மை நீங்கியதுகண்டு

சொல்லியது.

428. வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

223

வெஞ்சுரக் கவலை நீந்தி
வந்த நெஞ்சம் நயந்தோள் பண்பே.

323

இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்த தலைமகன், 'அவள் பண்புவந்தன' என உவந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

429. எரிகவர்ந் துண்ட வென்றாழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற
நள்ளென் கங்குல் நளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கிற்
றேம்பாய் கூந்தன் மாஅ யோளே.

324

பிரிந்துவந்த தலைமகன் தலைமகளை நலம்பாராட்டக் கண்ட தோழி 'இவள் குணத்தினைமறந்து அமைந்தவாறு யாது' என வினவினாட்கு அவன் சொல்லியது.

430. வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியாது
எம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே.

325

பிரிந்துவந்த தலைமகன், 'சுரத்தின் வெம்மை எங்ஙனமாற்றினீர்' என்ற தோழிக்குச் சொல்லியது.

431. அழலவிர் நனந்தலை நிழலிடம் பெறாது
மடமா னம்பிணை மறியொடு திரங்க
நீர்மருங் கறுத்த நிரம்பா வியவின்
இன்னா மன்ற சுரமே
இனிய மன்றயா னொழிந்தோள் பண்பே.

326

இடைச்சுரத்து வெம்மை ஆற்றானாகிய தலைமகன் தலைமகள் குணம்நினைந்து நொந்து சொல்லியது.

432. பொறிவரித் தடக்கை வேதல் லஞ்சிச்

சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே



அன்ன வாரிடை யானுந்
தண்மை செய்தவித் தகையோள் பண்பே.
327

பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தலைமகள் குணம நினைந்து இரங்கிச் சொல்லியது.

433. நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்
தண்ணிய வாயினும் வெய்ய மன்ற
மடவர லின்றுணை யொழியக்
கடமுதிர் சோலைய காடிறந் தேற்கே. 328

'மழைவீழ்தலாற் சுரம் தண்ணென்றது, இனி வருத்தமின்றிப் போகலாம்' என்ற உழையர்க்குத் தலைமகன் சொல்லியது.

434. ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு
மறுதரு வதுகொல் தானே செறிதொடி
கழிந்துகு நிலைய வாக
ஒழிந்தோள் கொண்டவெ னுரங்கெழு நெஞ்சே.

இடைச்சுரத்தின்கண் மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைமகன் உழையர்க்குச் சொல்லியது.

435. வெந்துக ளாகிய வெயிற்கட நீந்தி
வந்தன மாயினு மொழிகினிச் செலவே
அழுத கண்ண ளாய்நலஞ் சிதையக்
கதிர்தெறு வெஞ்சுர நினைக்கும்
அவிர்கோ லாய்தொடி யுள்ளத்துப் படரே. 330

பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 436—445. தலைவியிரங்கு பத்து

436. அம்ம வாழி தோழி யவிழிணர்க்
கருங்கான் மராஅத்து வைகுசினை வான்பூ
அருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள



இனிய கமழும் வெற்பின்
இன்னா தென்ப வவர்சென்ற வாறே.
331

தலைமகன் பிரிந்துழி, ‘ செல்லும் வழியிடத்து மலையின் உள தாகிய நாற்றத்தால் நம்மைநினைத்து முடியச்செல்லார், மீள்வரோ ’ எனக்கேட்ட தலைவிக்கு ‘ அவர் முடியச்சென்றார் ’ என்பதறிந்து இரங்கித் தோழி கூறியது.

437. அம்ம வாழி தோழி யென்னதூஉம்
அறனில மன்ற தாமே விறன்மிசைக்
குன்றுகெழு கானத்த பண்பின் மாக்கணங்
கொடிதே காதலிப் பிரிதல்
செல்ல லைய வென்னா தவ்வே. 332

பிரிந்த தலைமகன், 'சுரத்திடைக் கழியச்சென்றான்' என்பது கேட்ட தலைமகள் அங்குள்ள மாக்களை நொந்து தோழிக்குச் சொல்லியது.

438. அம்ம வாழி தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோடு
யாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப் பிரிந்துறைதி யென்னா தவ்வே.
333

புட்களை நொந்து சொல்லியது.

439. அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்செலச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே.
334

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

440. அம்ம வாழி தோழி நம்வயின்
நெய்த்தோ ரன்ன செவ்விய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுடை யார்க்கும்

15



காடுநனி கடிய வென்ப
நீடி யிவண்வருநர் சென்ற வாறே. 335

தலைமகன் சென்ற சுரத்தினிடத்துக் கொடுமை பிறர்கூறக் கேட்ட தலைமகள் ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

441. அம்ம வாழி தோழி நம்வயிற்
பிரியலர் போலப் புணர்ந்தோர் மன்ற
நின்றதில் பொருட்பிணி முற்றிய
என்றூழ் நீடிய சுரனிறந் தோரே. 336

பிரிவதற்குமுன்பு தங்களுடன் அவனொழுகிய திறம் நினைந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

442. அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைவர் முயக்கினும்
இனிய மன்ற தாமே
பனியிருங் குன்றஞ் சென்றோர்க்குப் பொருளே.

தலைமகன் பொருள்வயிற்பிரிந்துழித் தன்முயக்கினும் அவற்குப் பிற்காலத்துப் பொருள்சிறந்ததெனத் தலைவி இரங்கித் தோழிக்குச் சொல்லியது.

443. அம்ம வாழி தோழி சாரல்
இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்
பிரிவருங் காலையும் பிரிதல்
அரிதுவல் லுநர்நங் காத லோரே. 338

தலைமகன் பிரிந்துழி, 'இக்காலத்தே பிரிந்தார்' எனத் தலைமகள் இரங்கிச் சொல்லியது.

444. அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையும்
இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே. 339

தலைமகன் குறித்த பருவவரவின்கண் மாலைப்பொழுதுகண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

227 445. அம்ம வாழி தோழி காதலர்
உள்ளார் கொன்னோ மருளுற் றனங்கொல்
விட்டுச் சென்றனர் நம்மே
தட்டைத் தீயி னூரல ரெழவே.
340

தலைமகன் பிரிந்துழி, 'கடிதின் வருவர்' என ஆற்றியிருந்த தலைவி அவன் நீட்டித்துழி ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

446—455. இளவேனிற் பத்து

446. அவரோ வாரார் தான்வந் தன்றே
குயிற்பெடை யின்குர லகவ
அயிர்க்கேழ் நுண்ணற லுடங்கும் பொழுதே.
341

தலைமகன் பிரிந்துழிக் குறித்தபருவம் வரக்கண்ட தலைமகள் சொல்லியது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

447. அவரோ வாரார் தான்வந் தன்றே
சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்
கருங்கா லுணவங் கமழும் பொழுதே.

448.

342

அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே. 343

449. அவரோ வாரார் தான்வந் தன்றே
நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே. 344

450. அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ வதிரல் தாஅய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே.

345

451. அவரோ வாரார் தான்வந் தன்றே
அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே. 346



452. அவரோ வாரார் தான்வந் தன்றே
எழிற்றகை யிளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.

347

453.

அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்
மணங்கமழ் தண்பொழில் மலரும் பொழுதே.

348

454. அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரிகான் மாஞ்சினை புதைய
எரிகா ளிளந்தளி ரீனும் பொழுதே.

349

455. அவரோ வாரார் தான்வந் தன்றே
வேம்பி னொண்பூ வுறைப்பத்
தேம்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே.

350

456—465. வரவுரைத்த பத்து

456. அத்தப் பலவின் வெயில்தின் சிறுகாய்
அருஞ்சுரஞ் செல்வோ ரருந்தினர் கழியும்
காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்
பல்லித ழுண்கண் மடந்தைநின்
நல்லெழி லல்குல் வாடிய நிலையே.

351

பிரிந்த தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

457. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல் லன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்
வெஞ்சுர மரிய வென்னார்
வந்தனர் தோழிநங் காத லோரே.

352

இதுவுமது.

458. எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்
சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகலம்
நீயினிது முயங்க வந்தனர்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

353

இதுவுமது.

459. ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நா யேற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்
அரிய சுரன்வந் தனரே
தெரியிழை யரிவைநின் பண்புதர விரைந்தே.

354

இதுவுமது.

460.

திருந்திழை யரிவை நின்னல முள்ளி
யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங் கதர கானத் தானே.

355

நினைந்த எல்லையளவும் பொருண் முற்றி நில்லாது பெற்ற பொருள் கொண்டு தலைவியைநினைந்து மீண்ட தலைமகன் அவட்குச் சொல்லியது.

461. உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றின்
ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை
உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

356

வினைமுற்றி மீண்டுவந்த தலைமகன் தலைவிக்கு அவள்குணம் புகழ்ந்து கூறியது.

462. குரவ மலர மரவம் பூப்பச்
சுரனணி கொண்ட கானங் காணூஉ
அழுங்குக செய்பொருட் செலவென
விரும்பின்



அங்கலிழ் மாமை கவின
வந்தனர் தோழிநங் காத லோரே.

357

பொருள்வயிற் பிரிந்து ஆண்டுறைகின்ற தலைமகன் குறித்த பருவவரவுகண்டு கடிதின் மீண்டுவந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

463. கோடுயர் பன்மலை யிறந்தன ராயினும்
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
உடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே.

358

தலைமகள் ஆற்றாமை கண்டு, பிரிந்த தலைமகன் வந்தனனுக்குத் தோழி சொல்லியது.

464. அரும்பொருள் வேட்கைய மாகிநிற் றுறந்து
பெருங்க லதரிடைப் பிரிந்த காலைத்
தவநனி நெடிய வாயின வினியே
அணியிழை யுள்ளியாம் வருதலின்
நணிய வாயின சுரத்திடை யாறே.

359

மீண்டுவந்த தலைமகன் அவளைப் பிரிகின்றகாலத்துச் சுரத்துச் சேய்மையும் வருகின்றகாலத்து அதன் அணிமையுங் கூறியது.

465. எரிகவர்ந் துண்ட வென்றாழ் நீளிடை
அரிய வாயினு மெளிய வன்றே
அவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா ணோக்கிநின் னுள்ளியாம் வரவே.

360

வினைமுற்றி மீண்டுவந்த தலைமகன், ‘சுரத்தருமை நோக்காது வந்தவாறு என்னை’ என வினவிய தலைமகட்குச் சொல்லியது.

466—475. முன்னிலைப் பத்து

466. உயர்கரைக் கான்யாற் றவிரற லகன்றுறை

வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

231

தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென் றோளே.

361

புணர்ந்துடன்போகிய தலைமகன் இடைச்சுரத்துக்கண் விளையாட்டுவகையாற் பூத்தொடுக்கின்ற தலைமகளைக்கண்டு புகழ அவள் அதற்கு நாணிக் கண்புதைத்தவழிச் சொல்லியது.

467. பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையாது
யாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
அருள்புரி நெஞ்ச முய்த்தர
இருள்பொர நின்ற விரவி னானே.

362

சேணிடைப்பிரிந்த தலைமகன் இடைநிலத்துத் தங்காது இரவின்கண் வந்துழித் தோழி சொல்லியது.

468. சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்

கொலைவி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென நினைதி நீயே
அணங்கென நினையுமென் னணங்குறு
நெஞ்சே.363

புணர்ந்துடன்செல்கின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகளை நலம்பாராட்டியது.

469. முளவுமா வல்சி யெயினர் தங்கை
இளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினெ னிரக்கு மளவை
வென்வேல் விடலை விரையா தீமே.

364

உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்குணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது.

470. கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பும்
நலமா ணெயிற்றி போலப் பலமிகு



நன்னல நயவர வுடையை
என்னோற் றனையோ மாவின் றளிரே.

365

வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்றான் இடைச்சுரத்துக் குழைத்த மாவின்றளிர்கண்டு சொல்லியது.

471. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.

### 366

தலைமகளை நோக்கி, 'இவ்வேறுபாடு எற்றினானாயிற்று' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

472. பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே.

### 367

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

473. எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்
பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்குந்
தண்பத வேனி லின்ப நுகர்ச்சி
எம்மொடு கொண்மோ பெருமநின்
அம்மெ லோதி யழிவில ளெனினே.

368

'வேனிற்காலத்து நும்மொடு விளையாட்டுநுகர வருவல்' என்று
பருவங்குறித்துப் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி கூறியது.

474. வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

233

குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.

369

பரத்தையொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கிவந்த தலைமகன் தலைமகள் வினாயவழி, 'யாரையும் அறியேன்' என்றானை அவன் கூறியது.

475. வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை
இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை
நீநயந் துறையப் பட்டோள்

மொய்ப்ப

யாவ ளோவெம் மறையா தீமே.

370

பரத்தை யொருத்திக்குப் பூவணிந்தானென்பது கேட்ட தலை

மகள் ' அஃதில்லை ' என்று மறைக்குந் தலைமகற்குக் கூறியது.

476—485. மகட்போக்கியவழித் தாயிரங்கு

பத்து

476. மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்
உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல
அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.

371

477. என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொடு
அழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே.

372

478. நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக

புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்மக ளுய்த்த
அம்பமை வல்வில் விடலை தாயே.

373

தலைமகளைத் தலைமகன் கொண்டுகழிந்த கொடுமை நினைந்து நற்றாய் சொல்லியது.



479. பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ
மீளி முன்பிற் காளை காப்ப
முடியகம் புகாஅக் கூந்தலள்
கடுவனு மறியாக் காடிறந் தோளே.

374

தலைமகள் உடன்போயவழி அவள் இளமைநினைந்து இரங்கித் தாய் கூறியது.

480. இதுவென் பாவைக் கினியநன் பாவை
இதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக் கினியசொற் பூவையென்று
அலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே. 375

சேரியும் அயலும் தேடிக்காணாது வந்தாரைக் கண்டு தலைமகள் தாய் சொல்லியது.

481. நாடொறுங் கலிழு மென்னினு
மிடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த வறனில் பாலே.

376

தலைமகள் போயவழி நற்றாய் விதியைவெகுண்டு சொல்லியது.

482. நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை
இயம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ்
சென்றனள் மன்றவென் மகளே
பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே. 377

தலைமகள் உடன்போயவழி அவள் பந்து

முதலாகிய கண்ட
நற்றாய் கலங்கிச் சொல்லியது.

483. செல்லிய முயலிப் பாஅய சிறகர்

வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன்
றேமொழித்

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு
235

துணையிலள் கலிழு நெஞ்சின்
இணையே ருண்க ணிவட்குநோ வதுவே.

378

தலைமகள் உடன்போயவழி அவள்
தோழியாற்றாமைகண்ட நற்றாய் சொல்லியது.

484. தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சியின்
இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
இனக்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே. 379

புணர்ந்துடன் போகியவழித் தோழி அறத்தொடு நிற்பக்கேட்ட
நற்றாய், 'அதனை முன்னேயறிவித்து நாம் மணம்புணர்த்த

ஒழுகாது

போயினள்' என நொந்து சொல்லியது.

485. அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவரல்
தாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே.

380

தலைமகள் உடன்போகியவழித் தெருட்டுவார்க்குச் செவிலித் தாய் சொல்லியது.

486—495. **உடன்போக்கின்கண் இடைச்சுரத்துரைத்த பத்து**

486. பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்
யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
குறுங்கான் மகன்றி லன்ன
உடன்புணர் கொள்கைக் காத லோரே.

381

உடன்போக்கின்கண் இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

487.

புள்ளொலிக் கமர்த்த கண்ணள் வெள்வேற்
றிருந்துகழற் காளையொ டருஞ்சுரங் கழிவோள்
எல்லிடை யசைந்த கல்லென் சீறூர்ப்



புனையிழை மகளிர்ப் பயந்த
மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே.

382

-வழி

தலைமகள் இடைச்சுரத்தினது ஊரின்கண் எல்லிடைத் தங்கிய அவ்வூர்ப்பெண்டிர் பார்த்து இரங்குதல் கண்டார்சொல்லியது.

488. கோட்சுரும் பரற்று நாட்சுரத் தமன்ற
நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற
மள்ள னுள்ள மகிழ்கூர்ந் தன்றே
பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கு
மஞ்சாய் கூந்த லாய்வது கண்டே.

383

உடன்போகிய தலைமகள் தலைமகன் வளைத்த கொம்பிற்பூக்கொண்டு தனக்கும் பாவைக்கும் வகுக்கக் கண்டார் கூறியது.

489. சேட்புல முன்னிய அசைநடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
ஆரிடை யிறந்தன ளென்மின்
நேரிறை முன்கையென் னையத் தோர்க்கே.

384

உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந்தணர்க்குச் சொல்லியது.

490. கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் வேங்கைய மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்
நற்றோ ணயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.

385

வரைவுமறுத்துழி உடன்போய தலைமகள் இடைச்சுரத்துக்

கண்டாரை, 'யான் போகின்றபடியை யாய்க்கு நீர் கூறவேண்டும்'

எனச் சொல்லியது.

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

237

491. புன்கண் யானையொடு புலிவழங் கத்த
நயந்த காதலற் புணர்ந்துசென் றனளே
நெடுஞ்சுவர் நல்லின் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூன் மகளே.

386

புணர்ந்துடன்போகிய தலைமகளை இடைச்சுரத்துக் கண்டார் அவள் தாய்க்குச் சென்று கூறியது.

492. அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
திறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்று
ஒண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெ மம்ம சுரத்திடை யவளை
இன்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.

387

பின்சென்ற செவிலியால் வினவப்பட்ட அந்தணர் அவட்குச் சொல்லியது.

493. நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை
செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே.

388

தேடிச்சென்ற செவிலிக்கு இடைச்சுரத்துக்கண்டார் அவளைக் கண்டதிறம் கூறியது.

494. செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்றாள்
மையணற் காளையொடு பைய வியலிப்
பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ரைய
ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே.

389

பின்சென்ற செவிலித்தாய், வினவப்பட்டோர் 'கண்டோம்' என்புழிச் சொல்லியது.



495. நல்லோ ராங்கட் பரந்துகை தொழுது
பல்லூழ் மறுகி வினவு வோயே
திண்டோள் வல்விற் காளையொடு
கண்டனெ மன்ற சுரத்திடை யாமே.

390

பின்சென்ற செவிலித்தாய் பலரையும் வினவக் கண்டோர் தாம் கண்டவாறு அவட்குக் கூறியது.

## 496—505. மறுதரவுப் பத்து

496. மறுவி றாவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே. 391

உடன்போகிய தலைமகள் மீடற்பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

497. வேய்வனப் பிழந்த தோளும் வெயில்தெற
ஆய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியின்
எல்லையி லிடும்பை தரூஉம்
நல்வரை நாடனொடு வந்த மாறே.

392

உடன்போய் மீண்டுவந்த தலைமகள், வழிவரல் வருத்தங்கண்டு ஆற்றாளாகிய தோழிக்குச் சொல்லியது.

498. துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்

அறம்புலந்து பழிக்கு மங்க ணாட்டி
யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன் ளோநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.

393

உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது.

ஓதலாந்தையார் - ஐங்குறுநூறு

239

499. மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
அன்பி லறனு மருளிற்று மன்ற
வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதிப்
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே.

394

உடன்போய்த் தலைமகள் வந்துழித் தாய் சுற்றத்தார்க்குச் சொல்லியது.

500. முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
இன்னா வருஞ்சுரந் தீர்ந்தன மென்மெல
ஏகுமதி வாழியோ குறுமகள் போதுகலந்து
கறங்கிசை யருவி வீழும்
பிறங்கிருஞ் சோலைநம் மலைகெழு நாட்டே. 395

உடன்போய் மீள்கின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

501. புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்
கதுப்பய லணியு மளவை பைபயச்
சுரத்திடை யயர்ச்சியை யாறுக மடந்தை
கல்கெழு சிறப்பி னம்மூர்
எல்விருந் தாகிப் புகுக நாமே.

396

இதுவுமது.

502. கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தனி ருரைமின்
இன்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.

397

உடன்போய் மீள்கின்ற தலைமகள் தன்னூர்க்குச்

செல்கின்றாளைக்கண்டு கூறியது.

503. புள்ளு மறியாப் பல்பழம் பழுனி

மடமா னறியாத் தடநீர் நிலைஇச்



சுரநனி யினிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலிழு மென்னினும்
மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே.

398 தலைமகள் மீண்டுவந்துழி அவட்குத் தோழி கூறியது.

504. நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே.

399

உடன்கொண்டுபோன தலைமகன் மீண்டு தலைவியைத் தன் இல்லத்துக் கொண்டுபுக்குழி அவன்றாய் அவட்குச் சிலம்புகழி நோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும் வந்தார்க்குச் சொல்லியது.

505. மள்ள ரன்ன மரவந் தழீஇ

மகளி ரன்ன வாடுகொடி நுடங்கும்
அரும்பதங் கொண்ட பெரும்பத வேனிற்
காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்
வெஞ்சின விறல்வேற் காளையொடு
இன்றுபுகு தருமென வந்தன் றூதே.

400

உடன்போய் வதுவையயரப்பட்ட தலைவி, 'தலைவனோடு இன்று வரும்' எனக்கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.

## 506. குறுந்தொகை - 12. பாலை

எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்குங்
கவலைத் தென்பவவர் தேர்சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமல கழறுமிவ் வழுங்க லூரே.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

ஓரம்போகியார்
241

## 507. குறுந்தொகை - 21. முல்லை

வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடுபு

பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங் கலரே.

பருவம் வருந்துணையும் ஆற்றுவித்த தோழி அவர் வரல்குறித்த பருவ வரவின்கண் இனி ஆற்றுவிக்குமாறு எவ்வாறென்று தன்னுள்ளே கவன்றாட்கு அவளது குறிப்பறிந்த தலைமகள், 'கானம் அவர் வருங் கார்காலத்தைக் காட்டிற்றாயினும், யான் இது கார்காலமென்று தேறேன் ; அவர் பொய்கூறா ராகலின்' எனத் தான் ஆற்றுவலென்பது படச் சொல்லியது.

## 508. குறுந்தொகை - 329. பாலை

கான விருப்பை வேனில் வெண்பூ
வளிபொரு நெடுஞ்சினை யுஞற்றலி ஞர்கழல்பு
களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்
பிறங்குமலை யருஞ்சுர மிறந்தவர்ப் படர்ந்து
பயிலிரு ணடுநாட் டுயிலரி தாகித்
தெண்ணீர் நிகர்மலர் புரையும்
நன்மழைக் கண்ணிற் கெளியவாற் பனியே.

பிரிவிடை மெலிந்த கிழத்தி வற்புறுத்துந் தோழிக்கு யான் ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

## அகூ. ஓரம்போகியார்

### 509. அகநானூறு - 286. மருதம்

வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க
மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழற் றமர்வளம் பாடி





ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வராஅ லருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றும், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்கு
அறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா குமமே முன்னியது முடித்தல்
அனைய பெரியோ ரொழுக்க மதனால்
அரிய பெரியோர்த் தெரியுங் காலை
நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே.

வரைந்தெய்துவ லென்று நீங்குந் தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக்கொண்டிருத்தல் வேண்டுமென்று தோழியைக்

கைப்பற்றி ஞற்குக் கைப்பற்றியது தன்னைத் தொட்டுச்
சூளுறுவானாகக் கருதித் தோழி சொல்லியது.

### 510. அகநானூறு - 316. மருதம்

துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
அரிமல ராம்பல் மேய்ந்த நெறிமருப்பு
ஈர்ந்த ணெருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற் றள்ளற் றுஞ்சிப் பொழுதுபடப்
பைந்நிண வராஅல் குறையப் பெயர்ந்து
குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்
போர்செறி மள்ளரிற் புகுதரு மூரன்
தேர்தர வந்த தெரியிழை நெகிழ்தோள்
ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்
பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ
புலத்த லொல்லுமோ மனைகெழு மடந்தை அதுபுலந்
துறைதல் வல்லி யோரே
செய்யோ ணீங்கச் சில்பதங் கொழித்துத்

ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

243

தாமட் டுண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப
வைகுந ராகுத லறிந்தும்
அறியா ரம்மவஃ துடலு மோரே.

தலைமகற்கு வாயில்நேர்ந்த தோழி தலைமகளை

நெருக்கிச் சொல்லியது.

## 511—610. ஐங்குறுநூறு - 1—100. மருதம்

### 511—520. வேட்கைப் பத்து

511. வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே.

1

புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி, ' இது தகாது ' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடுகூடி ஒழுகாநின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி, ' யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்த திறம் யாது ' என்றாற்கு அவள் சொல்லியது.

512. வாழி யாதன் வாழி யவினி
விளைக வயலே வருக விரவலர்
எனவேட் டோளே யாயே யாமே
பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்குந்
தண்டுறை யூரன் கேண்மை
வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே.

2

இதுவுமது.

513. வாழி யாதன் வாழி யவினி
பால்பல ஊறுக பகடுபல சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே



வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞ லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே.

3

இதுவுமது.

514. வாழி யாதன் வாழி யவினி
பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழனமா கற்க வெனவேட் டேமே.

4

இதுவுமது.

515. வாழி யாதன் வாழி யவினி
பசியில் லாகுக பிணிசே ணீங்குக
எனவேட் டோளே யாயே யாமே
முதலைப் போத்து முழுமீ னாருந்
தண்டுறை யூரன் தேரெம்
முன்கடை நிற்க வெனவேட் டேமே.

5

இதுவுமது.

516. வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
எந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே.

6

களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்துகொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் வரையாது ஒழுகுகின்ற நாள் நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது' என்றாற்கு அவள்

சொல்லியது.

517. வாழி யாதன் வாழி யவினி
அறநனி சிறக்க வல்லது கெடுக

ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

245

எனவேட் டோளே யாயே யாமே
உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்குந்
தண்டுறை யூரன் றன்னூர்க்
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

7

இதுவுமது.

518. வாழி யாதன் வாழி யவினி
அரசுமுறை செய்க களவில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே
அலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்
பூக்கஞ லூரன் சூளிவண்
வாய்ப்ப தாக வெனவேட் டேமே.

8

இதுவுமது.

519. வாழி யாதன் வாழி யவினி
நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே
கயலார் நாரை போர்விற் சேக்குந்
தண்டுறை யூரன் கேண்மை
அம்பலா கற்க வெனவேட் டேமே.

9

இதுவுமது.

520. வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளநனி சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
தண்டுறை யூரன் றன்னொடு
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

10

இதுவுமது.

## 521—530. வேழப் பத்து

521. மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
அல்ல னென்னுமென் றடமென் றோளே.
11

பாணன் முதலாயினார்க்குத் தலைமகன் கொடுமைகூறி வாயின் மறுத்த தலைமகள் கழறிய பாங்கற்கு வாயினேர்வாள் சொல்லியது; 'தலைவன் எவ்வாறு தப்பியொழுகினும் அவன் கொடுமை நின்னாற் புலப்படுதல் தகாது' என்று கழறிய பாங்கிக்குத் தலைமகள் சொல்லியதுஉமாம்.

522. கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன் கொடுமை நன்றும்
ஆற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் றடமென் றோளே.
12

உழையர் நெருங்கிக் கூறிய திறமும் தனது ஆற்றாமையும் நினைந்து வாயில் நேர்கருதிய தலைமகள் பரத்தையர்க்குப் பின்பும் அவன் சிறப்புச் செய்தா னென்பது கேட்டுப் பொறாளாய்க் கருத் தழிந்து தன்னுள்ளே சொல்லியது.

523. பரியுடை நன்மான் பொங்குளை யன்ன

அடைகரை வேழம் வெண்பூப் பகரும்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே.

13

வாயிலாய்ப்புக்கார்க்குத் தலைமகள், 'அவன்பெண்டிர் நள்ளென் யாமத்தும் துயிலார் ; அவரறியாமல் அவன் வருந்திறம் யாது' எனச் சொல்லி வாயில்மறுத்தது.

524. கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கு
ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

247

மணித்துறை யூரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே.

14

தலைமகள் புணர்ச்சி வேட்கையைக் குறிப்பினான் உணர்ந்த தோழி, 'அவன் கொடுமை நினையாது அவன் மார்பை நினைந்து ஆற்றாயாகின்றது என்னை?' என்றாட்கு 'அவன் கொடியனே யாயினும், அவன் மார்பு குளிர்ந்த துயிலைச் செய்யும் இனிய சாயலை யுடைத்து, ஆதலாற் காண்' எனச் சொல்லியது.

525. மணலாடு மலிர்நிறை விரும்பிய
வொண்டழைப்

புனலாடு மகளிர்க்குப் புணர்துணை யுதவும்
வேழ மூதூ ரூரன்
ஊர னாயினு மூரனல் லன்னே.

15

சேணிடைப் பிரிந்துவந்து உடனுறைகின்ற தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாகின்றதென்று குறிப்பினானுணர்ந்து தலைமகள் வேறுபட்டாளாக, தோழி அதனை யறியாது, 'அவன் உடனுறையவும் வேறுபடுகின்றது என்னை' என்றாட்கு அவள் சொல்லியது.

526. ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்
சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்
பூக்கஞ லூரனை யுள்ளிப்
பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே.

16

வாயிலாய்ப் புகுந்தார்க்குத் தோழி 'அவன் வரவையே நினைந்து இவள் கண்ணும் பசந்தன; இனி அவன் வந்து பெறுவது என்னை' எனச் சொல்லி வாயில் மறுத்தது.

527. புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகிற் றோன்று மூரன்
புதுவோர் மேவல னாகலின்
வறிதா கின்றென் மடங்கெழு நெஞ்சே.

17

தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி, 'இவ்வாறு ஒழுகுதலும் ஆடவர்க்கு இயல்பன்றே; நீ இதற்கு நெஞ்சு

அழிகின்றது என்னை ?' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.



528. இருஞ்சா யன்ன செருந்தியொடு வேழங்
கரும்பி னலமருங் கழனி யூரன்
பொருந்துமல ரன்னவென் கண்ணழப்
பிரிந்தன னல்லனோ பிரியலெ னென்றே. 18

பரத்தையிற்பிரிந்து வந்து தெளித்துக்கூடிய தலைமகற்குப் பின் அவ்வொழுக்கம் உளதாயவழி அவன் வரவிடுத்த வாயில்கட்குத் தலைமகள் சொல்லியது.

529. எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்சினை
புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந்
தண்பொழில்
வேழ வெண்பூ வெள்ளுளை சீக்கும்
ஊர னாகலிற் கலங்கி
மாரி மலரிற் கண்பனி யுகுமே.
19

'பன்னாள் அவன் சேணிடைப் பிரியவும் ஆற்றியுளையாகிய நீ சின்னாள் அவன் புறத்தொழுகுகின்ற இதற்கு ஆற்றாயாகின்றது என்னை' என்ற தோழிக்கு 'எதிர்ப்பாடின்றி ஓரூர்க்கண்ணே உறைகையினாலே ஆற்றேனாகின்றேன்' எனத் தலைமகள் சொல்லியது.

530. அறுசில் கால வஞ்சிறைத் தும்பி

நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்குங்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
துறைநணி யூரனை யுள்ளியென்
இறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே.

20

தலைமகளை வாயில் நேர்வித்தற் பொருட்டாக, 'காதலர் கொடுமை செய்தாராயினும் அவர்திறம் மறவாதொழியல்வேண்டும்' என்று முகம்புகுகின்ற தோழிக்கு, 'என் கைவளை நில்லாதாகின்றது அவரை நினைந்ததன் பயனன்றே; இனி அமையும்' எனத் தலைமகள் சொல்லியது.

### 531—540. களவன் பத்து

531. முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் களவ னொம்ப லறுக்குந்



தண்டுறை யூரன் றெளிப்பவும்
உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்.

21

'புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை' என்று தலைமகன் தெளிப்பவும் 'அஃது உளது' என்று வேறுபடும் தலைமகட்குத் தோழி சொல்லியது.

532. அள்ள லாடிய புள்ளிக் களவன்

முள்ளி வேரளைச் செல்லு மூரன்
நல்ல சொல்லி மணந்தினி
நீயே யென்ற தெவன்கொ லன்னாய்.

22

களவினிற்புணர்ந்து பின்பு வரைந்துகொண்டு ஒழுகாநின்ற தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றாக, ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

533. முள்ளி வேரளைக் களவ னாட்டிப்
பூக்குற் றெய்திய புனலணி யூரன்
தேற்றஞ் செய்துநப் புணர்ந்தினித்
தாக்கணங் காவ தெவன்கொ லன்னாய்.

23

இதுவுமது.

534. தாய்சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூர்
எய்தின னாகின் றுகொல்லோ மகிழ்நன்
பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்
நலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்.

24

பரத்தையருள்ளும் ஒருத்தியைவிட்டு ஒருத்தியைப்பற்றி ஒழுகுகின்றா னென்பது கேட்ட தோழி வாயிலாய்வந்தார் கேட்பத் தலை

மகட்குச் சொல்லியது.

535. அயல்புறந் தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி களவ னறுக்குங்

கழனி யூரன் மார்புபலர்க்கு
இழைநெகிழ் செல்ல லாகு மன்னாய்.

25

இதுவுமது.

536. கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து
களவன்
வள்ளை மென்கா லறுக்கு மூரன்
எம்மூம் பிறரு மறியான்
இன்ன னவ தெவன்கொ லன்னாய்.

26

தலைமகற்கு வாயிலாகப் புகுந்தார், 'நின் முனிவிற்கு
அவன்
பொருந்தா நின்றான்' என்ற வழித் தலைமகட்குத் தோழி,
'அவன்
பாடு அஃதில்லை' என்பதுபடச் சொல்லியது.

537. செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு
களவன்

தண்ணக மண்ணளைச் செல்லு மூரற்கு
எல்வளை நெகிழச் சாஅய்
அல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்.

27

தலைமகன் மனைக்கண் வருங்காலத்து வாராது தாழ்த்துழி, 'புறத்தொழுக்கம் உளதாயிற்று' எனக் கருதி வருந்துந் தலைமகட் குத் தோழி சொல்லியது.

538. உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயின்
தண்சேறு களவன் வரிக்கு மூரற்கு
ஒண்டொடி நெகிழச் சாஅய்
மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்.

28 இற்செறிவித்த விடத்துத் தலைமகட்கு எய்திய வேறுபாடு கண்டு, 'இது தெய்வத்தினானாயிற்று' என்று தமர் வெறியெடுப்புழி அதனை விலக்கக் கருதிய தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

539. மாரி கடிகொள காவலர் கடுக
வித்திய வெண்முளை களவ னறுக்குங்
கழனி யூரன் மார்புற மரீஇத்

திதலை யல்கு லின்மகள்
பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்.

29

வரைவெதிர் கொள்ளார் தமர் அவள் மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

540. வேப்புநனை யன்ன நெடுங்கட் களவன்
தண்ணக மண்ணளை நிறைய நெல்லின்
இரும்பூ வுறைக்கு மூரற்கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்.

30

இதுவுமது.

### 541—550. தோழிக்குரைத்த பத்து

541. அம்ம வாழி தோழி மகிழ்நன்
கடனன் றென்னுங் கொல்லோ நம்மூர்
முடமுதிர் மருதத்துப் பெருந்துறை
உடனா டாயமோ டுற்ற சூளே.

31

முன்னொருநாள் தன்னோடு புதுப்புனலாடுழி, ‘இனிப் புறத்தொழுக்கம் விரும்பேன்’ என ஆயத்தாரோடு சூளுற்ற தலைமகன் பின்பும் பரத்தையரோடு புனலாடத் தொடங்குகின்றா னென்பது கேட்ட தலைமகள் அவனுழையர் கேட்பத் தோழிக்குச் சொல்லியது..

542. அம்ம வாழி தோழி மகிழ்நன்

ஒருநா ணம்மில் வந்ததற் கெழுநாள்
அழுப வென்பவவன் பெண்டிர்
தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே.

32

வாயில்வேண்டிப் புகுந்தார் கேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

543. அம்ம வாழி தோழி மகிழ்நன்
மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறைப்



பெண்டிரொ டாடு மென்பதன்
தண்டா ரகலந் தலைத்தலைக் கொளவே.

33

இதுவுமது.

544. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பற்
றாதேர் வண்ணங் கொண்டன
ஏதிலா ளர்க்குப் பசந்தவென் கண்ணே.

34

இதுவுமது.

545. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கை யாம்ப லநுரி மென்கால்
நிறத்தினு நிழற்றுதன் மன்னே
இனிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

## 35

வாயிலாய்ப்புகுந்தார் தலைமகன் குணங்கூறியவழி, 'அவனுக்கு இல்லாதனவே கூறுதலால், இப்பொழுதுகாண் என்மேனி பசந்தது' எனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

546. அம்ம வாழி தோழி யூரன்
நம்மறந் தமைகுவ னாயி னாமறந்து
உள்ளா தமைதலு மமைகுவ மன்னே
கயலெனக் கருதிய வுண்கண்
பசலைக் கொல்கா வாகுதல் பெறினே.

## 36

தான் வாயினேரும் குறிப்பினளானமை யறியாது தோழி வாயின் மறுத்துழி அவள் நேரும் வகையால் அவட்குத் தலைமகள் சொல்லியது.

547. அம்ம வாழி தோழி மகிழ்நன்

நயந்தோ ருண்கண் பசந்துபனி மல்க



வல்லன் வல்லன் பொய்த்தல்
தேற்று னுற்ற சூள்வாய்த் தல்லே.

37

தலைமகளைச் சூளினல் தெளித்தானென்பது கேட்ட காதற்
பரத்தை தலைமகட்குப் பாங்காயினர்கேட்பத் தன் தோழிக்குச்
சொல்லியது.

548. அம்ம வாழி தோழி மகிழ்நன்
தன்சொ லுணர்ந்தோ ரறியல னென்றுந்
தண்டளிர் வெளவு மேனி
ஒண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே.

38

தலைமகன் மனைவயிற்போகக் கருதினனென்பது சொல்லிய
தன் தோழிக்குப் பரத்தை சொல்லியது.

549. அம்ம வாழி தோழி யூரன்
வெம்முலை யடைய முயங்கி நம்வயின்
திருந்திழைப் பணைத்தோள் ஞெகிழப்
பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே.

39

ஒரு ஞான்று தலைவன் தன்மனைக்கட் சென்றது கொண்டு அவன் பெண்மை நலமெல்லாந் துய்த்துக் காதல் நீங்கிப் பிரிந்தா னென்பது தலைவி கூறினு ளெனக்கேட்ட பரத்தை அவட்குப் பாங் காயினர் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது.

550. அம்ம வாழி தோழி மகிழ்நன்
ஒண்டொடி முன்கை யாமழப் பிரிந்துதன்
பெண்டி ரூரிறை கொண்டன னென்ப
கெண்டை பாய்தர வவிழ்ந்த
வண்டுபிணி யாம்ப ளுடுகிழ வோனே.

40

உலகியல் பற்றித் தலைவன் தன்மனைக்கண் ஒரு ஞான்று போனதே கொண்டு அவ்வழிப் பிரியாது உறைகின்றானென்று அயற்பரத்தையர் பலரும் கூறினரென்பது கேட்ட காதற்பரத்தை அவர்பாங்காயினர் கேட்பத் தன்றோழிக்குச் சொல்லியது. 254



## 551—560. புலவிப் பத்து

551. தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத் தவனூ ரென்ப, அதனால்
தன்சொ லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோனே. 41

கழறித் தெருட்டற்பாலராகிய அகம்புகல் மரபின் வாயில்கள் புகுந்துழித் தலைவனையும் பாணன் முதலாகிய பக்கத்தாரையும் இகழ்ந்து தலைவி கூறியது.

552. மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாண ரூரநின் மாணிழை யரிவை
காவிரி மலிர்நிறை யன்னநின்
மார்புநனி விலக்கல் தொடங்கி யோளே. 42

தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தலைவன் பிற பரத்தையருடன் ஒழுகினனென்று புலந்தாளாக, அதனையறிந்த தலைவி, அவன் தன்னில்லத்துப் புகுந்துழித் தானறிந்தமை தோன்றச் சொல்லியது.

553. அம்பணத் தன்ன யாமை யேறிச்
செம்பி னன்ன பார்ப்புப்பல துஞ்சும்

யாண ரூர நின்னினும்
பாணன் பொய்யன் பலசூ ளினனே.

43

பாணன் வாயிலாகப் புகுந்து தெளிப்ப மறுத்த தலைமகள் பாணனோடு தலைவன் புகுந்து தெளித்துழிச் சொல்லியது.

554.

தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்கு

அதுவே யையநின் மார்பே
அறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே.

44

பரத்தையர் மனைக்கண்ணே பன்னாட்டங்கித் தன் மனைக் கண்ணே வந்த தலைமகற்குத் தோழி கூறியது.

ஓரம்போகியார் - ஐங்குறுநூறு 255

555. கூதி ராயிற் றண்கலிழ் தந்து
வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்
யாறணிந் தன்றுநின் னூரே
பசப்பணிந் தனவால் மகிழ்நவென் கண்ணே. 45

நெடுநாட் பரத்தையரிடத்தானாய் ஒழுகிய தலைமகன் மனை
வயிற் சென்றுழித் தோழி சொல்லியது.

556. நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே
நின்மார்பு நயந்த நன்னுத லரிவை
வேண்டிய குறிப்பினை யாகி

ஈண்டுநீ யருளா தாண்டுறை தல்லே.

46

மனைக்கண்வருதல் பரத்தைவிலக்க விலங்கிப் பின்பு உலகியல் பற்றி அவள் குறிப்பினோடும் வந்தமையறிந்த தோழி தலைமகனைப் புலந்து சொல்லியது.

557. முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர
மாணிழை யாய மறியுநின்
பாணன் போலப் பலபொய்த் தல்லே.

47

பாணற்கு வாயில்மறுத்த தலைமகள் பின் அப்பாணனோடு தலைமகன் புகுந்து தன் காதன்மை கூறியவழிச் சொல்லியது.

558. வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்
யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர

வேண்டேம் பெருமநின் பரத்தை
ஆண்டுச்செய் குறியோ டீண்டுநீ வரலே.

48

பரத்தையர்மாட்டு ஒழுகாநின்று
தன்மனைக்கட்சென்ற தலை
மகற்குத் தலைமகள் சொல்லியது.



559. அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்
யாண ரூரநின் பாண்மகன்
யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே.

49

பாணன் வாயிலாகப் பரத்தையோடு கூடினனென்பது
கேட்ட தலைமகள் தனக்கும் பாணனாற் காதன்மை
கூறுவிப்பான் புக்க தலை மகற்குச் சொல்லியது.

560. துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்
வஞ்சி யோங்கிய யாண ரூர
தஞ்ச மருளாய் நீயேநின்
நெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே.

50

மனையினீங்கிப் பரத்தையிடத்துப் பன்னாட்டங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

## 561—570. தோழிகூற்றுப் பத்து

561. நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே.

51

வாயில் பெற்றுப் புகுந்துபோய்ப் புறத்தொழுக்க மொழுகிப் பின்பும் வாயில் வேண்டுந் தலைமகற்குத் தோழி மறுத்தது.

562. வயலைச் செங்கொடிப் பிணையல் தைஇச்
செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கட்
செவ்வாய்க் குறுமக ளினைய
வெவ்வாய் முன்னின்று மகிழ்நநின் றேரே.

52

வாயில் பெற்றுக் கூடியிருந்த தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

563. துறையெவ னணங்கும்யா முற்ற நோயே
சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்

கழனித் தாமரை மலரும்
பழன வூரநீ யுற்ற சூளே.

53

தலைவி தன்னுடன் போய்ப் புனலாடிய வழி, 'இது பரத்தைய ருடனாடிய துறை' என நினைந்து பிறந்த மெலிவை மறைத்தமையை யுணர்ந்த தலைமகன் மனைவயிற் புகுந்துழி, 'தெய்வங்களுறையுந் துறைக்கண்ணே நாம் ஆடினவதனாற் பிறந்ததுகொல் நினக்கு இவ் வேறுபாடு' என்று வினாயினாற்கு அவள் சொல்லியது.

564. திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை
வேனி லாயினுந் தண்புன லொழுகுந்
தேனூ ரன்னவிவள் தெரிவளை நெகிழ
ஊரி னூரனை நீதர வந்த
பஞ்சாய்க் கோதை மகளிர்க்கு
அஞ்சுவ லம்ம வம்முறை வரினே.

54

வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தலைமகள் குறிப்பறிந்த தோழி அவன் கொடுமைகூறி வாயில் மறுத்தது.

565. கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றுந்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவள்
நல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே.

55

வரைந்த அணிமைக்கண்ணே புறத்தொழுக்கம் ஒழுகி வாயில் வேண்டிவந்து தன்மெலிவு கூறிய தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது.

566. பகல்கொள் விளக்கோ டிரானா ளறியா
வெல்போர்ச் சோழ ராமூ ரன்னவிவள்
நலம்பெறு சுடர்நுதல் தேம்ப
எவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே.

56

புறத்தொழுக்கம் உளதாகியதறிந்து தலைமகள் மெலிந்துழி, 'அஃதில்லை' என்று தேற்றுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

17



567. பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயின்
ஆம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
இவணலம் புலம்பப் பிரிய
அனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே.

57

தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றென்பது கேட்ட தோழி அவனை வினவியது.

568. விண்டு வன்ன வெண்ணெற் போர்விற்

கைவண் விராஅ னிருப்பை யன்ன
இவளணங் குற்றனை போறி
பிறர்க்கு மனையையால் வாழி நீயே.

58

உணர்ப்புவயின் வாரா வூடற்கண் புலந்த தலைமகற்குத் தோழி கூறியது.

569. கேட்டிசின் வாழியோ மகிழ்ந வாற்றுற
மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
இவட்குமருந் தன்மை நோமெ னெஞ்சே.

தலைமகள் ஆற்றாளாம்

59

தலைமகற்குப் புறத்தொழுக்க வண்ணம் மனைக்கண் வரவு சுருங்கிய முளதாகியவழி ஆற்றாளாகிய தோழி சொல்லியது.

570. பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவுங்
கழனி யூரநின் மொழிவ லென்றுந்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
அஞ்சா யோவிவள் தந்தைகை வேலே. 60

வரையாதொழுகுந் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி சொல்லியது.

571. நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉங்



கைவண் மத்தி கழாஅ ரன்ன
நல்லோர் நல்லோர் நாடி
வதுவை யயர விரும்புதி நீயே.

61

வதுவையயர்ந்தா ளொருபரத்தையைச் சின்னாளில்விட்டு மற்றொரு பரத்தையை வதுவையயர்ந்தான் என்பதறிந்த தலைமகள் அவன் மனைவயிற்புக்குழிப் புலந்தாளாக, ‘ இது மறைத்தற்கரிது ’ என உடன்பட்டு ‘ இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது ’ என்றாற்கு அவள் சொல்லியது.

572. இந்திர விழவிற் பூவி னன்ன
புன்றலைப் பேடை வரிநிழ லகவும்
இவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி

எவ்வூர் நின்றன்று மகிழ்நநின் தேரே.
62

இதுவுமது.

573. பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர
எந்நலந் தொலைவ தாயினுந்
துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த
மார்பே. 63

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு
தலைமகள் புலந்து
கூறியது.

574. அலமர லாயமோ டமர்துணை தழீஇ
நலமிகு புதுப்புன லாடக் கண்டோர்
ஒருவரு மிருவரு மல்லர்
பலரே தெய்யவெம் மறையா தீமே.
64

தலைமகன் பரத்தையரோடு புனலாடினா
னென்பதறிந்த தலை
மகள் அவன் மறைத்துழிச் சொல்லியது.

575. கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர

புதல்வனை யீன்றவென் மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே.

ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

576. உடலினெ னல்லேன் பொய்யா துரைமோ
யாரவண் மகிழ்ந தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வௌவி யோளே. 66

புதல்வனைப் பிரியாதவன் பிரிந்து புறத்துத் தங்கி வந்தானாக, அவனோடு புலந்து தலைமகள் சொல்லியது.

577. மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே
தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்
பெருநலந் தருக்கு மென்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் பலரே
ஓதி யொண்ணுதல் பசப்பித் தோரே.

67

தலைநின்று ஒழுகப்படா நின்ற பரத்தை புறனுரைத்தாளெனக் கேட்ட தலைவி தலைமகன் வந்துழி அவள் திறத்தாராய் நின்று ஒழுகும் வாயில்கள் கேட்பச் சொல்லியது.

578. கன்னி விடியற் கணைக்கா லாம்பல்
தாமரை போல மலரு மூர

பேஞ ளோங்ின் பெண்டே
யான்ற னடக்கவுந் தானடங் கலளே.

68

பரத்தை தான் தலைமகளைப் புறங்கூறி வைத்துத் தன்னைத்

தலைமகள் புறங் கூறினளாகப் பிறர்க்குக் கூறினமை கேட்ட தலைவி

தலைமகற்குச் சொல்லியது.

579. கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே

பலராடு பெருந்துறை மலரொடு வந்த

ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

261

தண்புனல் வண்ட லுய்த்தெ னெ
உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

69

தலைமகன் பெதும்பைப் பருவத்தாள் ஒரு பரத்தையைக் களவில் மணந்து ஒழுகுகின்றதனை அறிந்த தலைமகள் தனக்கில்லை யென்று அவன் மறைத்தழிச் சொல்லியது.

580. பழனப் பன்மீ னருந்த நாரை

கழனி மருதின் சென்னிச் சேக்கும்
மாநீர்ப் பொய்கை யாண ரூர
தூயர் நறியர்நின் பெண்டிர்
பேஎ யனையம்யாஞ் சேய்பயந் தனமே.

70

பரத்தையரோடு பொழுதுபோக்கி நெடிது துய்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

## 581—590. புனலாட்டுப் பத்து

581. சூதார் குறுந்தொடிச் சூர்மை நுடக்கத்து
நின்வெங் காதலி தழீஇ நெருநை
ஆடினை யென்ப புனலே யலரே
மறைத்த லொல்லுமோ மகிழ்ந
புதைத்த லொல்லுமோ ஞாயிற்ற தொளியே.

71

பரத்தையரோடு புனலாடினு னெனக்கேட்டுப் புலந்த தலைமகள் தலைமகன் அதனை யில்லையென்று மறைத்துழிச் சொல்லியது.

582. வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழைத்
திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற்
குவளை யுண்க ணேஎர் மெல்லியல்
மலரார் மலிர்நிறை வந்தெனப்

புனலாடு புணர்துணை யாயின ளெமக்கே.

72

தலைமகள் புலவி நீக்கித் தன்னோடு புதுப்புனல் ஆடவேண்டிய தலைமகன் களவுக்காலத்துப் புனலாட்டு நிகழ்ந்ததனை அவள்கேட்பத் தோழிக்குச் சொல்லியது.



583. வண்ண வொண்டழை நுடங்க வாலிழை
ஒண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே.

73

இதுவுமது.

584. விசும்பிழி தோகைச் சீர்போன் றிசினே
பசும்பொ னவிரிழை பைய நிழற்றக்
கரைசேர் மருத மேறிப்
பண்ணை பாய்வோள் தண்ணறுங் கதுப்பே.

74

இதுவுமது.

585. பலரிவ ளுெவ்வாய் மகிழ்ந வதனல்
அலர்தொடங் கின்ரு லூரே மலர
தொன்னிலை மருதத்துப் பெருந்துறை
நின்னே டாடினள் தண்புன லதுவே.

75

பரத்தையோடு புனலாடிவந்த தலைமகன் அதனை
மறைத்துக்

கூறியவழித் தோழி கூறியது.

586. பைஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்
றண்புன லாடித்தன் னலமேம் பட்டனள்
ஒண்டொடி மடவர னின்னேடு
அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே.

76

இதுவுமது.

587. அம்ம வாழியோ மகிழ்நநின் மொழிவல்
பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னெடு தண்புன லாடுதும்
எம்மொடு சென்மோ செல்லனின்
மனையே. 77

முன்னெரு ஞான்று தலைவியோடு புனலாடினு
னெனக்கேட்டு

இவனுடன் இனி ஆடேனென உட்கொண்ட பரத்தை, 'புதுப்புனல்
ஆடப்போது' என்ற தலைமகற்குச் சொல்லியது.

ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

263

588. கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த
சிறையழி
எம்மொடு

புதுப்புன லாடுகம்
கொண்மோவெங் தோள்புரை புணையே.

இதுவுமது.

589. புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்
யார்மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந

யார்மக ளாயினு மறியாய்
நீயார் மகளையெம் பற்றி யோயே.

79

டுத்

தன்னொடு கூடாது தனித்துப் புனலாடுகின்றா னெனக்கேட்டு
தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தானும் தனியேபோய்ப்
புனலாடினளாக, அவளை ஊடல் தீர்த்தற்பொருட்டாகத்.
தலைமகன்
சென்று தான் அறியான்போல நகையாடிக்கூறிக்
கைப்பற்றியவழி
அவள் தோழி சொல்லியது.

590. புலக்குவெ மல்லேம் பொய்யா துரைமோ
நலத்தகு மகளிர்க்குத் தோட்டுணை யாகித்
தலைப்பெயற் செம்புன லாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே. 80

தன்னை யொழியப் புதுப்புனலாடித் தாழ்த்து வந்த தலைமக
னோடு தலைமகள் புலந்து சொல்லியது.

## 591—600. புலவிவிராய பத்து

591. குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டு
மலரணி வாயிற் பொய்கை யூரநீ
என்னை நயந்தனெ னென்றிநின்
மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே.
81

தன்னைக் கொடுமை கூறினள் தலைமகளென்பது
கேட்ட
பரத்தை தலைமகன்வந்து தன்மேல் அன்புடைமை
கூறினனாக

அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.



592. வெகுண்டன ளென்ப பாணநின் றலைமகள்
மகிழ்நன் மார்பி னவிழிணர் நறுந்தார்த்
தாதுண் பறவை வந்தெம்
போதார் கூந்த விருந்தன வெனவே. 82

மனைவயிற் புகுந்த பாணற்குத் தலைமகன் கேட்குமாற்றால் தலைமகள் சொல்லியது.

593. மணந்தனை யருளா யாயினும் பைபயத்
தணந்தனை யாகி யுய்ம்மோ நும்மூர்

ஒண்டொடி முன்கை யாயமுந்
தண்டுறை யூரன் பெண்டெனப் படற்கே.

83

வரைந்த அணுமைக்கண்ணே தலைமகற்குப் புறத்தொழுக்க முண்டாகியவழி அதனையறிந்த தலைவி அவனோடு புலந்து சொல்லியது.

594. செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து

வெகுள்வோள்

கண்ணிற் காணி னென்னா குவள்கொல்
நறுவீ யைம்பான் மகளி ராடுந்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே.

84

பரத்தையர் மனைக்கண் தங்கிப் புணர்ச்சிக்குறியோடு வாயில் வேண்டி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

595. வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலும்
மறுவில் யாணர் மலிகே ழூரநீ
சிறுவரி னினைய செய்தி
நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே.

85

தலைமகன் பரத்தையர்மேற் காதல்கூர்ந்து நெடித்துச் செல்வுழி மனையகம் புகுந்தானாகத் தலைவி கூறியது.

596. வெண்டலைக் குருகின் மென்பறை
விளிக்குரல்
நீள்வயி னண்ணி யிமிழு மூர

எம்மிவ ணல்குத லரிது
நம்மனை மடந்தையொடு தலைப்பெய் தீமே.

86

புதல்வன் கூறிய மாற்றம் தலைமகட்குப் பாங்காயினர் கூறக் கேட்டா னென்பதறிந்த பரத்தை அதற்குப்புலந்து தலைமகற்குச் சொல்லியது.

597. பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்
கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்
யாண ரூரநின் மனையோள்
யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ.

87

தலைமகள் தன்னைப் புறங்கூறினை ளெனக்கேட்ட காதற்பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பத் தலைமகனோடு புலந்துசொல்லியது.

598. வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கைத்
தண்டுறை யூரனை யெவ்வை யெம்வயின்
வருதல் வேண்டுது மென்ப
தொல்லேம் போல்யா மதுவேண் டுதுமே.

88

தலைமகனை நயப்பித்துக் கொள்கையில் விருப்பில்லாதாள்போல அவ்வாறு கோடலையே விரும்புவாள், அது தனக்கு முடியாதெனத் தலைமகன் புறனுரைத்தா ளெனக்கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினர்க்குச் சொல்லியது.

599. அம்ம வாழி பாண வெவ்வைக்கு
எவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து
வண்டுதா தூது மூரன்
பெண்டென விரும்பின் றவடன் பண்பே.

89

தலைமகன் தலைமகளைப் போற்றி யொழுகாநின்றானென்பது கேட்ட காதற்பரத்தை அவன் பாணனுக்குச் சொல்லுவாளாய் அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

600. மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
வண்டின் மாண்குண மகிழ்நன்கொண் டான்கொல்



அன்ன தாகலு மறியாள்
எம்மொடு புலக்குமவன் புதல்வன் தாயே.

90

தலைமகன் தன்மனைக்கட் செல்லாமல் தான் விலக்குகின்றாளாகத் தலைமகள் கூறினாளென்பது கேட்ட காதற்பரத்தை தலைமகன் கேட்குமாற்றால் அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

## 601—610. எருமைப் பத்து

601.

நெறிமருப் பெருமை நீல விரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்

கழனி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.

91

குறைவேண்டிப் பின்னின்று வந்த தலைமகற்குத் ' இவள் இளையள் விளைவிலள் ' எனச் சேட்படுத்தது.

தோழி,

602.

கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்ருக்
காதற் குழவிக் கூறுமுலே மடுக்கும்

நுந்தை நும்மூர் வருதும்
ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே.

92

நினக்கு வரைந்து தருதற்குக் குறை நின்தமர் கூருமையேயெனத் தோழி கூறிஞளாக, தலைமகள் அங்குவந்து முகநோக்கி

இவள் குறிப்பிஞற் கூறிஞளென்பதறிந்த தலைமகன், 'வரைவு மாட்சிமைப்படின் நானே வருவல்' எனத் தலைமகட்குச் சொல்லியது.

603. எருமைநல் லேற்றின மேய லருந்தெனப்
பகுமோ ரோடமோ டாம்ப லொல்லா
செய்த வினைய மன்ற பல்பொழிற்
ருதுண் வெறுக்கைய வாகியிவள்

போதவிழ் முச்சி யூதும் வண்டே.

93

முயக்கம் பெற்றவழிப் பிறந்த வெறிநாற்றத்தால் பண்டையள வன்றி வண்டுகள் மொய்த்தனவாக, 'இதற்குக் காரணமென்'

## ஓரம்போகியார் - ஐங்குறுநூறு

267 என்று வினவிய செவிலித்தாய்க்குக் கூறுவாள்போன்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

604. மள்ள ரன்ன தடங்கோட் டெருமை
மகளி ரன்ன துணையொடு வதியும்
நிழன்முதி ரிலஞ்சிப் பழனத் ததுவே
கழனித் தாமரை மலரும்
கவின்பெறு சுடர்நுதல் தந்தை யூரே.

94

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீள்கின்றான் சொல்லியது.

605. கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ
நெடுங்கதிர் நெல்லி னுண்மேய லாரும்
புனன்முற் றூரன் பகலும்
படர்மலி யருநோய் செய்தன னெமக்கே.

95

உண்டிக்காலத்து மனைக்கண் வருதலுஞ் சுருங்கிப் பரத்தை யிடத்தனாய்த் தலைமகன் ஒழுகியவழி அவற்கு வாயிலாய் வந்தார்க் குத் தலைமகள் சொல்லியது.

606. அணிநடை யெருமை யாடிய வள்ளல்
மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வூரன் பாயலின் றுணையே.

96

பரத்தையர் பலரோடும் ஒழுகுதல் கண்டு பொறுத்திருந்த தலைமகள் தலைமகன் மனைக்கட் புகுந்தவழி உடன்படுதல் கண்ட வாயில்கள் தம்முள்ளே சொல்லியது.

607. பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தா ளெருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்
பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே.

97

புறத்தொழுக்கம் இன்றியே இருக்கவும் உளதென்று புலந்த தலைமகளைப் புலவிநீக்கிய தலைமகன் புணர்ச்சியது இறுதிக்கண் தன்னுள்ளே சொல்லியது.



608 தண்புன லாடுந் தடங்கோட் டெருமை
திண்பிணி யம்பியிற் றோன்று மூர
ஒண்டொடி மடமக ளிவளினும்
நுந்தையும் யாயுங் கடியரோ நின்னே. 98

புறத்தொழுக்கம் உள்தாகிய துணையானே ராத தலைமகள் கொடுமை தலைமகன் கூறக்கேட்ட

புலந்து வாயினே
தோழி அவற்குச்
சொல்லியது.

609. பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி யெருமை கதிரொடு மயக்கும்
பூக்கஞ லூரன் மகளிவள்
நோய்க்குமருந் தாகிய பணைத்தோ ளோளே.

99

தோழி முதலாயினர் தலைமகன் கொடுமைகூறி தலைமகள் வாயினேர்ந்தழி அவன் உவந்து சொல்லியது.

விலக்கவும்

610. புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை
மணலாடு சிமையத் தெருமை கிளைக்கும்

யாண ரூரன் மகளிவள்
பாணர் நரம்பினு மின்கிள வியளே.

100

வாயினேர்தற்பொருட்டு முகம்புகுவான்வேண்டி இயற்பழித்துழித் தலைமகள் இயற்படமொழிந்ததிறம் தலைமகற்குத் தோழி சொல்லியது.

**611.** குறுந்தொகை - **10.** மருதம்
யாயா கியளே விழவுமுத லாட்டி
பயறுபோ லிணர பைந்தா துபடீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன் கொடுமை
5 கரந்தன ளாகலி னுணிய வருமே.

தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது.

ஓரம்போகியார் 269

**612.** குறுந்தொகை - **70.** குறிஞ்சி

ஒடுங்கீ ரோதி யொண்ணுதற் குறுமகள்
நறுந்தண் ணீர ளாரணங் கினளே
இனைய ளென்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
அனைமெல் லியல்யான் முயங்குங் காலே.

புணர்ந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

**613.** குறுந்தொகை - **122.** நெய்தல்

பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
குண்டுநீ ராம்பலுங் கூம்பின வினியே
வந்தன்று வாழியோ மாலை
ஒருதா னன்றே கங்குலு முடைத்தே.

தலைமகள் பொழுதுகண்டு அழிந்தது.

**614.** குறுந்தொகை - **127.** மருதம்

குருகுகொளக் குளித்த கெண்டை யயலது
உருகெழு தாமரை வான்முகை வெரூஉங்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒருநின் பாணன் பொய்ய னாக
உள்ள பாண ரெல்லாம்
கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே.

பாணன் வாயிலாகப் புக்கவழித் தலைமகற்குத் தோழி சொல்லியது.

**615.** குறுந்தொகை - **384.** மருதம்

உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்
நெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர்



நலனுண்டு துறத்தி யாயின்
மிகநன் றம்ம மகிழ்நநின் சூளே.

நின்பரத்தையர்க்கு நீயுற்ற சூளுறவு நன்றாயிருந்தது என்று நகையாடித் தோழி வாயில் மறுத்தது.

**616.** நற்றிணை - **20.** மருதம்

ஐய குறுமகட் கண்டிகும் வைகி
மகிழ்நன் மார்பிற் றுஞ்சி யவிழிணர்த்
தேம்பாய் மராஅங் கமழுங் கூந்தற்
றுளங்கிய லசைவரக் கலிங்கந் துயல்வரச்
செறிதொடி தெளிர்ப்ப வீசி மறுகிற்
பூப்போ லுண்கண் பெயர்ப்ப நோக்கிச்
சென்றனள் வாழிய மடந்தை நுண்பல்
சுணங்கணி வுற்ற விளங்கு பூணள்
மார்புறு முயக்கிடை ஞெமிர்ந்த சோர்குழைப்
பழம்பிணி வைகிய தோளிணைக்
குழைந்த கோதைக் கொடிமுயங் கலளே.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் யாரையும்

அறியே னென்றாற்குத் தலைவி சொல்லியது ;
வாயிலாகப்புக்க தோழி தலை விக்குச் சொல்லியதூஉமாம்.

## 617. நற்றிணை - 360. மருதம்

முழவுமுகம் புலர்ந்து முறைமயி னாடிய
விழவொழி களத்த பாவை போல
நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வெளவி இன்றுதரு
மகளிர் மென்றோள் பெறீஇயர் சென்றீ பெரும
சிறக்கநின் பரத்தை
பல்லோர் பழித்தல் நாணி வல்லே
காழிற் குத்திக் கசிந்தவ ரலைப்பக்
கையிடை வைத்தது மெய்யிடைத் திமிரு முனியுடைக்
கவளம் போல நனிபெரிது
ஓரிற்பிச்சையார் 271
உற்றநின் விழும முவப்பென்
மற்றுங் கூடு மனைமடி துயிலே.

பரத்தையிற் பிரிந்த தலைமகனைத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வாயில் மறுத்தது ; தலைமகள் ஊடிச்சொல்லியதூஉமாம்.

## 618. புறநானூறு - 284.

வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப

நூலரி மாலை சூடிக் காலிற்
றமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
ஒருகை யிரும்பிணத் தெயிறு மிறையாகத்
திரிந்த வாய்வாள் திருத்தாத்
தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.

திணை - தும்பை ; துறை - பாண்பாட்டு.

## ௯௦. ஓரிற்பிச்சையார்

### 619. குறுந்தொகை - 277. பாலை

ஆசில் தெருவி னாசில் வியன்கடைச்
செந்நெ லமலை வெண்மை வெள்ளிழுது
ஓரிற் பிச்சை யார மாந்தி
அற்சிரை வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்குங் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவ ரென்றி
அக்கால் வருவரெங் காத லோரே.

தலைமகன் பிரிந்தவழி அவன் குறித்த பருவ வரவு தோழி அறிவரைக் கண்டு வினவியது.

## ௯௧. ஓரேருழவர்

### 620. புறநானூறு - 193.

அதளெறிந் தன்ன நெடுவெண் களரின்
ஒருவ னாட்டும் புல்வாய் போல
ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## கூஉ. ஔவையார்

### 621. அகநானூறு - 11. பாலை

வான மூர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்டு
இலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாய மலிபுதொகு பெடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துக ளாகிய பயந்தபு கானம்
எம்மொடு கழிந்தன ராயிற் கம்மென

வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிண ரெக்கர்
மெய்புகு வன்ன கைகவர் முயக்கம்
அவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீர்வார் நிகர்மலர் கடுப்ப வோமறந்து
அறுகுள நிறைக்குந போல வல்கலும்
அழுதல் மேவல வாகிப்

**பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.**

*தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென் பதுபடச் சொல்லியது.*

## ஔவையார் 273

### 622. அகநானூறு - 147. பாலை

*ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த*
*வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன*
*ஊன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை*
*மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்தத்*
*துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்*
*பொறிகிள ருழுவைப் போழ்வா யேற்றை*
*அறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கும்*
*நெறிபடு கவலை நிரம்பா நீளிடை*
*வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்*
*செலவயர்ந் திசினால் யானே பலபுலந்து*
*உண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்த்*
*தோளுந் தொல்கவின் தொலைய நாளும்*
*பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி*
*மருந்துபிறி தின்மையி னிருந்துவினை யிலனே.*

செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 623. அகநானூறு - 273. பாலை

விசும்பு விசைத்தெழுந்த கூதளங் கோதையிற்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ
ஆர்கலி வளவயிற் போதொடு பரப்பப்
புலம்புனிறு தீர்ந்த புதுவர லற்சிரம்
நலங்கவர் பசலை நலியவு நந்துயர்
அறியார் கொல்லோ தாமே யறியினும்
நம்மனத் தன்ன மென்மை யின்மையின்
நம்முடை யுலக முள்ளார் கொல்லோ
யாங்கென வுணர்கோ யானே வீங்குபு
தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு
முலையிடைத் தோன்றிய நோய்வள ரிளமுளை
அசைவுடை நெஞ்சத் துயவுத்திற னீடி
ஊரோ ரெடுத்த வம்ப லஞ்சினை
ஆராக் காத லவிர்தளிர் பரப்பிப்





புலவர் புகழ்ந்த நாரில் பெருமரம்
நிலவரை யெல்லா நிழற்றி
அலரரும் பூழ்ப்பவும் வாரா தோரே.

பிரிவின்கண் தலைமகள் அறிவுமயங்கிச் சொல்லியது.

## 624. அகநானூறு - 303. பாலை

இடைபிற ரறித லஞ்சி மறைகரந்து
பேஎய் கண்ட கனவிற் பன்மாண்
நுண்ணிதி னியைந்த காமம் வென்வேல்
மறமிகு தானைப் பசும்பூட் பொறையன்
கார்புகன் றெடுத்த சூர்புகல் நனந்தலை
மாயிருங் கொல்லி யுச்சித் தாஅய்த்
ததைந்துசெல் லருவியி னலரெழப் பிரிந்தோர்
புலங்கந் தாக விரவலர் செலினே
வரைபுரை களிற்றொடு நன்கல னீயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்
நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி
முடங்குபுறச் செந்நெற் றரீஇய ரோராங்கு
இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு
வருவரென் றுணர்ந்த மடங்கெழு நெஞ்சம்
ஐயந் தெளியரோ நீயே பலவுடன்
வறன்மரம் பொருந்திய சிள்வீ டுமணர்
கணநிரை மணியி னார்க்குஞ் சுரனிறந்து
அழிநீர் மீன்பெயர்ந் தாங்கவர்
வழிநடைச் சேறல் வலித்திசின் யானே.

தலைமகன் பிரிவின்கண் வேட்கைமீதூர்ந்த தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 625. குறுந்தொகை - 15. பாலை

பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய

ஔவையார் 

நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.

உடன்போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் ; நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

## 626. குறுந்தொகை - 23. குறிஞ்சி

அகவன் மகளே யகவன் மகளே
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.

கட்டுக் காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது.

## 627. குறுந்தொகை - 28. பாலை

முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ வொல்லெனக் கூவு வேன்கொல்

அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே.

வரைவிடை யாற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

### 628. குறுந்தொகை - 29. குறிஞ்சி

நல்லுரை யிகந்து புல்லுரைத் தாஅய்ப்
பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளந் தாங்கா வெள்ள நீந்தி
அரிதவா வுற்றனை நெஞ்சே நன்றும்
பெரிதா லம்மநின் பூச லுயர்கோட்டு



மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.

இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைமகன் இவர் எம்மை மறுத்தாரென்று வரைந்துகொள்ள நினையாது பின்னுங் கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சினை நோக்கிக் கூறியது.

### 629. குறுந்தொகை - 39. பாலை

வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கும்
மலையுடை யருஞ்சுர மென்பநம்
முலையிடை முனிநர் சென்ற வாறே.

பிரிவிடை ஆற்றல் வேண்டு மென்ற தோழிக்கு யாங்ஙனம் ஆற்றுவேனெனத் தனது ஆற்றாமை மிகுதி தோன்றத் தலைமகள் கூறியது.

## 630. குறுந்தொகை - 43. பாலை

செல்வா ரல்லரென் றியானிகழ்ந் தனனே
ஒல்வா ளல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல்
நல்லராக் கதுவி யாங்கென்
அல்ல னெஞ்ச மலமலக் குறுமே.

பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது.

## 631. குறுந்தொகை - 80. மருதம்

கூந்த லாம்பல் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறுந் தானஃது
அஞ்சுவ துடைய ளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே.

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

### 632. குறுந்தொகை - 91. மருதம்

அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தே ரஞ்சி
கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே.

பரத்தையர்மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில்வேண்டிப் புக்க வழித் தன்வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன்னெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது. பரத்தையிற் பிரிந்து வந்தவழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி கூறியதூஉமாம்.

### 633. குறுந்தொகை - 99. முல்லை

உள்ளினெ னல்லெனோ யானே யுள்ளி
நினைந்தனெ னல்லெனோ பெரிதே நினைந்து
மருண்டனெ னல்லெனோ வுலகத்துப் பண்பே
நீடிய மராஅத்த தோடுதோய் மலிர்நிறை

இறைத்துணைச் சென்றற் றுஅங்கு
அனைப்பெருங் காம மீண்டுகடைக் கொளலே.

பொருண்முற்றிப் புகுந்த தலைமகன் ' எம்மை நினைத்தும் அறிதிரோ ' என்ற தோழிக்குச் சொல்லியது.

**634.** குறுந்தொகை - **102.** நெய்தல்

உள்ளி னுள்ளம் வேமே யுள்ளாது
இருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி
வான்றோய் வற்றே காமஞ்
சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யான் யாங்ஙனம் ஆற்றுவேன் என்றது.



**635.** குறுந்தொகை - **158.** குறிஞ்சி

நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்குங்
கடுவிசை யுருமின் கழறுகுர லளைஇக்
காலொடு வந்த கமஞ்சூல் மாமழை
ஆரளி யிலையோ நீயே பேரிசை
இமையமுந் துளக்கும் பண்பினை
துணையில ரளியர் பெண்டிரிஃ தெவனே.

தலைமகன் இரவுக்குறி வந்துழி அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

## 636. குறுந்தொகை - 183. முல்லை

சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ
நம்போற் பசக்குங் காலைத் தம்போற்
சிறுதலைப் பிணையிற் றீர்ந்த நெறிகோட்டு
இரலை மானையுங் காண்பர்கொல் நமரே
புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயி லெருத்திற் றோன்றும்
புன்புல வைப்பிற் கானத் தானே.

பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## 637. குறுந்தொகை - 200. நெய்தல்

பெய்தகுன் றத்துப் பூநாறு தண்கலுழ்
மீமிசைத் தாஅய் வீசும் வளிகலந்து
இழிதரும் புனலும் வாரார் தோழி
மறந்தோர் மன்ற மறவா நாமே
கால மாரி மாலை மாமலை

இன்னிசை யுருமின முரலும்
முன்வர லேமஞ் செய்தகன் றோரே.

பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி பருவ மன்று வம்பு என்றவழித் தலைமகள் சொல்லியது.



## ஔவையார்

### 638. குறுந்தொகை - 364. மருதம்

அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூரன்
பொற்கோ லவிர்தொடித் தற்கெழு தகுவி
எற்புறங் கூறு மென்ப தெற்றென
வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன வவ்வரைக்
கண்பொர மற்றதன் களவர்
மண்கொளற் கிவரு மள்ளர் போரே.

வேறொரு பரத்தை தன்னைப்புறங்கூறினாள் எனக் கேட்ட இற் பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது.

### 639. குறுந்தொகை - 388. பாலை

நீர்க்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை யொற்றினும் வாடா தாகுங்
கவணை யன்ன பூட்டுப் பொரு தசாவா
உமண ரொழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கு முன்பின் மையின்

யானை கைம்மடித் துயவுங்
கானமு மினியவா நும்மொடு வரினே.

தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமையுணர்ந்த தலைமகன் சுரத்து வெம்மையும் தலைமகள் மென்மையுங் குறித்துச் செல வழுங்கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது

## 640. நற்றிணை - 129. குறிஞ்சி

பெருநகை கேளாய் தோழி காதலர்
ஒருநாள் கழியினு முயிர்வேறு படூஉம்
பொம்ம லோதி நம்மிவ ணொழியச்

செல்ப வென்ப தாமே சென்று
தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை
வாழ்து மென்ப நாமே யதன்றலைக்

கேழ்கிள ருத்தி யரவுத்தலை பனிப்பப்
படுமழை யுருமி னுரற்றுகுரல்
நடுநாள் யாமத்துந் தமியங் கேட்டே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை முகம்புக்கது.

## 641. நற்றிணை - 187. நெய்தல்

நெய்தல் கூம்ப நிழல்குணக் கொழுகக்
கல்சேர் மண்டிலஞ் சிவந்துநிலந் தணியப்
பல்பூங் கானலு மல்கின் றன்றே
இன்மணி யொலிப்பப் பொழுதுபடப் பூட்டி
மெய்ம்மலி காமத் தியாந்தொழு தொழியத்
தேருஞ் செல்புற மறையு மூரொடு
யாங்கா வதுகொல் தானே தேம்பட
ஊதுவண் டிமிருங் கோதை மார்பின்
மின்னிவர் கொடும்பூட் கொண்கனொடு
இன்னகை மேவிநா மாடிய பொழிலே.

தலைமகன் பகற்குறிவந்து மீள்வானது செலவு நோக்கித் தலைமகள் தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

## 642. நற்றிணை - 295. நெய்தல்

முரிந்த சிலம்பி னெரிந்த வள்ளியிற்
புறனழிந் தொலிவருந் தாழிருங் கூந்தல்
ஆயமு மழுங்கின்று யாயுமஃ தறிந்தனள்

அருங்கடி யயர்ந்தனள் காப்பே யெந்தை
வேறுபன் னாட்டுக் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
கலிமடைக் கள்ளின் சாடி யன்னவெம்
இளநல மிற்கடை யொழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே.
தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

சிறைப்புறமுமாம். ஔவையார் 281

643. நற்றிணை - 371. முல்லை

காயாங் குன்றத்துக் கொன்றை போல
மாமலை விடரகம் விளங்க மின்னி
மாயோ ளிருந்த தேஎ நோக்கி
வியலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பெயல்தொடங் கினவே பெய்யா வானம்
நிழல்திகழ் சுடர்த்தொடி ஞெகிழ வேங்கி
அழல்தொடங் கினளே யாயிழை யதனெதிர்
குழல்தொடங் கினரே கோவலர்
தழங்குகுர லுருமின் கங்கு லானே.
வினைமுற்றி மறுத்தாகின்றான் பாகற்குச்
சொல்லியது.

644. நற்றிணை - 381. முல்லை

அருந்துய ருழத்தலி னுண்மை சான்மெனப்

பெரும்பிறி தின்மையி னிலேனு மல்லேன்
கரைபொரு திழிதருங் கான்யாற் றிருகரை
வேர்கிளர் மராஅத் தந்தளிர் போல
நடுங்க லானா நெஞ்சமொ டிடும்பை
யாங்கனந் தாங்குவென் மற்றே யோங்குசெலற்
கடும்பகட் டியானை நெடுமா னஞ்சி
ஈர நெஞ்ச மோடிச்சேண் விளங்கத்
தேர்வீ சிருக்கை போல
மாரி யிரீஇ மான்றன்றால் மழையே.

பிரிவிடை யாற்றாளாகிய தலைமகள் பருவவரவின்கண் சொல்லியது.

**645.** நற்றிணை - **390.** மருதம்

வாளை வாளிற் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயி லேற்குங்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ளாம்ப லுருவ நெறித்தழை
ஐதக லல்கு லணிபெறத் தைஇ



விழவிற் செலீஇயர் வேண்டு மன்னோ
யாண ரூரன் காணுந னாயின்
வரையா மையோ வரிதே வரையின்

வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையு நற்றோள்
அளிய தோழி தொலையுந பலவே.

பாங்காயின வாயில்கேட்ப நெருங்கிச் சொல்லியது. தலைமகள் தோழிக்குரைப்பாளாய் வாயிலாகப் புக்கார் கேட்பச் சொல்லியதூஉமாம்.

## 646. நற்றிணை - 394. முல்லை

மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர்
வன்பான் முரம்பி னேமி யதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
இடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியன்கொல் நோகோ யானே.

வினைமுற்றி மறுத்தாகின்ற தலைமகனை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது. வன்சொல்லாற் குறைநயப்பித்த தோழி தந்தளித்ததூஉமாம்.

## 647. புறநானூறு - 87.

களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்து
எம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## ஔவையார் 283

## 648. புறநானூறு - 88.

யாவி ராயினுங் கூழை தார்கொண்டு
யாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிறல்
ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்
விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 649. புறநானூறு - 89.

இழையணிப் பொலிந்த வேந்துகோட் டல்குல்
மடவர லுண்கண் வாணுதல் விறலி 5

பொருநரு முளரோநும் அகன்றலை நாட்டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
எறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று
பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னு மென்னையு முளனே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 650. புறநானூறு - 90.

உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்

அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளு முண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய

வரிமணல் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
எழுமரங் கடுக்குந் தாள்தோய் தடக்கை
வழுவில் வன்கை மழவர் பெரும
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 651. புறநானூறு - 91.

வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீத் தனையே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

அதியமான் நெடுமான் அஞ்சியை நெல்லிப்பழம் பெற்றுப் பாடியது.

### 652. புறநானூறு - 92.

யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்



கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

### 653. புறநானூறு - 93.

திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடில் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த

நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்து
அண்ணல் யானை யடுகளத் தொழிய
அருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அதியமான் நெடுமான் அஞ்சி பொருது புண்பட்டு நின்றோனைப் பாடியது.

## 654. புறநானூறு - 94.

<u>ஊ</u>ர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும வெமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 655. புறநானூறு - 95.

இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயி னுடனுண் ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.

திணை - பாடாண்டிணை; துறை - வாண்மங்கலம்.

அதியமான் நெடுமான் அஞ்சி தூதுவிடத் தொண்டைமா னுழைச் சென்ற ஒளவைக்கு அவன் படைக்கலக் கொட்டில் காட்ட அவர் பாடியது.

## 656. புறநானூறு - 96.

அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்கு
இரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றே
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்
கைமான் கொள்ளு மோவென
உறையுள் முனியுமவன் செல்லு மூரே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அதியமான் நெடுமானஞ்சி மகன்
பொகுட்டெழினியைப் பாடியது.

## 657. புறநானூறு - 97.

போர்க்குரை இப் புகன்றுகழித்தவாள்
உடன்றவவர்காப் புடைமதிலழித்தலின்

ஔவையார்

287

ஊனுற மூழ்கி யுருவிழந் தனவே
வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளி னாடுநைத்தலிற்
சுரைதழீஇய விருங்காழொடு
மடைகலங்கி நிலைதிரிந் தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவமலைத்தவர்
குழூஉக்களிற் றுக் குறும்புடைத்தலிற்
பரூஉப்பிணிய தொடிகழிந் தனவே

மாவே, பரந்தொருங்கு மலைந்தமறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்

கணைபொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்கு
இறுக்கல் வேண்டுந் திறையே மறுப்பின்

ஒல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 658. புறநானூறு - 98.

முனைத்தெவ்வர் முரணவியப்

பொரக்குறுகிய நுதிமருப்பினின்
இனக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழுச்செல்லவும்
பிணனழுங்கக் களனுழக்கிச்



செலவசைஇய மறுக்குளம்பினின்
இனநன்மாச் செலக்கண்டவர்

கவைமுள்ளிற் புழையடைப்பவும்

மார்புறச் சேர்ந்தொல்காத்
தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கர் தொய்யென
உறுமுறை மரபிற் புறநின் றுய்க்குங்
கூற்றத் தனையை யாகலிற் போற்றார்
இரங்க விளிவதுகொல்லோ வரம்பணைந்து
இறங்குகதி ரலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

திணை - வாகை; துறை - அரசவாகை; திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையுமாம்.

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 659. புறநானூறு - 99.

அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்
அரும்பெறல் மரபிற் கரும்பிவண் தந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலால் நெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்தியு மமையாய் செருவேட்டு
இமிழ்குரல் முரசி னெழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ



முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே.

திணை - வாகை; துறை - அரசவாகை; திணை - வஞ்சியும்,
துறை - கொற்றவள்ளையுமாம்.

அதியமான் நெடுமான் அஞ்சி கோவலூரெறிந்தானைப் பாடியது

## 660. புறநானூறு - 100.

கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை

உச்சிக் கொண்ட ஊசி வெண்டோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னு மாறாது சினனே யன்னோ
உய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண் தன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே.

திணை - வாகை; துறை - அரசவாகை; திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையுமாம்.

அதியமான் தவமகன் பிறந்தவனைக் கண்டானைப் பாடியது.

## 661. புறநானூறு - 101.

ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினுந்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
இழையணி யானை யியல்தே ரஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினு நீட்டா தாயினும் களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே

அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் தாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

## 662. புறநானூறு - 102.

எருதே யிளைய நுகமுண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
அவலிழியினு மிசையேறினும்
அவண தறியுநர் யாரென வுமணர்
கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய் திங்கள்
நாணிறை மதியத் தனையையிருள்
யாவண தோநின் னிழல்வாழ் வோர்க்கே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அதியமான் நெடுமானஞ்சி மகன் பொகுட்டெழினியைப் பாடியது.

## 663. புறநானூறு - 103.

ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
செல்வை யாயிற் சேணோ னல்லன்
முனைசுட வெழுந்த மங்குல் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி
பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் பெருப்ப
அலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்கவன் றாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - விறலியாற்றுப்படை.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

ஔவையார்

291

## 664. புறநானூறு - 104.

போற்றுமின் மறவீர் சாற்றுதும் நும்மை
ஊர்க்குறு மாக்க ளாடக் கலங்குந்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை
நுண்பல் கருமம் நினையாது
இளையனென் றிகழிற் பெறலரி தாடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

## 665. புறநானூறு - 140.

தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்றா வீகையு முளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை.
நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது.

## 666. புறநானூறு - 187.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்ல ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே.

திணை - பொதுவியல் ; துறை -
பொருண்மொழிக்காஞ்சி.

## 667. புறநானூறு - 206.

வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் தோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு மத்திசைச் சோறே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

அதியமான் நெடுமானஞ்சி பரிசி னீட்டித்தானைப் பாடியது.

## 668. புறநானூறு - 231.

எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்

திங்க ளன்ன வெண்குடை
ஞாயிற் றன்னோன் புகழ்மா யலவே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

## 669. புறநானூறு - 232.

இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழு நாளே

நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ

ஔவையார் 293

கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

## 670. புறநானூறு - 235.

சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே

சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு
மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு
மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்

புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொ னுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ

[லைப்

இனிப், பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்

மில்

கூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயு முயிர்தவப் பலவே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

## 671. புறநானூறு - 269.

குயில்வா யன்ன கூர்முகை யதிரல்
பயிலா தல்கிய பல்காழ் மாலை



மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்
ஒன்றிரு முறையிருந் துண்ட பின்றை
உவலைக் கண்ணித் துடியன் வந்தெனப்
பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றிது
கொள்ளா யென்ப கள்ளின் வாழ்த்திக்
கரந்தை நீடிய வறிந்துமாறு செருவிற்
பல்லா னினநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
தடிந்துமாறு பெயர்த்ததிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

**672. புறநானூறு - 286.**

வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே.

திணை - கரந்தை ; துறை - வேத்தியல்.

**673. புறநானூறு - 290.**

இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போர்
இனக்களிற் றியானை யியல்தேர்க் குருசில்
நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
எடுத்தெறி ஞாட்பி னிமையான் தச்சன்
அடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனும்
உறைப்புழி யோலை போல
மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.

திணை - கரந்தை ; துறை - குடிநிலையுரைத்தல்.

## ஔவையார் 295

**674. புறநானூறு - 295.**

கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்

வெந்துவாய் மடித்து வேறலைப் பெயரித்
தோடுகைத் தெழுதரூஉத் தூங்தெறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி

இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - தும்பை ; துறை - உவகைக்கலுழ்ச்சி.

## 675. புறநானூறு - 311.

களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்கு
ஒருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் சால்புடை யோனே.

திணை - தும்பை ; துறை - பாண்பாட்டு.

## 676. புறநானூறு - 315.

உடைய ளாயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்

மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங் காலே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.
நெடுமானஞ்சியைப் பாடியது.

# 677. புறநானூறு - 367.

நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே யாயினுந் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினு நோற்றோர்க் கொழியும்
ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
இரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை யல்லது
ஆழுங் காலைப் புணைபிறி தில்லை
ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்
யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனினு மிம்மெனப்
பரந்தியங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரைப் பாடியது.

கானப்பேர் தந்த

வேட்ட பெருநற்

## 678. புறநானூறு - 390.

அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் தாயி வாளர்
அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
... ... ...மன்ன முற்றத்து
ஆர்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
அரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்



பாடி நின்ற பன்னா ளன்றியுஞ்
சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் தானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரல் மரபின் மட்டே யன்றியும்

அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற
அகடுநனை வேங்கை வீகண் டன்ன
பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
கண்டாற் கொண்டுமவன் திருந்தடி வாழ்த்தி
... ... ...
வானறி யலவென் பாடுபசி போக்கல்
அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ வறியல் காண்பறி யலரே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

### 679. புறநானூறு - 392.

மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
ஒருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
உருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்து
அணங்குடை மரபி னிருங்களந் தோறும்

வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்ணெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
ஊண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்து
அரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவண் தந்தோன் பெரும்பிறங் கடையே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
அதியமான் நெடுமானஞ்சி மகன் பொகுட்டெழினியைப் பாடியது.

## ௬௩. கங்குல்வெள்ளத்தார்

### 680. குறுந்தொகை - 387. முல்லை

எல்லை கழிய முல்லை மலரக்
கதிர்சினந் தணிந்த கையறு மாலை

உயிர்வரம் பாக நீந்தின மாயின்
எவன்கொல் வாழி தோழி
கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே.

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறையெதி ரழிந்து கூறியது.

## ௬௪. கச்சிப்பேட்டு இளந்தச்சனூர்

### 681. நற்றிணை - 266. முல்லை

கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ



ஆடுடை யிடைமகன் சூடப் பூக்கும்
அகலு ளாங்கட் சீறூ ரேமே
அதுவே சாலுங் காம மன்றியும்
எம்விட் டகறி ராயிற் கொன்னொன் று
கூறுவல் வாழிய ரைய வேறுபட்டு
இரீஇய காலை யிரியிற்
பெரிய வல்லவோ பெரியவர் நிலையே.

தலைமகளைச் செலவுடன் பட்டது. கடிநகர்வரைப்பிற் கண்டு மகிழ்ந்த தலைமகற்குத் தோழி நும்மாலே யாயிற்றென் று சொல்லி யதூஉமாம்.

## ௯௫. கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றனார்

### 682. குறுந்தொகை - 213. பாலை

நசைநன் குடையர் தோழி ஞெரேரெனக்
கவைத்தலை முதுகலை காலி னொற்றிப்
பசிப்பிணிக் கிறைஞ்சிய பரூஉப் பெருந்தரல்
ஒழியி னுண்டு வழியி னெஞ்சின்
தெறித்துநடை மரபிற்றன் மறிக்குநிழ லாகி
நின்றுவெயிற் கழிக்கு மென்பநம்
இன்றுயில் முனிநர் சென்ற வாறே.

நம்பெருமான் நம்பொருட்டு இடைநின்று மீள்வான் எனக் கவன்ற தலைமகட்குத் தோழி உரைத்தது.

### 683. குறுந்தொகை - 216. பாலை

அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை ஞெகிழ நாளும்
பாடமை சேக்கையிற் படர்கூர்ந் திசினே
அன்ன ளளிய ளென்னாது மாமழை



இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித்தே.

பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற

தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## ௯௬. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்

### 684. நற்றிணை - 144. குறிஞ்சி

பெருங்களி றுழுவை தாக்கலி னிரும்பிடிக்
கருவிமா மழையி னரவ மஞ்சுபு
போதே ருண்கண் கலுழவு மேதில்
பேதை நெஞ்சங் கவலை கவற்ற
ஈங்கா கின்றால் தோழி பகுவாய்ப்
பிணவுப்புலி வழங்கு மணங்கருங் கவலை
அவிரற லொழுகும் விரைசெலற் கான்யாற்றுக்
கரையருங் குட்டந் தமியர் நீந்தி
விரவுமலர் பொறித்த தோளர்
இரவின் வருத லறியா தேற்கே.

ஆற்றாது ஏதத்திற்குக் கவன்று சிறைப்புறமாகத் தலைவி சொல்லியது.

### 685. நற்றிணை - 213. குறிஞ்சி

அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழங்
குழவிச் சேதா மாந்தி யயலது
வேய்பயி லிறும்பி னாமறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்

கருவி மாமழை வீழ்ந்தென வெழுந்த
செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்



கொய்புனங் காவலும் நுமதோ
கோடேந் தல்குல் நீடோ வீரே.

மதியுடன்படுக்குந் தலைமகன் சொல்லியது.

## ௧௭. கடப்பனூர்ச் சாண்டிலியன்

### 686. குறுந்தொகை - 307. பாலை

வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
இன்னுப் பிறந்தன்று பிறையே யன்னோ
மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குநடை மடப்பிடி வருத்தம் நோனாது
நிலையுயர் யாஅந் தொலையக் குத்தி

வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணாந்து
அழுங்க னெஞ்சமொடு முழங்கும்
அத்த நீளிடை யழப்பிரிந் தோரே.

பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லிய தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## ௧௮. கடலூர்ப் பல்கண்ணனூர்

### 687. நற்றிணை - 380. மருதம்

நெய்யுங் குய்யு மாடி மெய்யொடு
மாசுபட் டன்றே கலிங்கமுந் தோளுந்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே
வாலிழை மகளிர் சேரித் தோன்றுந்
தேரோற் கொத்தனெ மல்லே மதனாற்
பொன்புரை நரம்பி னின்குரற் சீறியாழ்
எழாஅல் வல்லை யாயினுந் தொழாஅல்
கொண்டுசெல் பாணநின் தண்டுறை யூரனைப்
பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்



புரவியும் பூணிலை முனிகுவ
விரகில மொழியல் யாம் வேட்டதில் வழியே.

பாணற்குத் தோழி வாயில் மறுத்தது.

௬௬. கடியலூர் உருத்திரங்கண்ணனார்

688. அகநானூறு - 167. பாலை

வயங்குமணி பொருத வகையமை வனப்பிற்

பசுங்கா ழல்குல் மாஅ யோளொடு
வினைவனப் பெய்திய புனைபூஞ் சேக்கை
விண்பொரு நெடுநகர்த் தங்கி யின்றே
இனிதுடன் கழிந்தன் று மன்னே நாளைப்
பொருந்தாக் கண்ணேம் புலம்புவந் துறுதரச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே சாத்தெறிந்து
அதர்கூட் டுண்ணு மணங்குடைப் பகழிக்
கொடுவி லாடவர் படுபகை வெரீஇ
ஊரெழுந் துலறிய பீரெழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிஞேங்கு சிறுபுற முரிஞ்ச வொல்கி
இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து
எழுதணி கடவுள் போகலிற் புல்லென் று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணைப்
பானாய் துள்ளிய பறைக்கட் சிற்றிற்
குயில்காழ் சிதைய மண்டி யயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
போர்மடி நல்லிறைப் பொதியி லானே.

தலைமகன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

**689.** குறுந்தொகை - **352.** பாலை

நெடுநீ ராம்ப லடைப்புறத் தன்ன
கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை

அகலிலைப் பலவின் சாரல் முன்னிப்
பகலுறை முதுமரம் புலம்பப் போகுஞ் சிறுபுன் மாலை யுண்மை
அறிவேன் றோழியவர்க் காணா வூங்கே.

பிரிவிடைத் தோழிக்குக் கிழத்தி மெலிந்து கூறியது.

## 690. பத்துப்பாட்டு - 9-வது பட்டினப்பாலை

வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத் தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கண்
காய்ச்செந்நெற் கதிரருந்தி
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியும்

கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்சள்
இனமாவி னிணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
அகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதல் மடநோக்கின்
நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்



விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்கும்
கழிசூழ்படப்பைக் கலியாணர்ப்
பொழிற்புறவிற் பூந்தண்டலை
மழைநீங்கிய மாவிசும்பின்
மதிசேர்ந்த மகவெண்மீன்
உருகெழுதிற லுயர்கோட்டத்து
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை

இருகாமத் திணையேரிப்
புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பிற்
புகழ்நிலைஇய மொழிவளர
அறநிலைஇய வகனட்டிற்
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
யாறுபோலப் பரந்தொழுகி
ஏறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி
நீறாடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
வெண்கோயில் மாசூட்டுந்
தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பலசாலைத்
தவப்பள்ளித் தாழ்காவின்
அவிர்சடை முனிவ ரங்கி வேட்கும்
ஆவுதி நறும்புகை முனைஇக் குயில்தம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்
பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்
தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும்

கடியலூர்...கண்ணனார்

- பட்டினப்பாலை 305

முதுமரத்த முரண்களரி
வரிமண லகன்றிட்டை
இருங்கிளை யினனொக்கற்
கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்
வயலாமைப் புழுக்குண்டும்
வறளடும்பின் மலர்மலைந்தும்
புனலாம்பற் பூச்சூடியும்
நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரும்
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்
கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅது
இருஞ்செருவி னிகன் மொய்ம்பினோர்
கல்லெறியுங் கவண்வெரீஇப்

புள்ளிரியும் புகர்ப்போந்தைப்
பறழ்ப்பன்றிப் பல்கோழி
உறைக்கிணற்றுப் புறச்சேரி

மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்
கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய

குறுங்கூரைக் குடிநாப்பண்
நிலவடைந்த விருள்போல
வலையுணங்கு மணன்முன்றில்
வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த
வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமகிழ்ந்தும்
புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு





பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது
உவவுமடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானல்
மாமலை யணைந்த கொண்மூப் போலவும்

தாய்முலை தழுவிய குழவி போலவும்
தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்
மலியோதத் தொலிகூடற்
றீதுநீங்கக் கடலாடியும்

மாசுபோகப் புனல்படிந்தும்
அலவ னாட்டியு முரவுத்திரை யுழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டும்
அகலாக் காதலொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத்
துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்தும்
மட்டுநீக்கி மதுமகிழ்ந்தும்
மைந்தர் கண்ணி மகளிர் சூடவும்
மகளிர் கோதை மைந்தர் மலையவும்
நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும்
பாட லோர்த்து நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த்தும்
கண்ணடைஇய கடைக்கங்குலான்
மாஅகாவிரி மணங்கூட்டும்
தூஉவெக்கர்த் துயின் மடிந்து
வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவின்
நல்லிறைவன் பொருள்காக்கும்
தொல்லிசைத் தொழில்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
தேர்பூண்ட மாஅ போல
வைகறொறு மசைவின்றி

உல்குசெயக் குறைபடாது
வான்முகந்தநீர் மலைப்பொழியவும்
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை

ஏழகத் தகரோ டுகளு முன்றிற்
குறுந்தொடை நெடும்படிக்காற்
கொடுந்திண்ணைப் பல்தகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
மழைதோயு முயர்மாடத்துச்
சேவடிச் செறிகுறங்கிற்

பாசிழைப் பகட்டல்குற்
றூசுடைத் துகிர்மேனி
மயிலியல் மானோக்கிற்
கிளிமழலை மென்சாயலோர்

வளிநுழையும் வாய்பொருந்தி
ஓங்குவரை மருங்கி னுண்டா துறைக்கும்
காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப



விழவரு வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய
மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்
வருபுனல் தந்த வெண்மணற் கான்யாற்று
உருகெழு கரும்பி னொண்பூப் போலக்
கூழுடைக் கொழுமஞ்சிகைத்
தாழுடைத் தண்பணியத்து
வாலரிசிப் பலிசிதறிப்
பாகுகுத்த பசுமெழுக்கிற்
காழூன்றிய கவிகிடுகின்
மேலூன்றிய துகிற்கொடியும்
பல்கேள்வித் துறைபோகிய

தொல்லாணை நல்லாசிரியர்
உறழ்குறித் தெடுத்த வுருகெழு கொடியும்
வெளிவிளக்குங் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன் றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
மிசைக்கூம்பின் நசைக்கொடியும்
மீன்தடிந்து விடக்கறுத்து
ஊன்பொரிக்கு மொலிமுன்றில்
மணற்குவைஇ மலர்சிதறிப்
பலர்புகுமனைப் பலிப்புதவின்
நறவுநொடைக் கொடியோடு
பிறபிறவு நனிவிரைஇப்
பல்வே றுருவிற் பதாகை நீழற்
செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பிற்
செல்லா நல்லிசை யமரர் காப்பின்
நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காவின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த வாரமு மகிலும்
தென்கடல் முத்துங் குணகடற் றுகிரும்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்

ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்
நீர்நாப் பண்ணும் நிலத்தின் மேலும்
ஏமாப்ப இனிதுதுஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
வலைஞர்முன்றில் மீன்பிறழவும்
விலைஞர்குரம்பை மாவீண்டவும்
கொலைகடிந்துங் களவுநீக்கியும்
அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்
நல்லானொடு பகடோம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணிய மட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங்
குறை
பல்பண்டம் பகர்ந்துவீசும்
[கொடாது
தொல்கொண்டித் துவன்றிருக்கைப்
பல்லாயமொடு பதிபழகி

வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்
சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே கூருகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர், பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று



பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணிதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து
உருகெழு தாய மூழி னெய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான் செற்றோர்
கடியரண் தொலைத்த கதவுகொல் மருப்பின்
முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றாள்
உகிருடை யடிய வோங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு
வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப்
பேய்க்க ணன்ன பிளிறுகடி முரசம்

மாக்க ணகலறை யதிர்வன முழங்க
முனைகெடச் சென்று முன்சம முருக்கித்
தலைதவச் சென்று தண்பணை யெடுப்பி
வெண்பூக் கரும்பொடு செந்நெல் நீடி
மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்
கராஅங் கலித்த கண்ணகன் பொய்கைக்
கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச்
செறுவும் வாவியு மயங்கி நீரற்று
அறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவும்
கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியிற்
பருநிலை நெடுந்தூ ணொல்கத் தீண்டிப்
பெருநல் யானையொடு பிடிபுணர்ந் துறையவும்
அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் தீந்தொடை யோர்க்கும்
பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி

அழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவும்
அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
பிணந்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்
கொடுங்கால் மாடத்து நெடுங்கடைத் துவன்றி
விருந்துண் டானாப் பெருஞ்சோற் றட்டில்
ஒண்சுவர் நல்லி லுயர்திணை யிருந்து
பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்த்

தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக்
கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட
உணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நன்பகற் குழறவும்
அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற
மலையகழ்க் குவனே கடல்தூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலிற்
பல்லொளியர் பணிபொடுங்கத்
தொல்லருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாள்

மாத்தானை மறமொய்ம்பிற்
செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
இருங்கோவேள் மருங்குசாயக்
காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயில்தொறும் புதைநிறீஇப்
பொருவேமெனப் பெயர்கொடுத்து

ஒருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயில்
மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி
விசிபிணி முழவின் வேந்தர் சூடிய
பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்காற்
பொற்றொடிப் புதல்வ ரோடி யாடவும்
முற்றிழை மகளிர் முகிழ்முலை திளைப்பவும்
செஞ்சாந்து சிதைந்த மார்பி னொண்பூண்
அரிமா வன்ன அணங்குடைத் துப்பிற்
றிருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய
வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.

சோழன் கரிகாற்பெருவளத்தானைப் பாடியது.

**690-a** முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்
இச்சக் கரமே யளந்ததால்—செய்ச்செய்
அரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்
கரிகாலன் கானெருப் புற்று.

**691.** பத்துப்பாட்டு - **4**-வது பெரும்பாணாற்றுப்படை

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி
காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன்
உள்ளகம் புரையு மூட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
உருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
சுனைவறந் தன்ன விருள்தூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரள்தோள் மடந்தை முன்கைக்



குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பிற்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
தொடையமை கேள்வி யிடவயின் தழீஇ
வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதரும்
தண்கடல் வரைப்பிற் றாங்குநர்ப் பெறாது
பொழிமழை துறந்த புகைவேய் குன்றத்துப்

பழுமரந் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்

புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண
பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்
கருவி வானந் துளிசொரிந் தாங்குப்
பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு
வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி
வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண்டு
யாமவ ணின்றும் வருதும் நீயிரும்
இருநிலங் கடந்த திருமறு யார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபின் உரவோ னும்பல்
மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையற் படர்குவி ராயின்
கேளவ னிலையே கெடுகநின் னவலம்
அத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்
உருமு முரறு தரவுந் தப்பா

காட்டு மாவு முறுகண் செய்யா
வேட்டாங்கு, அசைவழி யசைஇ நசைவழித்
தங்கிச் சென்மோ இரவல சிறக்கநின் னுள்ளம்

கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து
முழவி னன்ன முழுமர வுருளி
எழூஉப்புணர்ந் தன்ன பரூஉக்கை நோன்பார்
மாரிக் குன்ற மழைசுமந் தன்ன
ஆரைவேய்ந்த அறைவாய்ச் சகடம்
வேழங் காவலர் குரம்பை யேய்ப்பக்
கோழி சேக்குங் கூடுடைப் புதவின்
முளையெயிற் றிரும்பிடி முழந்தா ளேய்க்கும்
துளையரைச் சீறுரல் தூங்கத் தூக்கி
நாடக மகளி ராடுகளத் தெடுத்த
விசிவீங் கின்னியங் கடுப்பக் கயிறுபிணித்துக்
காடி வைத்த கலனுடை மூக்கின்
மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்பக்
கோட்டிணர் வேம்பின் ஏட்டிலை மிடைந்த
படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்
பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி
எல்லிடைக் கழியுநர்க் கேம மாக
மலையவுங் கடலவு மாண்பயந் தரூஉம்
அரும்பொரு ளருத்துந் திருந்துதொடை
அடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்

நோன்றாள்

பொருகணை தொலைச்சிய புண்டீர் மார்பின்
விரவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள்
வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச்
சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்
கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட்
கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
உடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்



புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து
அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவின்

நீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன

வரிப்புற வணிலொடு கருப்பை யாடாது
யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தகர்
ஈத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை
மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
ஈன்பிண வொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்
உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
இருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்பு லடக்கிய வெண்ப லெயிற்றியர்
பார்வை யாத்த பறைதாள் விளவின்
நீழன் முன்றில் நிலவுரற் பெய்து
குறுங்கா ழுலக்கை யோச்சி நெடுங்கிணற்று
வல்லூற் றுவரி தோண்டித் தொல்லை
முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி
வாரா தட்ட வாடூன் புழுக்கல்
வாடாத் தும்பை வயவர் பெருமகன்
ஓடாத் தானை யொண்டொழிற் கழற்கால்
செவ்வரை நாடன் சென்னிய மெனினே
தெய்வ மடையிற் றேக்கிலைக் குவைஇநும்
பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்
மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்
வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த
அகழ்சூழ் பயம்பின் அகத்தொளித் தொடுங்கிப்

புகழா வாகைப் பூவி னன்ன
வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கும்
அரைநாள் வேட்ட மழுங்கிற் பகனாட்



பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையும்
நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணும்
அருஞ்சுர மிறந்த வம்பர்ப் பருந்துபட
ஒன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி
வைந்நுதி மழுங்கிய புலவுவா யெஃகம்
வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாட்
சாபஞ் சார்த்திய கணைதுஞ்சு வியனகர்
ஊகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின்
வரைத்தேன் புரையுங் கவைக்கடைப் புதையொடு
கடுந்துடி தூங்குங் கணைக்காற் பந்தர்த்
தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்
வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்
கொடுநுகந் தழீஇய புதவிற் செந்நிலை
நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயிற்
கொடுவி லெயினக் குறும்பிற் சேப்பின்

களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன
சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும்

பெறுகுவிர்

யானை தாக்கினும் அரவுமேற் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
சூல்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன புல்லணற் காளை
செந்நா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
இல்லடு கள்ளின் தோப்பி பருகி
மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்

சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூஉப்
பகல்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை
முரண்தலை கழிந்த பின்றை மறிய

குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்
அதளோன் துஞ்சுங் காப்பின் உதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்
இடுமுள் வேலி யெருப்படு வரைப்பின்
நள்ளிருள் விடியற் புள்ளெழப் போகிப்
புலிக்குரல் மத்த மொலிப்ப வாங்கி
ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகிழ்
உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாள்மோர் மாறு நன்மா மேனிச்

சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மகள்
அளவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்

மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்
இருங்கிளை ஞெண்டின் சிறுப்பார்ப் பன்ன

பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்
தொடுதோல் மரீஇய வடுவாழ் நோனடி
விழுத்தண் டூன்றிய மழுத்தின் வன்கை

உறிக்கா வூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்
மேம்பா லுரைத்த வோரி யோங்குமிசைக்
கோட்டவுங் கொடியவும் விரைஇக் காட்ட
பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
ஒன்றம ருடுக்கைக் கூழா ரிடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
அந்நு ணவிர்புகை கமழக் கைம்முயன்று

ஞெலிகோற் கொண்ட பெருவிறல் ஞெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்
இன்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி முள்ளுடுத்து
எழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்
பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்
களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்க்
குறுஞ்சாட் டுருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்
பருவ வானத்துப் பாமழை கடுப்பக்
கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்
நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன
குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்
புகரிணர் வேங்கை வீகண் டன்ன
அவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற்று
இன்சுவை மூரற் பெறுகுவிர் ஞாங்கர்க்
குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
அரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பி னறுமல ரன்ன

வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புல மிறந்த பின்றை மென்றோல்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன
கவைத்தா ளலவ னளற்றளை சிதையப்
பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
காரேறு பொருத கண்ணகன் செறுவின்



உழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்
முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்
களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்
கட்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கால் மாமலர் கொய்துகொண் டவண
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டிப்
புணர்நார்ப் பெய்த புனைவின் கண்ணி
ஈருடை யிருந்தலை யாரச் சூடிப்
பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்
இரும்புவடித் தன்ன மடியா மென்றோற்

கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர்
பழஞ்சோற் றமலை முனைஇ வரம்பிற்
புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்
அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉம்
நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதி யன்ன
பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்
பாம்புறை மருதி னோங்குசினை நீழற்
பலிபெறு வியன்கள மலிய வேற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடும்
துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோற்
சிலம்பி வானூல் வலந்த மருங்கின்
குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சிப்
பகடூர் பிழிந்த பின்றைத் துகள்தப
வையுந் துரும்பும் நீக்கிப் பைதறக்
குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும்

தண்பணை தழீஇய தளரா விருக்கைப்
பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்

கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்குல்
ஏணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த கூடோங்கு நல்லிற்
றச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்தம் வீட வலர்முலைச்
செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்து
அமளித் துஞ்சு மழகுடை நல்லிற்
றொல்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவிர்
மழைவிளை யாடுங் கழைவள ரடுக்கத்து
அணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன்
கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்கு
எந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை
விசய மடூஉம் புகைசூ ழாலைதொறும்
கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்
வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇத்
தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்
கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய
பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்
இளையரு முதியருங் கிளையுடன் துவன்றிப்
புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்

செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்
மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்
கோடை நீடினுங் குறைபட லறியாத்
தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்
கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்
அவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்

பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி
தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர்
பச்சூன் பெய்த சுவற்பிணி பைந்தோற்
கோள்வல் பாண்மகன் தலைவலித் தியாத்த
நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇக்
கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை
நீர்நணிப் பிரம்பி னடுங்குநிழல் வெரூஉம்
நீத்துடை நெடுங்கயந் தீப்பட மலர்ந்த
கடவு ளொண்பூ அடார்த லோம்பி
உறைகால் மாறிய வோங்குயர் நனந்தலை
அகலிரு வானத்துக் குறைவி லேய்ப்ப
அரக்கிதழ்க் குவளையொடு நீலம் நீடி
முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கைக்
குறுந ரிட்ட கூம்புவிடு பன்மலர்
பெருநா ளமையத்துப் பிணையினிர் கழிமின்
செழுங்கன் று யாத்த சிறுதாட் பந்தர்ப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்

மறைகாப் பாள ருறைபதிச் சேப்பின்
பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்
வளைக்கை மகடூஉ வயினறிந் தட்ட
சுடர்க்கடைப் பறவைப் பெயர்ப்படு வத்தம்
சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து
உருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி யளைஇப் பைந்துணர்
நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த





தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவிர்
வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇப்
புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை
இரைதேர் மணிச்சிர லிரைசெத் தெறிந்தெனப்
புள்ளார் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது
கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த
வேள்வித் தூணத் தசைஇ யவனர்
ஓதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனிற் பையத் தோன்றும்

நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்

நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணல்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின்
நெல்லுழு பகட்டொடு கறவை துன்று
ஏழகத் தகரோ டெகினங் கொட்கும்
கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோற்

பைங்கா ழல்குல் நுண்டுகில் நுடங்க
மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்
பீலி மஞ்ஞையி னியலிக் கால
தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்தோய் மாடத்து வரிப்பந் தசைஇக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய
முத்த வார்மணற் பொற்கழங் காடும்

பட்டின மருங்கி னசையின் மூட்டில்
பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயிற்

செம்பூத் தூஉய செதுக்குடை முன்றிற்
கள்ளடு மகளிர் வள்ளம் நுடக்கிய
வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பின்
ஈர்ஞ்சே ருடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது

நென்மா வல்சி தீற்றிப் பன்னாள்
குழிநிறுத் தோம்பிய குறுந்தா ளேற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
வான மூன்றிய மதலை போல
ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து

இரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்
துறைபிறக் கொழியப் போகிக் கறையடிக்
குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும்
வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த

மஞ்சள் முன்றில் மணநாறு படப்பைத்
தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பின்

தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்
வீழில் தாழைக் குழவித் தீநீர்க்
கவைமுலை யிரும்பிடிக் கவுள்மருப் பேய்க்கும்
குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்
திரளரைப் பெண்ணை நுங்கொடு பிறவும்
தீம்பல் தார முனையிற் சேம்பின்

முளைப்புற முதிர்கிழங் கார்குவிர் பகற்பெயல்
மழைவீழ்ந் தன்ன மாத்தாட் கமுகின்
புடைசூழ் தெங்கின் மூப்புடைத் திரள்காய்
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரச்
சோறடு குழிசி யிளக விழூஉம்
வீயா யாணர் வளங்கெழு பாக்கத்துப்
பன்மர நீளிடைப் போகி நன்னகர்
விண்தோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த
வாடா வள்ளியின் வளம்பல தரூஉம்
நாடுபல கழிந்த பின்றை நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்
வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்

பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூக்
காரகற் கூவியர் பாகொடு பிடித்த
இழைசூழ் வட்டம் பால்கலந் தவைபோல்
நிழல்தாழ் வார்மணல் நீர்முகத் துறைப்பப்
புனல்கால் கழீஇய பொழில்தொறுந் திரள்காற்
சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடந் தொலைச்சி நாளும்
பெருமகி ழிருக்கை மரீஇச் சிறுகோட்டுக்
குழவித் திங்கட் கோணேர்ந் தாங்குச்
சுறவுவா யமைத்த சுரும்புசூழ் சுடர்நுதல்
நறவுபெயர்த் தமர்த்த நல்லெழில் மழைக்கண்
மடவரல் மகளிரொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்
செவ்விகொள் பவரோ டசைஇ யவ்வயின்
அருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிதும்
கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்
காழோ ரிகழ்பத நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளம்
கடுஞ்சூல் மந்தி கவருங் காவிற்
களிறுகத னடக்கிய வெளிறில் கந்தின்
திண்டேர் குழித்த குண்டுநெடுந் தெருவிற்
படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க்
கடைகால் யாத்த பல்குடி கெழீஇக்
கொடையுங் கோளும் வழங்குநர்த் தடுத்த
அடையா வாயில் மிளைசூழ் படப்பை

நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பின்
இழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக்
கொழுமென் சினைய கோளி யுள்ளும்
பழமீக் கூறும் பலாஅப் போலப்



புலவுக்கட லுடுத்த வானஞ் சூடிய
மலர்தலை யுலகத் துள்ளும் பலர்தொழ
விழவின்மேம் பட்ட பழவிறல் மூதூர்
அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்
அந்தி வானத் தாடுமழை கடுப்ப
வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர்க் கடந்த கொடிஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவி னைவர் போல
அடங்காத் தானையோ டுடன்றுமேல் வந்த
ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்துக்
கச்சி யோனே கைவண் தோன்றல்

நச்சிச் சென்றோர்க் கேம மாகிய
அளியுந் தெறலுந்தனக் கெளிய வாகலின்
மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட
நயந்தோர் தேஎம் நன்பொன் பூப்ப
நட்புக்கொளல் வேண்டி நயந்திசி னோரும்
துப்புக்கொளல் வேண்டிய துணையி லோரும்

கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப்
பல்வேறு வகையிற் பணிந்த மன்னர்

இமையோ ருறையுஞ் சிமையச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர் போகு மிரியல் மாக்கள்
ஒருமரப் பாணியிற் றூங்கி யாங்குத்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்துப்
பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்

கருங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து

இறையுறை புறவின் செங்காற் சேவல்
இன்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்க்
குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்



பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி
இடைதெரிந் துணரு மிருள்தீர் காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்து

உரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்
பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்

கொடுவரிக் குருளை கொளவேட் டாங்குப்
புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்

கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினும்
ஒன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்

துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்குத்
தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென
இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்
கடனறி மரபிற் கைதொழூஉப் பழிச்சி
நின்னிலை தெரியா வளவை யந்நிலை
நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க
நில்லா வுலகத்து நிலைமை தூக்கி
அந்நிலை யணுகல் வேண்டி நின்னரைப்
பாசி யன்ன சிதர்வை நீக்கி
ஆவி யன்ன வவிர்நூற் கலிங்கம்
இரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்
கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வல்லோ னட்ட பல்லூன் கொழுங்குறை
அரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்
தெரிகொ ளரிசித் திரணெடும் புழுக்கல்



அருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்
விருப்புடை மரபிற் கரப்புடை யடிசில்
மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து
ஆனா விருப்பிற் றானின் றூட்டி

மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கும்
ஆடுவண் டிமிரா வழலவிர் தாமரை
நீடிரும் பித்தை பொலியச் சூட்டி
உரவுக்கடல் முகந்த பருவ வானத்துப்
பகற்பெயற் றுளியின் மின்னுநிமிர்ந் தாங்குப்
புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்
தொடையமை மாலை விறலியர் மலைய
நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி
அரித்தேர் நல்கியு மமையான் செருத்தொலைத்து
ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த
விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ
அன்றே விடுக்குமவன் பரிசி லின்சீர்க்
கின்னர முரலு மணங்குடைச் சாரல்
மஞ்ஞை யாலு மரம்பயி லிறும்பிற்
கலைபாய்ந் துதிர்த்த மலர்வீழ் புறவின்
மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே.

தொண்டைமானிளந்திரையனைப் பாடியது.

**691-a** கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்

சினவே

கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
[ற்
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.

## ௧௦௦. கடுந்தொடைக் காவினார்

### 692. அகநானூறு - 109. பாலை

பல்லிதழ் மென்மல ருண்க ணல்யாழ்
நரம்பிசைத் தன்ன வின்றீங் கிளவி
நலநல் கொருத்தி யிருந்த வூரே
கோடுழு களிற்றின் றொழுதி யீண்டிக்
காடுகால் யாத்த நீடுமரச் சோலை
விழைவெளி லாடுங் கழைவளர் நனந்தலை
வெந்நுனை யம்பின் விசையிட வீழ்ந்தோர்
எண்ணுவரம் பறியா வுவலிடு பதுக்கைச்
சுரங்கெழு கவலைக் கோட்பாற் பட்டென
வழங்குநர் மடிந்த வத்த மிறந்தோர்
கைப்பொரு ளில்லை யாயினு மெய்க்கொண்டு
இன்னுயிர் செகாஅர் விட்டகல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரியத ளிறுக்கும்
அறனில் வேந்த னாளும்
வறனுறு குன்றம் பலவிலங் கினவே.

இடைச் சுரத்துத் தலைமகன் தன் னெஞ்சிற்குச்
சொல்லியது.

## ௧௦௧. கடுந்தோட் கரவீரன்

### 693. குறுந்தொகை - 69. குறிஞ்சி

கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர்
சார ஞட நடுநாள்
செருக்குஞ்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே.

தோழி இரவுக்குறி மறுத்தது.

## கoஉ. கடுவன் இளமள்ளனார்

### 694. நற்றிணை - 150. மருதம்

நகைநன் குடையன் பாணநும் பெருமகன்
மிளைவலி சிதையக் களிறுபல பரப்பி
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வழுதி வாழிய பலவெனத் தொழுதீண்டு
மன்னெயி லுடையோர் போல வஃதியாம்
என்னலும் பரியலோ விலமெனத் தண்ணடைக்
கலிமா கடைஇய வந்தெஞ் சேரித்
தாருங் கண்ணியுங் காட்டி யொருமைய
நெஞ்சங் கொண்டமை விடுமோ வஞ்சக்
கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்
கதம்பெரி துடையள்யா யழுங்கலோ விலளே.

தலைவின் ஜெழுகப்படாகின்ற பரத்தை தலைவனை

நெருங்கிப் பாணற்குரைத்தது.

## க௦ரு. கடுவன் இளவெயினனார்

### 695. பரிபாடல் - 3.

மாஅ யோயே மாஅ யோயே
மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
மணிதிக ழுருவின் மாஅ யோயே
தீவளி விசும்பு நிலனீ ரைந்தும்
ஞாயிறுந் திங்களு மறனு மைவருந்
திதியின் சிறாரும் விதியின் மக்களும்
மாசி லெண்மரும் பதினொரு கபிலருந்
தாமா விருவருந் தருமனு மடங்கலும்
மூவே ழுலகமு முலகினுள் மன்பதும்
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்
மாயா வாய்மொழி யுரைதர வலந்து
வாய்மொழி யோடை மலர்ந்த

தாமரைப் பூவினுட் பிறந்தோ னுந் தாதையும்
நீயென மொழியுமா லந்தண ருருமறை
ஏஎர், வயங்குபூ ணமரரை வௌவிய வமிழ்திற்
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளினை
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளின்
நிவந்தோங் குயர்கொடிச் சேவ லோய்நின்
சேவடி தொழாரு முளரோ வவற்றுட்
கீழே ழுலகமு முற்ற வடியினை
தீசெங் கனலியுங் கூற்றமு ஞமனும்
மாசிலா யிரங்கதிர் ஞாயிறுந் தொகூஉம்
ஊழி யாழிக்க ணிருநில முருகெழு
கேழலாய் மருப்பி னுழுதோ யெனவும்
மாவிசும் பொழுகுபுனல் வறள வன்னச்
சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோ யெனவும்
ஞாலத் துறையுட் டேவரும் வானத்து
நாலெண் தேவரும் நயந்துநிற் பாடுவோர்
பாடும் வகையேயெம் பாடல் தாமப்
பாடுவார் பாடும் வகை
கூந்த லென்னும் பெயரொடு கூந்தல்
எரிசினங் கொன்றோய் நின் புகழுருவின கை
நகை யச் சாக நல்லமிர் து கலந்த
நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை
இருகை மாஅல்
முக்கை முனிவ நாற்கை யண்ணல்
ஐங்கைம் மைந்த வறுகை நெடுவேள்
எழுகை யாள வெண்கை யேந்தல்

ஒன்பதிற் றுத் தடக்கை மன்பே ராள
பதிற் றுக்கை மதவலி நூற் றுக்கை யாற்றல்
ஆயிரம் விரித்தகைம் மாய மள்ள
பதினா யிரங்கை முதுமொழி முதல்வ
நூறா யிரங்கை யாறறி கடவுள்
அனைத்து மல்லபல வடுக்க லாம்பல்
இனைத்தென வெண்வரம் பறியா யாக்கையை

## கடுவன் இளவெயினனார்

331

நின்னைப் புரைநினைப்பி னீயல துணர்தியோ
முன்னை மரபின் முதுமொழி முதல்வ
நினக்குவிரிந் தகன்ற கேள்வி யனைத்தினும்
வலியினு மனத்தினு முணர்வினு மெல்லாம்
வனப்புவரம் பறியா மரபி னோயே
அணிநிழல் வயங்கொளி யீரெண் டீங்கதிர்ப்
பிறைவளர் நிறைமதி யுண்டி
அணிமணிப் பைம்பூ ணமரர்க்கு முதல்வனீ
திணிநிலங் கடந்தக்காற் றிரிந்தயர்ந் தகன்றோடி

நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணிநெகிழ் பவிழ்தண்டார்
அன்னவர் படவல்லா வவுணர்க்கு முதல்வனீ
அதனால், பகைவ ரிவரிவர் நட்டோ ரென்னும்
வகையு முண்டோநின் மரபறி வோர்க்கே
ஆயிர வணர்தலை யரவுவாய்க் கொண்ட
சேவ லூர்தியுஞ் செங்கண் மாஅல்

ஓஒவெனக் கிளக்குங் கால முதல்வனை
ஏஎ இன கிளத்தலி னினைமைநற் கறிந்தனம்

தீயினுட் டெறனீ பூவினு ணாற்றநீ
கல்லினுள் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினு ளன்புநீ மறத்தினுள் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுட ரொளியுநீ திங்களு ளளியுநீ
அனைத்துநீ யனைத்தினுட் பொருளுநீ யாதலின்
உறைவு முறைவது மிலையே யுண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை
முதன்முறை யிடைமுறை கடைமுறை தொழிலிற்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே
பறவாப் பூவைப் பூவி னோயே
அருள்குடை யாக அறங்கோ லாக
இருநிழல் படாமை மூவே ழுலகமும்
ஒருநிழ லாக்கிய வேமத்தை மாதோ
பாழெனக் காலெனப் பாகென வொன்றென
இரண்டென மூன்றென நான்கென வைந்தென

ஆறென வேழென வெட்டெனத் தொண்டென
நால்வகை யூழியெண் ணவிற்றுஞ் சிறப்பினை
செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்

இடவல குடவல கோவல காவல
காணா மரப நீயா நினைவ
மாயா மன்ன வுலகாள் மன்னவ
தொல்லியற் புலவ நல்லியாழ்ப் பாண
மாலைச் செல்வ தோலாக் கோட்ட
பொலம்புரி யாடை வலம்புரி வண்ண
பருதி வலவ பொருதிறன் மல்ல
திருவின் கணவ பெருவிறல் மள்ள
மாநில மியலா முதன்முறை யமையத்து
நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய
வாய்மொழி மகனொடு மலர்ந்த
தாமரைப் பொகுட்டுநின் னேமி நிழலே.

கடவுள் வாழ்த்து. பெட்டனாகனார் இசை. பண்ணுப் பாலையாழ்.

**696.** பரிபாடல் - **4.**

ஐந்திரு ளறநீக்கி நான்கினுட் டுடைத்துத்தம்
ஒன்றுற்றுப் படுத்தநின் னூர்வலர் தொழுதேத்தி
நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கா லவைநினக்கு
இறும்பூ தன்மைநற் கறிந்தே மாயினும்
நகுதலுந் தகுதியீங் கூங்குநிற் கிளப்பத்
திருமணி திரைபா டவிந்த முந்நீர்
வருமழை யிருஞ்சூல் மூன்றும் புரையு மாமெய்
மாஅ மெய்யொடு முரணிய வுடுக்கையை
நோனா ருயிரொடு முரணிய நேமியை
செயிர்தீர் செங்கட் செல்வ நிற்புகழப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற்
பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி, மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து

கடுவன் இளவெயினனார்

333

அலர்ந்த புகழோன் தாதை யாகலின்
இகழ்வோன், இகழா நெஞ்சின னாகநீ யிகழா
நன்று நட்டவவ னன்மார்பு முயங்கி
யொன்று நட்டவ னுறுவரை மார்பிற்
படிமதஞ் சாம்ப வொதுங்கி
இன்ன லின்னரொ டிடிமுர சியம்ப
வெடிபடா வொடிதூட் டடியொடு
தடிதடி பலபட வகிர்வாய்த்த வுகிரினை
பூருவத்துக் கருவல் கந்தரத்தால்
தாங்கியிவ் வுலகந் தந்தடிப் படுத்ததை நடுவண்
ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்
நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமும் வண்மையும் பூவையுள
நின், தோற்றமு மகலமு நீரினுள
நின், உருவமு மொலியுமா காயத்துள
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள
அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்
ஏம மார்ந்த நிற் பிரிந்து

மேவல் சான்றன வெல்லாம்
சேவலோங் குயர்கொடி யோயே
சேவலோங் குயர்கொடி
நின்னொன் றுயர்கொடி பனை
நின்னொன் றுயர்கொடி நாஞ்சில்
நின்னொன் றுயர்கொடி யானை
நின், ஒன்று வுயர்கொடி யொன்றின்று
விடமுடை யரவினுட லுயிருருங் குவணம்
அவன், மடிமேல் வலந்தது பாம்பு
பாம்புதொடி பாம்பு முடிமேலன
பாம்புபூண் பாம்பு தலைமேலது

பாம்புசிறை தலையன



பாம்பு, படிமதஞ் சாய்த்தோய் பசும்பூணவை
கொடிமே லிருந்தவன் தாக்கிரை யதுபாம்பு
கடுநவை யணங்குங் கடுப்பும் நல்கலும்
கொடுமையுஞ் செம்மையும் வெம்மையுந் தண்மையும்
உள்வழி யுடையை யில்வழி யிலையே
போற்றா ருயிரினும் போற்றுந ருயிரினும்
மாற்றே மாற்ற லிலையே நினக்கு
மாற்றோ ரும்மிலர் கேளிரு மிலரெனும்
வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே
மனக்கோள் நினக்கென வடிவுவே றிலையே

கோளிரு ளிருக்கை யாய்மணி மேனி
நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை
பொன்னிற் றோன்றிய புனைமறு மார்ப
நின்னிற் றோன்றிய நிரையிதழ்த் தாமரை
அன்ன நாட்டத் தளப்பரியவை
நின்னிற் சிறந்த நின்றா ளிணையவை
நின்னிற் சிறந்த நிறைகட வுளவை
அன்னோ ரல்லா வேறு முளவவை
நின்னோ ரன்னோ ரந்தண ரருமறை
அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயு நீயேநின் னார்வலர்
தொழுத கை யமைதியி னமர்ந்தோயு நீயே
அவரவ ரேவ லாளனு நீயே
அவரவர் செய்பொருட் கரணமு நீயே.

கடவுள் வாழ்த்து. பெட்டனாகனார் இசை.

பண்ணுப்பாலையாழ்.

## 697. பரிபாடல் - 5.

பாயிரும் பணிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழல் துவைப்பத் திரியவிட் டெறிந்து

கடுவன் இளவெயினனார்

நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து
வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய
கொன்றுண வஞ்சாக் கொடுவினைக் கொல்தகை
மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை
மூவிரு கயந்தலை மூந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றோர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவவெனப் பேஎ விழவினுள்
வேல னேத்தும் வெறியு முளவே

அவை, வாயு மல்ல பொய்யு மல்ல
நீயே வரம்பிற்றிவ் வுலக மாதலிற்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினு ளுயர்பாகலும்
பிறப்பினு ளிழிபாகலும்
ஏனோர்நின் வலத்தினதே

ஆதி யந்தண னறிந்து பரி கொளுவ
வேத மாபூண் வையத்தே ரூர்ந்து
நாக நாணா மலைவில் லாக
மூவகை, ஆரெயி லோரழ லம்பின் முளிய
மாதிர மழலவெய் தமரர் வேள்விப்
பாக முண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்த காம வதுவையுள்
அமையாப் புணர்ச்சி யமைய நெற்றி
இமையா நாட்டத் தொருவரங் கொண்டு
விலங்கென விண்ணோர் வேள்வி முதல்வன்
விரிகதிர் மணிப்பூ ணவற்குத்தா னீத்தது
அரிதென மாற்றான் வாய்மைய னாதலின்
எரிகனன் றானாக் குடாரி கொண் டவனுருவு
திரித்திட் டோனிவ் வுலகேழு மருளக்
கருப்பெற்றுக் கொண்டோர் கழிந்தசே யாக்கை



நொசிப்பி னேழுறு முனிவர் நனியுணர்ந்து
வசித்ததைக் கண்ட மாக மாதவர்
மனைவியர் நிறைவயின் வசிதடி சமைப்பிற்

சாலார் தானே தரிக்கென வவரவி
உடன்பெய் தோரே யழல்வேட் டவ்வவித்
தடவுநிமிர் முத்தீப் பேணியமன் னெச்சில்
வடவயின் விளங்கா லுறையெழு மகளிருள்
கடவு ளொருமீன் சாலினி யொழிய
அறுவர் மற்றையோரு மந்நிலை யயின்றனர்
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே
நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப்
பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயற்
பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே
அரிதமர் சிறப்பி னமரர் செல்வன்
எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந்
தெறிந்தென
அறுவே று துணியு மறுவ ராகி
ஒருவனை வாழி யோங்குவிறற் சேஎய்
ஆரா வுடம்பினீ யமர்ந்துவிளை யாடிய
போரால் வறுங்கைக்குப் புரந்தர னுடைய
அல்லலி லனலன் றன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன் வானத்து

வளங்கெழு செல்வன்றன் மெய்யிற் பிரித்துத்
திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன்

திருந்துகோல் ஞமன்றன் மெய்யிற்
இருங்கண் வெள்யாட் டெழின்மறி

பிரிவித்து
கொடுத்தோன்

ஆஅங்கு, அவரும் பிறரு மமர்ந்துபடை
மறியு மஞ்ஞையும் வாரணச் சேவலும்

யளித்த

பொறிவரிச் சாபமு மானும் வாளும்
செறியிலை யீட்டியுங் குடாரியுங் கணிச்சியும்
தெறுகதிர்க் கனலியு மாலையு மணியும்
வேறுவே றுருவினிவ் வாறிரு கைக்கொண்டு
மறுவில் துறக்கத் தமரர்செல் வன்றன்



பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம்
பிகந்தோய்
நின்குண மெதிர்கொண்டோ ரறங்கொண்டோ
ரல்லதை
மன்குண முடையோர் மாதவர் வணங்கியோ

ரல்லதை
செறுதி நெஞ்சத்துச் சின நீடி னோருஞ்
சேரா வறத்துச் சீரி லோரும்

அழிதவப் படிவத் தயரி யோரும்
மறுபிறப் பில்லெனு மடவோருஞ் சேரார்
நின்னிழ லன்னோ ரல்ல தின்னோர்
சேர்வா ராதலின் யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பால்
அருளு மன்பு மறனு மூன்றும்
உருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே.

கடவுள் வாழ்த்து. கண்ணனாகனார் இசை.
பண்ணுப்பாலையாழ்.

## ௧௦௪. கடுவன் மள்ளனார்

### 698. அகநானூறு - 70. நெய்தல்

கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
இரும்புலாக் கமழுஞ் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்க ணவ்வலைப் பயம்பா ராட்டிக்

கொழுங்க ணயிலை பகுக்குந் துறைவன்
நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே
அலர்வாய்ப் பெண்டி ரம்பல் தூற்றப்
பலருமாங் கறிந்தனர் மன்னே யினியே வதுவை கூடிய

பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும் கானலம்
பெருந்துறைக் கவினி மாநீர்ப் பாசடைக் கலித்த
கணைக்கால் நெய்தல் விழவணி மகளிர் தழையணிக்
கூட்டும் வெண்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை

22



வெல்போ ரிராம னருமறைக் கவிந்த
பல்வீ ழாலம் போல
ஒலியவிந் தன்றிவ் வழுங்க லூரே.

தலைமகன் வரைவுமலிந்தமை தோழி
தலைமகட்குச் சொல்
லியது.

699. அகநானூறு - 256. மருதம்

பிணங்கரில் வள்ளை நீடிலைப் பொதும்பின்

மடிதுயில் முனைஇய வள்ளுகிர் யாமை
நொடிவிடு கல்லிற் போகி யகன்றுறைப்
பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளின்
நுகர்வா ரருந்து மகிழ்பியங்கு நடையொடு
தீம்பெரும் பழன முழக்கி யயலது
ஆம்பல் மெல்லடை யொடுங்கு மூர
பொய்யா லறிவனின் மாய மதுவே
கையகப் பட்டமை யறியாய் நெருநை
மையெழி லுண்கண் மடந்தையொடு வையை
ஏர்தரு புதுப்புன லுரிதினி னுகர்ந்து
பரத்தை யாயங் கரப்பவு மொல்லாது
கவ்வையா கின்றாற் பெரிதே காண்டகத்
தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்
கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்
திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய
அறனி லாள னறியே னென்ற
திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே.

தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.

## 700. அகநானூறு - 354. முல்லை

மதவலி யானை மறலிய பாசறை
இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப

வென்றுகொடி யெடுத்தனன் வேந்தனுங் கன்றொடு
கறவைப் புல்லினம் புறவுதொ றுகளக்
குழல்வாய் வைத்தனர் கோவலர் வல்விரைந்து
இளைய ரேகுவனர் பரிய விரியுளைக்
கடுநடைப் புரவி வளிவா யோட
வலவன் வள்புவலி யுறுப்பப் புலவர்
புகழ்குறி கொண்ட பொலந்தா ரகலத்துத்
தண்கமழ் சாந்த நுண்டுக ளணிய
வென்றிகொ ளுவகையொடு புகுதல் வேண்டின்
யாண்டுறை வதுகொல் தானே மாண்ட
போதுறழ் கொண்ட வுண்கட்
டூதி லாட்டி திருநுதற் பசப்பே.

வினைமுற்றிய தலைமகற்கு உழையர் சொல்லியது.

## 701. குறுந்தொகை - 82. குறிஞ்சி

வாருறு வணர்கதுப் புளரிப் புறஞ்சேர்பு
அழாஅ லென்றுநம் மழுதகண் துடைப்பார்
யாரா குவர்கொல் தோழி சாரற்
பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகாற்
கொழுங்கொடி யவரை பூக்கும்
அரும்பனி யற்சிரம் வாரா தோரே.

பருவங்கண்டழிந்த தலைமகள் வருவரென்று வற்புறுத்தித்

தோழிக்குச் சொல்லியது.

## ௧௦௫. கணக்காயன் தத்தனார்

### 702. குறுந்தொகை - 304. நெய்தல்

கொல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீ னெறிய
நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து



வெண்டோ டிரியும் வீததை கானற்
கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு
செய்தன மன்றவோர் பகைதரு நட்பே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற
தோழிக்குக் கிழத்தி

யுரைத்தது.

## ௧௦௬. கணியன் பூங்குன்றனார்

### 703. நற்றிணை - 226. பாலை

மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்
உரஞ்சாச் செய்யா ருயர்தவம் வளங்கெடப்
பொன்னுங் கொள்ளார் மன்னர் நன்னுதல்
நாந்த முண்மையி னுளமே யதனால்
தாஞ்செய் பொருளள வறியார் தாங்கசிந்து
என்றூழ் நிறுப்ப நீளிடை யொழியச்
சென்றோர் மன்றநங் காதல ரென்றும்
இன்ன நிலைமைத் தென்ப
என்னோரு மறிபவிவ் வுலகத் தானே.

பிரிவிடைமெலிந்த தலைமகள் வன்புறை எதிர்மொழிந்தது.

## 704. புறநானூறு - 192.

யாது மூரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் றுமிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்

கண்ணகனூர்

பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## க௦எ. கண்ணகனார்

### 705. நற்றிணை - 79. பாலை

சிறைநா ளீங்கை யுறைநனி திரள்வீ
கூரை நன்மனைக் குறுந்தொடி மகளிர்
மணலாடு கழங்கி னறைமிசைத் தாஅம்
ஏர்தர லுற்ற வியக்கருங் கவலைப்
பிரிந்தோர் வந்துநப் புணரப் புணர்ந்தோர்
பிரிதல் சூழ்தலி னரியது முண்டோ
என்றுநாங் கூறிக் காமஞ் செப்புதுஞ்
செப்பாது விடினே யுயிரொடும் வந்தன்று
அம்ம வாழி தோழி
யாதனிற் றவிர்க்குவங் காதலர் செலவே.

பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

### 706. புறநானூறு - 218.

பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்து

அருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

பிசிராந்தையார் வடக்கிருந்தாரைக் கண்டு பாடியது.

### ௧௦௮. கண்ணகாரன் கொற்றனார்

**707.** நற்றிணை - **143.** பாலை

ஐதே கம்ம யானே யொய்யெனத்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை யாயமு நொச்சியுங் காண்டொறும்
நீர்வார் கண்ணேன் கலுழு மென்னினும்
கிள்ளையுங் கிளையெனக் கூஉ மிளையோள்
வழுவிலை ளம்ம தானே குழீஇ
அம்பல் மூதூ ரலர்வாய்ப் பெண்டிர்
இன்னா வின்னுரை கேட்ட சின்னாள்
அறியேன் போல வுயிரேன்
நறிய நாறுநின் கதுப்பென் றேனே.

மனை மருட்சி.

### ௧௦௯. கண்ணங்கொற்றனார் **708.** நற்றிணை - **156.** குறிஞ்சி

நீயே, அடியறிந் தொதுங்கா வாரிருள்

வந்தெங்

கடியுடை வியனகர்க் காவ னீவியும்
பேரன் பினையே பெருங்கன் னாட
யாமே, நின்னும்நின் மலையும் பாடிப் பன்னாட்
சிறுதினை காக்குவஞ் சேறு மதனாற்

பகல்வந் தீமோ பல்பட ரகல
எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி
அரிய லார்ந்தவ ராயினும் பெரியர்
பாடிமிழ் விடர்முகை முழங்க
ஆடுமழை யிறுத்ததெங் கோடுயர் குன்றே.

இரவுக்குறி மறுத்தது.

## கக௦. கண்ணம்புல்லனார்

## 709. அகநானூறு - 63. பாலை

கேளாய் வாழியோ மகளைநின் றோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப வவனொடு
பெருமலை யிறந்தது நோவேன் நோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
முடங்குதா ளுதைத்த பொலங்கெழு பூழி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயி லெறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையு மாங்கண்
அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்
கன்று காணாது புன்கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
கறவை தந்த கடுங்கான் மறவர்
கல்லென் சீறூ ரெல்லியி னசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை
மடமயி லன்னவென் னடைமெலி பேதை

தோட்டுணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட்
சேக்கோ ளறையுந் தண்ணுமை
கேட்குநள் கொல்லெனக் கலுழுமென்
னெஞ்சே.

தலைமகள் புணர்ந்துடன் செல்லச் செவிலி தன் மகளுக்குச் சொல்லியது.

## 710. நற்றிணை - 159. நெய்தல்

மணிதுணிந் தன்ன மாயிரும் பரப்பின்
உரவுத்திரை கெழீஇய பூமலி பெருந்துறை
நிலவுக்குவித் தன்ன மோட்டுமண லிடிகரைக்

கோடுதுணர்ந் தன்ன குருகொழுக் கெண்ணி
எல்லை கழிப்பின மாயின் மெல்ல
வளிசீத்து வரித்த புன்னை முன்றிற்



கொழுமீ னார்கைச் செழுநகர்ச் செலீஇய
எழுவெனி னவளு மொல்லாள் யாமும்
ஒழியென வல்ல மாயினம் யாமத்து
உடைதிரை யொலியிற் றுஞ்சு மலிகடற்
சில்குடிப் பாக்கங் கல்லென
அல்குவ தாகநீ யமர்ந்த தேரே.

தலைவியின் ஆற்றாமையும் உலகியலுங் கூறி வரைவுகடாயது.

## கககக. கண்ணனார்

## 711. குறுந்தொகை - 107. மருதம்

குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்
நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகிக்
கடுநவைப் படீஇயரோ நீயே நெடுநீர்
யாண ரூரனொடு வதிந்த
ஏம வின்றுயி லெடுப்பி யோயே.

பொருள் முற்றிவந்த தலைமகனையுடைய கிழத்தி காமமிக்க கழிபடர் கிளவியாற் கூறியது.

## 712. குறுந்தொகை - 244. குறிஞ்சி

பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்து
உரவுக்களிறு போல்வந் திரவுக்கதவு முயறல்
கேளே மல்லேங் கேட்டனெம் பெரும
ஓரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியாம்
உயங்குதொறு முயங்கு மறனில் யாயே.

இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைத் தாம் காவல் மிகுதியாற் புறப்பட்டு எதிர்கொள்ளப் பெறுதவழிப் பிற்றை ஞான்று தோழி வரைந்துகொள்ளினல்லது இவ்வொழுகலாற்றின் இனிக் கூடலரிதென வரைவுகடாயது.

## ௧௧௨. கதக்கண்ணனார்

### 713. குறுந்தொகை - 88. குறிஞ்சி

ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்
சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்
தொன்முரண் சொல்லுந் துன்னருஞ் சாரல்

நடுநாள் வருதலும் வரூஉம்
வடுநா ணலமே தோழி நாமே.

இரவுக்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி தலைமகட்குச் சொல்லியது.

### 714. குறுந்தொகை - 94. முல்லை

பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து
அரும்பே முன்னு மிகச்சிவந் தனவே
யானே மருள்வென் தோழி பானாள்
இன்னுந் தமியர் கேட்பிற் பெயர்த்தும்
என்னா குவர்கொல் பிரிந்திசி னோரே
அருவி மாமலைத் தத்தக்
கருவி மாமழைச் சிலைதருங் குரலே.

பருவங்கண்டு ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவ லென்பதுபடத் தலைமகள் சொல்லியது.

## ௧௧௩. கதப்பிள்ளையார்

### 715. குறுந்தொகை - 64. முல்லை

பல்லா நெடுநெறிக் ககன்று வந்தெனப்
புன்றலை மன்ற நோக்கி மாலை
மடக்கட் குழவி யலம்வந் தன்ன
நோயே மாகுத லறிந்துஞ்
சேயர் தோழி சேய்நாட் டோரே.

பிரிவிடை ஆற்றாமை கண்டு வருவர் எனச் சொல்லிய தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.



### 716. குறுந்தொகை - 265. குறிஞ்சி

காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது
வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்
தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல இடன்விட்டு
இதழ்தளை யவிழ்ந்த ஏகல் வெற்பன்
நன்னர் நெஞ்சத்தன் தோழி நின்னிலை
யான்தனக் குரைத்தனெ னாகத்
தானா ணினனிஃ தாகா வாறே.

வரையாது பிரிந்த இடத்து அவர் பிரிந்த காரணம் நின்னை வரைந்துகோடல் காரணமாகத்தான் எனத் தோழி தலைமகட்குக் கூறியது.

### 717. குறுந்தொகை - 380. பாலை

விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்
வென்றெறி முரசி னன்பல முழங்கிப்
பெயலா னாதே வானங் காதலர்

நனிசேய் நாட்டர் நம்முன் னலரே
யாங்குச்செய் வாங்கொல் தோழி யீங்கைய
வண்ணத் துய்ம்மல ருதிர
முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே.

பனிப்பருவங் குறித்துப் பிரிந்தான் தலைமகன் ; பிரியப் பருவ வரவின்கண் வேறுபடுவாளாயினும் கதுமென ஆற்றுவிப்பது அரிதெனுங் கருத்தினளாய்க் கூதிர்ப் பருவத்துத் தலைமகள் கேட்பத் தனது ஆற்றாமை விளங்கத் தோழி சொல்லியது.

**718.** நற்றிணை - **135.** நெய்தல்

தூங்க லோலை யோங்குமடற் பெண்ணை
மாவரை புதைத்த மணல்மலி முன்றில்
வரையாத் தாரம் வருவிருந் தயருந்
தன்குடி வாழ்ந ரங்குடிச் சீறூர்
இனிதுமன் றம்ம தானே பனிபடு



பல்சுர முழந்த நல்கூர் பரிய
முழங்குதிரைப் புதுமண லழுந்தக் கொட்கும்
வாலுளைப் பொலிந்த புரவித்
தேரோர் நம்மொடு நகாஅ வூங்கே.

வரைவு நீட்டிப்ப அலராமெனக் கவன்ற தோழி

சிறைப்புற மாகச் சொல்லியது.

## 719. புறநானூறு - 380.

தென்பவ் வத்து முத்துப் பூண்டு
வடகுன் றத்துச் சாந்த முரீஇ
... ... ...ங்கடற் றானை
இன்னிசைய விறல்வென்றித்
தென்னவர் வயமறவன்
மிசைப்பெய்தநீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய
வேறுபெ... ... ...த்துந்து

தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருநன்
துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந் தோர்க்கே யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
... ...த்தார்ப் பிள்ளையஞ் சிறாஅர்
அன்ன னாகன் மாறே யிந்நிலம்
இலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது.

### ககச. கந்தரத்தனார்

## 720. அகநானூறு - 23. பாலை

மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்
பாடுலந் தன்றே பறைக்குர லெழிலி



புதல்மிசைத் தளவி னிதல்முட் செந்நனை
நெருங்குகுலைப் பிடவமொ டொருங்குபிணி யவிழக்
காடே கம்மென் றன்றே யாறே
கோடுடைந் தன்ன கோடற் பைம்பயிர்ப்
பதவின் பாவை முனைஇ மதவுநடை
அண்ண லிரலை யமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டன்றே
அனையகொல் வாழி தோழி மனைய
தாழ்வில் நொச்சி யூழ்வன மலரும்
மவ்வல் மாச்சினை காட்டி
அவ்வள வென்றா ராண்டுச்செய் பொருளே.

தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**721. அகநானூறு - 95. பாலை**

பைபயப் பசந்தன்று நுதலுஞ் சாஅய்
ஐதா கின்றென் தளிர்புரை மேனியும்
பலரு மறியத் திகழ்தரு மவலமும்
உயிர்கொடு கழியி னல்லதை நினையின்
எவனோ வாழி தோழி பொரிகாற்

பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
வாலி யொப்பின் றாம்புடைத் திரள்வீ
ஆறுசெல் வம்பலர் நீளிடை யழுங்க
ஈன வெண்கி னிருங்கிளை கவருஞ்
சுரம்பல கடந்தோர்க் கிரங்குப வென்னார்
கௌவை மேவல ராகி யிவ்வூர்
நிரையப் பெண்டி ரின்னா கூறுவ
புரைய வல்லவென் மகட்கெனப் பரைஇ
நம்முணர்ந் தாறிய கொள்கை
அன்னை முன்னர்யா மென்னிதற் படலே.

போக்குடன்பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## கந்தரத்தனார் 349

### 722. அகநானூறு - 191. பாலை

அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
எரியித ழலரியொ டிடைபட விரைஇ
வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்றடிக் கோலுடை யுமணர் ஊர்கண்
டன்ன வாரம் வாங்கி
அருஞ்சுர மிவர்ந்த வசைவி னோன்றாட்
டிருந்துபகட் டியம்புங் கொடுமணி புரிந்தவர்
மடிவிடு வீளையொடு கடிதெதி ரோடி

ஓமையம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்கு ஏமஞ்
செப்பு மென்றூழ் நீளிடை
அரும்பொருள் நசைஇப் பிரிந்துறை வல்லிச்
சென்றுவினை யெண்ணுதி யாயி னன்றும் உரைத்திசின்
வாழியென் னெஞ்சே நிரைமுகை முல்லை யருந்து
மெல்லிய வாகி
அறலென விரிந்த வுறலின் சாயல்
ஒலியிருங் கூந்தல் தேறுமென
வலிய கூறவும் வல்லையோ மற்றே.
தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

## 723. குறுந்தொகை - 155. முல்லை

முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுளப் பொழுதோ
தான்வந் தன்றே மெழுகான் றூ துலைப் பெய்த
பசுவாய்த் தெண்மணி
மரம்பயி லிறும்பி னார்ப்பச் சுரனிழிபு
மாலை நனிவிருந் தயர்மார்
தேர்வரு மென்னு முரைவா ராதே.
தலைமகள் பருவங்கண்டு அழிந்து சொல்லியது.



## 724. நற்றிணை - 116. குறிஞ்சி

தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந் துணர்க வென்ப மாதோ

வழுவப் பிண்ட நாப்ப ணேமுற்று
இருவெதி ரீன்ற வேற்றலைக் கொழுமுளை
சூல்முதிர் மடப்பிடி நாண்மேய லாரும்
மலைகெழு நாடன் கேண்மை பலவின்
மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்
விடரளை வீழ்ந்துக் காஅங்குத் தொடர்பறச்
சேணுஞ் சென்றுக் கன்றே யறியாது
ஏக லடுக்கத் திருள்முகை யிருந்த
குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர்
இன்னு மோவா ரென்திறத் தலரே.

வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவி தோழிக்கு வன்புறை எதிரழிந்து சொல்லியது.

## 725. நற்றிணை - 146. குறிஞ்சி

வில்லாப் பூவின் கண்ணி சூடி
நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரு
நெடுமாப் பெண்ணை மடல்மா னோயே
கடனறி மன்னர் குடைநிழற் போலப்
பெருந்தண் ணென்ற மரனிழற் சிறிதிழிந்து
இருந்தனை சென்மோ வழங்குக சுடரென
அருளிக் கூடு மார்வ மாக்கள்
நல்லே மென்னுங் கிளவி வல்லோன்
எழுதி யன்ன காண்டகு வனப்பின்
ஐயள் மாயோ ளணங்கிய

மைய னெஞ்ச மென்மொழிக் கொளினே.

பின்னின்ற தலைவன் முன்னிலைப்
புறமொழியாகத் தோழி
கேட்பச் சொல்லியது.



### 726. நற்றிணை - 238. முல்லை

**வ**றங்கொல வீந்த கானத்துக் குறும்பூங் கோதை
மகளிர் குழூஉநிரை கடுப்ப வண்டுவாய் திறப்ப விண்ட
பிடவம் மாலை யந்தி மாலதர் நண்ணிய
பருவஞ் செய்த கருவி மாமழை
அவர்நிலை யறிமோ வீங்கென வருதல் சான்றோர்ப்
புரைவதோ வன்றே மான்றுடன் உரவுரு முரறு நீரிற்
பரந்த
பாம்புபை மழுங்க லன்றியு மாண்ட கனியா
நெஞ்சத் தானும்
இனிய வல்லநின் னிடிநவில் குரலே. தலைமகள்
பருவங்கண்டழிந்தது.

### 727. நற்றிணை - 306. குறிஞ்சி

தந்தை வித்திய மென்றினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ

குளிர்படு கையள் கொடிச்சி செல்கென
நல்ல வினிய கூறி மெல்லக்
கொயல்தொடங் கினரே கானவர் கொடுங்குரற்
சூற்பொறை யிறுத்த கோற்றலை யிருவி
விழவொழி வியன்களங் கடுப்பத் தெறுவரப்
பைத லொருநிலை காண வைகல்
யாங்கு வருவது கொல்லோ தீஞ்சொற்
செறிதோட் டெல்வளைக் குறுமகள்
சிறுபுனத் தல்கிய பெரும்புற நிலையே.

புனமடிவுரைத்துச் செறிப்பறிவுறீஇயது ; சிறைப்புறமுமாம்.

## ககரு. கபிலர்

### 728. அகநானூறு - 2. குறிஞ்சி

கோழிலை வாழைக் கோள்முதிர் பெருங்குலை
ஊழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொ டூழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியா துண்ட கடுவ னயலது
கறிவளர் சாந்த மேறல் செல்லாது
நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்
குறியா வின்பம் எளிதி னின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
குறித்த வின்ப நினக்கெவ னரிய

வெறுத்த வேஎர் வேய்புரை பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளு மினைய ளாயின் தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்
கங்குல் வருதலு முரியை பைம்புதல்
வேங்கையு மொள்ளிணர் விரிந்தன
நெடுவெண் திங்களு மூர்கொண் டன்றே.

பகற்குறிக்கண் செறிப்பறிவுறீஇத் தோழி வரைவுகடாயது.

## 729. அகநானூறு - 12. குறிஞ்சி

யாயே கண்ணினும் கடுங்கா தலளே
எந்தையும், நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
எவனில குறுமக ளியங்குதி யென்னும்
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளி னோருயி ரம்மே
ஏனலங் காவல ரானு தார்த்தொறுங்

கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயங் கொண்மார்

குறவ ரூன்றிய குரம்பை புதைய
வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்

கபிலர்

புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரும்
நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வா ழலளே.

பகற்குறிவாராநின்ற தலைமகன் தோழியாற் செறிப்பறிவுறுக்கப்பட்டு இரவுக்குறிவாரா வரைவல் என்றாற்கு அதுவும் மறுத்து வரைவுகடாயது.

## 730. அகநானூறு - 18. குறிஞ்சி

நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து
பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்றுக்
கராஅந் துஞ்சுங் கல்லுயர் மறிசுழி
மராஅ யானை மதந்தப வொற்றி
உராஅ வீர்க்கு முட்குவரு நீத்தங்
கடுங்கட் பன்றியி னடுங்காது துணிந்து
நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்து
ஈங்கும் வருபவோ வோங்கல் வெற்ப
ஒருநாள் விழும முறினும் வழிநாள்
வாழ்குவ ளல்லளென் தோழி யாவதும்
ஊறில் வழிகளும் பயில வழங்குநர்
நீடின் றாக விழுக்குவ ரதனால்
உலமரல் வருத்த முறுதுமெம் படப்பைக்
கொடுந்தே னிழைத்த கோடுயர் நெடுவரைப்

பழந்தூங்கு நளிப்பிற் காந்தளம் பொதும்பிற்
பகல்நீ வரினும் புணர்குவை யகன்மலை
வாங்கமைக் கண்ணிடை 'கடுப்ப யாய்
ஓம்பின ளெடுத்த தடமென் றோளே.

தோழி இரவு வருவானைப் பகல்வர வென்றது.

## 731. அகநானூறு - 42. குறிஞ்சி

மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்
கொயலரு நிலைஇய பெயலேர் மணமுகைச்





செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டளிரேர் மேனி மாஅ யோயே
நாடுவறங் கூர நாஞ்சில் துஞ்சக்
கோடை நீடிய பைதறு காலைக்
குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்
சென்றுசேக் கல்லாப் புள்ள வுள்ளில்
என்றூழ் வியன்குளம் நிறைய வீசிப்
பெரும்பெயல் பொழிந்த வேம வைகறைப்
பல்லோ ருவந்த வுவகை யெல்லாம்
என்னுட் பெய்தந் தற்றே சேணிடை
ஓங்கித் தோன்று முயர்வரை
வான்றோய் வெற்பன் வந்த மாறே.

தலைமகன் வரைவுமலிந்தமை தோழி தலைமகட்குச்

சொல்லியது.

### 732. அகநானூறு - 82. குறிஞ்சி

ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக
இன்பல் லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்
விழவுக்கள விறலியிற் றோன்று நாடன்
உருவ வல்விற் பற்றி யம்புதெரிந்து
செருச்செய் யானை செந்நெறி வினாஅய்ப்
புலர்குர லேனற் புழையுடை யொருசிறை
மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி யவருள்
ஆரிருட் கங்கு லணையொடு பொருந்தி



ஓர்யா னாகுவ தெவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.

தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றது.

**733.** அகநானூறு - **118.** குறிஞ்சி

கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅற்
றேங்கம ழிணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்து
இயல்முரு கொப்பினை வயநாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை யஞ்சுது மிகல்கொள
இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோட்பிழைத் திரீஇய
அடுபுலி வழங்கு மாரிருள் நடுநாள்
தனியை வருத லதனினு மஞ்சுதும்
என்னா குவள்கொல் தானே பன்னாட்
புணர்குறி செய்த புலர்குர லேனற்
கிளிகடி பாடலும் ஒழிந்தனள்

அளியள் தானின் னளியல திலளே.

செறிப்பறிவுறீஇ யிரவும் பகலும் வாரலென்று வரைவு கடாஅயது.

**734.** அகநானூறு - **128.** குறிஞ்சி

மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொள்வரிற் கனைஇக் காமங்

கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
எவன்கொல் வாழி தோழி மயங்கி
இன்ன மாகவு நன்னர் நெஞ்சம்
என்னொடும் நின்னொடுஞ் சூழாது கைம்மிக்கு
இறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்



கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்பு
இட்டருங் கண்ண படுகுழி யியவின்
இருளிடை மிதிப்புழி நோக்கி யவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே.

இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

**735.** அகநானூறு - **158.** குறிஞ்சி

உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயலான் றவிந்த தூங்கிருள் நடுநாள்
மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
வரையிழி மயிலி னொல்குவன ளொதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
அலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்
சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலு முண்டே யிவள்தான்
சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சழிந் தரணஞ் சேரு மதன்றலைப்
புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
முருக னன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையு மில்ல னாக
அஞ்சுவ ளல்லளோ விவளிது செயலே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

## 736. அகநானூறு - 182. குறிஞ்சி

பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து
வாங்கமை நோன்சிலை யெருத்தத் திரீஇத்

தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்
விளை யம்பி னிளையரொடு மாந்தி
ஓட்டியல் பிழையா வயநாய் பிற்பட
வேட்டம் போகிய குறவன் காட்ட
குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர
முளவுமாத் தொலைச்சுங் குன்ற நாட
அரவெறி யுருமோ டொன்றிக் கால்வீழ்த்து
உரவுமழை பொழிந்த பானாட் கங்குற்
றனியை வந்த வாறுநினைந் தல்கலும்
பனியொடு கலுழுமிவள் கண்ணே யதனாற்
கடும்பகல் வருதல் வேண்டுந் தெய்ய
அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ
உயர்சிமை நெடுங்கோட் டுகள வுக்க
கமழித ழலரி தாஅய் வேலன்
வெறியயர் வியன்களங் கடுக்கும்
பெருவரை நண்ணிய சார லானே.

தோழி இரவுவருவானைப் பகல்வா வென்றது.

## 737. அகநானூறு - 203. பாலை

உடவக்குந ளாயினு முடலுந ளாயினும்

யாயறிந் துணர்க வென்னார் தீவாய்
அலர்வினை மேவ லம்பற் பெண்டிர்
இன்ன ளினையள்நின் மகளெனப் பன்னாள்
எனக்குவந் துரைப்பவுந் தனக்குரைப் பறியேன்
நாணுவ ளிவளென நனிகரந் துறையும்
யானிவ் வறுமனை யொழியத் தானே
அன்னை யறியி னிவணுறை வாழ்க்கை
எனக்கெளி தாக லில்லெனக் கழற்கால்
மின்னொளிர் நெடுவே லிளையோன் முன்னுறப்
பன்மலை யருஞ்சுரம் போகிய தனக்கியான்
அன்னே னன்மை நன்வா யாக
மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
வெய்திடை யுறாஅ தெய்தி முன்னர்ப்



புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந் தாற்றித் துச்சி லிருத்த
நுனைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டு யானாகுக மன்னே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

## 738. அகநானூறு - 218. குறிஞ்சி

கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு

முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த
வாணிற வுருவி னொளிறுபு மின்னிப்
பருஉவுறைப் பல்துளி சிதறிவா னவின்று
பெருவரை நளிர்சிமை யதிர வட்டித்துப்
புயலே றுரைஇய வியலிருள் நடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
றடைஇத் திரண்டநின் தோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயும்
இருள்மயங்கு யாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடரகம் வரவரி தென்னாய்
வரவெளி தாக வெண்ணுதி யதனால்
நுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
தண்ணிது கமழு நின்மார் பொருநாள்
அடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்து மதுவே
அன்னை யறியினு மறிக வலர்வாய்
அம்பல் மூதூர் கேட்பினுங் கேட்க
வண்டிறை கொண்ட வெரிமருள் தோன்றியொடு
ஒண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே.

தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து பகற்குறி நேர்ந்த வாய் பாட்டால் தலைமகனை வரைவு கடாயது.

## 739. அகநானூறு - 238. குறிஞ்சி

மான்றமை யறியா மரம்பயி லிறும்பின்
ஈன்றிளைப் பட்ட வயவுப்பிணப் பசித்தென
மடமான் வல்சி தரீஇய நடுநாள்
இருள்முகைச் சிலம்பி னிரைவேட் டெழுந்த
பணைமரு ளெருத்திற் பல்வரி யிரும்போத்து
மடக்க ணுமான் மாதிரத் தலறத்
தடக்கோட் டாமா னண்ண லேஎறு
நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி
இருங்கல் வியலறை சிவப்ப வீர்க்கும்
பெருங்கல் நாட பிரிதி யாயின்

மருந்து முடையையோ மற்றே யிரப்போர்க்கு
இழையணி நெடுந்தேர் களிறொ டென்று
மழைசுரந் தன்ன வீகை வண்மகிழ்க்
கழல்தொடித் தடக்கைக் கலிமா னள்ளி
நளிமுகை யுடைந்த நறுங்கா ரடுக்கத்துப்
போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்
மென்பிணி முகையவிழ்ந் தலர்ந்த
தண்கமழ் புதுமலர் நாறுநறு நுதற்கே.

இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

## 740. அகநானூறு - 248. குறிஞ்சி

நகைநீ கேளாய் தோழி யல்கல்
வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ
இளைய ரெய்துதன் மடக்கிக் கிளையொடு
நான்முலைப் பிணவல் சொலியக் கானொழிந்து
அரும்புழை முடுக்க ராட்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கிக் கானவன்

குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலல் முன்பிற்றன் படைசெலச்

செல்லாது

அருவழி விலக்குமெம் பெருவிறல் போன்மென
எய்யாது பெயருங் குன்ற நாடன்



செறியரில் துடக்கலிற் பரீஇப் புரியவிழ்ந்து
ஏந்துகுவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை
ஏற்றியில் கயிற்றி னெழில்வந்து துயல்வர
இல்வந்து நின்றோற் கண்டன ளன்னை
வல்லே யென்முக நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லியது.

## 741. அகநானூறு - 278. குறிஞ்சி

குணகடல் முகந்த கொள்ளை வானம்
பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்
தோல்நிரைத் தனைய வாகி வலனேர்பு
கோல்நிமிர் கொடியின் வசிபட மின்னி
உருமுர றதிர்குரல் தலைஇப் பானாட்
பெருமலை மீமிசை முற்றின வாயின்
வாளிலங் கருவி தாஅய் நாளை
இருவெதி ரங்கழை யொசியத் திண்டி
வருவது மாதோ வண்பரி யுந்தி
நனிபெரும் பரப்பி னம்மூர் முன்றுறைப்
பனிபொரு மழைக்கண் சிவப்பப் பானாள்
முனிபட ரகல மூழ்குவங் கொல்லோ
மணிமருள் மேனி யாய்நலந் தொலையத்
தணிவருந் துயரஞ் செய்தோன்
அணிகிளர் நெடுவரை யாடிய நீரே.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 742. அகநானூறு - 292. குறிஞ்சி

கூறாய் செய்வது தோழி வேறுணர்ந்து
அன்னையும் பொருளுகுத் தலமரு

சிறுகுள கருந்து தாய்முலை பெறாஅ
மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி
ஏதில் வேலன் கோதை துயல்வரத்
தூங்கு மாயி னதூஉம் நாணுவல்
இலங்குவளை நெகிழ்ந்த செல்லல் புலம்படர்ந்து
இரவின் மேயல் மரூஉம் யானைக்
கால்வ லியக்க மொற்றி நடுநாள்
வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்
கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகல்
உடுவுறு கணையிற் போகிச் சாரல்
வேங்கை விரியிணர் சிதறித் தேன்சிதையூஉப்
பலவின் பழத்துட் டங்கு
மலைகெழு நாடன் மணவாக் காலே.

வெறியச்சுறீஇத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 743. அகநானூறு - 318. குறிஞ்சி

கான மானதர் யானையும் வழங்கும்
வான மீமிசை யுருமுநனி யுரறும்

அரவும் புலியு மஞ்சுதக வுடைய
இரவழங்கு சிறுநெறி தமியை வருதி
வரையிழி யருவிப் பாட்டொடு பிரசம்
முழவுசேர் நரம்பி னிம்மென விமிரும்
பழவிறல் நனந்தலைப் பயமலை நாட
மன்றல் வேண்டினும் பெறுகுவை யொன்றோ
இன்றுதலை யாக வாரல் வரினே
எம்முறு துயரமொடு யாமிவ ணொழிய
எற்கண்டு பெயருங் காலை யாழநின்
கற்கெழு சிறுகுடி யெய்திய பின்றை
ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேய்பயி லழுவத்துப் பிரிந்தநின்
நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே.

இரவுக்குறிவந்த தலைமகனை வரவுவிலக்கி வரைவுகடாயது.



## 744. அகநானூறு - 332. குறிஞ்சி

முளைவளர் முதல மூங்கில் முருக்கிக்
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை
நீர்நசை மருங்கி னிறம்பார்த் தொடுங்கிய
பொருமுர ணுழுவை தொலைச்சிக் கூர்நுனைக்
குருதிச் செங்கோட் டழிதுளி கழாஅக்
கன்முகை யடுக்கத்து மென்மெல வியலிச்
செறுபகை வாட்டிய செம்மலொ டறுகால்
யாழிசைப் பறவை யிமிரப் பிடிபுணர்ந்து

வாழையஞ் சிலம்பிற் றுஞ்சு நாடன
நின்புரைத் தக்க சாயல னெனநீ
அன்புரைத் தடங்கக் கூறிய வின்சொல்
வாய்த்தன வாழி தோழி வேட்டோர்க்கு
அமிழ்தத் தன்ன கமழ்தார் மார்பின்
வண்டிடைப் படாஅ முயக்கமுந்
தண்டாக் காதலுந் தலைநாட் போன்மே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

## 745. அகநானூறு - 382. குறிஞ்சி

பிறருறு விழுமம் பிறரும் நோப
தம்முறு விழுமந் தமக்கோ தஞ்சம்
கடம்புகொடி யாத்துக் கண்ணி சூட்டி
வேறுபல் குரல வொருதூக் கின்னியங்
காடுகெழு நெடுவேட் பாடுகொளைக் கேற்ப
அணங்கயர் வியன்களம் பொலியப் பையத்
தூங்குதல் புரிந்தனர் நமரென வாங்கவற்கு
அறியக் கூறல் வேண்டுந் தோழி
அருவி பாய்ந்த கருவிரல் மந்தி
செழுங்கோட் பலவின் பழம்புணை யாகச்
சாரற் பேரூர் முன்றுறை யிழிதரும்

கபிலர் - ஐங்குறுநூறு 363.

வறனுற லறியாச் சோலை

விறல்மலை நாடன் சொன்னயந் தோயே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் லியது.
சொல்.

## 746—845. ஐங்குறுநூறு - 201—300.

குறிஞ்சி

### 746—755. அன்னாய்வாழிப் பத்து

746. அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
என்ன மரங்கொலவர் சார லவ்வே.

201.

கொ துமலர் வரைவின்கண் செவிலிகேட்குமாற்றால் தோழிக்கு அறத்தொடுநிலை குறித்து உரைத்தது.

தலைமகள்.

747. அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட னூர்ந்த மாவே.

202. தலைமகன் வரைதல் வேண்டித் தானே

வருகின்றமை கண்ட தோழி உவந்தவுள்ளத்தளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொலியது.

748. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய அவர்நாட்டு
உவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே.

203

உடன்போய் மீண்ட தலைமகள், 'நீ சென்ற நாட்டு நீர் இனிய வல்ல ; நீ எங்ஙனம் நுகர்ந்தாய்' எனக்கேட்ட தோழிக்குக் கூறியது.

749. அன்னாய் வாழிவேண் டன்னையஃ தெவன்கொல்
வரையர மகளிரி னிரையுடன் குழீஇப்



பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி
நல்லள் நல்ல ளென்ப
5 தீயேன் தில்ல மலைகிழ வோற்கே.

204

வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

750. அன்னாய் வாழிவேண் டன்னையென் தோழி
நனிநா ணுடையள் நின்னு மஞ்சும்
ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்
மலர்ந்த மார்பிற் பாயல்
தவநனி வெய்யள் நோகோ யானே.

205

நொதுமலர் வரைவுவேண்டிவிட்டுழித் தலைமகட்கு உளதாகிய வருத்தநோக்கி, 'இவள் இவ்வாறாதற்குக் காரணம் என்னை' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

751. அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பா ளன்னன்
தூவலி னனைந்த தொடலை யொள்வாட்
பாசி சூழ்ந்த பெருங்கழற்
றண்பனி வைகிய வரிக்கச் சினனே.

206

இரவுக்குறிக்கண் தலைமகன்வந்து குறியிடத்து நின்றமை யறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

752.

அன்னாய் வாழிவேண் டன்னை நன்றும்
உணங்கல கொல்லோநின் றினையே யுவக்காண்

நிணம்பொதி வழுக்கிற் றோன்றும்
மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே.

207

'மழையின்மையால் தினை உணங்கும்; விளையமாட்டா; புனங் காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாமென்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று' என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

753. அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅ மவர்நாட்டு
மணிநிற மால்வரை மறைதொறிவள்
அறைமலர் நெடுங்க ணார்ந்தன பனியே. 208

செவிலிக்கு அறத்தொடுநின்ற தோழி அவளால் வரைவு மாட்சிமைப்பட்ட பின்பு, 'இவள் இவ்வாறு பட்ட வருத்தமெல்லாம் நின்னிற் றீர்ந்தது' என்பது குறிப்பிற்றோன்ற அவட்குச் சொல்லியது.

754. அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்று
யானவர் மறத்தல் வேண்டுதி யாயிற்
கொண்ட லவரைப் பூவி னன்ன
வெண்டலை மாமழை சூடித்
தோன்றலா னாதவர் மணிநெடுங் குன்றே.

209

வரைவிடை வைத்துப் பிரிவின்கண் அவனை நினைவு விடாது ஆற்றாளாகிய வழி, 'சிறிது மறந்து ஆற்றவேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

755. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுக லேறி யவர்நாட்டுப்
பூக்கெழு குன்றம் நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கு முரித்தவ ணுற்ற நோயே. 210

காப்பு மிகுதிக்கண் தலைமகள் மெலிவு கண்டு தெய்வத்தினா லாயிற்றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

756—765. அன்னாய்ப் பத்து

756. நெய்யொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் தலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னாய். 211

தலைமகன் ஆற்றாமைகண்டு கையுறையேற்ற தோழி தலைமகள் தழையேற்கவேண்டிக் கூறியது.



757. சாந்த மரத்த பூழி லெழுபுகை
கூட்டுவிரை கமழு நாடன்
அறவற் கெவனோ நாமகல் வன்னாய். 212

வரைவெதிர்கொள்ளார் தமர் அவண் மறுத்தவழித்

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

758. நறுவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த
ஈர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவர்
உறைவீ ழாலியிற் றொகுக்குஞ் சாரல்

மீமிசை நன்னாட் டவர்வரின்
யானுயிர் வாழ்தல் கூடு மன்னாய்.

'வரைவொடுவருதலைத் துணிந்தான்' என்பது

## 213

தோழிகூறக்
கேட்ட தலைமகள் சொல்லியது.

759. சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்
பெருந்தே னிறாஅல் சிதறு நாடன்

பேரமர் மழைக்கண் கலிழத்தன்
சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்.

## 214

தலைமகன், 'ஒருவழித்தணப்பல்' என்று

கூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

760. கட்டளை யன்ன மணிநிறத் தும்பி
இட்டிய குயின்ற துறைவயிற் செலீஇயர்
தட்டைத் தண்ணுமைப் பின்ன ரியவர்
தீங்குழ லாம்பலி னினிய விமிரும்
புதல்மலர் மாலையும் பிரிவோர்
அதனினுங் கொடிய செய்குவ ரன்னாய்.

215

இரவுக்குறி நயந்த தலைமகள் பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

761. குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற



நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்
பழந்தூங்கு கொழுநிழ லொளிக்கு நாடற்குக்
கொய்திடு தளிரின் வாடிநின்
மெய்பிறி தாத லெவன்கொ லன்னாய். 216

வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது.

762. பெருவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ
மானினப் பெருங்கிளை மேய லாரும்
கானக நாடன் வரவுமிவள்
மேனி பசப்ப தெவன்கொ லன்னாய்.

## 217

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீட்சியுணர்ந்த தோழி ஆற்றாளாகிய தலைமகட்குச் சொல்லியது.

763.

நுண்ணோர் புருவத்த கண்ணு மாடும்
மயிர்வார் முன்கை வளையுஞ் செறாஅம்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
எழுதரு மழையிற் குழுமும்
பெருங்கல் நாடன் வருங்கொ லன்னாய்.

## 218

தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அதுகேட்டு, 'இஃது என்னாங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறி செய்யக்கண்டு, 'கடிதின் வந்து வரைவான்' எனச் சொல்லியது.

764. கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
இருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்
நன்மலை நாடன் பிரிந்தென
ஒண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய். 219

வரைவிடை வைத்துப் பிரிந்த அணுமைக்கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

765. அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
ஆடுகழை யடுக்கத் திழிதரு நாடன்



பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு

முயங்காது கழிந்த நாளிவள்
மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.

220

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

## 766—775. அம்மவாழிப் பத்து

766. அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் ஆய்கவின் தொலைய
நன்மா மேனி பசப்பச்

செல்வ லென்பதம் மலைகெழு நாடே.

221

'ஒருவழித்தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல்' என்று தலைமகன் கூறக்கேட்ட தலைமகள் அவன் சிறைப்புறத் தானாய்க் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

767. அம்ம வாழி தோழி நம்மூர்
நளிந்துவந் துறையும் நறுந்தண் மார்பன்
இன்னினி வாரா மாறுகொல்
சின்னிரை யோதியென் நுதல்பசப் பதுவே.

222

குறியிரண்டன் கண்ணும் வந்து ஒழுகுந் தலைமகன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழி, 'நின் நுதல் பசத்தற்குக் காரணம் என்னை' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

768. அம்ம வாழி தோழி நம்மலை
வரையா மிழியக் கோடல் நீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந்
தண்பனி வடந்தை யற்சிரம்
முந்துவந் தனர்நங் காத லோரே.

223

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வருகின்றமை யறிந்த தோழி தலைமகட்கு மகிழ்ந்து சொல்லியது.

769. அம்ம வாழி தோழி நம்மலை
மணிநிறங் கொண்ட மாமலை வெற்பிற்
றுணிநீ ரருவி நம்மோ டாடல்
எளிய மன்னு லவர்க்கினி
அரிய வாகுதல் மருண்டனென் யானே.

## 224

இற்செறிப்புணர்ந்த தலைமகள் ஆற்றாளாய்த் தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

770. அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்
பாசடை நிவந்த பனிமலர்க் குவளை
உள்ளகங் கமழுங் கூந்தல் மெல்லியல்
ஏர்திக ழொண்ணுதல் பசத்தல்
ஓரார் கொல்நங் காத லோரே.

## 225

மெலிவு கூறி வரைவுகடாவக்கேட்ட தலைமகன் தான் வரைதற்
பொருட்டால் ஒருவழித் தணந்து நீட்டித்தானாக,

ஆற்றாளாகிய

தலைமகட்குத் தோழி கூறியது.

771. அம்ம வாழி தோழி நம்மலை
நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தட்
கொங்குண் வண்டிற் பெயர்ந்து புறமாறிநின்
வன்புடை விறற்கவின் கொண்ட
அன்பி லாளன் வந்தன னினியே. 226

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

772. அம்ம வாழி தோழி நாளும்
நன்னுதல் பசப்பவும் நறுந்தோள் நெகிழவும்
ஆற்றலம் யாமென மதிப்பக் கூறி
நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ
விட்டனை யோவவ ருற்ற சூளே. 227

ஒருவழித்தணந்து வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.





773. அம்ம வாழி தோழி நம்மூர்
நிரந்திலங் கருவிய நெடுமலை நாடன்
இரந்துகுறை யுறாஅன் பெயரின்
என்னா வதுகொல்நம் இன்னுயிர் நிலையே. 228

தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழி அவர் கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி அறத்

தொடு நின்றது.

774. அம்ம வாழி தோழி நாமழப்
பன்னாள் பிரிந்த அறனி லாளன்
வந்தனனே மற் றிரவிற்
பொன்போல் விறற்கவின் கொள்ளும்நின் னுதலே.

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டானென்பது கேட்டுத் தலைமகட்கு எய்திய கவினைத் தோழி தான் அறியாதாள் போன்று அவளை வினவியது.

775. அம்ம வாழி தோழி நம்மொடு
சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்
மென்றோள் ஞெகிழவுந் திருநுதல் பசப்பவும்
பொன்போல் விறற்கவின் தொலைத்த
குன்ற நாடற் கயர்வர்நன் மணனே.



தலைமகன் வரைவுவேண்டித் தமரைவிடுத்துழி மறுப்பர் கொல்லோ வென்று அச்சமுறுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லியது.

### 776—785. தெய்யோப் பத்து

776. யாங்குவல் லுநையோ வோங்கல் வெற்ப
இரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை
திதலை மாமை தேயப்
பசலை பாயப் பிரிவு தெய்யோ.

ஒருவழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழி கூறியது.



777. போதார் கூந்த லியலணி யழுங்க
ஏதி லாட்டியை நீபிரிந் ததற்கே
அழலவிர் மணிப்பூண் நனையப்
பெயலா னாவென் கண்ணே தெய்யோ.

232

ஒருவழித் தணந்துவந்த தலைமகன், 'நான்பிரிந்த நாட்கண் நீர் என் செய்தீர்' எனக்கேட்கத் தோழி அவற்குச் சொல்லியது.

778. வருவை யல்லை வாடைநனி கொடிதே
அருவரை மருங்கி னாய்மணி வரன்றி
ஒல்லென விழிதரு மருவிநின்
கல்லுடை நாட்டுச் செல்லல் தெய்யோ.

233

'ஒருவழித்தணந்து வரையவேண்டும்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

779. மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் பசத்தல் யாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே

நனவிற் காணாள்நின் மார்பே தெய்யோ.

234

இடைவிடாது வந்து ஒழுகாநின்றே களவுநீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன் தலைமகள் வேறுபாடு கண்டு, 'இதற்குக் காரணம் என்' என்று வினாவிய வழி, 'நின்னைக் கனவிற் கண்டு விழித்துக்காணாளாய் வந்தது' எனத் தோழி சொல்லி வரைவு முடுக்கியது.

780. கையுற வீழ்ந்த மையில் வானமொடு
அரிது காதலர்ப் பொழுதே யதனால்
தெரியிழை தெளிர்ப்ப முயங்கிப்
பிரியல மென்கமோ வெழுகமோ தெய்யோ.

235

உடன்போக்கு நேர்வித்த பின்பு, தலைமகன் போவான் இடையாமத்து வந்துழித் தலைமகட்குத் உடன்கொண்டு தோழி சொல்லியது.



781. அன்னையு மறிந்தன ளலரு மாயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரும்
இன்னா வாடையு மலையும்
நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ.

களவொழுக்கம் வெளிப்பட்டமையும் தம் மெலிவு முணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள் போன்று வரைவுகடாயது.

782. காமங் கடவ வுள்ள மினைப்ப
யாம்வந்து காண்பதோர் பருவ மாயின்
ஓங்கித் தோன்று முயர்வரைக்கு
யாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.

237

அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு அவன் பின்புவந்துழி அவற்குத் தோழி சொல்லியது.

783. வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினுங்
குருமயிர்ப் புருவை யாசையி னல்கும்
மாஅ லருவித் தண்பெருஞ் சிலம்ப
நீயிவண் வரூஉங் காலை
மேவரு மாதோவிவள் நலனே தெய்யோ.

238

வரையாது வந்தொழுகுந் தலைமகனுக்கு 'இவள் கவின் நீ வந்த காலத்து வருதலால் நீ போனகாலத்து அதன்தொலைவு உனக்கு அறியப்படாது' எனத் தோழிசொல்லி வரைவுகடாயது.

784. சுரும்புணக் களித்த புகர்முக வேழம்
இரும்பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉம்நின்
குன்றுகெழு நன்னாட்டுச் சென்ற பின்றை

நேரிறைப் பணைத்தோள் ஞெகிழ
வாரா யாயின் வாழேம் தெய்யோ.

239

வரைவிடைவைத்துப் பிரிவலென்ற தலைமகற்குத் தோழி கூறியது.

785. அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்



சாந்த நாறு நறியோள்
கூந்தல் நாறுநின் மார்பே தெய்யோ.

240

தலைமகற்குப் புறத்தொழுக்க முளதானமை யறிந்து தலைமகள் புலந்தவழி, அவன் அதனை இல்லையென்று மறைத்தானாகத் தோழி சொல்லியது.

786—795. வெறிப் பத்து

786. நம்முறு துயரம் நோக்கி யன்னை
வேலற் றந்தன ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
அறியுமோ தில்ல செறியெயிற் றோயே.

241

இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவு கண்டு, ‘இஃது எற்றினானாயிற்று’ என்று வேலனைக் கேட்பத் துணிந்துழி, அறத்தொடுநிலை துணிந்த தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.

787. அறியா மையின் வெறியென மயங்கி
அன்னையு மருந்துய ருழந்தன ளதனால்
எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்
ஆய்மல ருண்கண் பசப்பச்
சேய்மலை நாடன் செய்த நோயே.

242

தலைமகள் அறத்தொடுநிலை நயப்பவேண்டித் தோழி அவட்குச் சொல்லியது.

788. கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்
அதுமனங் கொள்குவை யன்னையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே.

243

தாயுழை அறியாமை கூறித் தோழி வெறிவிலக்கியது.



789. அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை

குன்றம் பாடா னாயின்
என்பயஞ் செய்யுமோ வேலற்கு வெறியே.

## 244

வெறியாடல் துணிந்தவழி விலக்கலுறுந் தோழி செவிலி கேட்கு

மாற்றால் தலைமகட்குச் சொல்லியது.

790. பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயிற்
கெழுதகை கொல்லிவ ளணங்கி யோர்க்கே. 245

தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.

791. வெறிசெறித் தனனே வேலன் கறிய
கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ
மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையுள் தீருங்
குன்ற நாட னுறீஇய நோயே.

## 246

வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாய் நின்

றுழி அவன் கேட்குமாற்றால் வெறிவிலக்காநின்றமை

தோழி தலை
மகட்குச் சொல்லியது.

792. அன்னை தந்த தாகுவ தறிவென்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயின்
அருவரை நாடன் பெயர்கொலோ வதுவே.

247

வெறிவிலக்கலுறுந் தோழி தயர்கேட்பத் தலைமகளை வினவு
வாளாய்ச் சொல்லியது.

793. பெய்ம்மணல் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்

கழங்கினு னறிகுவ தென்றான்
நன்று லம்ம நின்றவிவள் நலனே.

248

தலைமகள் வேறுபாடு கழங்கினால் தெரியுமென்று
வேலன் கூறிய வழி, அதனைப் பொய்யென இகழ்ந்த தோழி
வெறிவிலக்கிச் செவிலிக்கு அறத்தொடு நின்றது.

794. பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்
வாழிய விலங்கு மருவிச்

சூர்மலை நாடனை யறியா தோனே.

249

வேலன் கூறிய மாற்றத்தை மெய்யெனக் கொண்ட தாய் கேட்பத் தலைமகட்குத் தோழி கூறியது.

795. பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியங் கானக் கிழவோன்
ஆண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.

250

தலைமகட்கு வந்த நோய் முருகனால் வந்தமை இக்கழங்கு கூறிற்றென்று வேலன் சொன்னானென்பது கேட்ட தோழி அக்கழங்கிற்கு உரைப்பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடு நிலை குறித்துச் சொல்லியது.

796—805. குன்றக்குறவன் பத்து

796. குன்றக் குறவ னார்ப்பி னெழிலி
நுண்ப லழிதுளி பொழியும் நாட
நெடுவரைப் படப்பை நும்மூர்க்
கடுவர லருவி காணினும் அழுமே.

251

வரையாதுவந்தொழுகுந் தலைமகற்கு வரைவுவேட்ட தோழி கூறியது.

797. குன்றக் குறவன் புல்வேய் குரம்பை
மன்றா டிளமழை மறைக்கு நாடன்
புரையோன் வாழி தோழி விரைபெயல்
அரும்பனி யளைஇய கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே. 252

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்தானாக உவந்ததோழி தலைமகட்குச் சொல்லியது.

798. குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழுங்
கானக நாடன் வரையின்
மன்றலு முடையள்கொல் தோழி யாயே. 253

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வரைவொடு புகுதாநின்றானென்பது தோழி கூறக்கேட்ட தலைமகள் அவட்குச் சொல்லியது.

799. குன்றக் குறவன் ஆர மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்
வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே.

உடன்போக்கு உடன்பட வேண்டிய தோழி தலைமகட்குச் சொல்லியது.

800. குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்

ஐய ளரும்பிய மூலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.

255

'நின்னாற் காணப்பட்டவள் எத்தன்மையள் ?' என்ற பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

801. குன்றக் குறவன் காதல் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி



வளையள் முளைவா ளெயிற்றள்
இளைய ளாயினு மாரணங் கினளே.

256

'நீ கூறுகின்றவள் நின்னை வருத்தும் பருவத்தளல்லள்' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

802. குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்
ஆயரி நெடுங்கண் கலிழச்
சேயதால் தெய்யநீ பிரியும் நாடே.

257

வரைவிடை வைத்துப் பிரிவலென்ற தலைமகற்குத்

தோழி உடன்படாது கூறியது.

803. குன்றக் குறவன் காதல் மடமகள்
அணிமயி லன்ன அசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
இன்னு மானாது நன்னுதல் துயரே.

258

வரைவுவேண்டிவிட மறுத்துழித் தமர்க்குரைப்பாளாய் வரை யாதுவந்தொழுகுந் தலைமகற்குத் தோழி அவன்மலைகாண்டலே பற்றாகத் தாங்கள் உயிர்வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது.

804. குன்றக் குறவன் காதல் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த வீர்நறுங் கையள்
மலர்ந்த காந்தள் நாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் அணங்கி யோளே.

259

வரையத்துணிந்த தலைமகன் வரைவுமுடித்தற்குத் தலைமகள் வருந்துகின்றவருத்தம் தோழிகாட்டக்கண்டு இனி அது கடுகமுடியு மென உவந்தவுள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

805. குன்றக் குறவன் காதல் மடமகள்
மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரி து
தில்ல



பைம்புறப் படுகிளி யோப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே.

260

பகற்குறிக்கண்வந்த தலைமகளைத் தோழி 'இனிப் புனங்காவற்கு வாரோம்' எனக்கூறி வரைவுகடாயது.

805—815. கேழற் பத்து

806. மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாடன்
எந்தை யறித லஞ்சிக்கொல்
அதுவே மன்ற வாரா மையே.

261

அல்லகுறிப்பட்டுத் தலைமகன் நீங்கினமை அறியாதாள் போன்று தோழி, பிற்றை ஞான்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்பத் தலைமகட்குச் சொல்லியது.

807. சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியும்
இலங்குமலை நாடன் வரூஉம்

மருந்து மறியுங்கொல் தோழியவன் விருப்பே.

262

'வரைந்து கொள்ள நினைக்கிலன்' என்று வேறுபட்ட தலைமகள், 'அவன் நின்மேல் விருப்பமுடையன், நீ நோகின்றது என்னை' என்ற தோழிக்குச் சொல்லியது.

808. நன்பொ னன்ன புனிறுதீ ரேனல்
கட்டளை யன்ன கேழல் மாந்துங்
குன்றுகெழு நாடன் தானும்
வந்தனன் வந்தன்று தோழியென் னலனே.

263

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டமை யறிந்த தலைமகள், 'நீ தொலைந்த நலம் இன்று எய்திய காரணம் என்னை' என்ற தோழிக்குச் சொல்லியது.

809. இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்



அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே.

264

வரையாது வந்தொழுகுந் தலைமகனைப்

பகற்குறிக்கண்ணே எதிர்ப்பட்டுத் தோழி வரைவுகடாயது.

810. புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்குங்
குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ டென்னீத்
தோனே. 265

பரத்தையிடத்தானாக ஒழுகுகின்ற தலைமகன் விடுத்த வாயின் மாக்கட்குத் தலைமகள் சொல்லியது.

811. சிறுகட் பன்றிப் பெருஞ்சின
வொருத்தலொடு
குறுக்கை யிரும்புலி பொரூஉம் நாட
னனிநா ணுடையை மன்ற
பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே.
266

கொதுமலர்வரைவு பிறந்துழித் தலைமகட்கு உளதாகிய வேறுபாடு தோழி கூறித் தலைமகனை வரைவுகடாயது.

812. சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
துறுகல் லடுக்கத்து வில்லோர் மாற்றி
ஐவனங் கவருங் குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லுந் தேறுதல் செத்தே.
267

தலைமகளைத் தலைமகன் வரைவலெனத் தெளித்தானென்று அவள் கூறக்கேட்ட தோழி அவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

813. தாஅ யிழந்த தழுவரிக் குருளையொடு
வளமலைச் சிறுதினை யுணீஇக் கானவர்
வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கும்



நன்மலை நாடன் பிரிதல்
என்பயக் கும்மோ நம்விட்டுத் துறந்தே.

268

‘அவன் குறிப்பிருந்தவாற்றால் நம்மைப் பிரிந்து வந்தல்லது வரையமாட்டான் போன்றிருந்தது’ எனத் தலைமகள் கூறக்கேட்ட தோழி அவட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

814. கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை
விளைந்த செறுவிற் றோன்று நாடன்
வாரா தவணுறை நீடின் நேர்வளை
இணையீ ரோதி நீயழத்
துணைநனி யிழக்குவென் மடமை யானே.

269

குறைநயப்பக்கூறித் தலைமகளைக் கூட்டிய தோழி அவன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழித் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

815. கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பிற்
றலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகொள் நெடுவரை
காணினுங் கலிழுநோய் செத்துத்
தாம்வந் தனர்நங் காத லோரே. 270

வரைவுகாரணமாக நெட்டிடைகழிந்து பொருள்வயிற் போகிய தலைமகன் வந்தமையறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

### 816—825. குரக்குப் பத்து

816. அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்
தொல்கே ளாகலின் நல்குமா லிவட்கே.

271

தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர்மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

817. கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்
அருவரைத் தீந்தே னெடுப்பி யயலது
உருகெழு நெடுஞ்சினைப் பாயும் நாடன்
இரவின் வருத லறியான்
வரும்வரு மென்ப தோழி யாயே.

272.

அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள் போன்று தலைமகள் சொல்லியது.

818. அத்தச் செயலைத் துப்புற ழொண்டளிர்
புன்றலை மந்தி வன்பற ழாரும்
நன்மலை நாட நீசெலின்
நின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே.

273.

வரைவிடை வைத்துப் பிரியுந் தலைமகன், 'நின் துணைவியை உடம்படுவித்தேன், இனி நீயே இதற்கு உடம்படாது கலிழ்கின்றாய்' என்றாற்குத் தோழி கூறியது.

819. மந்திக் கணவன் கல்லாக் கடுவன்
ஒண்கேழ் வயப்புலி குழுமலின் விரைந்துடன்
குன்றுய ரடுக்கங் கொள்ளும் நாடன்

சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலுங் கொண்டே.

274

வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

820. குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட
யானின் னயந்தன மெனினுமெம்
ஆய்நலம் வாடுமோ அருளுதி யெனினே.

275

வரையாது வந்தொழுகுந் தலைமகன் இடையிட்டு வருதலால் எதிர்ப்பாடு பெறாத தோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன் கொடுமை கூறி நெருங்கிச் சொல்லியது.



821. மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
தண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்க விளமழை புடைக்கு நாட
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரும்
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே. 276

வரையாது வந்தொழுகுந் தலைமகனைத் தோழி

நெருங்கிச் சொல்லியது.

822. குறவர் முன்றில் மாதீண்டு துறுகற்
கல்லா மந்தி கடுவனோ டுகளும்
குன்ற நாடநின் மொழிவ லென்றும்
பயப்ப நீத்த லென்னிவள்
கயத்துவளர் குவளையி னமர்த்த கண்ணே. 277

வரையாது வந்தொழுகுந் தலைமகன் புணர்ந்துநீங்குழி எதிர்ப்பட்ட தோழி வரைவுகடாயது.

823. சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே.

278

வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

824. கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு
வரைமிசை யுகளும் நாட நீவரிற்
கல்லகத் ததுவெம் மூரே

அம்பற் சேரி யலராங் கட்டே.

279

இரவுக் குறி வேண்டுந் தலைமகனைத் தோழி வரவருமை கூறி மறுத்தது.



825. கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு
இருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோல்
மதிபுடைப் பதுபோற் றோன்றும் நாட
வரைந்தனை நீயெனக் கேட்டு யான்
உரைத்தனெ னல்லெனோ வஃதென் யாய்க்கே. 280

புணர்ந்துடன்போகிய தலைமகன் தலைமகளைக் கரணவகை யான் வரைந்தானாக, எதிர்சென்ற தோழிக்கு 'இனி யான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்தவேண்டும்' என்றானாக அவள் சொல்லியது.

826—835. கிள்ளைப் பத்து

826. வெள்ள வரம்பி னூழி போகியுங்
கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை
இரும்பல் கூந்தற் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி யவ்வே.

281

ஆயத்தோடு விளையாட்டு விருப்பினாற் பொழிலகம் புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன் அவள்

புனங்காவற்கு உரியளாய் நின்றது கண்டு மகிழ்ந்து சொல்லியது.

827. சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்
பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்
சோலைச் சிறுகிளி யுன்னும் நாட
ஆரிருள் பெருகின வாரல்
கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே.

282

இரவுக்குறி நேர்ந்த தோழி தலைமகன் வந்து புணர்ந்து நீங்குழி அவனை யெதிர்ப்பட்டுச் சொல்லியது.

828. வன்கட் கானவன் மென்சொல் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனற்
பைம்புறச் சிறுகிளி கடியும் நாட



பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே.

283

தோழி வாயின் மறுக்கவும் தலைமகன் ஆற்றாமை கண்டு தலைமகள் வாயில்நேர அவன் பள்ளியிடத்தானாயிருந்துழிப் புக்க தோழி கூறியது.

829. அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி
குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கால்
இருவி நீள்புனங் கண்டும்
பிரிதல் தேற்றாப் பேரன் பினவே. 284

தினையரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள்போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது.

830. பின்னிருங் கூந்தல் நன்னுதற் குறமகள்
மென்றினை நுவணை யுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியும் நாட
வீங்குவளை நெகிழப் பிரிதல்
யாங்குவல் லுநையோ ஈங்கிவட் டுறந்தே.

285

ஒருவழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

831. சிறுதினை கொய்த விருவி வெண்காற்
காய்த்த வவரைப் படுகிளி கடியும்
யாண ராகிய நன்மலை நாடன்
புகரின்று நயந்தனன் போலும்
கவருந் தோழியென் மாமைக் கவினே.

286

உடன்போக்குத் துணிந்த தலைமகன் அஃதொழிந்து தானே வரைவிடை வைத்துப் பிரிய நினைந்ததனைக்

குறிப்பினாலுணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது ; தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிவலென்றவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉ மாம்.

832. நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉம் நாட



வல்லை மன்ற பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே.

287

இன்னநாளில் வரைவலெனக் கூறி அந்நாளில் வரையாது பின் அவ்வாறு கூறும் தலைமகற்குத் தோழி கூறியது.

833. நன்றே செய்த வுதவி நன்றுதெரிந்து
யாமெவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குர லேனற் பரத்தருங் கிளியே.

288

கிளிகள் புனத்தின்கட் படியாநின்றன வென்று தலைவியைக் காக்க ஏவியவழி, அதனை யறிந்த தலைமகன் உவந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

834. கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்

பைங்குர லேனற் படர்தரும் கிளியெனக்
காவலுங் கடியுநர் போல்வர்
மால்வரை நாட வரைந்தனை கொண்மோ.

## 289

இற்செறித்த பின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த
தினைப்புனம் இவள் காத்தொழிந்தால் வரைவலென்றாற்கு அவள்
சொல்லியது.

835. அறம்புரி செங்கோல் மன்னனிற் றாம்நனி
சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய

பூக்கமழ் கூந்தற் கொடிச்சி
நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே.

## 290

காவன்மிகுதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கிய தலை
மகன் வந்துழி அவன் கேட்டு வெறுப்புத் தீர்த்தற்பொருட்டால்
தினைப்புனக் காவல் தொடங்காநின்றா ளென்பது தோன்றத் தோழி

கூறியது.

## 836—845. மஞ்ஞைப் பத்து

836. மயில்க ளாலக் குடிஞை யிரட்டுந்
துறுகல் லடுக்கத் ததுவே பணைத்தோள்





ஆய்தழை நுடங்கு மல்குற்
காதலி யுறையும் நனிநல் லூரே.

291

வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்ற தலைமகன் சொல்லியது.

837. மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
எந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோரே.

292

பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவை முடித்தவளை இல்லத்துக் கொண்டு புகுந்துழித் தலைமகள் உவந்து சொல்லியது.

838. சிலம்புகமழ் காந்தள் நறுங்குலை யன்ன
நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோட்
டோகை மாட்சிய மடந்தை
நீயல துளரோவென் னெஞ்சமர்ந் தோரே.

293

பகற்குறியிடம் புக்க தலைமகன் தலைவி பின்னாக மறையவந்து கண்புதைத்துழிச் சொல்லியது.

839. எரிமருள் வேங்கை யிருந்த தோகை
இழையணி மடந்தையிற் றோன்று நாட
இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே.

294

வதுவை செல்லாநின்றுழித் தலைமகற்குத் தோழி கூறியது.

840. வருவது கொல்லோ தானே வாராது
அவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
இருவி யிருந்த குருவி வருந்துறப்



பந்தாடு மகளிரிற் படர்தருங்
குன்றுகெழு நாடனொடு சென்றவென்

னெஞ்சே.

தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி உடன்
சென்ற நெஞ்சினைத் தலைமகள் நினைந்து கூறியது.

841. கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்
அடுக்கல் மஞ்ஞை கவரு நாட
நடுநாட் கங்குலும் வருதி
கடுமா தாக்கி னறியேன் யானே.

296

இரவுக்குறி வருகின்ற தலைமகற்குத் தோழி ஆற்றருமை கூறி
மறுத்தது.

842. விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாட
பிரியினும் பிரிவ தன்றே
நின்னொடு மேய மடந்தை நட்பே.

297

ஒருவழித் தணந்து வரையவேண்டுமென்ற தலைமகற்குத் தோழி
கூறியது.

843. மழைவர வறியா மஞ்ஞை யாலும்
அடுக்கல் நல்லூ ரசைநடைக் கொடிச்சி
தானெம் அருளா ளாயினும்

யாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே.

298

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட் குணர்த்திய வழி அவள் நாணத்தினால் மறைத்தொழுகியவதனைக் கூறக்கேட்ட தலைமகன் சொல்லியது.

844. குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி 388
சங்க இலக்கியம்

கண்போல் மலர்தலு மரிதிவள்
தன்போற் சாயல் மஞ்ஞைக்கு மரிதே.

299

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக்கண் தலை மகள் ஆயவெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட தலைமகன் மகிழ்ந்த வுள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

845. கொடிச்சி கூந்தல் போலத் தோகை
அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்
வந்தன னெதிர்ந்தனர் கொடையே
அந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.

தலைமகன்தானே வரைவு வேண்டிவிடச் சுற்றத்தார் கொடைநேர்ந்தமை தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 846. கலித்தொகை - 37. குறிஞ்சி

கயமல
வயமா
ருண்கண்ணாய் காணா யொருவன்
னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட

கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற

நோயுரைக் கல்லான் பெயருமன் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்
சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக்
கண்ணின்று கூறுத லாற்றா னவனாயிற்
பெண்ணன் றுரைத்தல் நமக்காயி னின்னதூஉங்
காணான் கழிதலு முண்டென் றொருநாளென்
தோணெகிழ் புற்ற துயராற் றுணிதந்தோர்
நாணின்மை செய்தே னறுநுதா லேனல்

இனக்கிளி யாங்கடிந் தோம்பும் புனத்தயல்
ஊசலூர்ந் தாட வொருஞான்று வந்தானை
ஐய சிறிதென்னை யூக்கி யெனக்கூறத்
தையால் நன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின்
வாயாச்செத்து
ஒய்யென வாங்கே யெடுத்தனன் கொண்டான்மேல்



மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன்
ஞயிடை
மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய்யென
ஒண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பின்
அங்க ணுடைய னவன்.

"நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்,

செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்,
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉ,
முணர்ச்சியேழினு முணர்ந்த பின்றை" தன்னை அவள் மறையாமை காரணமாக "மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது, பல்வேறு கவர்பொரு ணாட்டத்தான்" தலைமகட் குத் தோழி கூறியது.

இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
ஐயிரு தலையி னரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை

எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை

நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள் ;

ஆரிடை யென்னாய்நீ யரவஞ்சாய் வந்தக்கால்
நீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை

கார்பெற்ற புலமேபோற் கவின்பெறு மக்கவின்
தீராமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்;

இருளிடை யென்னாய்நீ யிரவஞ்சாய் வந்தக்காற்
பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள் வைகறை

அருள்வல்லா னாக்கம்போ லணிபெறு மவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டே லுரைத்தைக்காண்

;

18

மறந்திருந்தா ரென்னாய்நீ மலையிடை வந்தக்கால்
அறஞ்சாரான் மூப்பேபோ லழிதக்காள் வைகறை



திறஞ்சேர்ந்தா னாக்கம்போற் றிருத்தகு மத்திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பதோர் பொருளுண்டே லுரைத்தைக்காண்;
எனவாங்கு,
23 நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே சேயிழை நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே.

இரவுக்குறி வந்து நீங்குந் தலைவனை எதிர்ப்பட்டுத்
தலைவியுற்ற நிலைமைகூறி அவனை வரைவுகடாவ, அவன்

தோழி
வரைய
வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவுமலிந்து கூறியது.

## 848. கலித்தொகை - 39. குறிஞ்சி

காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித்தளர்ந்ததனோடொழுகலான்
நீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போத்தந்தா னகனகலம்
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே;

7 அவனுந்தான், ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன் ;

11 சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா
கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான் ;

15 காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார்கேள்வர்த்தொழுதெழலாற் றம்மையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல் ;
எனவாங்கு,

20 அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய் ;
22 அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை ;

26 தெரியிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வ முவப்ப வுவந்து
குரவை தழீஇயா மாடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண் ;
30 நல்லாய்,
நன்னாள் தலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்தாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல் ;
33 புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ ;
37 விண்டோய்கல் நாடனு நீயும் வதுவையுட்

பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென்
மற்கொலோ ;

41 மைதவழ் வெற்பன் மணவணி காணுமற்
கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ;

.

43

என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண் மன;
எனவாங்கு,
46 நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலும்
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்



சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே.

“முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப், புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்” என்னும் விதிபற்றித் தமர் வரைவு மறுத்துழித் தோழி தாயர்க்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப, அவள் தன்னையர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்ப, அவரும் ஒருவாற்றான் உடன்பட்டமை தோழி தலைவிக்குக் கூறி, தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற்பொருட்டு வரையுறை தெய்வத்திற்குக் குரவையாட, அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு உரைத்தது.

## **849.** கலித்தொகை - **40**. குறிஞ்சி

அகவினம் பாடுவாந் தோழி யமர்க்கண்

நகைமொழி நல்லவர் நாணும் நிலைபோல்
தகைகொண்ட வேனலுள் தாழ்குர லுரீஇ
முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்
வகைசா லுலக்கை வயின்வயி னோச்சிப்
பகையினோய் செய்தான் பயமலை யேத்தி
அகவினம் பாடுவாம் நாம் ;

8 ஆய்நுத லணிகூந்த லம்பணைத் தடமென்றோள்
தேனாறு கதுப்பினா யானுமொன் றேத்துகு
வேய்நரல் விடரகம் நீயொன்று பாடித்தை ;

11 கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்
எடுத்த நறவின் குலையலங் காந்தட்
டொடுத்ததேன் சோரத் தயங்குந்தன் னாற்றார்
இடுக்கண் தவிர்ப்பான் மலை ;

15 கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து

மெல்விரல் மந்தி குறைகூறுஞ் செம்மற்றே
தொல்லெழில் தோய்ந்தார் தொலையி னவரினும்
அல்லற் படுவான் மலை ;



19
புரிவிரி புதைதுதை பூத்ததைந்த தாழ்சினைத்
தளிரன்ன வெழில்மேனி தகைவாட நோய்செய்தான்
அருவரை யடுக்கநா மழித்தொன்று பாடுவாம் ;
22 விண்டோய் வரைப்பந் தெறிந்த அயாவீடத்
தண்டா ழருவி யரமகளி ராடுபவே
பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் றாதுண்ணும்
வண்டிற் றுறப்பான் மலை ;

26 ஒடுங்கா வெழில்வேழம் வீழ்பிடிக் குற்ற
கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கட் கரும்பின் கழைவாங்கு முற்றாரின்
நீங்கல மென்பான் மலை ;
எனநாம்,
31 தன்மலை பாட நயவந்து கேட்டருளி
மெய்ம்மலி யுவகையன் புகுதந்தான் புணர்ந்தாரா
மென்முலை யாகங் கவின்பெறச்
செம்மலை யாகிய மலைகிழ வோனே.

தோழியுந் தலைமகளுந் தலைமகனது மலையை வாழ்த்திப்

பாடு கின்ற வள்ளைப்பாட்டில், தோழி இயற்பட மொழியத் தலைமகள் இயற்பழித்தமை தலைமகன் சிறைப்புறமாகக் கேட்டு வரைய வருகின்றமை, தோழி தலைமகட்கு உரைத்தது.

## 850. கலித்தோகை - 41. குறிஞ்சி

பாடுகம்வா வாழி தோழி வயக்களிற்றுக் கோடுலக்கை
யாகநற் சேம்பி னிலைசுளகா ஆடுகழை நெல்லை
யறையுர லுட் பெய்திருவாம் பாடுகம்வா வாழி
தோழிநற் றோழிபா டுற்று ;

இடியுமிழ் பிரங்கிய விரவுபெயல் நடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயும் புன்செய் யானை
அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன்
நெடுவரை யாசினிப் பணவை யேறிக்

10 கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கை யொள்வீ சிதறி
ஆசினி மென்பழ மளிந்தவை யுதிராத்
தேன்செ யிறுஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துண ருழக்கிக்
15 குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துட் டங்கு மலைகெழு வெற்பனைப்
பாடுகம்வா வாழி தோழிநற் றோழிபா டுற்று;

18 இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை;

21 பொய்த்தற் குரியனோ பொய்த்தற் குரியனோ
அஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற் குரியனோ
குன்றக நன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றில்
திங்களுட் டீத்தோன்றி யற்று;

25 இளமழை யாடு மிளமழை யாடும்
இளமழை வைகலு மாடுமென் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று;

28 வாரா தமைவானோ வாரா தமைவானோ
வாரா தமைகுவா னல்லன் மலைநாடன்
ஈரத்து ளின்னவை தோன்றி னிழற்கயத்து
நீருட் குவளைவெந் தற்று;

32

மணிபோலத் தோன்று மணிபோலத் தோன்றும்
மண்ணா மணிபோலத் தோன்றுமென் மேனியைத்
துன்னான் துறந்தான் மலை ;

துறக்குவ னல்லன் துறக்குவ னல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவ னல்லன்
தொடர்பு ளினையவை தோன்றின் விசும்பிற்
சுடரு ளிருள்தோன்றி யற்று ;
எனவாங்கு,



நன்றா கின்றால் தோழிநம் வள்ளையுள்
ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி
மென்றோட் கிழவனும் வந்தன் னுந்தையும்
மன்றல் வேங்கைக்கீ ழிருந்து
மணநயந் தனனம் மலைகிழ வோற்கே.

இருவரும் இவ்வகையாற் பாடிய வள்ளைப்பாட்டுத் தலைவன் சிறைப்புறமாகக் கேட்டு, வரைவுவேண்டி விட, தந்தையும் வரைவுடம்பட்டமை தோழி தலைவிக்கு உரைத்தது.

## 851. கலித்தொகை - 42. குறிஞ்சி

மறங்கொ ளிரும்புலித் தொன்முரண் டொலைத்த
முறஞ்செவி வாரண முன்குள கருந்திக்
கறங்குவெள் ளருவி யோலிற் றுஞ்சும்
பிறங்கிருஞ் சோலை நன்மலை நாடன்
5 மறந்தான் மறக்கினி யெல்லா நமக்குச்
சிறந்தமை நாநற் கறிந்தன மாயி னவன்றிறங்
கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்
வள்ளை யகவுவம் வா, இகுளைநாம்
வள்ளை யகவுவம் வா ;

10 காணியவா வாழி தோழி வரைத்தாழ்பு
வாணிறங் கொண்ட வருவித்தே நம்மருளா
நாணிலி நாட்டு மலை ;

13 ஆர்வுற்றார் நெஞ்ச மழிய விடுவானோ
ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோல்

அறம்புரி நெஞ்சத் தவன் ;

16 தண்ணறுங் கோங்க மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோற் றோன்றுமே
கொன்னாள னாட்டு மலை ;

நம்மருளாக்

19 கூருகோ யேய்ப்ப விடுவானோ தன்மலை
நீரினுஞ் சாய லுடைய னயந்தோர்க்குத்
தேரீயும் வண்கை யவன் ;



22 வரைமிசை மேற்றொடுத்த நெய்க்க ணிறாஅல்
மழைநுழை திங்கள்போற் றோன்று மிழைநெகிழ
எவ்வ முறீஇயினான் குன்று ;
25 எஞ்சா தெல்லா கொடுமை நுவலாதி
அஞ்சுவ தஞ்சா அறனிலி யல்லனென்
னெஞ்சம் பிணிக்கொண் டவன் ;
28 என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்
தாழிருங் கூந்தலென் தோழியைக் கைகவியாச்
சாயலின் மார்பன் சிறுபுறஞ் சார்தர
ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
ஆயிழை மேனிப் பசப்பு.

முன்பு பெற்ற வழி மலிந்ததனைப் பின்பு பிரிந்தவழிக் கலங்கிக் கூறியது. என்னை? தலைவன் அருமை செய்தயர்த்தவழித் தோழி தலைவியை ஆற்றுவித்தற் பொருட்டுத் தலைவனை இயற்பழிப்ப, தலைவி இயற்பட மொழிந்ததனைச் சிறைப்புறமாகக் கேட்டுத் தலைவன் முன்னொருகால் வந்து சிறுபுறஞ் சாரத் தான் ஆற்றினமை குறித்துப் பின்னொருகால் அவ்வாறு பாட அவன் சிறுபுறஞ்

சாரா மையிற் கலங்கி நெஞ்சொடு கூறியதாகலின்.

## 852. கலித்தொகை - 43. குறிஞ்சி

வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பி னினவண் டிமிர்பூதுஞ்
சாந்த மரத்தி னியன்ற வுலக்கையால்
ஐவன வெண்ணெ லறையுர லுட்பெய் திருவாம்
ஐயனை யேத்துவாம் போல வணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் நாம்;
தகையவர் கைச்செறித்த தாள்போலக் காந்தள்
முகையின்மேற் றும்பி யிருக்கும் பகையெனிற்
கூற்றம் வரினுந் தொலையான்றன் னட்டார்க்குத்
தோற்றலை நாணுதோன் குன்று;



வெருள்புட னோக்கி வியலறை யூகம்
இருள்தூங் கிறுவரை யூர்பிழி பாடும்
வருடைமான் குழவிய வளமலை நாடனைத்
தெருளத் தெரியிழாய் நீயொன்று பாடித்தை;

நுண்பொறி மான்செவி போல வெதிர்முளைக்
கண்பொதி பாளை கழன்றுகும் பண்பிற்றே
மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர்குற்றங்
கூறுதல் தேற்றாதோன் குன்று ; 20

புணர்நிலை வளகின் குளகமர்ந் துண்ட
புணர்மருப் பெழில்கொண்ட வரைபுரை செலவின்
வயங்கெழில் யானைப் பயமலை நாடனை
மணநாறு கதுப்பினாய் மறுத்தொன்று பாடித்தை ; 24

கடுங்க ணுழுவை யடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉந் தூங்கு மிடும்பையால்
இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால்
தன்மெய் துறப்பான் மலை ;
எனவாங்கு,
29 கூடி யவர்திறம் பாடவென் தோழிக்கு
வாடிய மென்றோளும் வீங்கின
ஆடமை வெற்ப னளித்தக்காற் போன்றே.

வரைவுநீட ஆற்றாளாயினவிடத்துத் தோழி தானுந் தலைவியும் வள்ளைப் பாடலுள் முருகனைப் பாடுவார்போல இருவர்க்கும் ஏற்பத் தலைவனைப் பாடத் தலைவி

ஆற்றினமை தோழி தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறியது.

## 853. கலித்தொகை - 44. குறிஞ்சி

கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண்ட நனஞ்சாரல்
எதிரெதி ரோங்கிய மால்வரை யடுக்கத்து
அதிரிசை யருவிதன் னஞ்சினை மிசைவீழ
முதிரிண ரூழ்கொண்ட முழவுத்தா ளெரிவேங்கை
வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப்



பரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்
திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல்வெற்ப ;
8
தன்னெவ்வங் கூரினும் நீசெய்த வருளின்மை
என்னையு மறைத்தாளென் தோழி யதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தானாணி ;

11 கூருநோய் சிறப்பவும் நீசெய்த வருளின்மை
சேரியு மறைத்தாளென் தோழி யதுகேட்டாங்கு
ஒருநீ நிலையலை யெனக்கூறல் தானாணி ;

14 நோயட வருந்தியும் நீசெய்த வருளின்மை
ஆயமு மறைத்தாளென் தோழி யதுகேட்டு
மாயநின் பண்பின்மை பிறர்கூறல் தானாணி ;
எனவாங்கு,

18 இனையன தீமை நினைவனள் காத்தாங்கு
அனையரும் பண்பினா னின்றீமை காத்தவள்
அருந்துய ராரஞர் தீர்க்கு
மருந்தாகிச் செல்கம் பெருமநாம் விரைந்தே.

வரையாது வந்தொழுகுந் தலைவனை, தோழி, தலைவியது கற்பு மிகுதியும் இவ்வொழுக்கம் அலராகின்றமையும் அவளது ஆற்றாமையுங் கூறி வரைவுகடாயது.

## 854. கலித்தொகை - 45. குறிஞ்சி

விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறைக்
கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை
அருமணி யவிருத்தி யரவுநீ ருணல்செத்துப்
பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கனைபெயல்
5 உருமுக்கண் ணுறுதலி னுயர்குர லொலியோடி
நறுவீய நனஞ்சாரற் சிலம்பலிற் கதுமெனச்
சிறுகுடி துயிலெழூஉஞ் சேணுயர் விறல்வெற்ப ;

8 கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ



புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை ;
12

புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்குநின்
அகன்மலை யடுக்கத்த அமையேய்க்கு மென்பதோ
கடையெனக் கலுழுநோய் கைம்மிக
வென்றோழி
தடையின திரண்டதோள் தகைவாடச்
சிதைத்ததை ;

16 சுடருற வுறநீண்ட சுரும்பிமி ரடுக்கத்த
விடர்வரை யெரிவேங்கை யிணரேய்க்கு

மென்பதோ

யாமத்துந் துயிலல ளலமரு மென்றோழி
காமரு நல்லெழில் கவின்வாடச் சிதைத்ததை ;

எனவாங்கு,

21 தன்றீமை பலகூறிக் கழறலி னென்றோழி

மறையிற்றன் மருவுற மணந்தநட் பருகலாற்
பிறைபுரை நுதலவர்ப் பேணிநம்
உறைவரைந் தனரவ ருவக்கு நாளே.

வரைவிடை யாற்றாத தலைவிக்குத் தோழி தான் தலைவனை நெருங்கி வரைவுகடாவ அதுகேட்ட தலைவன் வரைவு முயற்சி யான் வருதல் இடையிட்டதூஉந் தமர்வரைவெதிர்ந்ததூஉங் கூறி அவளை ஆற்றுவித்தது.

**855. கலித்தொகை - 46.** குறிஞ்சி

வீயகம் புலம்ப வேட்டம் போகிய

மாஅ லஞ்சிறை மணிநிறத் தும்பி
வாயிழி கடாத்த வான்மருப் பொருத்தலோடு
ஆய்பொறி யுழுவை தாக்கிய பொழுதின்
வேங்கையஞ் சினையென விறற்புலி முற்றியும்
பூம்பொறி யானைப் புகர்முகங் குறுகியும்
வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை
நயனுடை நட்பாக்கும் வினைவர்போல் மறுத்தரும்
அயமிழி யருவிய வணிமலை நன்னாட ;

ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறூஉன்
மாறினெ னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப



கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப்
பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக ;

அருஞ்செல வாரிடை யருளிவந் தளிபெறூஉன்
வருந்தினெ னெனப்பல வாய்விடூஉந் தானென்ப

நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலசூழ மனத்தோடு பைதலேன் யானாக ;

கனைபெயல் நடுநாள்யான் கண்மாறக் குறிபெறாஅன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
அளிநசைஇ யார்வுற்ற அன்பினேன் யானாக;
எனவாங்கு,
23 கலந்தநோய் கைமிகக் கண்படா வென்வயிற்
புலந்தாயு நீயாயிற் பொய்யானே வெல்குவை
இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலைச்
சிலம்புபோற் கூறுவ கூறும்
இலங்கே ரெல்வளை யிவளுடை நோயே.

அல்லகுறிப்பட்டுத் தலைவன் மீள அதனை என் பிழையாகக் கருதுவனெனக் கவன்று ஆற்றாளாகி, "தன்குறி தள்ளிய தெருளாக் காலை, வந்தனன் பெயர்ந்த வறுங்களை நோக்கித், தன் பிழைப்பாகத் தழீஇத் தேறிய" தலைவியது நிலைமை தோழி தலைவற்குக் கூறி, இவ்விடையீடு நின்தோழியினுயிற்றென எனது பிழைப்பாக்கி அவளை ஆற்றுவிப்பாய்; நீ உரைத்ததே உரையாம் அவட்கென அவளது ஆற்றாமைகூறி வரைவுகடாயது.

**856.** கலித்தொகை - **47.** குறிஞ்சி ஒன்று,

இரப்பான்போ லெளிவந் துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கட் டோன்று மடக்கமு முடையன்
இல்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வன்மையு முடையன்



அன்னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும் ;
9

நின்னின்றி யமையலேன் யானென்னு மவனாயின்
அன்னான்சொல் நம்புண்டல் யார்க்குமிங் கரிதாயின்
என்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால் ;
12 அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனாயின்
தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயின்
அளியரோ வெம்போல வீங்கிவன்
வலைப்பட்டார் ;

வாழலேன் யானென்னு நீநீப்பி னவனாயின்
ஏழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற்
சூழுங்கால் நினைப்பதொன் றறிகலேன் வருந்துவல்
சூழுங்கால் நறுநுதால் நம்முளே சூழ்குவம்;
அவனை,
நாணடப் பெயர்த்தல் நமக்குமாங் கொல்லாது
பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்
வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்
கூறுவென் போலக் காட்டி
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவன் றன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக்கூற்றுத் தன்னாற் பொறுக்கவொண்ணாத வாறும் அவன் கருத்தும் தலைவிக்குக்கூறி அவன் குறைநயப்பத் தன்னுள்ளே சொல்லியது.

## 857. கலித்தொகை - 48. குறிஞ்சி

ஆமிழி யணிமலை யலர்வேங்கைத் தகைபோலத்
தேமூசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த
வாய்நில்லா வலிமுன்பின் வண்டூது புகர்முகப்
படுமழை யடுக்கத்த மாவிசும் போங்கிய
கடிமரத் தருத்திய கமழ்கடாந் திகழ்தரும்
பெருங்களிற் றினத்தொடு வீங்கெருத் தெறுழ்முன்பின்
இரும்புலி மயக்குற்ற விகன்மலை நன்னாட ;
8 வீழ்பெயற் கங்குலின் விளியோர்த்த வொடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ

தாழ்செறி கடுங்காப்பிற் றாய்முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால் ;

12 இனையிரு ளிதுவென வேங்கிநின் வரனசைஇ
நினைதுய ருழப்பவள் பாடில்கட் பழியுண்டோ
இனையளென் றெடுத்தரற்று மயல்முன்னர் நின்சுனைக்
கனைபெயல் நீலம்போற் கண்பனி கலுழ்பவால் ;

16 பன்னாளும் படரடப் பசலையா லுணப்பட்டாள்
பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ
இன்னுரைச் செதும்பரற் றுஞ் செவ்வியுள் நின்சோலை
மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால் ;

எனவாங்கு,

21 பின்னீதல் வேண்டும்நீ பிரிந்தோள்நட் பெனநீவிப்
பூங்கண் படுதலு மஞ்சுவல் தாங்கிய
அருந்துய ரவலந் தூக்கின்
மருங்கறி வாரா மலையினும் பெரிதே.

வரையாது வந்து ஒழுகுந் தலைவற்குத் தோழி தலைவியாற் றாமையும் இவ்வொழுக்கம் புறத்தார் அறியப்படுகின்றமையும் கூறி வரைவுகடாயது.

## 858. கலித்தொகை - 49. குறிஞ்சி

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு

நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை
நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
5 புதுவ தாக மலர்ந்த வேங்கையை
அதுவென வுணர்ந்தத னணிநல முருக்கிப்

பேணு முன்பிற்றன் சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை நன்னாட ;
10 போதெழில் மலருண்க ணிவள்மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ வினிதுமற் றின்னாதே



மின்னோருங் கண்ணாக இடியென்னாய் பெயலென்னாய்
இன்னதோ ராரிடை யீங்குநீ வருவதை ;
14 இன்புற வளித்தனை யிவள்மாட்டு நீயின்ன
அன்பினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
மணங்கமழ் மார்பினை மஞ்சிவ ரடுக்கம்போழ்ந்து
அணங்குடை யாரிடை யீங்குநீ வருவதை ;
18 இருளுற ழிருங்கூந்த லிவள்மாட்டு நீயின்ன
அருளினை யென்பதோ வினிதுமற் றின்னாதே
ஒளிறுவேல் வலனேந்தி யொருவன்யா னென்னாது
களிறியங் காரிடை யீங்குநீ வருவதை ;
அதனால்,
23 இரவின் வார லைய விரவுநீ

அகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுவையிவள் தடமென் றோளே.

நீரிவ்வாறு வருகின்ற வரவு எமக்குத் துன்பத்திற்குக் காரணமாகாநின்றதெனக் கூறி இரவு வருவானைத் தோழி பகல்வருகவென்றது.

### 859. கலித்தொகை - 50. குறிஞ்சி

வாங்குகோல் நெல்லொடு வாங்கி வருவைகல்
மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி
தூங்கிலை வாழை நளிபுக்கு ஞாங்கர்
வருடை மடமறி யூர்விடைத் துஞ்சும்
இருள்தூங்கு சோலை யிலங்குநீர் வெற்ப;
அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
உரவுவில் மேலசைத்த கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் தோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர லேனல்
கடிதல் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டு மிவளே
பல்கோட் பலவின் பயிர்ப்புறு தீங்கனி
அல்கறைக் கொண்டு ணமலைச் சிறுகுடி
நல்கூர்ந்தார் செல்வ மகள்;

நீயே, வளியி னிகல்மிகுந் தேருங் களிறுந்
தளியிற் சிறந்தனை வந்த புலவர்க்கு
அளியொடு கைதூ வலை ;
அதனால்,
கடுமா கடவுறூஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
உழையிற் பிரியிற் பிரியும்
இழையணி யல்குலென் தோழியது கவினே.

"புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற்கண்" தோழி கூறியது. அது தோழியிற் கூட்டம் நிகழ்ந்தபின் முற்காலத்துப் பணிந்த பின்னின்றானைத் தோழி தானே பணிந்தொழுகுதலாம்.

**860.** கலித்தொகை - **51.** குறிஞ்சி

சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினும் ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானு மிருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை

வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு
அன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்

கடைக்கணாற்கொல்வான்போல்நோக்கிநகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்.

"புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின் பகுதிக்கண்" தலைவி தோழிக்குக் கூறியது.

## கபிலர் 405

## 861. கலித்தொகை - 52. குறிஞ்சி

முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்

குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்ததன்
நிறஞ்சாடி முரண்தீர்ந்த நீண்மருப் பெழில்யானை
மல்லரை மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பண்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலும் நாடகேள் ;

7 தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே ;

11 ஈர்ந்த ணுடையை யெல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினள் செய்குறி நீவரின்
ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென வார்ப்பவ ரேனல்கா வலரே ;

15 ஆர மார்பினை யண்ணலை யளியை
ஐதக லல்குலாள் செய்குறி நீவரின்
கறிவளர் சிலம்பில் வழங்க லானாப்
புலியென் றோர்க்குமிக் கலிகே ழூரே ;

எனவாங்கு,

20 விலங்கோரார் மெய்யோர்ப்பி னிவள்வாழா ளிவளன்றிப்
புலம்புக ழொருவ யானும் வாழேன்
அதனால், பொதியவிழ் வைகறை வந்துநீ குறைகூறி
வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
25 வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே.

இரவுக்குறி வந்த தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி இரவுக் குறி யது ஏதமும் ஏதத்தால் வருந் துன்பமும்

தன்னுள்ளத்து விழைவும் கூறி வரைவுகடாயது.



## 862. கலித்தொகை - 53. குறிஞ்சி

வறனுற லறியாத வழையமை நறுஞ்சாரல்
விறல்மலை வியலறை வீழ்பிடி யுழையதா
மறமிகு வேழந்தன் மாறுகொள் மைந்தினாற்
புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல
5 உயர்முகை நறுங்காந்தள் நாடோறும் புதிதீன
அயம்நந்தி யணிபெற வருவியார்த் திழிதரும்
பயமழை தலைஇய பாடுசால் விறல்வெற்ப ;

8 மறையினின் மணந்தாங்கே மருவறத் துறந்தபின்
இறைவளை நெகிழ்போட வேற்பவு மொல்லுமன்
அயலலர் தூற்றலி னாய்நல னிழந்தகண்
கயலுமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால் ;
12 இனியசெய் தகன்றுநீ யின்னாதத் துறத்தலிற்
பனியிவள் படரெனப் பரவாமை யொல்லுமன்
ஊரலர் தூற்றலி னொளியோடி நறுநுதல்
பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால் ;

16 அஞ்சலென் றகன்றுநீ யருளாது துறத்தலின்
நெஞ்சழி துயரட நிறுப்பவு மியையுமன்

நனவினு னலம்வாட நலிதந்த நடுங்கஞர்
கனவினு லழிவுற்றுக் கங்குலு மாற்றாக்கால் ;

எனவாங்கு,
21 விளியாநோ யுழந்தானு வென்றோழி நின்மலை
முளிவுற வருந்திய முளைமுதிர் சிறுதினை
தளிபெறத் தகைபெற் றாங்குநின்
அளிபெற நந்துமிவ ளாய்நுதற் கவினே.

ஒருவழித் தணந்து வந்த தலைவற்குத் தோழி தலைவியாற்றாமையும் ஆற்றுவித்தல தருமையுஞ் சொல்லி வரைவுகடாயது.

## 863. கலித்தொகை - 54. குறிஞ்சி

கொடியவுங் கோட்டவும் நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம்
பொலன்கோதைத்



தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளாய்
அடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென்ன
நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரல்முறை சுற்றி மோக்கலு மோந்தனன்
நறாஅ வவிழ்ந் தன்னவென்
மெல்விரற்போதுகொண்டு செறாஅச் செங்கண்
புதைய வைத்துப்
பறாஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
தொய்யி லிளமுலை யினிய தைவந்து

தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கும்
மையல் யானையின் மருட்டலு மருட்டினன் ;

அதனால்,

அல்லல் களைந்தனன் தோழி நந்நகர்
அருங்கடி நீவாமை கூறி னன்றென
நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்து
இன்னது செய்தா ளிவளென
மன்னா வுலகத்து மன்னுவது புரைமே.

கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைக் களைந்தேனென உரை யெனத் தோழிக்கு உரைத்தற்கண் தலைவி கூறியது. அது நொது மலர் வரைவிற்கு மணமுரசு இயம்பியவழி ஆண்டானும் பிறவாண்டானும் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி, அதனை நமர் அறியக் கூறல்வேண்டுமென்றும் தலைவற்கு நம் வருத்தம் அறியக் கூறல்வேண்டுமென்றும் தலைவி கூறுதற்கண் நிகழ்வது.

## 864. கலித்தொகை - 55. குறிஞ்சி

மின்னொளி ரவிரற விடைபோழும்
பெயலேபோற்
பொன்னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை
இன்னகை யிலங்கெயிற் றுத்தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதால் நினக்கொன் று கூறுவாங் கேளினி ;

6 நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணும்
இயலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று;
எனவாங்கு,
16 அனையன பலபா ராட்டிப் பையென
வலைவர் போலச் சோர்பத னொற்றிப்
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் தொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
தொழூஉந் தொடூஉமவன் தன்மை
ஏழைத் தன்மையோ வில்லை தோழி.

“பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி, யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ, ளருமைசான்ற நாலிரண்டுவகையிற்,

"பெருமை சான்ற வியல்பின்கண்" தலைவி கூறியது. என்றது, "ஒருமைக் கேண்மையின் உறுகுறை—தான் அவனென்னும் வேற்றுமையில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய குறையை, பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கித் தெளிந்தோள்—முன்னர்த் தெய்வப் புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அதுகாரணத்தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி, அருமை சான்ற நாலிரண்டு வகையில் — தான் முன் அருமையமைந்து நின்ற நிலையாற் றலைவன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப் பயிறன் முதலிய எட்டினாலே, பெருமை சான்ற இயல்பின் கண்ணும்—தனக்கு உளதாம் பெருமை கூறுதற்கு அமைந்ததோர் இயல்பின் கண்ணும் எ - று." இதனாற் போந்த பொருள் தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன் பெருமை தோழிக்குக் கூறுதலாயிற்று.

## கபிலர் 409

## 865. கலித்தொகை - 56. குறிஞ்சி

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்காற்
கொழுநிழல் ஞாழல் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்து
ஈங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்

வல்லவன் தைஇய பாவைகொல் நல்லார்
10

உறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள் ;
இவளைச், சொல்லாடிக் காண்பேன் தகைத்து ;
நல்லாய் கேள்,
15 ஆய்தூவி யனமென அணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்
மாதர்கொள் மானோக்கின் மடநல்லாய்
நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ அறியாயோ
; 19 நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்கு
அணங்காகு மென்பதை யறிதியோ அறியாயோ ;
23

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப்
பெயல்துளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டார்

28

உயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ உணராயோ ;
எனவாங்கு,
பேதுற்றாய் போலப் பிறரெவ்வம் நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய்
நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்

கேளினி



போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
இறையே தவறுடை யான்.

" காமஞ் சாலா விளமை யோள்வயி, னேமஞ் சாலா விடும்பை யெய்தி, நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற், றன்னொடு மவ ளொடுந் தருக்கிய புணர்த்துச், சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல், புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே " என்பத னால், தருக்கிச் சொல்லிச் சொல்லெதிர்பெறான் இன்புற்றது.

## 866. கலித்தொகை - 57. குறிஞ்சி

வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பால்
மாவென்ற மடநோக்கின் மயிலியற் றளர்பொல்கி
ஆய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென அணங்கென யாதொன்றுந்
5 தெரிகல்லா விடையின்கட் கண்கவர் பொருங்கோட
வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனகர்
இளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி ;
8 பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்கண்
ஏந்துகோட்டெழில்யானையொன்னாதார்க்கவன்வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ சின்மொழி ;
12 பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுள்
கழிகவி னிளமாவின் தளிரன்ன யதன்றலைப்

பணையமை பாய்மான்தே ரவன்செற்றார்
நிறம்பாய்ந்த
கணையினும் நோய்செய்தல் கடப்பன்றோ
கனங்குழாய்; 16 வகையமை தண்டாரான் கோடுயர்
பொருப்பின்மேல்
தகையிணை ரிளவேங்கை மலரன்ன சுணங்கினாய்
மதவலி மிகுகடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவால் தக்கதோ காழ்கொண்ட விளமுலை ;
எனவாங்கு,

கபிலர் 411

21 இனையன கூற விறைஞ்சுபு நிலம்நோக்கி
நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போல் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே.

இதுவும் அது.

## 867. கலித்தொகை - 58. குறிஞ்சி

வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
போரெழில் மலருண்கட் பிணையெழில் மானோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்

கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நசுப்பினும்
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை
ஆருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்;

7 உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
இளமையா னுணராதாய் நின்தவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய் ;
11

நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்தவ றில்லானும்
இடைநில்லா தெய்க்குநின்
உடைமையாற் போத்தந்த

னுருவறிந் தணிந்துதம் 15
நுமர்தவ றில்லென்பாய் ;

அல்லல்கூர்ந் தழிவுற அணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்தவ றில்லானும்

ஒல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய் ;
20

எனவாங்கு,
ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யான் நீபடு பழியே.

இதுவும் அது.



## 868. கலித்தொகை - 59. குறிஞ்சி

தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் தாமரை
முளைநிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
அடுக்கநா றலர்காந்தள் நுண்ணேர்தண் ணேருருவின்
துடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கைச்
சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த அழகமை புனைவினை
ஆய்சிலம் பெழுந்தார்ப்ப அஞ்சில வியலுநின்
பின்னுவிட் டிருளிய ஐம்பால்கண் டென்பால
என்னைவிட் டிகத்தர இறந்தீவாய் கேளினி ;

மருளியான் மருளுற இவனுற்ற தெவனென்னும்
அருளிலை யிவட்கென அயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ ;

உருளிழா யொளிவாட இவனுண்ணே யாதென்னும்
அருளிலை யிவட்கென அயலார்நிற் பழிக்குங்காற்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
எய்திய பலர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ ;
18

ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணே யாதென்னும்
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
சிறுமுத் தனைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
நறுநுத லவரொடு நக்கதுநன் கிலைவதோ ; என
வாங்கு,
'23 அனையவை யுளையவும் யானினக் குரைத்ததை
இனையநீ செய்தது வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது
நயம்பற்று விடினில்லை நசைஇயோர் திறத்தே.

இரந்து குறையுற்றுப் பின்னின்ற தலைவன்
ஆற்றுனுப் தலைவியைநோக்கி இங்ஙனம் வருந்துவையாயின்
நீ செய் தவம் இன்றுமெனக் கூறியது.

## 869. கலித்தொகை - 60. குறிஞ்சி

சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதல்
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீ ழிருங்கூந்தல்
நுணங்கெழி லொண்டித்தி நுழைநொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த அல்குலாய் ;

கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்கு
உண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித்
தொழூஉத்தொழுதே
கண்ணுநீ ராக நடுங்கினன் இன்னகாய்
என்செய்தான் கொல்லோ இஃதொத்தன் தன்கண்
பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளுள்
உருகுவான் போலு முடைந்து ;
12 தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க்
வாரண வாசிப் பதம்பெயர்த்த லேதில

கண்டுநீ

நீநின்மேற் கொள்வ தெவன் ;

15 அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் தோழி யுறீஇய
ஆரஞ ரெவ்வ முயிர்வாங்கும்
மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ ;

19 நின்முகங் காணு மருந்தினே னென்னுமால்
நின்முகந் தான்பெறி னல்லது கொன்னே

மருந்து பிறிதியாது மில்லேல் திருந்திழாய்
என்செய்வாங் கொல்லினி நாம் ;

பொன்செய்வாம் ;

24

ஆறு விலங்கித் தெருவின்கண் நின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் பண்புணராம்
தேற லெளிதென்பாம் நாம் ;
ஒருவன், சாமா றெளிதென்பாம் மற்று ;

28 சிறிதாங்கே, மாணூ ரம்ப லலரி னலர்கென
நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி

பூணாகம் நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளோடு உறழ்ந்து அவனது குறை நயப்பக் கூறியது.

## 870. கலித்தொகை - 61. குறிஞ்சி

எல்லா இஃதொத்தன் என்பெறான் கேட்டைக்காண்
செல்வங் கடைகொளச் சாஅய்ச் சான்றவர்
அல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை;

7

எல்லாநீ, முன்னத்தா னென்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போல் திரிதருவாய்
என்னீ பெறாதீ தென்;
சொல்லின், மறாதீவாள் மன்னோ விவள்;
செறாஅது, ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது

வாழ்தலிற்
சாதலுங் கூடுமா மற்று ;
13 இவள்தந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும்
விழுப்பொருள்
யாதுநீ வேண்டி யது ;
15

பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லையாழ
மருளி மடநோக்கி னின்றோழி யென்னை
அருளீயல் வேண்டுவல் யான் ;
18 அன்னையோ, மண்டமரட்ட களிறன்னான்
தன்னையொரு
பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ ;
20 ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன் ; 22
ஆயின் என,
பல்லார்நக் கெள்ளப் படுமடல் மாவேறி
மல்லலூ ராங்கட் படுமே நறுநுதல்

- கபிலர்

நல்காள்கண் மாறி விடினெனச் செல்வாளும்
எள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
கள்வர்போல் நோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
உள்ளங் குறைபடா வாறு.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி அவனது நீக்கத்துக்கண் அவன் குறைமறுமைக்கு ஏற்பன சொல்லித் தலைமகளைக் குறை நயப்பித்தது.

## 871. கலித்தொகை - 62. குறிஞ்சி

ஏஎ யிஃதொத்த னாணிலன் தன்னொடு
மேவேமென் பாரையும் மேவினன் கைப்பற்றும்
மேவினு மேவாக் கடையு மஃதெல்லாம்

நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று;
9 சுடர்த்தொடீ, போற்றாய் களைநின் முதுக்குறைமை
போற்றிக்
வேட்டார்க் கினிதாயி னல்லது

நீர்க்கினிதென் று[கேள்
உண்பவோ நீருண் பவர் ;
12 செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
ஐவா யரவி னிடைப்பட்டு நைவாரா
மையில் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று ;
16 அறனு மதுகண்டற் றாயின் திறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்
வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.

"ஏறிய மடற்றிறம்" என்னும் சூத்திரத்து மிக்க காமத்து மிட லென்றதனால், தலைவனுந் தலைவியும் உறழ்ந்து கூறித் தலைவிகூடக் கருதிய பெருந்திணை.



## 872. கலித்தொகை - 63. குறிஞ்சி

நோக்குங்கால் நோக்கித் தொழூஉம்
பிறர்காண்பார்
தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி ;
எல்லா வெவன்செய்வாம் ;
6 பூக்குழாய் செல்ல லவனுழைக் கூஉய்க்கூஉய்
விரும்பியான் விட்டேனும் போல்வலென்
தோள்மேற்

கரும்பெழுது தொய்யிற்குச் செல்வலீங் காக
இருந்தாயோ வென்றாங் கிற ;
அவனின், திருந்தடி மேல்வீழ்ந் திரக்குநோய் தீர்க்கு
மருந்துநீ யாகுத லான் ;
இன்னும், கடம்பூண் டொருகால்நீ வந்தை
என்னாமை யென்மெய் தொடு ;

யுடம்பட்டாள்

இஃதோ அடங்கக்கேள் ;
நின்னொடு சூழுங்கால் நீயும் நிலங்கிளையா
என்னொடு நிற்ற லெளிதன்றோ மற்றவன்
தன்னொடு நின்று விடு.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனிலைமை தலைமகட்குக் கூறி அவளுரைத்த மாற்றத்தால் அவள் குறிப்பறிந்து இவ்வகை யான தலைவற்குக் கூறென அவளுடன் நகையாடிக் கூட்ட முண்மை தான் அறிந்தமை தோற்றுவித்தது.

**873. கலித்தோகை - 64. குறிஞ்சி**

அணிமுக மதியேய்ப்ப அம்மதியை நனியேய்க்கு
மணிமுக மாமழைநின் பின்னொப்பப் பின்னின்கண்
விரிநுண் ணூல் சுற்றிய வீரித ழலரி
அரவுக்கண் ணணியுற ழாரன்மீன் தகையொப்ப
அரும்படர் கண்டாரைச் செய்தாங் கியலும்
விரிந்தொலி கூந்தலாய் கண்டை யெமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டு ;

## கபிலர் 417

ஏஎ ! எல்லா, மொழிவது கண்டை யிஃதொத்தன் தொய்யில்
எழுதி யிறுத்த பெரும்பொன் படுகம்
உழுவ துடையமோ யாம் ;
உழுதாய்,
சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
திருந்திழை மென்றோ ளிழைத்தமற் றிஃதோ
கரும்பெல்லாம் நின்னுழ வன்றோ வொருங்கே
துகள றுவாண்முக மொப்ப மலர்ந்த
குவளையும் நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொள்ளு மெயிற்று யிவையல்ல
என்னுழுவாய் நீமற் றினி ;

19 எல்லா, நற்றோ ளிழைத்த கரும்புக்கு நீகூறும்
முற்றெழில் நீல மலரென வுற்ற
இரும்பீர் வடியன்ன வுண்கட்கு மெல்லாம்
பெரும்பொன் னுண் டென்பா யினி ;

23 நல்லா யிருளேகேள் ;
ஈங்கே தலைப்படுவ னுண்டான் தலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல ;

26 ஆங்காக வத்திற மல்லாக்கால் வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகா லெம்மை முயங்கினை சென்றீமோ
முத்தேர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லா
முத்தி யெறிந்து விடற்கு.

அருமை செய்தயர்த்த தலைவன் வந்துழித் தலைவி இடத்துத் தலைவன் அவளோடு உறழ்ந்துகூறி நகையாடிக்

எள்ளின
கூட்டத்
திற்கு உடம்படுவித்தது. இதற்கு விதி 'உயர்மொழிக்குரிய
வுறழுங் கிளவி' என்பதனுள், தலைவன் உயர்மொழிக்குத்
கூறுமென்றும்.
தலைவி உறழ்ந்து

874. கலித்தொகை - 65. குறிஞ்சி

திருந்திழாய் கேளாய்நம் மூர்க்கெல்லாஞ்
சாலும்

பெருநகை யல்கல் நிகழ்ந்த தொருநிலையே

27



மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்
அந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்
இன்சாயல் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனாங்கே
பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ ணின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையால் தம்பலந் தின்றியோ வென்றுதன்
பக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும்
வாய்வாளே னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியான்

ஏனைப் பிசாசரு ளென்னை நலிதரின்
இவ்வூர்ப் பலிநீ பெறூஉமற் கொள்வேன்
எனப்பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பான், அஞ்சின னாத லறிந்தியா னெஞ்சாது
ஒருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடிதரற்றிப் பூசல் தொடங்கின னங்கே
ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண்
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர்
ஏதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅம்
ஆகுலமாகி விளைந்ததை யென்றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து.

இரவுக்குறி அலராமென்றஞ்சித் தலைவனை நீக்கி நிறுத்தக் கருதிய தோழி "அல்ல குறிப்படுதலு மவள்வயி னுரித்தே, யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே" என்னும் சூத்திரத்தான் அல்ல குறிப்படுதல் தனக்கும் உரித்தாகலின், அவன் செய்த குறியறிதற்குப் புறத்துச் சென்றவழி, ஆண்டுப் பிறந்ததோர் செய்தியாக ஒரு பொய்யை நாடகவழக்கும் உலகியல் வழக்குமாகப் புனைந்துரை **கபிலர்**



வகையாற் படைத்துக்கொண்டு, பிற்றை ஞான்று தலைவன் சிறைப் புறமாகத் தலைவிக்குக் கூறியது. இதனை, "இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி, நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும், வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு, நல்வகையுடைய நலத்திற் கூறியும், பல்வகையானும்

படைக்கவும் பெறுமே " எனப் பொருளியற் சூத்திரத்துப் பொய்தலைப் பெய்தலையும் படைக்கவும் பெறுமென வழு வமைத்தவாற்றாற் கொள்க.

**875. குறுந்தொகை - 13. குறிஞ்சி**

மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த்
பைத லொருதலை சேக்கு நாடன்

துறுகற்

நோய்தந் தனனே தோழி
பசலை யார்ந்தநங் குவளையங் கண்ணே.

தோழியிற் கூட்டங்கூடி ஆற்றுவகையான்
ஆற்றுவித்துப் பிரிய
வேறுபட்ட கிழத்தி தோழிக்கு உரைத்தது.

**876. குறுந்தொகை - 18. குறிஞ்சி**

வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி
யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.

இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகனைத் தோழி

எதிர்ப்பட்டு
வரைவு கடாயது.

## 877. குறுந்தொகை - 25. குறிஞ்சி

யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால



ஒழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே.

வரைவுநீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 878. குறுந்தொகை - 38. குறிஞ்சி

கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை யுருட்டுங்
குன்ற நாடன் கேண்மை யென்றும்
நன்றுமன் வாழி தோழி யுண்கண்
நீரொ டொராங்குத் தணப்ப
உள்ளா தகறல் வல்லு வோர்க்கே.

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத் தோழிக்குக் கூறியது.

தீயோ ரன்னவென் உரனவித் தன்றே.

தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

### 882. குறுந்தொகை - 100. குறிஞ்சி

அருவிப் பரப்பி னைவனம் வித்திப்
பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்குங்
காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் வேழத்துக் கோடுநொடுத் துண்ணும்
வல்வில் லோரி கொல்லிக் குடவரைப்
பாவையின் மடவந் தனளே
மணத்தற் கரிய பணைப்பெருந் தோளே.

பாங்கற் குரைத்தது. அல்லகுறிப்பட்டு மீள்கின்றான் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

### 883. குறுந்தொகை - 106. குறிஞ்சி

புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்
தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
நயந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயி னெதிர்கொண்டு
தான்மணந் தனையமென விடுகந் தூதே.

தலைமகன் தூது கண்டு கிழத்தி தோழிக்குக் கூறியது.

### 884. குறுந்தொகை - 115. குறிஞ்சி

பெருநன் றாற்றிற் பேணாரு முளரே
ஒருநன் றுடைய ளாயினும் புரிமாண்டு

புலவி தீர வளிமதி யிலேகவர்பு
ஆடமை யொழுகிய தண்ணறுஞ் சாரல்
மென்னடை மரையா துஞ்சும்
நன்மலே நாட நின்னல திலளே.

உடன்போக்கு ஒருப்படுத்து மீளுந் தோழி தலைமகற்குக் கூறியது.

**885.** குறுந்தொகை - **121.**

குறிஞ்சி

மெய்யே வாழி தோழி சாரல்
மைப்பட் டன்ன மாமுக முசுக்கலே

ஆற்றப் பாயாத் தப்ப லேற்ற
கோட்டொடு போகி யாங்கு நாடன்

தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் தடமென் றோளே.

இரவுக்குறி வருந் தலைமகன் செய்யுங் குறி பிறிதொன்றனுன் நிகழ்ந்து மற்றவன் குறியை ஒத்தவழி அவ்வொப்புமையை மெய்ப்

பொருளாக உணர்ந்து சென்று ஆண்டு அவனேக் காணுது தலைமகள் மயங்கியவழிப் பின்னர் அவன் வரவுணர்த்திய தோழிக்குக் கூறியது.

**886.** குறுந்தொகை - **142.** குறிஞ்சி

சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇப்
புனக்கிளி கடியும் பூங்கட் பேதை
தானறிந் தன்றோ விலளே பானாட்
பள்ளி யானையி னுயிர்த்தென்
உள்ளம் பின்னுந் தன்னுழை யதுவே.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் சொல்லியது.

தோழிக்குத் தலைமகன் தன்குறை கூறியதூஉமாம்.

### 887. குறுந்தொகை - 153. குறிஞ்சி

குன்றக் கூகை குழறினும் முன்றிற்
பலவி னிருஞ்சினைக் கலைபாய்ந் துகளினும்
அஞ்சும னளித்தென் னெஞ்ச மினியே



ஆரிருட் கங்கு லவர்வரிற்
சாரல் நீளிடைச் செலவா னாதே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுகுகின்றுழி நாம் அவரை வேறுபடுத்தற்குக் காரணமென்னை யென்ற தோழிக்கு அவர் வரவு நமது ஆற்றாமைக்குக் காரணமாம் எனத் தலைமகள் கூறியது.

## 888. குறுந்தொகை - 187. குறிஞ்சி

செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி
சுரைபொழி தீம்பா லார மாந்திப்
பெருவரை நீழ லுகளும் நாடன்
கல்லினும் வலியன் தோழி
வலியனென் னாது மெலியுமென் னெஞ்சே.

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்க வேண்டித் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

## 889. குறுந்தொகை - 198. குறிஞ்சி

யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருள் முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்னபால் வார்பு

கரிக்குறட் டிறைஞ்சிய செறிக்கோட்
படுகிளி கடிகஞ் சேறு மடுபோர்

பைங்குரற்

எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்து
ஆர நாறு மார்பினை
வாரற்க தில்ல வருகுவள் யாயே.

தோழி குறியிடம் பெயர்த்துக் கூறியது.

## 890. குறுந்தொகை - 208. குறிஞ்சி

ஒன்றே னல்லெ னொன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்



நின்றுகொய மலரும் நாடனொடு
ஒன்றேன் தோழி யொன்றி னானே.

வரைவிடை ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 891. குறுந்தொகை - 225. குறிஞ்சி

கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி யுண்ணும் பெருங்கல் நாட
கெட்டிடத் துவந்த வுதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்த லுரியவால் நினக்கே.

வரைவிடை வைத்துப் பிரிவாற்குத் தோழி சொல்லியது.

## 892. குறுந்தொகை - 241. குறிஞ்சி

யாமெங் காமந் தாங்கவுந் தாந்தங்
கெழுதகை மையி னழுதன தோழி
கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பதம் நோக்கி
ஏறா திட்ட ஏமப் பூசல்
விண்தோய் விடரகத் தியம்பும்
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 893. குறுந்தொகை - 246. நெய்தல்

பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கிப்
பனிக்கழி துழவும் பானாள் தனித்தோர்
தேர்வந்து பெயர்ந்த தென்ப வதற்கொண்டு
ஓரு மலைக்கு மன்னை பிறரும்

கபிலர் 

பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்
இளையரு மடவரு முளரே
அலையாத் தாயரொடு நற்பா லோரே.

சிறைப்புறம்.

**894.** குறுந்தொகை - **249.** குறிஞ்சி

இனமயி லகவு மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக்
குன்றம் நோக்கினென் தோழி
பண்டை யற்றோ கண்டிசி னுதலே.

வரைவிடை வைப்ப ஆற்றகிற்றியோ என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

**895.** குறுந்தொகை - **259.** குறிஞ்சி

மழைசேர்ந் தெழுதரு மாரிக் குன்றத்து
அருவி யார்ந்த தண்ணறுங் காந்தள்
முகையவிழ்ந் தானா நாறு நறுநுதற்
பல்லிதழ் மழைக்கண் மாஅ யோயே
ஒல்லை யாயினுங் கொல்லை யாயினும்
நீயளந் தறிவைநின் புரைமை வாய்போற்
பொய்ம்மொழி கூறலஃ தெவனோ
நெஞ்சம் நன்றே நின்வயி னானே.

காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய வழி, தோழி அறத்தொடு நின்று யானே பரிகரிப்பல் என்று கருதியதனைத் தலைமகளும் நயப்பாளாகக் கூறியது.

**896.** குறுந்தொகை - **264.** குறிஞ்சி

கலிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை
ஒலிநெடும் பீலி துயல்வர வியலி
ஆடுமயி லகவும் நாட னம்மொடு



நயந்தனன் கொண்ட கேண்மை
பசந்தக் காலும் பசப்பொல் லாதே.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவல் என்றது.

**897.** குறுந்தொகை - **288.** குறிஞ்சி

கறிவள ரடுக்கத் தாங்கண் முறியருந்து
குரங்கொருங் கிருக்கும் பெருங்கல் நாடன்
இனிய னாகலி னினத்தி னியன்ற
இன்னா மையினு மினிதோ
இனிதெனப் படூஉம் புத்தேள் நாடே.

தலைமகனது வரவுணர்ந்து நம்பெருமான் நமக்கு அன்பிலன் என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

**898.** குறுந்தொகை - **291.** குறிஞ்சி

சுடுபுன மருங்கிற் கலித்த வேனற்
படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே
இசையி னிசையா இன்பா ணித்தே
கிளியவள் விளியென விழலோ வாவே

அதுபுலந் தழுத கண்ணே சாரற்
குண்டுநீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை
வண்டுபயில் பல்லிதழ் கலைஇத்
தண்டுளிக் கேற்ற மலர்போன் றவ்வே.

பாங்கற்கு உரைத்தது.

**899.** குறுந்தொகை - **312.** குறிஞ்சி

இரண்டறி கள்விநங் காத லோளே
முரண்கொள் துப்பிற் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம் நண்ணுற வந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்

கபிலர்



சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.

இரவுக்குறி வந்து நீங்குகின்ற தலைமகன் தன் நெஞ்சிற்கு வரைவிடை வேட்பக் கூறியது.

**900.** குறுந்தொகை - **355.** குறிஞ்சி

பெயல்கால் மறைத்தலின் விசும்புகா ணலரே

நீர்பரந் தொழுகலின் நிலங்கா ணலரே
எல்லை சேறலி னிருள்பெரி து பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
வேங்கை கமழுமெஞ் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே.

இரவுக்குறி நேர்ந்த தலைமகற்குத் தோழிநொந்து கூறியது.

## 901. குறுந்தொகை - 357. குறிஞ்சி

முனிபட ருழந்த பாடி லுண்கட்
பனிகால் போழ்ந்து பணையெழில் ஞெகிழ்தோள்
மெல்லிய வாகலின் மேவரத் திரண்டு
நல்ல வென்னுஞ் சொல்லை மன்னிய
ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேணோன்
ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை
மீன்படு சுடரொளி வெரூஉம்
வான்றோய் வெற்பன் மணவா வூங்கே.

தோழி கிழவன் கேட்கும் அண்மையனாகக் கிழத்திக்குச் சொல்லியது.

## 902. குறுந்தொகை - 361. குறிஞ்சி

அம்ம வாழி தோழி யன்னைக்கு
உயர்நிலை யுலகமுஞ் சிறிதா லவர்மலை
மாலைப் பெய்த மணங்கம ழுந்தியொடு

காலை வந்த முழுமுதற் காந்தள்
மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே.

வரைவு மலிந்தவழித் தோழி நன்காற்றினாய் என்றாட்குக் கிழத்தி சொல்லியது.

## 903. குறுந்தொகை - 385. குறிஞ்சி

பலவிற் சேர்ந்த பழமா ரினக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇச்
செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை யடுக்கத்துக் கிழவோ னென்றும்
அன்றை யன்ன நட்பினன்
புதுவோர்த் தம்மவிவ் வழுங்க லூரே.

வேற்று வரைவு மாற்றியது.

## 904. நற்றிணை - 1. குறிஞ்சி

நின்ற சொல்லர் நீடுதோ றினியர்
என்று மென்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்திற் றொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை

நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை யுறுபவோ செய்பறி யலரே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.

## 905. நற்றிணை - 13. குறிஞ்சி

எழாஅ யாகலி னெழினலந் தொலைய
அழாஅ தீமோ நொதுமலர் தலையே
ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த



பகழி யன்ன சேயரி மழைக்கண்
நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்
எறிபொற் பிதிரிற் சிறுபல தாஅய்
வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே.

இயற்கைப் புணர்ச்சியின் பிற்றைஞான்று தலைவியின் வேறுபாடுகண்ட தோழி தலைவி மறைத்தற்குச் சொல்லியது.

## 906. நற்றிணை - 32. குறிஞ்சி

மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி
அம்மலை கிழவோன் நந்நயந் தென்றும்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொற் றேறாய்
நீயுங் கண்டு நுமரொடு மெண்ணி

அறிவறிந் தளவல் வேண்டு மறுத்தரற்கு
அரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே.

தலைவிக்குக் குறைநயப்புக் கூறியது.

## 907. நற்றிணை - 59. முல்லை

உடும்பு கொலீஇ வரிநுண லகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத் தீயல் கெண்டி
எல்லுமுய லெறிந்த வேட்டுவ னஞ்சுவல
பல்வேறு பண்டத் தொடைமறந் தில்லத்து
இருமடைக் கள்ளி னின்களி செருக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே யன்புகலந்து

நம்வயிற் புரிந்த கொள்கையொடு நெஞ்சத்து
உள்ளின ளுறைவோ ளூரே முல்லை
நுண்முகை யவிழ்ந்த புறவிற்
பொறைதலை மணந்தன் றுயவுமா ரினியே.

வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.



## 908. நற்றிணை - 65. குறிஞ்சி

அமுத முண்கநம் அயலி லாட்டி
கிடங்கி லன்ன விட்டுக்கரைக் கான்யாற்றுக்

கலங்கும் பாசி நீரலைக் கலாவ
ஒளிறுவெள் ளருவி யொண்டுறை மடுத்துப்
புலியொடு பொருத புண்கூர் யானை
நற்கோடு நயந்த அன்பில் கானவர்
விற்சுழிப் பட்ட நாமப் பூசல்
உருமிடைக் கடியிடி கரையும்
பெருமலை நாடனை வரூஉமென் றோளே.

விரிச்சிபெற்றுப் புகன்ற தோழி தலைமகட்குச் சொல்லியது.

## 909. நற்றிணை - 77. குறிஞ்சி

மலையன் மாவூர்ந்து போகிப் புலையன்
பெருந்துடி கறங்கப் பிறபுலம் புக்கவர்
அருங்குறும் பெருக்கி யயாவுயிர்த் தாஅங்கு
உய்த்தன்று மன்னே நெஞ்சே செவ்வேர்ச்
சினைதொறுந் தூங்கும் பயங்கெழு பலவின்
சுளையுடை முன்றில் மனையோள் கங்குல்
ஒலிவெள் ளருவி யொலியிற் றுஞ்சும்
ஊரலஞ் சேரிச் சீறூர் வல்லோன்
வாளரம் பொருத கோணே ரெல்வளை
அகன்தொடி செறித்த முன்கை யொண்ணுதற்
றிதலை யல்குற் குறுமகள்
குவளை யுண்கண் மகிழ்மட நோக்கே.

பின்னின்ற தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது.

## 910. நற்றிணை - 217. குறிஞ்சி

இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண்டொறும் பொலியுங் கதழ்வாய் வேழம்
இருங்கேழ் வயப்புலி வெரீஇ யயலது

கபிலர்

கருங்கால் வேங்கை யூறுபட மறலிப்
பெருஞ்சினந் தணியுங் குன்ற நாடன்
நனிபெரி தினிய னாயினுந் துனிபடர்ந்து
ஊட லுறுவேன் தோழி நீடு
புலம்புசே ணகல நீந்திப்
புலவி யுணர்த்தல் வன்மை யானே.

தலைமகள் வாயின் மறுத்தது.

## 911. நற்றிணை - 222. குறிஞ்சி

கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை
வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சிக்
கைபுனை சிறுநெறி வாங்கிப் பையென
விசும்பா டாய்மயில் கடுப்ப யானின்று
பசுங்கா ழல்குல் பற்றுவன னூக்கிச்
செலவுடன் விடுகோ தோழி பலவுடன்
வாழை யோங்கிய வழையமை சிலம்பிற்
றுஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபடக் காணாது
பெருங்களிறு பிளிறுஞ் சோலையவர்
சேணெடுங் குன்றங் காணிய நீயே.

தோழி தலைமகன் வரவுணர்ந்து சிறைப்புறமாகச்
செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

## 912. நற்றிணை - 225. குறிஞ்சி

முருகுறழ் முன்பொடு கடுஞ்சினஞ் செருக்கிப்
பொருத யானை வெண்கோடு கடுப்ப
வாழை யீன்ற வையேந்து கொழுமுகை
மெல்லியல் மகளி ரோதி யன்ன
பூவொடு துயல்வரு மால்வரை நாடனை
இரந்தோ ருளர்கொல் தோழி திருந்திழைத்
தொய்யில் வனமுலை வரிவனப் பிழப்பப்



பசந்தெழு பருவரல் தீர
நயந்தோர்க் குதவா நாரில் மார்பே.

வன்புறை எதிரழிந்தது.

பரத்தை தலைமகட்குப் பாங்காயின வாயில்கேட்பச் சொல்லிய
தூஉமாம்.

## 913. நற்றிணை - 253. குறிஞ்சி

புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க்
பள்ளி யானையின் வெய்ய வுயிரினை
காணினும்

கழிபட வருந்திய வெவ்வமொடு பெரிதழிந்து
எனவ கேளாய் நினையினை நீநனி
உள்ளினும் பனிக்கு மொள்ளிழைக் குறுமகள்
பேரிசை யுருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவி னெய்திய வருங்காப் பினளே.

செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

### 914. நற்றிணை - 267. நெய்தல்

நொச்சி மாவரும் பன்ன கண்ண
எக்கர் ஞெண்டி னிருங்கிளைத் தொழுதி
இலங்கெயிற் றேஎ ரின்னகை மகளிர்
உணங்குதினை துழவுங் கைபோல் ஞாழல்
மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்
தன்னொடு புணர்த்த வின்னமர் கானற்
றனியே வருதல் நனிபுலம் புடைத்தென
வாரேன் மன்யான் வந்தனென் றெய்ய
சிறுநா வொண்மணித் தெள்ளிசை கடுப்ப
இனமீ னார்கை யீண்டுபுள் ளொலிக்குரல்
இவைமக னென்னு மளவை
வயமான் தோன்றல் வந்துநின் றனனே.

தோழி காப்புக்கைமிக்குக் காமம் பெருகிய காலத்துச் புறமாகச் சொல்லியது.

சிறைப்

வரைவு கடாயதூஉமாம்.



## 915. நற்றிணை - 291. நெய்தல்

நீர்பெயர்ந்து மாறிய செறிசேற் றள்ளல்
நெய்த்தலைக் கொழுமீ னருந்த வினக்குருகு
குப்பை வெண்மண லேறி யரைசர்
ஒண்படைத் தொகுதியி னிலங்கித் தோன்றுந்
தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயுங்
கண்டாங் குரையாய் கொண்மோ பாண
மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய வினநிரைப்
பல்லான் கிழவரி னழிந்தவிவள் நலனே.

வாயிலாகப்புக்க பாணற்குத் தோழி தலைமகளது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது.

## 916. நற்றிணை - 309. குறிஞ்சி

நெகிழ்ந்த தோளும் வாடிய வரியுந்
தளிர்வனப் பிழந்தவென் னிறனும் நோக்கி
யான்செய் தன்றிவள் துயரென வன்பின்

ஆழல் வாழி தோழி வாழைக்
கொழுமட லகவிலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழும மாக வறியுந ரின்றெனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவென் மன்யா னவருடை நட்பே.

வரைவுநீட ஆற்றாளெனக் கவன்று தான் ஆற்றாளாகிய தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

## 917. நற்றிணை - 320. மருதம்

விழவு மூழ்த்தன்று முழவுந் தூங்கின்று
எவன்குறித் தனள்கொ லென்றி யாயின்
தழையணிந் தலமரு மல்குற் றெருவின்
இளையோ ளிறந்த வனைத்தற்குப் பழவிறல்





ஓரிக் கொன்ற வொருபெருந் தெருவிற்
காரி புக்க நேரார் புலம்போற்
கல்லென் றன்றா லூரே யதற்கொண்டு
காவல் செறிய மாட்டி யாய்தொடி
எழில்மா மேனி மகளிர்
விழுமாந் தனர்தங் கொழுநரைக் காத்தே.

பரத்தை தனக்குப் பாங்காயினர் கேட்ப நெருங்கிச் சொல்லியது.

## 918. நற்றிணை - 336. குறிஞ்சி

பிணர்ச்சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக்கா லேனல் கைம்மிகக் கவர்தலிற்
கல்லத ரரும்புழை யல்கிக் கானவன்
வில்லிற் றந்த வெண்கோட் டேற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறை பகுக்கு நெடுமலை நாட
உரவுச்சின வேழ முருபுலி பார்க்கும்
இரவி னஞ்சா யஞ்சுவ லரவின்
ஈரளைப் புற்றங் காரென முற்றி
இரைதே ரெண்கின மகழும்
வரைசேர் சிறுநெறி வாரா தீமே.

ஆறுபார்த்துற்றுச் சொல்லியது.

## 919. நற்றிணை - 353. குறிஞ்சி

ஆளில் பெண்டிர் தாளிற் செய்த
நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள ஆடுமழை
தவழுங் கோடுயர் நெடுவரை
முடமுதிர் பலவின் குடமருள் பெரும்பழங்
கல்லுழு குறவர் காதல் மடமகள்

கருவிரல் மந்திக்கு வருவிருந் தயரும்
வான்தோய் வெற்ப சான்றோ யல்லையெங்
காமங் கனிவ தாயினும் யாமத்து

கபிலர்

இரும்புலி தொலைத்த பெருங்கை யானை
வெஞ்சின வுருமி னூறும்
அஞ்சுவரு சிறுநெறி வருத லானே.

தோழி ஆற்றதருமையஞ்சித் தான் ஆற்றாளாய்ச் சொல்லியது.

**920.** நற்றிணை - **359.** குறிஞ்சி

சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளுங் குன்ற நாடன்
உடுக்குந் தழைதந் தனனே யாமஃது
உடுப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பிற்
கேளுடைக் கேடஞ் சுதுமே யாயிடை
வாடல கொல்லோ தாமே யவன்மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை யடுக்கத்த கொயற்கருந் தழையே.

தோழி தழையேற்றுக் கொண்டு நின்று தலைமகள் குறிப்பி னேடியது.

**921.** நற்றிணை - **368.** குறிஞ்சி

பெரும்புனங் கவருஞ் சிறுகிளி யோப்பிக்
கருங்கால் வேங்கை யூசல் தூங்கிக்
கோடேந் தல்குற் றழையணிந் தும்மோடு
ஆடினம் வருதலி னினியது முண்டோ
நெறிபடு கூழைக் கார்முதிர் பிருந்த

வெறிகமழ் கொண்ட நாற்றமுஞ் சிறிய
பசலை பாய்தரு நுதலும் நோக்கி
வறிதுகு நெஞ்சினள் பிறிதொன்று சுட்டி
வெய்ய வுயிர்த்தனள் யாயே
ஐய அஞ்சினம் அளியம் யாமே.

தோழி தலைமகற்குச் செறிப்பறிவுறீஇயது.



## 922. நற்றிணை - 373. குறிஞ்சி

முன்றிற் பலவின் படுசுளை மரீஇப்
புன்றலை மந்தி தூர்ப்பத் தந்தை
மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி
ஐவன வெண்ணெற் குறூஉம் நாடனொடு
சூருடைச் சிலம்பி னருவி யாடிக்
காரரும் பவிழ்ந்த கணிவாய் வேங்கைப்
பாவமை யிதண மேறிப் பாசினம்
வணர்குரற் சிறுதினை கடியப்
புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே.

செறிப்பறிவுறீஇயது.

## 923. நற்றிணை - 376. குறிஞ்சி

முறஞ்செவி யானைத் தடக்கையிற் றடைஇ
இறைஞ்சிய குரல பைந்தாட் செந்தினை
வரையோன் வண்மை போலப் பலவுடன்
கிளையோ டுண்ணும் வளைவாய்ப் பாசினங்
குல்லை குளவி கூதளங் குவளை
இல்லமொடு மிடைந்த வீர்ந்தண் கண்ணியன்
சுற்றமை வில்லன் செயலைத் தோன்று
நற்றார் மார்பற் காண்குறிற் சிறிய
நற்கவற் கறிய வுரைமின் பிற்றை
அணங்கு மணங்கும் போலு மணங்கி
வறும்புனங் காவல் விடாமை
அறிந்தனி ரல்லிரோ அறனில் யாயே.

தோழி கிளிமேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறிப்பறி வுறீஇயது.

## கபிலர் - பதிற்றுப்பத்து

437

**924—933.** பதிற்றுப்பத்து - ஏழாம்பத்து -

61—70 924. பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்
வாடை தூக்கு நாடுகெழு பெருவிறல்
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன நல்லோள் கணவன்
பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்
புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ
புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய
வாராச் சேட்புலம் படர்ந்தோ னளிக்கென
இரக்கு வாரே னெஞ்சிக் கூறேன்
ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்
ஈத்தொறு மாவள் ளியனென நுவலுநின்
நல்லிசை தரவந் திசினே யொள்வாள்
உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை
நிலவி னன்ன வெள்வேல் பாடினி
முழவிற் போக்கிய வெண்கை
விழவி னன்னநின் கலிமகி ழானே.

61

துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு- செந்தூக்கு. பெயர் - புலாஅம்பாசறை.

925.

இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளு மாயிரும் பல்தோல்
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும் பசும்பிசி ரொள்ளழல்
ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ்பு
ஒல்லா மயலொடு பாடிமிழ் புழிதரு
மடங்கல் வண்ணங் கொண்ட கடுந்திறற்
றுப்புத்துறை போகிய கொற்ற வேந்தே
புனல்பொரு கிடங்கின் வரைபோ லிஞ்சி
அணங்குடைத் தடக்கையர் தோட்டி செப்பிப்



பணிந்திறை தருபநின் பகைவ ராயிற்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி
வளனுடைச் செறுவின் விளைந்தவை யுதிர்ந்த
களனறு குப்பை காஞ்சிச் சேர்த்தி
அரிய லார்கை வன்கை வினைஞர்
அருவி யாம்பல் மலைந்த சென்னியர்
ஆடுசிறை வரிவண் டோப்பும்
பாடல் சான்றவவ ரகன்றலை நாடே. 62

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வரைபோலிஞ்சி.

926. பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்
கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயும்
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
கால்திரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்
அடையடுப் பறியா வருவி யாம்பல்
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே. 63

இதுவும் அது. பெயர் - அருவியாம்பல்.



439

927. வலம்படு முரசின் வாய்வாட் கொற்றத்துப்
பொலம்பூண் வேந்தர் பலர்தில் லம்ம
அறங்கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய
உரைசால் வேள்வி முடித்த கேள்வி
அந்தண ரருங்கல மேற்ப நீர்பட்டு
இருஞ்சே றாடிய மணல்மலி முற்றத்துக்
களிறுநிலை முணைஇய தாரருந் தகைப்பிற்
புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி
அலங்கும் பாண்டி லிழையணிந் தீமென
ஆனாக் கொள்கையை யாதலி னவ்வயின்
மாயிரு விசும்பிற் பன்மீ னொளிகெட
ஞாயிறு தோன்றி யாங்கு மாற்றார்
உறுமுரண் சிதைத்த நின் னோன்றாள் வாழ்த்திக்
காண்கு வந்திசிற் கழல்தொடி யண்ணல்
மைபடு மலர்க்கழி மலர்ந்த நெய்தல்
இதழ்வனப் புற்ற தோற்றமொ டுயர்ந்த
மழையினும் பெரும்பயம் பொழிதி யதனாற்
பசியுடை யொக்கலை யொரீஇய
இசைமேந் தோன்றல்நின் பாசறை யானே. 64

துறை - காட்சி வாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது. பெயர்- உரைசால்வேள்வி.

928. எறிபிண மிடறிய செம்மருக் குளம்பிற்

பரியுடை நன்மா விரியுளை சூட்டி
மலைத்த தெவ்வர் மறந்தபக் கடந்த
காஞ்சி சான்ற வயவர் பெரும
வில்லோர் மெய்ம்மறை சேர்ந்தோர் செல்வ
பூணணிந் தெழிலிய வணைந்துவர லிளமுலை
மாண்வரி யல்குல் மலர்ந்த நோக்கின்
வேய்புரை பெழிலிய விளங்கிறைப் பணைத்தோட்
காமர் கடவுளு மாளுங் கற்பிற்
சேணாறு நறுநுதற் சேயிழை கணவ



பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை
பூணணிந்து விளங்கிய புகழ்சால் மார்பநின்
நாண்மகி ழிருக்கை யினிதுகண் டிகுமே
தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியி னளிக்குநின்
சாறுபடு திருவின் னனைமகி ழானே. 65

துறை - பரிசிற்றுறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நாண்மகிழிருக்கை.

929. வாங்கிரு மருப்பிற் றீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்
படர்ந்தனை செல்லு முதுவா யிரவல
இடியிசை முரசமொ டொன்றுமொழிந் தொன்னார்
வேலுடைக் குழூஉச்சமந் ததைய நூறிக்
கொன்றுபுறம் பெற்ற பிணம்பயி லழுவத்துத்
தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லின்
அம்பண வளவை விரிந்துறை போகிய
ஆர்பத நல்கு மென்ப கறுத்தோர்
உறுமுரண் தாங்கிய தாரருந் தகைப்பின்
நாண்மழைக் குழூஉச்சிமை கடுக்குந் தோன்றற்
றோன்மிசைத் தெழுதரும் விரிந்திலங் கெஃகிற்
றூர்புரிந் தன்ன வாளுடை விழவிற்
போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த
கடவுள் வாகைத் துய்வீ யேய்ப்பப்
பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை
கடத்திடைப் பிடவின் தொடைக்குலைச் சேக்கும்
வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பி னாடுகிழ வோனே. 66

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - புதல்சூழ்பறவை.

கபிலர் - பதிற்றுப்பத்து

930. கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
கடனறி மரபிற் கைவல் பாண

தெண்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை
கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க
வயங்குகதிர் வயிரொடு வலம்புரி யார்ப்பப்
பல்களிற் றினநிரை புலம்பெயர்ந் தியல்வர
அமர்க்க ணமைந்த வவிர்நிணப் பரப்பிற்
குழூஉச் சிறை யெருவை குருதி யாரத்
தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொடு
உருவில் பேய்மகள் கவலை கவற்ற
நாடுட னடுங்கப் பலசெருக் கொன்று
நாறிணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்

வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசகர்
எஃகா டூனங் கடுப்ப மெய்சிதைந்து
சாந்தெழில் மறைத்த சான்றோர் பெருமகன்
மலர்ந்த காந்தள் மாறா தூதிய
கடும்பறைத் தும்பி சூர்நசைத் தாஅய்ப்
பறைபண் ணழியும் பாடுசால் நெடுவரைக்

கல்லுயர் நேரிப் பொருநன்
செல்வக் கோமாற் பாடினை செலினே.

## 67

துறை - பாணாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர்- வெண்போழ்க்கண்ணி.

931. கால்கடிப் பாகக் கடலொலித் தாங்கு
வேறுபுலத் திறுத்த கட்டூர் நாப்பண்
கடுஞ்சிலை கடவுந் தழங்குகுரன் முரசம்
அகலிரு விசும்பி னாகத் ததிர
வெவ்வரி நிலைஇய வெயிலெறிந் தல்லது

உண்ணா தடுக்கிய பொழுதுபல கழிய
நெஞ்சுபுக லூக்கத்தர் மெய்தயங் குயக்கத்து

இன்னு ருறையுட் டாம்பெறி னல்லது
வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு
கட்கொடி நுடங்கு மாவணம் புக்குடன்
அருங்கள் நொடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து
நாம மறியா ஏம வாழ்க்கை
வடபுல வாழ்நரிற் பெரிதமர்ந் தல்கலும்
இன்னகை மேய பல்லுறை பெறுபகொல்
பாய லின்மையிற் பாசிழை ஞெகிழ
நெடும ணிஞ்சி நீணகர் வரைப்பின்
ஓவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூல்
அணங்கெழி லரிவையர்ப் பிணிக்கும்
மணங்கமழ் மார்பநின் தாள்நிழ லோரே. 68

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - ஏமவாழ்க்கை.

932.

மலையுறழ் யானை வான்தோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போல் தானைக் கடுங்குரல் முரசங்
காலுறு கடலிற் கடிய வுரற
எறிந்துசிதைந்த வாள்

இலைதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
வாய்ந்துதெரிந்த புகல்மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே
நின்போல், அசைவில் கொள்கைய ராகலி
னசையாது
ஆண்டோர் மன்றவிம் மண்கெழு ஞாலம்
நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாநியம் நிற்ப
விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர

கபிலர் - பதிற்றுப்பத்து

443

நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த
இலங்குகதிர்த் திகிரிநின் முந்திசி னோரே.

69

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித் தூக்கும். பெயர் - மண்கெழுஞாலம்.

933. களிறுகடைஇய தாள்
மாவுடற்றிய வடிம்பு
சமந்ததைந்த வேல்
கல்லலைத்த தோள்

வில்லலைத்த நல்வலத்து
வண்டிசை கடாவாத் தண்பனம் போந்தைக்
குவிமுகி ழூசி வெண்டோடு கொண்டு
தீஞ்சுனை நீர்மலர் மலைந்து மதஞ்செருக்கி
உடைநிலை நல்லமர் கடந்து மறங்கெடுத்துக்
கடுஞ்சின வேந்தர் செம்மல் தொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும
நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்
புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மைப்
பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்
கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்
புரையோள் கணவ பூண்கிளர் மார்ப
தொலையாக் கொள்கைச் சுற்றஞ் சுற்ற
வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி
உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணல்

மாடோ ருறையு முலகமுங் கேட்ப
இழுமென விழிதரும் பறைக்குர லருவி
முழுமுதல் மிசைய கோடுதொறுந்
துவன்றும்

அயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழும் நாளே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண் ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - பறைக்குர லருவி.

## 933-a. பதிகம்

மடியா வுள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி அந்துவற் கொருதந்தை
ஈன்ற மகள் பொறையன் பெருந்தேவி
யீன்றமகன்
நாடுபதி படுத்து நண்ணா ரோட்டி
வெருவரு தானை கொடுசெருப் பலகடந்து
ஏத்தல் சான்ற விடனுடை வேள்வி
ஆக்கிய பொழுதி னறத்துறை போகி
மாய வண்ணனை மனனுறப் பெற்றவற்கு
ஓத்திர நெல்லி னொகந்தூ ரீத்துப்
புரோசு மயக்கி
மல்ல லுள்ளமொடு மாசற விளங்கிய
செல்வக்கடுங்கோ வாழியாதனைக்

கபிலர் பாடினர் பத்துப் பாட்டு.

அவைதாம் : புலாஅம்பாசறை, வரைபோலிஞ்சி, அருவியாம் பல், உரைசால்வேள்வி, நாண்மகிழிருக்கை, புதல்சூழ்பறவை, வெண் போழ்க்கண்ணி, ஏமவாழ்க்கை, மண்கெழுஞாலம், பறைக்குரலருவி. இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: சிறுபுறமென நூறாயிரங்காணங்கொடுத்து நன்றாவென்னும் குன்றேறிநின்று தன்கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் அக்கோ.

செல்வக்கடுங்கோவாழியாதன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

## கபிலர் - குறிஞ்சிப்பாட்டு 445

## 934. பத்துப்பாட்டு - 8-வது குறிஞ்சிப்பாட்டு

அன்னாய் வாழிவேண் டன்னை யொண்ணுதல்
ஒலிமென் கூந்தலென் தோழி மேனி
விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்
அகலு ளாங்க ணறியுநர் வினாயும்
பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
நறையும் விரையு மோச்சியு மலவுற்று
எய்யா மையலை நீயும் வருந்துதி
நற்கவின் தொலையவும் நறுந்தோள் நெகிழவும்
புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவும்
உட்கரந் துறையு முய்யா வரும்படர்
செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்
முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடிற் புணரும்
சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி யையர்க்கு மந்நிலை
எளிய வென்னார் தொன்மருங் கறிஞர்
மாதரு மடனு மோராங்குத் தணப்ப
நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி
இருவே மாய்ந்த மன்ற லிதுவென
நாமறி வுறுவிற் பழியு முண்டோ
ஆற்றின் வாரா ராயினு மாற்ற
ஏனை யுலகத்து மியைவதால் நமக்கென
மானமர் நோக்கங் கலங்கிக் கையற்று

ஆனாச் சிறுமைய ளிவளுந் தேம்பும்
இகல்மீக் கடவு மிருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
இருபே ரச்சமோடு யானு மாற்றலென்
கொடுப்பினன் குடைமையும் குடிநிர லுடைமையும்
வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணாது





எமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை
நிகழ்ந்த வண்ணம் நீநனி யுணரச்
செப்ப லான்றிசிற் சினவா தீமோ
நெற்கொள் நெடுவெதிர்க் கணந்த யானை

முத்தார் மருப்பி னிறங்குகை கடுப்பத்
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்
நற்கோட் சிறுதினைப் படுபு ளோப்பி
எற்பட வருதிய ரெனநீ விடுத்தலிற்
கலிகெழு மரமிசைச் சேணோ னிழைத்த
புலியஞ் சிதண மேறி யவண
சாரற் சூரற் றகைபெற வலந்த
தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி
உரவுக்கதிர் தெறாஉ முருப்பவி ரமயத்து
விசும்பாடு பறவை வீழ்பதிப் படர
நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண்டு
அகலிரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு
நிரைசெலல் நிவப்பிற் கொண்மூ மயங்கி
இன்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎய்
ஒன்னார்க் கேந்திய விலங்குலை யெஃகின்
மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்தென
அண்ணல் நெடுங்கோட் டிழிதரு தெண்ணீர்
அவிர்துகில் புரையு மவ்வெள் ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்

பளிங்கு சொரிவன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடிப்
பொன்னெறி மணியிற் சிறுபுறந் தாழ்ந்தவெம்

பின்னிருங் கூந்தல் பிழிவனந் துவரி
உள்ளகஞ் சிவந்த கண்ணேம் வள்ளிதழ்
ஒண்செங் காந்த ளாம்ப லனிச்சம்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை



உரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிளம்
எரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடசம்
எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்லிணர்க் குரவம்
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா
விரிமல ராவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி
செருந்தி யதிரல் பெருந்தண் சண்பகம்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்தல்

தாழை தளவ முட்டாட் டாமரை
ஞாழல் மௌவல் நறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்

பாங்கர் மராஅம் பல்பூந் தணக்கம்
ஈங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை

அடும்பம ராத்தி நெடுங்கொடி யவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி

வஞ்சி பித்திகஞ் சிந்து வாரம்
தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவம் நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
ஆரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்தம் நாகம் நள்ளிரு ணாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்
அரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன்
மாலங் குடைய மலிவன மறுகி



வான்கண் கழீஇய அகலறைக் குவைஇப்
புள்ளா ரியத்த விலங்குமலைச் சிலம்பின்

வள்ளுயிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்
கிள்ளை யோப்பியுங் கிளையிதழ் பறியாப்
பைவிரி யல்குற் கொய்தழை தைஇப்
பல்வே றுருவின் வனப்பமை கோதையெம்
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி
எரியவி ருருவி னங்குழைச் செயலைத்
தாதுபடு தண்ணிழ லிருந்தன மாக
எண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழ்த்
தண்ணறுந் தகரங் கமழ மண்ணி
ஈரம் புலர விரலுளர்ப் பவிழாக்
காழகி லம்புகை கொளீஇ யாழிசை
அணிமிகு வரிமிஞி றார்ப்பத் தேங்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவும் நிலத்தவுஞ் சினையவுஞ் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சிப்
பைங்காற் பித்திகத் தாயித ழலரி

அந்தொடை யொருகாழ் வளைஇச் செந்தீ
ஒண்பூம் பிண்டி யொருகாது செரீஇ
அந்தளிர்க் குவவுமொய்ம் பலைப்பச் சாந்தருந்தி
மைந்திறை கொண்ட மலர்ந்தேந் தகலத்துத்
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலியச்
செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்

வண்ண வரிவில் லேந்தி யம்புதெரிந்து
நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி
இயலணிப் பொலிந்த வீகை வான்கழல்
துயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பிற்
பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரின்
உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும்
வெகுளும்

## கபிலர் - குறிஞ்சிப்பாட்டு

449

முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்து யாம்
இடும்பைகூர் மனத்தேம் மருண்டுபுலம் படர
மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்து
ஆகாண் விடையி னணிபெற வந்தெம்
அலமர லாயிடை வெரூஉத லஞ்சி
மெல்லிய வினிய மேவரக் கிளந்தெம்
ஐம்பா லாய்கவி னேத்தி யொண்டொடி
அசைமென் சாய லவ்வாங் குந்தி
மடமதர் மழைக்கண் இளையீ ரிறந்த
கெடுதியு முடையே னென்றன னதனெதிர்
சொல்லே மாதலின் அல்லாந்து கலங்கிக்
கெடுதியும் விடூஉ ராயி னெம்மொடு
சொல்லும் பழியோ மெல்லிய லீரென

நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பி னிம்மென இமிரும்
மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த
தாதவி ழலரித் தாசினை பிளந்து
தாறடு களிற்றின் வீறுபெற வோச்சிக்
கல்லென் சுற்றக் கடுங்குர லவித்தெம்

சொல்லற் பாணி நின்றன னாக
இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்
பிணையேர் நோக்கின் மனையோள் மடுப்பத்
தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
சேமம் மடிந்த பொழுதின் வாய்மடுத்து
இரும்புனம் நிழத்தலிற் சிறுமை நோனாது
அரவுற ழஞ்சில் கொளீஇ நோய்மிக்கு
உரவுச்சின முன்பா லுடற்சினஞ் செருக்கிக்
கணைவிடு புடையூக் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ்
29

சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு
மையல் வேழ மடங்கலி னெதிர்தர
உய்விட மறியே மாகி யொய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோல்
உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திணிநிலைக் கடம்பின் திரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎம்
நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை
அடுங்கரை வாழையின் நடுங்கப் பெருந்தகை
அஞ்சி லோதி யசையல் யாவதும்
அஞ்ச லோம்புநின் னணிநல நுகர்கென
மாசறு சுடர்நுதல் நீவி நீடுநினைந்து

என்முகம் நோக்கி நக்கன னந்நிலை
நாணு முட்கும் நண்ணுவழி யடைதர
ஒய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
ஆக மடைய முயங்கலி னவ்வழிப்
பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி யுதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொ ளாங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட் டின்னியங் கறங்க ஆடுமகள்
கயிறூர் பாணியிற் றளருஞ் சாரல்
வரையர மகளிரிற் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட்



டண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் விழைதரு பெருவிறல்
உள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு
சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி

வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைந்நிண மொழுகிய நெய்ம்மலி யடிசில்
வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்கு
அறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது
ஏமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
அந்தீந் தெண்ணீர் குடித்தலின் நெஞ்சமர்ந்து
அருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி
வானூரி யுறையுள் வயங்கியோ ரவாவும்
பூமலி சோலை யப்பகல் கழிப்பி
எல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப்
பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதற் றெவிட்ட ஆன்கணங்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்
ஓங்கிரும் பெண்ணை யகமட லகவப்
பாம்புமணி யுமிழப் பல்வயிற் கோவலர்
ஆம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற
ஆம்ப லாயிதழ் கூம்புவிட வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
அந்தி யந்தண ரயரக் கானவர்
விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த
வான மாமலை வாய்சூழ்பு கறுப்பக் கானம்

கல்லென் றிரட்டப் புள்ளின மொலிப்பச்
சிலை இய வேந்தன் செல்சமங் கடுப்பத்



துனைஇய மாலை துன்னுதல் காணூஉ
நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாள்
கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென
ஈர நன்மொழி தீரக் கூறித்
துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்டுறை நிறுத்துப் பெயர்ந்தன

னதற்கொண்டு

அன்றை யன்ன விருப்போ டென்றும்
இரவரல் மாலைய னேவரு தோறும்
காவலர் கடுகினுங் கதநாய் குரைப்பினும்
நீதுயி லெழினும் நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்தோள் இன்துயி லென்றும்

பெறாஅன் பெயரினு முனிய லுறாஅன்
இளமையி னிகந்தன்று மிலனே வளமையின்
தன்னிலை தீர்ந்தன்று மிலனே கொன்னூர்
மாய வரவி னியல்புநினைஇத் தேற்றி

நீரெறி மலரிற் சாஅ யிதழ்சோரா
ஈரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்கண்
ஆகத் தரிப்பனி யுறைப்ப நாளும்
வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய்
நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்குல்
அளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்
வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்து
உருமுஞ் சூரு மிரைதே ரரவமும்
ஒடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையு மிடங்கருங் கராமும்
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும்
வழுவின் வழாஅ விழுமமவர்
குழுமலை விடரக முடையவா லெனவே.

ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குப் பாடியது.

## கபிலர் 453

934-a. நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடையள்
என்குற்றம் யானு முணர்கலேன்—பொன்குற்
றருவி கொழிக்கு மணிமலை நாடன்
தெரியுங்காற் றீய திலன்.

934-b. ஆற்றல்சால் கேள்வி யறம்பொரு ளின்பத்தைப்
போற்றிப் புனைந்த பொருளிற்றே—தேற்ற
மறையோர் மணமெட்டி னந்தா மணத்திற்
குறையாக் குறிஞ்சிக் குணம்.

## 935. புறநானூறு - 8.

வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற்
பொறாஅது
இடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி; பூவை நிலையுமாம்.

சேரமான்கடுங்கோ வாழியாதனைப் பாடியது.

## 936. புறநானூறு - 14.

கடுங்கண்ண கொல்களிற்றால்

காப்புடைய வெழுமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியால்
முன்புதுரந்து சமந்தாங்கவும்
பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்புக்குறித்து



நிமிர்பரிய மாதாங்கவும்
ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் கருங்கலம் நல்கவுங் குரிசில்
வலிய வாகும்நின் தாள்தோய் தடக்கை
புலவுநாற் றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலின் நன்றும்
மெல்லிய பெரும தாமே நல்லவர்க்கு
ஆரணங் காகிய மார்பிற் பொருநர்க்கு
இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் கபிலர்

கைப்பற்றி ‘மெல்லியவாமால் நங்கை’ எனக் கபிலர் பாடியது.

## 937. புறநானூறு - 105.

சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினும் அருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினை செலினே.

திணை - பாடாண்டிணை ; துறை - விறலியாற்றுப்படை. வேள் பாரியைப் பாடியது.

## 938. புறநானூறு - 106.

நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை



கடவுள் பேணே மென்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி. வேள் பாரியைப் பாடியது.

## 939. புறநானூறு - 107.

பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
வேள் பாரியைப் பாடியது.

## 940. புறநானூறு - 108.

குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி
ஆர மாதலி னம்புகை யயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத் தவழும்
பறம்பு பாடின ரதுவே அறம்பூண்டு
பாரியும் பரிசில ரிரப்பின்
வாரே னென்னா னவர்வரை யன்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
வேள் பாரியைப் பாடியது.

## 941. புறநானூறு - 109.

அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரு முற்றினும்
உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே

நான்கே, அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றூரலன்
யானறி குவெனது கொள்ளு மாறே.
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே.

திணை - நொச்சி ; துறை - மகண்மறுத்தல்.
வேள் பாரியைப் பாடியது.

## 942. புறநானூறு - 110.

கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே.

திணை - நொச்சி ; துறை - மகண்மறுத்தல்.

மூவேந்தரும் பாரிபறம்பு முற்றியிருந்தாரைப் பாடியது.

## 943. புறநானூறு - 111.

அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே
நீலத், திணைமலர் புரைய முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே.

திணை - நொச்சி ; துறை - மகண்மறுத்தல்.

வேள் பாரியைப் பாடியது.

## கபிலர் 457

## 944. புறநானூறு - 113.

மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி

நட்டனை மன்னோ முன்னே யினியே
பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே
கோல்திரள் முன்கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

பாரி மகளிரைப் பார்ப்பார்ப் படுக்கக் கொண்டுபோவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது.

## 945. புறநானூறு - 114.

ஈண்டுநின் றோர்க்குந் தோன்றுஞ் சிறுவரை
சென்றுநின் றோர்க்குந் தோன்றும் மன்ற
களிறுமென் றிட்ட கவளம் போல
நறவுப்பிழிந் திட்ட கோதுடைச் சிதறல்
வாரசும் பொழுகு முன்றிற்
றேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

பாரி மகளிரைக் கொண்டுபோம் கபிலர் பறம்புநோக்கி நின்று சொல்லியது.

## 946. புறநானூறு - 115.

ஒருசா ரருவி யார்ப்ப ஒருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்

கல்லலைத் தொழுகு மன்னே பல்வேல்



அண்ணல் யானை வேந்தர்க்கு
இன்னா னாகிய இனியோன் குன்றே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

## 947. புறநானூறு - 116.

தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்
கூம்பவிழ் முழுநெறி புரள்வரு மல்குல்
ஏந்தெழில் மழைக்க ணின்னகை மகளிர்
புல்மூசு கவலைய முள்மிடை வேலிப்
பஞ்சி முன்றிற் சிற்றி லாங்கண்
பீரை நாறிய சுரையிவர் மருங்கின்
ஈத்திலைக் குப்பை யேறி யுமணர்
உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ
நோகோ யானே தேய்கமா காலை

பயில்பூஞ் சோலை மயிலெழுந் தாலவும்
பயிலிருஞ் சிலம்பிற் கலைபாய்ந் துகளவும்
கலையுங் கொள்ளா வாகப் பலவும்
கால மன்றியு மரம்பயம் பகரும்
யாண ரறாஅ வியன்மலை யற்றே
அண்ணல் நெடுவரை யேறித் தந்தை
பெரிய நறவிற் கூர்வேற் பாரியது
அருமை யறியார் போரெதிர்ந்து வந்த
வலம்படு தானை வேந்தர்
பொலம்படைக் கலிமா எண்ணு வோரே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

## 948. புறநானூறு - 117.

மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி யோடினும்
வயலகம் நிறையப் புதற்பூ மலர



மனைத்தலை மகவை யீன்ற அமர்க்கண்
ஆமா நெடுநிரை நன்பு லாரக்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே

பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையப்
பாசிலை முல்லை முகைக்கும்
ஆய்தொடி யரிவையர் தந்தை நாடே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

### 949. புறநானூறு - 118.

அறையும் பொறையு மணந்த தலைய
எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரைத்
தெண்ணீர்ச் சிறுகுளங் கீள்வது மாதோ
கூர்வேற் குவைஇய மொய்ம்பின்
தேர்வண் பாரி தண்பறம்பு நாடே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

### 950. புறநானூறு - 119.

கார்ப்பெயல் தலைஇய காண்பின் காலைக்
களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்பச்
செம்புற் றீயலி னின்னளைப் புளித்து
மென்றினை யாணர்த் தந்துங் கொல்லோ
நிழலில் நீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்தும்
இரவலர்க் கீயும் வள்ளியோன் நாடே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

## 951. புறநானூறு - 120.

வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்
கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்
பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி
மென்மயிற் புனிற்றுப்பெடை கடுப்ப நீடிக்
கருந்தாள் போகி யொருங்குபீள் விரிந்து
கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவர கரியத்
தினைகொய்யக் கவ்வை கறுப்ப அவரைக்
கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக
நிலம்புதைப் பழுனிய மட்டின் தேறல்
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து
நறுநெய்க் கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருந்தோள் தாலம் பூசல் மேவர
வருந்தா யாணர்த்து நந்துங் கொல்லோ
இரும்பல் கூந்தல் மடந்தையர் தந்தை
ஆடுகழை நரலுஞ் சேட்சிமைப் புலவர்
பாடி யானாப் பண்பிற் பகைவர்
ஓடுகழற் கம்பலை கண்ட
செருவெஞ் சேஎய் பெருவிறல் நாடே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
வேள் பாரியைப் பாடியது.

### 952. புறநானூறு - 121.

ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்
வரிசை யறிதலோ அரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் தோன்றல்



அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

### 953. புறநானூறு - 122.

கடல்கொளப் படாஅ துடலுந ருக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
அழல்புறந் தரூஉம் அந்தண ரதுவே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் துப்பா கியரென
ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே
வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
அரிவை தோளள வல்லதை
நினதென விலைநீ பெருமிதத் தையே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

## 954. புறநானூறு - 123.

நாட்கள் ளுண்டு நாள்மகிழ் மகிழின்
யார்க்கு மெளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த இழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

## 955. புறநானூறு - 124.

நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்



வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

## 956. புறநானூறு - 143.

மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனத்தினை யயிலும் நாட சினப்போர்க்
கைவள் ளீகைக் கடுமான் பேக
யார்கொ லளியள் தானே நெருநற்
சுரனுழந்து வருந்திய வொக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறூ ராங்கண்
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று
நின்னும்நின் மலையும் பாட இன்னாது
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையகம் நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோ லழுதனள் பெரிதே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைப் பாடியது.

## 957. புறநானூறு - 200.

பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு சிறந்துசேண் விளங்கி
மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்
கழைமிசைத் துஞ்சுங் கல்லக வெற்ப

நிணந்தின்று செருக்கிய
களங்கொண்டு கனலுங்
நெருப்புத்தலை நெடுவேற்
கடுங்கண் யானை
விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக் கோவே
இவரே, பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்
யானே, பரிசிலன் மன்னு மந்தணன் நீயே
வரிசையில் வணக்கும் வாள்மேம் படுநன்
நினக்கியான் கொடுப்பக் கொண்மதி சினப்போர்
அடங்கா மன்னரை யடக்கும்
மடங்கா விளையுள் நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
பாரி மகளிரை விச்சிக்கோனுழைக் கொண்டு சென்ற கபிலர் பாடியது.

## 958. புறநானூறு - 201.

இவர்யா ரென்குவை யாயின் இவரே
ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே

தந்தை தோழன் இவரென் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே

நீயே, வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
உவரா ஈகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறற்போ ரண்ணல்
தாரணி யானைச் சேட்டிருங் கோவே
ஆண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
யான்தர இவரைக் கொண்மதி வான்கவித்து



இருங்கட லுடுத்தவிவ் வையகத் தருந்திறற்
பொன்படு மால்வரைக் கிழவ வென்வேல்
உடலுந ருட்குந் தானைக்
கெடலருங் குரைய நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

பாரி மகளிரை இருங்கோவேளுழைக் கொண்டு சென்ற கபிலர் பாடியது.

## 959. புறநானூறு - 202.

வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்

கட்சி காணுக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச் சிதறுபொன் மிளிரக்
கடிய கதழும் நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்
கோடிபல வடுக்கிய பொருணுமக் குதவிய
நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி
நுந்தை தாயம் நிறைவுற வெய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்

நும்போ லறிவி னுமரு ளொருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே இயல்தே ரண்ணல்
எவ்வி தொல்குடிப் படீஇயர் மற்றிவர்
கைவண் பாரி மகளி ரென்றவென்

தேற்றாப் புன்சொல் நோற்றிசிற் பெரும
விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்து
அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறங் கடுக்கும்
பெருங்கல் வைப்பின் நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
இருங்கோவேள் பாரிமகளிரைக் கொள்ளாதுகைக் கபிலர்பாடியது.

## 960. புறநானூறு - 236.

கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்
சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்
மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீயெற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பி னட்பிற் கொல்லாது
ஒருங்குவரல் விடாஅ தொழிகெனக் கூறி
இனையை யாதலி னினக்கு மற்றியான்
மேயினே னன்மை யானே யாயினும்
இம்மை போலக் காட்டி யும்மை
இடையில் காட்சி நின்னோடு
உடனுறை வாக்குக வுயர்ந்த பாலே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

வேள் பாரி துஞ்சியவழி அவன் மகளிரைப் பார்ப்பார்ப் படுத்து வடக்கிருந்த கபிலர் பாடியது.

## 961. புறநானூறு - 337.

ஆர்கலி யினனே சோணாட் டண்ணல் கவிகை
மண்ணாள் செல்வ ராயினும்
வாள்வலத் தொழியப் பாடிச் சென்றூஅர் வரரோ
றகமலர ... ... ... ஈதலானு
விலங்குதொடித் தடக்கைப்

பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய துகில்விரி
கடுப்ப நுடங்கித் தண்ணென அகிலார் நறும்புகை
ஐதுசென் றடங்கிய
கபில நெடுநகர்க் கமழும் நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
அற்றன் றாகலின் தெற்றெனப் போற்றிக் காய்நெற்
கவளந் தீற்றிக் காவுதொறும்





கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானார் வேந்தர் தன்னையர்
பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
குருதி பற்றிய வெருவரு தலையர்
மற்றிவர் மறனு மிற்றால் தெற்றென
யாரா குவர்கொல் தாமே நேரிழை
உருத்த பல்சுணங் கணிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 962. புறநானூறு - 347.

உண்போன் றானறுங் கள்ளி னிடச்சில
நாவிடைப் பஃறேர் கோலச் சிவந்த

ஒளிறொளி வாடக் குழைந்தபைந் தும்பை
எறிந்திலை முரிந்த கதுவாய் வேலின்
மணநாறு மார்பின் மறப்போ ரகுதை
குண்டுநீர் வரைப்பிற் கூட லன்ன
குவையிருங் கூந்தல் வருமுலை சேப்ப
... ... ...
என்னு வதுகொல் தானே ...
விளங்குறு பராரைய வாயினும் வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப
வேர்துளங் கினநம் ஊருள் மரனே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## கககூ. கயத்தூர் கிழார்

### 963. குறுந்தொகை - 354. மருதம்

நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்
தணந்தனை யாயினெம் இல்லுய்த்துக் கொடுமோ
அந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்



கடும்பாம்பு வழங்குந் தெருவில்
நடுங்களு ரெவ்வங் களைந்த வெம்மே.

பரத்தையிற் பிரிந்து வாயில்வேண்டிச் சென்ற
தோழி வாயின் மறுத்தது.

தலைமகற்குத்

## கக௭. கயமனார்

### 964. அகநானூறு - 7. பாலை

முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
அலமர லாயமொடு யாங்கணும் படாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவித்
தன்சிதை வறித லஞ்சி யின்சிலை
ஏறுடை யினத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி யீங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொ டென்மகள்
இச்சுரம் படர்தந் தோளே யாயிடை
அத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி
மெய்த்தலைப் படுதல் செல்லே னித்தலை

நின்னொடு வினவல் கேளாய் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி

ஒலிக்குழைச் செயலை யுடைமா ணல்குல்
ஆய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉம்
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே.

மகட்போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப் பின்சென்று கவ் லிப் பிணைக்கண்டு சொல்லியது.



## 965. அகநானூறு - 17. பாலை

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
இளந்துணை யாயமொடு கழங்குட னாடினும்
உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ
மயங்குவியர் பொறித்த நுதலள் தண்ணென
முயங்கினள் வதியு மன்னே யினியே
தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளாள்
நெடுமொழித் தந்தை யருங்கடி நீவி
நொதும லாள னெஞ்சறப் பெற்றவென்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே கல்லென
ஊரெழுந் தன்ன வுருகெழு செலவின்
நீரி லத்தத் தாரிடை மடுத்த
கொடுங்கோ லுமணர் பகடுதெழி தெள்விளி
நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள வியம்பும்
கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கற்
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்து
அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின்
நீளரை யிலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்
நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

## 966. அகநானூறு - 145. பாலை

வேர்முழு துலறி நின்ற புழற்காற்
றேர்மணி யிசையிற் சிள்வீ டார்க்கும்
வற்றல் மரத்த பொற்றலை யோதி
வெயிற்கவி னிழந்த வைப்பிற் பையுள்கொள
நுண்ணிதி னிவக்கும் வெண்ஞெமை வியன்காட்டு
ஆளி லத்தத் தளிய ளவனொடு



வாள்வரி பொருத புண்கூர் யானை
புகர்சிதை முகத்த குருதி வார
உயர்சிமை நெடுங்கோட் டுருமென முழங்கும்
அருஞ்சுர மிறந்தன ளென்ப பெருஞ்சீர்
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல்லிணர்ப் புன்னை போலக்
கடுநவைப் படீஇயர் மாதோ களிமயில்
குஞ்சரக் குரல குருகோ டாலும்
துஞ்சா முழவிற் றுய்த்தியல் வாழ்க்கைக்
கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பின்

ஊழடி யொதுங்கினும் உயங்கு மைம்பாற்
சிறுபல் கூந்தற் போதுபிடித் தருளாது
எறிகோல் சிதைய நூறவுஞ் சிறுபுறம்
எனக்குரித் தென்னாள் நின்றவென்
அமர்க்க ணஞ்ஞையை யலைத்த கையே.

மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

**967.** அகநானூறு - **189.** பாலை பசும்பழப்
பலவின் கானம் வெம்பி
விசும்புகண் ணழிய வேனில் நீடிக்
கயங்கண் ணற்ற கல்லோங்கு வைப்பின் நாறுயிர்
மடப்பிடி தழீஇ வேறுநாட்டு விழவுப்படர்
மள்ளரின் முழவெடுத் துயரிக் களிறதர்ப் படுத்த
கல்லுயர் கவாஅன் வெவ்வரை யத்தஞ் சுட்டிப்
பையென
வயலையம் பிணையல் வார்ந்த கவர்வுறத் திதலை யல்குற்
குறுமக ளவனொடு
சென்று பிறளாகிய வளவை யென்றும் படர்மலி
யெவ்வமொடு மாதிரந் துழைஇ மனைமருண் டிருந்த
வென்னினும் நனைமகிழ் நன்ன ராளர் கூடுகொ
ளின்னியம்

தேரூர் தெருவிற் றதும்பும்
ஊரிழந் தன்றுதன் வீழ்வுறு பொருளே.

மகட்போக்கிய செவிலி சொல்லியது.

## 968. அகநானூறு - 195. பாலை

அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமா ணிஞ்சி பூவ லூட்டி
மனைமண லடுத்து மாலை நாற்றி
உவந்தினி தயரு மென்ப யானும்
மான்பிணை நோக்கின் மடநல் லாளை
ஈன்ற நட்பிற் கருளா னாயினும்
இன்னகை முறுவ லேழையைப் பன்னாட்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
நலம்புனை யுதவியு முடையன் மன்னே
அஃதறி கிற்பினோ நன்றுமற் றில்லை
அறுவை தோயு மொருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்
ஆகுவ தறியு முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் றிட்பம்
மாறா வரும்பனி கலுழுங் கங்குலில்
ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே.

மகட்போக்கிய நற்றாய் சொல்லியது.

## 969. அகநானூறு - 219. பாலை

சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக வியலி ஓரை யாயமொடு
பந்துசிறி தெறியினும் வாரா யோவென் றேத்திப்
பேரிலைப் பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோற்
பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி



என்பா டுண்டனை யாயி னொருகால்
நுந்தை பாடு முண்ணென் றூட்டிப்
பிறந்ததற் கொண்டுஞ் சிறந்தவை செய்துயான்
நலம்புனைந் தெடுத்தவென் பொலந்தொடிக் குறுமகள்
அறனி லாளனொ டிறந்தன ளினியென
மறந்தமைந் திராஅ நெஞ்சம் நோவேன்
பொன்வார்ந் தன்ன வைவா லெயிற்றுச்
செந்நாய் வெரீஇய புகருழை யொருத்தல்
பொரியரை விளவின் புன்புற விளைபுழல்

அழலெறி கோடை தூக்கலிற் கோவலர்
குழலென நினையும் நீரில் நீளிடை

மடத்தகை மெலியச் சாஅய்
நடக்குங் கொல்லென நோவல் யானே.

மகட்போக்கியதாய் சொல்லியது.

## 970. அகநானூறு - 221. பாலை

நனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்லிற் றருமணற் குவைஇப்
பொம்ம லோதி யெம்மகள் மணனென
வதுவை யயர்ந்தனர் நமரே யதனாற்
புதுவது புனைந்த செயலை வெள்வேல்
மதியுடம் பட்ட மையணற் காளை

வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்
தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்
தண்ணறு முச்சி புனைய அவனொடு
கழைகவின் போகிய மழையுயர் நனந்தலைக்
களிற்றிரை பிழைத்தலிற் கயவாய் வேங்கை
காய்சினஞ் சிறந்து குழுமலின் வெரீஇ
இரும்பிடி யிரியுஞ் சோலை
அருஞ்சுரஞ் சேற லயர்ந்தனென் யானே.

தலைமகற்குப் போக்குடன்பட்ட தோழி தலைமகட்குப் போக்குடன்படச் சொல்லியது.



**971.** அகநானூறு - **259.** பாலை

வேலும் விளங்கின விளையரு மியன்றனர்

தாருந் தையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ வுலவையிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே கானமும்
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்
போதுவந் தன்று தூதே நீயும்
கலங்கா மனத்தை யாகி யென்சொல்
நயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி

தெற்றி யுலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
நின்னினு மடவள் நனிநின் னயந்த
அன்னை யல்லல் தாங்கி நின்னையர்
புலிமருள் செம்மல் நோக்கி
வலிமா இன்னுந் தோய்கநின் முலையே.

உடன்போக்கு நேர்ந்ததோழி தலைமகட்குச் சொல்லியது.

## 972. அகநானூறு - 275. பாலை

ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்திக் குடையடை நீரின் மடையின வெடுத்த பரந்த வயலைப் பந்தெறிந் தாடி இளமைத் தகைமையை வளமனைக் கிழத்தி பிதிர்வை நீரை வெண்ணீ றாகென யாந்தற் கழறுங் காலைத்

தான்றன் மழலை யின்சொற் கழற வின்றி
இன்னுயிர் கலப்பக் கூறி நன்னுதல்
பெருஞ்சோற் றில்லத் தொருங்கிவ
ஏதி லாளன் காதல் நம்பித்

ணிரா அள்



திரளரை யிருப்பைத் தொள்ளை வான்பூக்
குருளை யெண்கி னிருங்கிளை கவரும்
வெம்மலை யருஞ்சுர நம்மிவ ணொழிய
இருநில னுயிர்க்கு மின்னாக் கானம்
நெருநைப் போகிய பெருமடத் தகுவி
ஐதக லல்குற் றழையணிக் கூட்டும்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலுங் காண்டிரோ கண்ணுடை யீரே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

**973.** அகநானூறு - **321.** பாலை

பசித்த யானைப் பழங்க ணன்ன
வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி
விசித்துவாங்கு பறையின் விடரகத் தியம்பக்
கதிர்க்கா லம்பிணை யுணீஇய புகலேறு
குதிர்க்கா லிருப்பை வெண்பூ வுண்ணாது

ஆண்குரல் விளிக்குஞ் சேண்பால் வியன்சுரைப்
படுமணி யினநிரை யுணரீஇய கோவலர்
விடுநில முடைத்த கலுழ்கட் கூவற்
கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்
புன்றலை மன்றத் தங்குடிச் சீறூர்த்
துணையொடு துச்சி லிருக்குங் கொல்லோ
கணையோ ரஞ்சாக் கடுங்கட் காளையொடு
எல்லி முன்னுறச் செல்லுங் கொல்லோ
எவ்வினை செயுங்கொல் நோகோ யானே
அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ
யாயறி வுறுத லஞ்சி
வேயுயர் பிறங்கல் மலையிறந் தோளே.

மகட்போக்கிய செவிலி சொல்லியது.



## 974. அகநானூறு - 383. பாலை

தற்புரந் தெடுத்த எற்றுறந் துள்ளாள்
ஊருஞ் சேரியு மோராங் கலரெழக்
காடுங் கானமு மவனொடு துணிந்து
நாடுந் தேயமு நனிபல இறந்த
சிறுவன் கண்ணிக் கேர்தே றுவரென
வாடினை வாழியோ வயலை நாடொறும்
பல்கிளைக் கொடிக்கொம் பலமர மலர்ந்த
அல்குற் றலைக்கூட் டங்குழை யுதவிய
வினையமை வரனீர் விழுத்தொடி தத்தக்
கமஞ்சூற் பெருநிறை தயங்க முகந்துகொண்டு
ஆய்மடக் கண்ணள் தாய்முகம் நோக்கிப்
பெய்சிலம் பொலிப்பப் பெயர்வனள் வைகலும்
ஆரநீ ரூட்டிப் புரப்போர்
யார்மற் றுப் பெறுகுவை யளியை நீயே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

## 975. அகநானூறு - 397. பாலை

என்மகள் பெருமடம் யான்பா ராட்டத்
தாய்தன் செம்மல் கண்டுகட னிறுப்ப
முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்
மணனிடை யாகக் கொள்ளான் கல்பகக்
கணமழை துறந்த கான்மயங் கழுவம்
எளிய வாக ஏந்துகொடி பரந்த
பொறிவரி யல்குல் மாஅ யோட்கெனத்
தணிந்த பருவஞ் செல்லான் படர்தரத்
துணிந்தோன் மன்ற துனைவெங் காளை

கடும்பகட் டொருத்தல் நடுங்கக் குத்திப்
போழ்புண் படுத்த பொரியரை யோமைப்
பெரும்பொளிச் சேயரை நோக்கி யூன்செத்துக்
கருங்கால் யாத்துப் பருந்துவந் திருக்குஞ்
சேணுயர்ந் தோங்கிய வானுயர் நெடுங்கோட்டுக்



கோடை வெவ்வளிக் குலமரும்
புல்லிலை வெதிர நெல்விளை காடே.

மகட்போக்கிய செவிலித் தாய் சொல்லியது.

**976. குறுந்தொகை - 9. நெய்தல்**

யாயா கியளே மாஅ யோளே
மடைமாண் செப்பிற் றமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீ னிருங்கழி யோத மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணந் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரப்பா டும்மே.

தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது.

**977. குறுந்தொகை - 356. பாலை**

நிழலான் றவிந்த நீரி லாரிடைக்

கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
வெவ்வங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்குவல் லுநள்கொல் தானே யேந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலவென வுண்ணாள்
கோலமை குறுந்தொடித் தளிரன் னோளே.

மகட்போக்கிய செவிலித்தாய் உரைத்தது.

978. குறுந்தொகை - 378. பாலை

ஞாயிறு காணாத மாணிழற் படீஇய
மலைமுதற் சிறுநெறி மணல்மிகத் தாஅய்த்
தண்மழை தலைய வாகுக நந்நீத்துச்



சுடர்வாய் நெடுவேற் காளையொடு
மடமா வரிவை போகிய சுரனே.

மகட் போக்கிய செவிலி தெய்வத்திற்குப் பராயது.

979. குறுந்தொகை - 396. பாலை

பாலு முண்ணாள் பந்துடன் மேவாள்
விளையா டாயமொ டயர்வோ ளினியே

எளிதென வுணர்ந்தனள் கொல்லோ முளிசினை
ஓமைக் குத்திய வுயர்கோட் டொருத்தல்
வேனிற் குன்றத்து வெவ்வறைக் கவாஅன்
மழைமுழங்கு கடுங்குர லோர்க்கும்
கழைதிரங் காரிடை யவனொடு செலவே.

மகட் போக்கிய தாய் உரைத்தது.

### 980. நற்றிணை - 12. பாலை

விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கால் மத்தம்
நெய்தெரி யியக்கம் வெளில்முதல் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்
அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்
இவைகாண் டோறும் நோவர் மாதோ
அளியரோ வளியரென் னாயத் தோரென
நும்மொடு வரவுதா னயரவும்
தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே.

தோழி உடன்போக்கு அஞ்சுவித்தது.

### 981. நற்றிணை - 198. பாலை

சேயின் வரூஉம் மதவலி யாவுயர்ந்து
ஓமை நீடிய கானிடை யத்தம்
முன்னா ளும்பர்க் கழிந்த வென்மகள்

கண்பட நீராழ்ந் தன்றே தந்தை
தன்னூ ரிடவயின் தொழுவே னுண்பல்
கோடேந் தல்கு லரும்பிய திதலை
வார்ந்திலங்கு வாலெயிற்றுப் பொலிந்த தாஅர்ச்
சில்வளைப் பல்கூந் தலளே யவளே
மையண லெருத்தின் முன்பிற் றடக்கை
வல்வில் லம்பி னெய்யா வண்மகிழ்த்
தந்தை தன்னூ ரிதுவே
ஈன்றேன் யானே பொலிகநும் பெயரே.

பின்சென்ற செவிலி இடைச்சுரத்துக் கண்டார்க்குச் சொல்லியது.

**982.** நற்றிணை - **279.** பாலை

வேம்பி னொண்பழ முணீஇ யிருப்பைத்
தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ
வைகுபனி யுழந்த வாவல் சினைதொறும்
நெய்தோய் திரியிற் றண்சித ருறைப்ப
நாட்சுர முழந்த வாட்கே ழேற்றையொடு
பொருத யானைப் புட்டா ளேய்ப்பப்
பசிப்பிடி யுதைத்த வோமைச் செவ்வரை
வெயில்கா யமையத் திமைக்கு மத்தத்து
அதருழந் தசையின கொல்லோ ததரல்வாய்ச்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்தவென் னாயிழை யடியே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

### 983. நற்றிணை - 293. பாலை

மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிக ளார்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலு மகன்றலை மன்றத்து
விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்ப்
பூங்க ணாயங் காண்டொறு மெம்போற்


பெருவிதுப் புறுக மாதோ எம்மிற்
பொம்ம லோதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கட் காளையை யீன்ற தாயே.

தாய் மனைமருண்டு சொல்லியது. அவரிடத்தாரைக் கண்டு சொல்லியதூஉமாம்.

### 984. நற்றிணை - 305. பாலை

வரியணி பந்தும் வாடிய வயலையும்
மயிலடி யன்ன மாக்குரல் நொச்சியுங்
கடியுடை வியனகர் காண்வரத் தோன்றத்
தமியே கண்டதண் டலையுந் தெறுவர
நோயா கின்றே மகளைநின் தோழி
எரிசினந் தணிந்த இலையி லஞ்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி
உருப்பவி ரமையத் தமர்ப்பனள் நோக்கி
இலங்கிலை வெள்வேல் விடலையை
விலங்குமலை யாரிடை நலியுங்கொ லெனவே.

நற்றாய் தோழிக்குச் சொல்லியது. மனைமருட்சியுமாம்.

### 985. நற்றிணை - 324. குறிஞ்சி அல்லது பாலை

அந்தோ தானே யளியள் தாயே
நொந்தழி யவலமொ டென்னா குவள்கொல்
பொன்போன் மேனித் தன்மகள் நயந்தோள்
கோடுமுற் றியானை காடுட னிறைதர
நெய்பட் டன்ன நோன்கா ழெஃகின்
செல்வத் தந்தை யிடனுடை வரைப்பின்
ஆடுபந் துருட்டுநள் போல வோடி
அஞ்சி லோதி யிவளுறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே.

தலைமகன் பாங்கற்குச் சொல்லியது. இடைச்சுரத்துக் கண்டோர் சொல்லியதுஉமாம்.

## கருங்குழலாதனூர் 479

### 986. புறநானூறு - 254.

இளையரு முதியரும் வேறுபுலம் படர
எடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
இடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையுள்
இன்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை செல்லு மாயின் மற்று
முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கென நாளும்
ஆனாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளியள் தானே.

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை.

### ககஅ. கருங்குழலாதனூர்

### 987. புறநானூறு - 7.

களிறு கடைஇயதாட்

கழலுரீஇய திருந்தடிக்
கணைபொருது கவிவண்கையாற்
கண்ணொளிர்வரூஉங் கவின்சாபத்து
மாமறுத்த மலர்மார்பின்
தோல்பெயரிய வெறுழ்முன்பின்
எல்லையு மிரவும் மெண்ணாய் பகைவர்
ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலின் நல்ல
இல்லவா குபவால் இயல்தேர் வளவ
தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து
மீனிற் செறுக்கும் யாணர்ப்
பயன்திகழ் வைப்பிற்பிற ரகன்றலை நாடே.

திணை - வஞ்சி. துறை - கொற்றவள்ளை ; மழபுலவஞ்சியுமாம்.
சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடியது.



## 988. புறநானூறு - 224.

அருப்பம் பேணா தமர்கடந் ததூஉம்
துணைபுண ராயமொடு தசும்புடன் தொலைச்சி
இரும்பா ணொக்கற் கடும்பு புரந்ததூஉம்
அறமறக் கண்ட நெறிமா ணவையத்து
முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு
பருதி யுருவிற் பல்படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழில்முடித் ததூஉம்
அறிந்தோன் மன்ற அறிவுடை யாளன
இறந்தோன் தானே யளித்திவ் வுலகம்
அருவி மாறி யஞ்சுவரக் கடுகிப்
பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த வாயத்துப் பயனிரை தருமார்
பூவாட் கோவலர் பூவுட னுதிரக்
கொய்துகட் டழித்த வேங்கையின்
மெல்லியல் மகளிரு மிழைகளைந் தனரே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடியது.

## ௧௧௯. கரும்பிள்ளைப் பூதனார்

### 989. பரிபாடல் - 10.

மலைவரை மாலை யழிபெயல் காலைச்
செலவரை காணாக் கடல்தலைக் கூட
நிலவரை யல்லல் நிழத்த விரிந்த

பலவுறு போர்வைப் பருமணல் மூஉய்
வரியரி யாணு முகிழ்விரி சினைய
மாந்தீந் தளிரொடு வாழையிலை மயக்கி
ஆய்ந்தளவா வோசை யறையூஉப் பறையறையப்
போந்தது வையைப் புனல் ;



புனல்மண்டி யாடல் புரிவான் சனமண்டித்
தாளித நொய்ந்நூற் சரணத்தர் மேகலை
ஏணிப் படுகா லிறுகிறுகத் தாளிடீஇ
நெய்த்தோர் நிறவரக்கி னீரெக்கி யாவையும்
முத்துநீர்ச் சாந்தடைந்த மூஉய்த் தத்திப்
புகவரும் பொங்குளைப் புள்ளியல் மாவும்
மிகவரினு மீதினிய வேழப் பிணவும்
அகவரும் பாண்டியு மத்திரியு மாய்மாச்
சகடமுந் தண்டார் சிவிகையும் பண்ணி
வகைவகை யூழூழ் கதழ்புழூழ்த் தேறி
முதிய ரிளையர் முகைப்பரு வத்தர்
வதிமண வம்பலர் வாயவிழ்ந் தன்னுர்
இருநிற மாந்தரு மின்னினி யோரும்
விரவு நரையோரும் வெறுநரை யோரும்
பதிவத மாதர் பரத்தையர் பாங்கர்

அதிர்குரல் வித்தக ராக்கிய தாள
விதிகூட் டியவிய மென்னடை போலப்
பதியெதிர் சென்று பரூஉக்கரை நண்ணி
நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்
பேரணி நிற்போர் பெரும்பூசல் தாக்குவோர்
மாமலி யூர்வோர் வயப்பிடி யுந்துவோர்
வீமலி கான்யாற்றின் துருத்தி குறுகித்
தாம்வீழ்வா ராகந் தழுவுவோர் தழுவெதிராது
யாமக் குறையூட லின்னசைத் தேனுகர்வோர்
காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்
தாம்வேண்டு காதற் கணவ ரெதிர்ப்படப்
பூமேம்பா டுற்ற புனைசுரும்பிற் சேம
மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து
தாம்வேண்டும் பட்டின மெய்திக் கரைசேரும்
ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார்போல்
யாம்வேண்டும் வையைப் புனலெதிர்கொள் கூடல்
ஆங்க, அணிநிலை மாடத் தணிநின்ற பாங்காம்

31



மடப்பிடி கண்டு வயக்கரிமா லுற்று
நடத்த நடவாது நிற்ப மடப்பிடி
அன்ன மனையாரோ டாயா நடைக்கரிமேற்
செல்மன மாலுறுப்பச் சென்றெழில் மாடத்துக்

கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று
மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்
செய்தொழில் கொள்ளாது மதிசெத்துச் சிதைதரக்
கூங்கை மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி

நீங்கும் பதத்தா லுருமுப் பெயர்த்தந்து
வாங்கி முயங்கி வயப்பிடி கால்கோத்துச்
சிறந்தார் நடுக்கஞ் சிறந்தார் களையல்

இதையுங் கயிறும் பிணையு மிரியச்
சிதையுங் கலத்தைப் பயினாற் றிருத்தும்
திசையறி நீகானும் போன்ம் ;

பருக்கோட்டு யாழ்ப்பக்கம் பாடலோ டாடல்
அருப்ப மழிப்ப வழிந்த மனக் கோட்டையர்
ஒன்றூ டிரண்டா முன்றேறூர் வென்றியிற்
பல்சனம் நாணிப் பதைபதைப்பு மன்னவர்
தண்ட மிரண்டுந் தலைஇத் தாக்கி நின்றவை
ஒன்றியு முடம்பா டொலியெழுதற் கஞ்சி
நின்ற நிகழ்ச்சியும் போன்ம் ;

காமங் கனைக்தெழக் கண்ணின் களியெழ
ஊர்மன்னு மஞ்சி யொளிப்பா ரவர்நிலை
கள்ளின் களியெழக் காத்தாங் கலரஞ்சி
உள்ள முளையெழ வூக்கத்தா னுள்ளுநட்
பரப்பி மதர்நடுக்கிப் பாரலர் தூற்றக்

கரப்பார் களிமதரும் போன்ம் ;
கள்ளொடு காமங் கலந்து கரைவாங்கும்
வெள்ளந் தருமிப் புனல் ;
புனல்பொருது மெலிந்தார் திமில்விடக்
கனல்பொருத அகிலினவி காவெழ

:

கரும்பிள்ளைப் பூதனார்

483

நகில்முகடு மெழுகிய அளறுமடை திறந்து
திகைமுழுது கமழ முகிலகடு கழிமதியின்
உறைகழி வள்ளத் துறுநறவு வாக்குநர்
அரவுசெறி யுவவுமதியென அங்கையிற் றாங்கி
எறிமகர வலய மணிதிகழ் நுதலியர்
மதியுண ரமகளென ஆம்பல்வாய் மடுப்ப
மீப்பால் வெண்துகில் போர்க்குநர் பூப்பால்
வெண்துகில் சூழ்ப்பக் குழல்முறுக்குநர்
செங்குங்குமச் செழுஞ்சேறு
பங்கஞ் செய்யகில் பலபளிதம்
மறுகு படவறை புரையறு குழவியின்
அவியம ரழலென வரைக்குநர்
நத்தொடு நள்ளி நடையிறவு வயவாளை

வித்தி யலையில் விளைக பொலிகென்பார்
இல்லது நோக்கி யிளிவரவு கூறுமுன்
நல்லது வெஃகி வினைசெய்வார் ;

மண்ணார் மணியின் வணர்குரல் வண்டார்ப்பத்
தண்ணந் துவர்பல வூட்டிச் சலங்குடைவார்
எண்ணெய் கழல விழைதுகள் பிசைவார்
மாலையுஞ் சாந்து மதமு மிழைகளுங்
கோலங் கொளநீர்க்குக் கூட்டுவா ரப்புனல்
உண்ணா நறவினை யூட்டுவா ரொண்டொடியார்
வண்ணந் தெளிர முகமும் வளர்முலைக்
கண்ணுங் கழியச் சிவந்தன அன்னவகை
ஆட்டயர்ந் தரிபடு மைவிரை மாண்பகழி
அரந்தின்வாய் போன்ம்போன்ம் போன்ம்
பின்னு மலர்க்கண் புனல் ;

தண்டித் தண்டிற் றாய்ச்செல் வாருங்
கண்டற்றண் டாது திரைநுரை தூவாரும்
வெய்ய திமிலின் விரைபுனலோ டொய்வாரும்
மெய்ய துழவி னெதிர்புனல் மாறாடிப்
பைய விளையாடு வாருமென் பாவையர்

செய்தபூஞ் சிற்றடிசி லிட்டுண்ண வேற்பார்
இடுவார் மறுப்பார் சிறுகிடையார்
பந்துங் கழங்கும் பலகளவு கொண்டோடி
அந்தண் கரைநின் று பாய்வாராய் மைந்தர்
ஒளிறிலங் கெஃகொடு வாள்மா றுழக்கிக்
களிறுபோ ருற்ற களம்போல நாளும்
தெளிவின் று தீநீர்ப் புனல்;

மதிமாலை மாவிருள் கால்சீப்பக் கூடல்
வதிமாலை மாறுந் தொழிலாற் புதுமாலை
நாளணி நீக்கி நகைமாலைப் பூவேய்ந்து
தோளணி தோடு சுடரிழை நித்திலம்
பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல்
ஆடுவா ராட லமர்ந்தசீர்ப் பாணி
நல்ல கமழ்தே னளிவழக்க மெல்லாமும்
பண்டொடர் வண்டு பரியவெதிர் வந்தூதக்
கொண்டிய வண்டு கதுப்பின் குரலூதத்
தென்றிசை நோக்கித் திரிதர்வாய் மண்டுகால் சார்வா
நளிர்மலைப் பூங்கொடித் தங்கு புகக்கும்
பனிவள ராவியும் போன்ம் மணிமாடத்
துண்ணின் று தூய பனிநீ ருடன்கலந்து
கால்திரிய வார்க்கும் புகை;

இலம்படு புலவ ரேற்றகை நெருமரப்
பொலஞ்சொரி வழுதியிற் புனலிறை பரப்பிச்
செய்யிற் பொலம்பரப்புஞ் செய்வினை யோயற்க

வருந்தாது வரும்புனல் விருந்தயர் கூடல்
அருங்கறை யறையிசை வயிரிய ருரிமை
ஒருங்கம ராயமொ டேத்தினர் தொழவே.

பருவங்கண்டு வன்புறை எதிரழிந்த தலைமகளது ஆற்றாமை கண்டு தோழி தூதுவிடச் சென்ற பாணன் பாசறைக்கண் தலைமகற்குப் பருவவரவும் வையைநீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியுங் கூறியது.

*மருத்துவன் நல்லச்சுதனார் இசை. பண்ணுப் பாலையாழ்.*

## கஉ௦. கருவூர்கிழார்

### 990. குறுந்தொகை - 170. குறிஞ்சி

பலருங் கூறுகவஃ தறியா தோரே
அருவி தந்த நாட்குர லெருவை
கயம்நா டியானை கவள மாந்தும்
மலைகெழு நாடன் கேண்மை
தலைபோ காமைநற் கறிந்தனென் யானே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

## கஉக. கருவூர்க் கண்ணம்பாளனார்

### 991. அகநானூறு - 180. நெய்தல்

நகைநனி யுடைத்தால் தோழி தகைமிகக்

கோதை யாயமொடு குவவுமண லேறி
வீ ததை கானல் வண்ட லயரக்
கதழ்பரித் திண்டேர் கடைஇ வந்து

தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை
அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி
பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி
நல்வர விளமுலை நோக்கி நெடிதுநினைந்து
நில்லாது பெயர்ந்தன னொருவன் அதற்கே
புலவுநா றிருங்கழி துழைஇப் பலவுடன்
புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்னேர் நுண்டாது நோக்கி
என்னும் நோக்குமிவ் வழுங்க லூரே.

இரந்து பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக்கூறியது; தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

## 992. அகநானூறு - 263. பாலை

தயங்குதிரைப் பெருங்கட லுலகுதொழத் தோன்றி
வயங்குகதிர் விரிந்த வுருகெழு மண்டிலம்
கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம்
பயங்கெடத் திருகிய பைதறு காலை
வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு
ஆறுசெல் வம்பலர் வருதிறங் காண்மார்
வில்வ லாடவர் மேலா ளொற்றி
நீடுநிலை யாஅத்துக் கோடுகொ ளருஞ்சுரம்
கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்கு
அவள்துணி வறிந்தனெ னாயி னன்றே
ஒளிறுவேற் கோதை யோம்பிக் காக்கும்
வஞ்சி யன்னவென் வளநகர் விளங்க
இனிதினிற் புணர்க்குவென் மன்றே துனியின்று
திருநுதற் பொலிந்தவென் பேதை
வருமுலை முற்றத் தேமுறு துயிலே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

## 993. நற்றிணை - 148. பாலை

வண்ணம் நோக்கியு மென்மொழி கூறியும்
நீயவண் வருத லாற்றா யெனத்தாந்
தொடங்கி யாள்வினைப் பிரிந்தோ ரின்றே
நெடுங்கயம் புரிந்த நீரி னீளிடைச்

செங்கால் மராஅத் தம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை யஞ்சாது
கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்
இன்புனிற் றிடும்பை தீரச் சினஞ்சிறந்து

செங்க ணிரும்புலிக் கோள்வ லேற்றை
உயர்மருப் பொருத்தற் புகர்முகம் பாயும்
அருஞ்சுர மிறப்ப வென்ப
வருந்தேன் தோழி வாய்க்கவவர் செலவே.

பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறீஇயது.

## ௧௨௨. கருவூர்க் கதப்பிள்ளைச்சாத்தனர்

### 994. அகநானூறு - 309. பாலை

வயவா ளெறிந்து வில்லி னீக்கிப்
பயநிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்புசேட் படுத்து வன்புலத் துய்த்தெனத்
தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பிற்
கொழுப்பா வெறிந்து குருதி தூஉய்ப்

புலவுப புழுககுணட வானக ணகலறைக
களிறுபுற முரிஞ்சிய கருங்கா லிலவத்து
அரலை வெண்கா ழாலியிற் றூஉம்
காடுமிக நெடிய வென்னார் கோடியர்
பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்
திருந்துகழற் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு
நாஞ்செலி னெவனோ தோழி காம்பின்
வனைகழை யுடைந்த கவண்விசைக் கடியிடிக்
கனைசுட ரமையத்து வழங்கல் செல்லா
இரவுப்புன மேய்ந்த வுரவுச்சின வேழம்
தண்பெரும் படாஅர் வெரூஉம்
குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு வேறு பட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 995. நற்றிணை - 343. பாலை

முல்லை தாய கல்லதர்ச் சிறுநெறி
அடையா திருந்த அங்குடிச் சீறூர்த்
தாதெரு மறுகின் ஆபுறந் தீண்டும்
நெடுவீ ழிட்ட கடவு ளாலத்து
உகுபலி யருந்திய தொகுவிரற் காக்கை
புன்க ணந்திக் கிளைவயிற் செறியப்
படையொடு வந்த பையுள் மாலை
இல்லைகொல் வாழி தோழி நத்துறந்து

அரும்பொருட் கூட்டம் வேண்டிப்
பிரிந்துறை காதலர் சென்ற நாட்டே.

தலைமகள் பிரிவிடையாற்றாளாய்ச் சொல்லியது.

## 996. புறநானூறு - 168.

அருவி யார்க்குங் கழைபயில் நனந்தலைக்
கறிவள ரடுக்கத்து மலர்ந்த காந்தட்
கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு
கடுங்கட் கேழ லுழுத பூழி
நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்
மரையான் கறந்த நுரைகொள் தீம்பால்
மான்தடி புழுக்கிய புலவுநாறு குழிசி
வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கம்
கூதளங் கவினிய குளவி முன்றிற்
செழுங்கோள் வாழை யகலிலைப் பகுக்கும்
ஊராக் குதிரைக் கிழவ கூர்வேல்
நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி
வடிநவி லம்பின் வில்லோர் பெரும
கைவள் ளீகைக் கடுமான் கொற்ற
வையக வரைப்பிற் றமிழகங் கேட்பப்
பொய்யாச் செந்நா நெளிய வேத்திப்

பாடுப வென்ப பரிசிலர் நாளும்
ஈயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை ; இயன்மொழியும் அரசவாகையுமாம்.

பிட்டங் கொற்றனைப் பாடியது.

## க௨௫. கருவூர்க் கலிங்கத்தார்

### 997. அகநானூறு - 183. பாலை

குவளை யுண்கண் கலுழவுந் திருந்திழைத்
திதலை யல்கு லவ்வரி வாடவும்
அத்தமா ரழுவம் நத்துறந் தருளார்
சென்றுசே ணிடைய ராயினும் நன்று
நீடல ரென்றி தோழி பாடான்று
பனித்துறைப் பெருங்கட லிறந்துநீர் பருகிக்
குவவுத்திரை யருந்து கொள்ளைய குடக்கேர்பு
வயவுப்பிடி யினத்தின் வயின்வயின் தோன்றி
இருங்கிளைக் கொண்மூ ஒருங்குடன் துவன்றிக்
காலை வந்தன்றாற் காரே மாலைக்
குளிர்கொள் பிடவின் கூர்முகை யலரி
வண்டுவாய் திறக்குந் தண்டா நாற்றம்
கூதி ரற்சிரத் தூதை தூற்றப்

பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு
வருந்துவ மல்லமோ பிரிந்திசி னோர் திறத்தே.

தலைமகன் குறித்த பருவவரவு கண்டு தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## கஉச. கருவூர்க் கோசனார்

## 998. நற்றிணை - 214. பாலை

இசையு மின்பமு மீதலு மூன்றும்
அசையுந ரிருந்தோர்க் கரும்புணர் வின்மென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை
அரும்பவி ழலரிச் சுரும்புண் பல்போது
அணிய வருதும்நின் மணியிருங் கதுப்பென
எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி
மைசூழ் வெற்பின் மலைபல விறந்து
செய்பொருட் ககன்ற செயிர்தீர் காதலர்



கேளார் கொல்லோ தோழி தோள
இலங்குவளை நெகிழ்த்த கலங்கஞ ரெள்ளி
நகுவது போல மின்னி
ஆர்ப்பது போலுமிக் கார்ப்பெயற் குரலே.

உலகியலாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகன் குறித்த பருவங் கண்டு தலைமகள் சொல்லியது.

## கஉரு. கருவூர்ச் சேரமான் சாத்தன்

**999.** குறுந்தொகை - **268.** குறிஞ்சி

சேறி ரோவெனச் செப்பலு மாற்றும்
வருவி ரோவென வினவலும் வினவாம்
யாங்குச்செய் வாங்கொல் தோழி பாம்பின்
பையுடை யிருந்தலை துமிக்கு மேற்றொடு
நடுநா ளென்னார் வந்து
நெடுமென் பணைத்தோ ளடைந்திசி னோரே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

கஉசு. கருவூர் நன்மார்பனார்

**1000.** அகநானூறு - **277.** பாலை

தண்கதிர் மண்டில மவிரறச் சாஅய்ப்
பகலழி தோற்றம் போலப் பையென
நுதலொளி கரப்பவு மாள்வினை தருமார்
தவலி லுள்ளமொ டெஃகுதுணை யாகக்
கடையலங் குரல வாள்வரி யுழுவை
பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனாது
இரும்பனஞ் செறும்பி னன்ன பரூஉமயிர்ச்
சிறுகட் பன்றி வருதிறம் பார்க்கும்
அத்தமா ருழுவத் தாங்க ணனந்தலைப்
பொத்துடை மரத்த புகர்படு நீழல்
ஆறுசெல் வம்பல ரசையுந ரிருக்கும்

ஈரமில் வெஞ்சுர மிறந்தோர் நம்வயின்
வாரா வளவை யாயிழை கூர்வாய்
அழலகைந் தன்ன காமர் துதைமயிர்
மனையுறை கோழி மறனுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
பொங்கழல் முருக்கி னொண்குரல் மாந்திச்
சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்
வந்தன் றம்ம தானே
வாரார் தோழிநம் காத லோரே.

தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குப் பருவங்கண் டழிந்து சொல்லியது.

## கஉஎ. கருவூர்ப் பவுத்திரனார்

### 1001. குறுந்தொகை - 162. முல்லை

கார்புறந் தந்த நீருடை வியன்புலத்துப்
பல்லா புகுதரூஉம் புல்லென் மாலை
முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர் மாட்டே.

வினைமுற்றி மீளுந் தலைமகன் முல்லைக்கு உரைப்பானாய் உரைத்தது.

## கஉஅ. கருவூர்ப் பூதஞ்சாத்தனார்

### 1002. அகநானூறு - 50. நெய்தல்

கடல்பா டவிந்து தோணி நீங்கி
நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
பகலு நம்வயி னகலா னாகிப்



பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்பன்
இனியே, மணப்பருங் காமந் தணப்ப நீந்தி
வாரா தோர்நமக் கியாஅ ரென்னாது
மல்லல் மூதூர் மறையினை சென்று
சொல்லி னெவனோ பாண எல்லி
மனைசேர் பெண்ணை மடிவா யன்றில்
துணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்
கண்ணிறை நீர்கொடு கரக்கும்
ஒண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே.

தோழி பாணனுக்குச் சொல்லியது.

## ௧௨௯. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார்

### 1003. புறநானூறு - 219.

உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழல்

முழூஉ வள்ளூர முணக்கு மள்ள
புலவுதி மாதோ நீயே
பலரா லத்தைநின் குறியிருந் தோரே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானைப் பாடியது.

## ௧௯௦. கல்பொருசிறுநுரையார்

### 1004. குறுந்தொகை - 290. நெய்தல்

காமந் தாங்குமதி யென்போர் தாமஃது
அறியுநர் கொல்லோ அனைமது கையர்கொல்
யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல இல்லா குதுமே.

வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் அழிவுற்றுச் சொல்லியது.

## ௧௯௧. கல்லாடனார்

### 1005. அகநானூறு - 9. பாலை

கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த

அப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்பட ரன்ன செங்குழை யகந்தோறு
இழுதி னன்ன தீம்புழற் றுய்வாய்
உழுதுகாண் துளைய வாகி யார்கழல்பு
ஆலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவின்
நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்
அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோக்கிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மாண்
ஓங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென்
னெஞ்சே.

வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.



## 1006. அகநானூறு - 83. பாலை

வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
கறையடி மடப்பிடி கானத் தலறக்
களிற்றுக்கன் றொழித்த வுவகையர் கலிசிறந்து
கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொழி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்
நறவுநொடை நல்லிற் புதவுமுதற் பிணிக்கும்
கல்லா விளையர் பெருமகன் புல்லி
வியன்தலை நன்னாட்டு வேங்கடங் கழியினும்
சேய ரென்னா தன்புமிகக் கடைஇ
எய்தவந் தனவால் தாமே நெய்தற்
கூம்புவிடு நிகர்மல ரன்ன
ஏந்தெழில் மழைக்கணெங் காதலி குணனே.

தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச்

சொல்லியது.

## 1007. அகநானூறு - 113. பாலை

நன்றல் காலையும் நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியிற்
புன்றலை மடப்பிடி யகவுநர் பெருமகன்
மாவீசு வண்மகி ழஃதைப் போற்றிக்
காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்
இளங்கட் கமழு நெய்தலஞ் செறுவின்
வளங்கெழு நன்னா டன்னவென் றோள்மணந்து
அழுங்கல் மூதூ ரலரெடுத் தாற்ற
நல்காது துறந்த காதல ரென்றும்
கல்பொரூஉ மெலியாப் பரட்டி ஞேனடி
வைக லஞ்சுரைப் பெய்த வல்சியர்
இகந்தன வாயினு மிடம்பார்த்துப் பகைவர்
ஓம்பின ருறையும் கூழ்கெழு குறும்பிற்
குவையிமில் விடைய வேற்றூ வொய்யும்



கனையிருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவயர்ந் தன்ன கொழும்பல் திற்றி
எழாஅப் பாண னன்னாட் டும்பர்
நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வர்
எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்
அறுதுறை யயிர்மணற் படுகரைப் போகிச்
சேய ரென்றலிற் சிறுமை யுற்றவென்

கையறு நெஞ்சத் தெவ்வம் நீங்க
அழாஅ முறைதலு முரியம் பராரை
அலங்க லஞ்சினைக் குடம்பை புல்லெனப்
புலம்பெயர் மருங்கிற் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகியவர்
செய்வினை மருங்கிற் செலீஇயரென் னுயிரே.

தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 1008. அகநானூறு - 171. பாலை

நுதலும் நுண்பசப் பிவருந் தோளும்
அகன்மலை யிறும்பி னாய்ந்துகொண் டறுத்த
பணையெழி லழிய வாடும் நாளும்
நினைவல் மாதவர் பண்பென் றோவாது

இனையல் வாழி தோழி புணர்வர்
இலங்குகோ லாய்தொடி நெகிழப் பொருள்புரிந்து
அலந்தலை ஞெமையத் ததரடைந் திருந்த
மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்
கோள்வ லேற்றை யோசை யோர்மார்
திருத்திக் கொண்ட வம்பினர் நோன்சிலை
எருத்தத் திரீஇ யிடந்தொறும் படர்தலிற்

கீழ்ப்படு தார முண்ணு மேற்சினைப்
பழம்போற் சேற்ற தீம்புழ லுணீஇய

கருங்கோட் டிருப்பை யூரும்
பெருங்கை யெண்கின் சுரனிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.



## 1009. அகநானூறு - 199. பாலை

கரைபாய் வெண்டிரை கடுப்பப் பலவுடன்
நிரைகா லொற்றலிற் கல்சேர் புதிரும்
வரைசேர் மராஅத் தூழ்மலர் பெயல்செத்து
உயங்கல் யானை நீர்நசைக் கலமரச்
சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்

அலங்க லுலவை யரிகிழ வசைஇத்
திரங்குமரற் கவ்விய கையறு தொகுநிலை
அரந்தி னூசித் திரள்நுதி யன்ன
திண்ணிலை யெயிற்ற செந்நா யெடுத்தலின்
வளிமுனைப் பூளையி னொய்யென் றலறிய
கெடுமா னினநிரை தரீஇய கலையே
கதிர்மாய் மாலை யாண்குரல் விளிக்கும்
கடல்போற் கானம் பிற்படப் பிறர்போற்
செல்வே மாயினெஞ் செலவுநன் றென்னும்
ஆசை யுள்ள மசைவின்று துரப்ப
நீசெலற் குரியை நெஞ்சே வேய்போல்
தடையின மன்னுந் தண்ணிய திரண்ட
பெருந்தோ ளரிவை யொழியக் குடாஅது
இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற்
பொலம்பூண் நன்னன் பொருதுகளத் தொழிய
வலம்படு கொற்றந் தந்த வாய்வாட்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந் தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலென் யானே.

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

**1010. அகநானூறு - 209. பாலை**

தோளுந் தொல்கவின் தொலைந்தன நாளும்
அன்னையு மருந்துய ருற்றன ளலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழுவுறழ் திணிதோ ளியல்தேர்ச் செழியன்



நேரா வெழுவ ரடிப்படக் கடந்த
ஆலங் கானத் தார்ப்பினும் பெரிதென
ஆழல் வாழி தோழி யவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்
அறையிறந் தகன்றன ராயினும் நிறையிறந்து
உள்ளா ராதலோ வரிதே செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை யன்னநின் நலனே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

**1011.** அகநானூறு - **333.** பாலை

யாஅ வொண்டளி ரரக்குவிதிர்த்
தன்னநின்
ஆக மேனி யம்பசப் பூர
அழிவுபெரி துடைமை யாகி யவர்வயிற்

பழிதலைத் தருதல் வேண்டுதி மொழிகொண்டு
தாங்க லொல்லுமோ மற்றே யாங்குநின்

எவ்வம் பெருமை யுரைப்பிற் செய்பொருள்
வயங்கா தாயினும் பயங்கெடத் தூக்கி
நீடலர் வாழி தோழி கோடையிற்

குருத்திறு புக்க வருத்தஞ் சொலாது
தூம்புடைத் துய்த்தலை கூம்புபு திரங்கிய
வேனில் வெளிற்றுப்பனை போலக்
கையெடுத்து
யானைப் பெருநிரை
மலைசே ணிகந்தன

வானம் பயிரும்
ராயினும் நிலைபெயர்ந்து
நாளிடைப் படாமை வருவர் நமரெனப்
பயந்தரு கொள்கையி னயந்தலை திரியா
நின்வா யின்மொழி நன்வா யாக

வருவ ராயினோ நன்றே வாராது
அவணர் காதல ராயினு மிவண்நம்
பசலை மாய்த லெளிதுமற் றில்ல
சென்ற தேஎத்துச் செய்வினை முற்றி
மறுதர லுள்ளத்த ரெனினுங்
குறுகுபெரு நசையொடு தூதுவரப் பெறினே.

பிரிவிடைவற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1012.** குறுந்தொகை - **260.** பாலை

குருகு மிருவிசும் பிவரும் புதலும்
வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே
சுரிவளைப் பொலிந்த தோளுஞ் செற்றும்
வருவர்கொல் வாழி தோழி பொருவார்
மண்ணெடுத் துண்ணும் அண்ணல் யானை
வண்தேர்த் தொண்டையர் வழையம லடுக்கத்துக்
கன்றி லோரா விலங்கிய
புன்தா ளோமைய சுரனிறந் தோரே.

அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு ஆற்றாளாகிய தலைமகட் குத்தோழி சொல்லியது.

**1013.** குறுந்தொகை - **269.** நெய்தல்

சேயாறு சென்று துனைபரி யசாவாது

உசாவுநர்ப் பெறினே நன்றுமற் றில்ல
வயச்சுறு வெறிந்த புண்தணிந் தெந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்
உப்பை மாறி வெண்ணெற் றரீஇய
உப்புவிளை கழனிச் சென்றன ளதனால்
பனியிரும் பரப்பிற் சேர்ப்பற்கு
இனிவரி னெளிய னென்னுந் தூதே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லு வாளாய்ச் சொல்லியது.

கல்லாடனார் 499

## 1014. புறநானூறு - 23.

வெளிறில் நோன்காழ்ப் பணைநிலை முனைஇக்
களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்
கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியற்
சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்
கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்
கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்
கொள்பத மொழிய வீசிய புலனும்
வடிநவில் நவியம் பாய்தலி னூர்தொறுங்
கடிமரந் துளங்கிய காவும் நெடுநகர்
வினைபுனை நல்லில் வெவ்வெரி நைப்பக்
கனையெரி யுரறிய மருங்கும் நோக்கி
நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்று

இன்னு மின்னபல செய்குவன் யாவருந்
துன்னல் போகிய துணிவி னோனென
ஞாலம் நெளிய ஈண்டிய வியன்படை
ஆலங் கானத் தமர்தடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவல்

அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளி லத்த மாகிய காடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை, நல்லிசை வஞ்சியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியது.

## 1015. புறநானூறு - 25.

மீன்திகழ் விசும்பிற் பாயிரு ளகல
ஈண்டுசெலல் மரபிற் றன்னியல் வழாஅது
உரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு

நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்கு
உடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
முலைபொலி யாக முருப்ப நூறி
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர
அவிரறல் கடுக்கும் அம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியது.

**1016. புறநானூறு - 371.**

அகன்தலை வையத்துப் புரவலர்க் காணாது
மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவாய்
ஆடுறு குழிசி பாடின்று தூக்கி
மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்
குறைசெயல் வேண்டா நசைய விருக்கையேன்
அரிசி யின்மையி னாரிடை நீந்திக்
கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப
வருகணை வாளி... ...யன்பின்று தலைஇ
இரைமுர சார்க்கு முரைசால் பாசறை
வில்லே ருழவினின் னல்லிசை யுள்ளிக்
குறைத்தலைப் படுபிண னெதிரப் போர்பழித்து
யானை யெருத்தின் வாள்மட லோச்சி
அதரி திரித்த ஆளுகு கடாவின்
மதியத் தன்னவென் விசியுறு தடாரி

## கல்லாடனூர் 501

அகன்க ணதிர ஆகுளி தொடாலிற்
பண்ணமருள் நெடுந்தாட் பல்பிணர்த் தடக்கைப்
புகர்முக முகவைக்கு வந்திசிற் பெரும
களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்

குடர்த்தலை மாலை சூடி யுணத்தின
ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
உருகெழு பேய்மக ளயரக்
குருதித் துகளாடிய களங்கிழ வோயே.

திணை - வாகை ; துறை - மறக்களவழி.
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியது.

## 1017. புறநானூறு - 385.

வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினு மிலனே பிறன்கடை
அகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
வறன்யா னீங்கல் வேண்டி யென்னரை
நீனிறச் சிதாஅர் களைந்து
வெளிய துடீஇயென் பசிகளைந் தோனே
காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோன்
நல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
ஓங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.
அம்பர்கிழான் அருவந்தையைப் பாடியது.

## 1018. புறநானூறு - 391.

தண் துளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய விண்டோய் பிறங்கல்



முகடுற வுயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
அரிய லார்கைய ருண்டினி துவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந் திறுத்தவென் னிரும்பே ரொக்கல்
அதிர்கை விடுக்கும் பண்பில முதுகுடி
நன... ...வினவலின்
முன்னும் வந்தோன் மருங்கில னின்னும்
அளிய னாகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசிற் பெரும... ...
... ...பெருங்கழி நுழைமீ னருந்துந்
துதைந்த தூவியம் புதாஅஞ் சேக்குந்
ததைந்த புனனின் செழுநகர் வரைப்பின்
நெஞ்சமர் காதல் நின்வெய் யோளொடு
இன்றுயி... ... ...ஞ்சால்
துளிபத னறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.

பொறையாற்றுக்கிழானைப் பாடியது.

## கரு௨. கவைமகன்

### 1019. குறுந்தொகை - 324. நெய்தல்

கொடுந்தாள் முதலைக் கோள்வ லேற்றை வழிவழக்
கறுக்குங் கானலம் பெருந்துறை இனமீ னிருங்கழி
நீந்தி நீநின்
நயனுடை மையின் வருதி யிவள்தன் 5 மடனுடை
மையி னுவக்கும் யானது

கழாத்தலையார்

503

கவைமக நஞ்சுண் டாஅங்கு
அஞ்சுவல் பெருமவென் னெஞ்சத் தானே.

செறிப்பறி வுறுக்கப்பட்டு இராவாரா வரைவல் தோழி அது மறுத்து வரைவுகடாயது.

என்றூற்குத்

## கருரு. கழாத்தலையார்

# 1020. புறநானூறு - 62.

வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர் புண்தொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்தல் தீட்டி

நிறங்கிள ருருவிற் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்கப்

பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்து
அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
உரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கெட ஈண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர
உடன்வீழ்ந் தன்றா லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னோரு மாற்ற
அரும்பெற லுலகம் நிறைய
விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே.

திணை - தும்பை ; துறை - தொகைநிலை.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன்
வேற் பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும்
போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைப் பாடியது.



## 1021. புறநானூறு - 65.

மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப
உழவ ரோதை மறப்ப விழவும்
அகலு ளாங்கட் சீறூர் மறப்ப
உவவுத்தலை வந்த பெருநா ளமயத்து
இருசுடர் தம்முள் நோக்கி யொருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன் ஈங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

சேரமான் பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற்
பெருவளத்தா னோடு பொருது புறப்புண்ணாணி
வடக்கிருந்தானைப் பாடியது.

## 1022. புறநானூறு - 270.

பன்மீ னிமைக்கு மாக விசும்பின்

இரங்கு முரசி னினஞ்சால் யானை
நிலந்தவ வுருட்டிய நேமி யோரும்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
நறுவிரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
இன்னிசை கேட்ட துன்னரு மறவர்
வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்

பேரம ருழந்த வெருவரு பறந்தலை
விழுநவி பாய்ந்த மரத்தின்
வாள்மிசைக் கிடந்த ஆண்மையோன்

திறத்தே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.
கண்டார் தாய்க்குச் சொல்லியது.

## கழாத்தலையார் 505

## 1023. புறநானூறு - 288.

மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பின்
அண்ணல் நல்லே றிரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க
ஆரமர் மயங்கிய ஞாட்பிற் றெறுவர
நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்
தருகுகை... ... ...மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை யீயாது மொய்த்தன பருந்தே.

திணை - தும்பை ; துறை - மூதின்முல்லை.

## 1024. புறநானூறு - 289.

ஈரச் செவ்வி யுதவின வாயினும்
பல்லெருத் துள்ளும் நல்லெருது நோக்கி
வீறுவீ றுயு முழவன் போலப்
பீடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய
மூதி லாள ருள்ளுங் காதலின்
தனக்குமுகந் தேந்திய பசும்பொன் மண்டை
இவற்கீ கென்னு மதுவுமன் றிசினே
கேட்டியோ வாழி பாண பாசறைப்
பூக்கோ ளின்றென் றறையும்
மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே.

திணை - ......; துறை - ......முல்லை.

## 1025. புறநானூறு - 368.

களிறு முகந்து பெயர்குவ மெனினே

ஒளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்
கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன

கொடுஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
கடும்பரி நன்மான் வாங்குவயி னொல்கி
நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே


கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே
மெய்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
வளிவழக் கறுத்த வங்கம் போலக்
குருதியம் பெரும்புனல் கூர்ந்தனவே யாங்க
முகவை யின்மையின் உகவை யின்றி
இரப்போ ரிரங்கு மின்னா வியன்களத்து
ஆளழிப் படுத்த வாளே ருழவ
கடாஅ யானைக் கால்வழி யன்னவென்
தெடாரித் தெண்கண் தெளிர்ப்ப வொற்றிப்
பாடி வந்த தெல்லாங் கோடியர்
முழவுமருள் திருமணி மிடைந்தநின்
அரவுற ழார முகக்குவ மெனவே.

திணை - வாகை ; துறை - மறக்களவழி.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பஃ றடக்கைப் பெருநற் கிள்ளியொடு போர்ப்புறத்துப் பொருது வீழ்ந் தாரங்கழுத் தன்னதாக உயிர்போகாது கிடந்தானைப் பாடியது.

## ௧௩௪. கழார்க்கீரனெயிற்றியனார்

### 1026. குறுந்தொகை - 330. மருதம்

நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத்
தலைப்புடைப் போக்கித் தண்கயத் திட்ட
நீரிற் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும்
பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ
இன்கடுங் கள்ளின் மணமில கமழும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே

பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

## ௧௩௫. கழார்க்கீரனெயிற்றியார்

## 1027. அகநானூறு - 163. பாலை

விண்ணதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்
தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்
எமிய மாகத் துனியுளங் கூரச்
சென்றோ ருள்ளிச் சில்வளை நெகிழப்
பெருநகை யுள்ளமொடு வருநகை நோக்கி
விளியு மெவ்வமொ டளிய வென்னாது
களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை
முளரி கரியு முன்பனிப் பானாட்
குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை
எனக்கே வந்தனை போறி புனற்கால்
அயிரிடு குப்பையின் நெஞ்சுநெகிழ்ந் தவிழக்
கொடியோர் சென்ற தேஎத்து மடியாது
இனையை யாகிச் செல்மதி
வினவிதுப் புறுந ருள்ளலு முண்டே.

பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் மீதூரச் சொல்லியது.
ஆற்றாமை

## 1028. அகநானூறு - 217. பாலை

பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை
எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன
துவலை தூவல் கழிய அகல்வயல்

நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்
பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை
நீலுண் பச்சை நிறமறைத் தடைச்சிய
தோலெறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை யவரைக் கொழுமுகை யவிழ
ஊழுறு தோன்றி யொண்பூத் தளைவிடப்
புலந்தொறுங் குருகினம் நரலக் கல்லென
அகன்துறை மகளி ரணிதுறந்து நடுங்க



அற்சிரம் வந்தன் றமைந்தன் றிதுவென
எப்பொருள் பெறினும் பிரியன்மி னோவெனச்
செப்புவல் வாழியோ துணையுடை யீர்க்கே
நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படு மேனி நோக்கி நோய்பொர
இணரிறு புடையும் நெஞ்சமொடு புணர்வுவேட்டு
எயிறுதீப் பிறப்பத் திருகி
நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி யுழந்தே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

# 1029. அகநானூறு - 235. பாலை

அம்ம வாழி தோழி பொருள்புரிந்து
உள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ
பயனிலங் குழைய வீசிப் பெயல்முனிந்து
விண்டு முன்னிய கொண்டல் மாமழை
மங்கு லற்கமொடு பொங்குபு துளிப்ப
வாடையொடு நிவந்த வாயிதழ்த் தோன்றி
சுடர்கொ ளகவிற் சுருங்குபிணி யவிழச்
சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ
விசும்பணி மீனிற் பசும்புத லணியக்
களவன் மண்ணளைச் செறிய வகல்வயற்
கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ
மாரியங் குருகி னீரிய குரங்க
நனிகடுஞ் சிவப்பொடு நாமந் தோற்றிப்
பனிகடி கொண்ட பண்பில் வாடை
மருளின் மாலையொ டருளின்றி நலிய
நுதலிறை கொண்ட அயலறி பசலையொடு
தொன்னலஞ் சிதையச் சாஅய்
என்னள்கொ லளிய ளென்னு தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள்

ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது

## கழார்க்கீரனெயிற்றியார்

509

### 1030. அகநானூறு - 294. முல்லை

மங்குல் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளிநுண் துவலை பூவகம் நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளிர்
இருவகி ரிருளி னீரிய துயல்வர
அவரைப் பைம்பூப் பயில அகல்வயற்
கதிர்வார் காய்நெல் கட்கினி திறைஞ்சச்
சிதர்சினை தூங்கு மற்சிர வரைநாள்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோ யறியா அறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல்லென
ஆனா தெறிதரும் வாடையொடு
நோனேன் தோழியென் தனிமை யானே.

பருவவரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 1031. குறுந்தொகை - 35. மருதம்

நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு
சினைப்பசும் பாம்பின் சூல்முதிர்ப் பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ
நுண்ணுறை யழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசி னோர்க் கழலே.

பிரிவிடைமெலிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

## 1032. குறுந்தொகை - 261. குறிஞ்சி

பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் சில்பெயற் கடைநாள்
சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்



நள்ளென் யாமத் தையெனக் கரையும்
அஞ்சுவரு பொழுதி னானு மென்கண்
துஞ்சா வாழி தோழி காவலர்
கணக்காய் வகையின் வருந்தியென்
நெஞ்சுபுண் ணுற்ற விழுமத் தானே.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகள்தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

## 1033. நற்றிணை - 281. பாலை

மாசில் மரத்த பலியுண் காக்கை
வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையோ டுகுக்கும்
அடங்காச் சொன்றி யம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ்சோ றுள்ளுவன விருப்ப
மழைமைந் துற்ற மாவிருள் நடுநாள்
தாம் நம் முழைய ராகவும் நாம் நம்
பனிக்கடு மையி னனிபெரி தழுங்கித்
துஞ்சா மாகலு மறிவோர்
அன்பிலர் தோழிநங் காத லோரே.

வன்பொறை எதிரழிந்த
ஆற்றுளெனக் கவன்ற தோழி

தலைமகள் தோழிக்குச் சொல்லியது.
தலைமகட்குரைத்ததூஉமாம்.

## 1034. நற்றிணை - 312. பாலை

நோகோ யானே நோமென் னெஞ்சே
பனிப்புத லீங்கை யங்குழை வருடச்
சிறைகுவிந் திருந்த பைதல்வெண் குருகு
பார்வை வேட்டுவன் காழ்களைந் தருள
மாரி நின்ற மைய லற்சிரம்
யாந்தன் னுழைய மாகவுந் தானே

எதிர்த்த தித்தி முற்று முலையள்

கள்ளிக்குடிப் பூதம் புல்லனூர்

511

கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெரும்பனிக் கென்னள்கொ லெனவே.

பொருள் வலித்த தலைமகன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

## ௧௩௬. கழைதின் யானையார்

### 1035. புறநானூறு - 204.

ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று
தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர்வேட் டோரே
ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்

உண்ணீர் மருங்கி னதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்
புலவேன் வாழிய ரோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
வல்விலோரியைப் பாடியது.

## க௩எ. கள்ளிக்குடிப் பூதம் புல்லனார்

### 1036. நற்றிணை - 333. பாலை

மழைதொழி லுலந்து மாவிசும் புகந்தெனக்
கழைகவி னழிந்த கல்லதர்ச் சிறுநெறிப்
பரலவ லூறற் சிறுநீர் மருங்கிற்
பூநுதல் யானையொடு புலிபொரு துண்ணுஞ்
சுரனிறந் தரிய வென்னு ரானழிந்து

ஊண்மலி நெஞ்சமொடு வண்மை வேண்டி
அரும்பொருட் ககன்ற காதலர் முயக்கெதிர்ந்து
திருந்திழைப் பணைத்தோள் பெறுநர் போலும்
நீங்குக மாதோநின் னவல மோங்குமிசை
உயர்புகழ் நல்லி லொண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத் துள்ளுதொறும் படுமே.

பொருள்வயிற் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தது.

## கஙஅ. கள்ளில் ஆத்திரையனார்

### 1037. குறுந்தொகை - 293. மருதம்

கள்ளிற் கேளி ரார்த்திய வுள்ளூர்ப்
பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்
ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும்
ஆதி யருமன் மூதூ ரன்ன
அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை
தித்திக் குறங்கி னாழ்மா றலைப்ப
வருமோ சேயிழை யந்திற்
கொழுநற் காணிய அளியேன் யானே.

பரத்தையிற் பிரிந்துவந்த கிழவற்கு வாயிலாகப்புக்க தோழிக் குக் கிழத்தி உரைத்தது.

### 1038. புறநானூறு - 175

எந்தை வாழி யாத னுங்கவென்
னெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்
என்னியான் மறப்பின் மறக்குவென் வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்

513

உலக விடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்
பலர்புர வெதிர்ந்த வறத்துறை நின்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஆதனுங்கனைப் பாடியது.

## 1039. புறநானூறு - 389.

நீர் நுங்கின் கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினும்
ஏலா வெண்பொன் போருறு காலை
எம்மு முள்ளுமோ பிள்ளையம் பொருநன்
என்றீத் தனனே யிசைசால் நெடுந்தகை

இன்றுசென் றெய்தும் வழியனு மல்லன்
செலினே காணு வழியனு மல்லன்
புன்றலை மடப்பிடி யிணையக் கன்றுதந்து

குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குங்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதியன்
ஆத னுங்கன் போல நீயும்
பசித்த வொக்கற் பழங்கண் வீட
வீறுசால் நன்கலம் நல்குமதி பெரும
ஐதக லல்குல் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஆதனுங்கனைப் பாடியது.

## ௧௩௯. காக்கைபாடினியார் நச்செள்ளையார்

### 1040. குறுந்தொகை - 210. முல்லை

திண்தேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு
எழுகலத் தேந்தினுஞ் சிறிதென் தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.

பிரிந்துவந்த தலைமகன் நன்காற்றுவித்தாய் என்றாற்குத் தோழி உரைத்தது.

## 1041—1050. பதிற்றுப்பத்து - ஆறும் பத்து - 51—60

1041. துளங்குநீர் வியலகங் கலங்கக் கால்பொர
விளங்கிரும் புணரி யுருமென முழங்குங்
கடல்சேர் கானற் குடபுல முன்னிக்
கூவற் றுழந்த தடந்தாள் நாரை
குவியிணர் ஞாழல் மாச்சினைச் சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பின்
அடும்பம லடைகரை யலவ னாடிய
வடுவடு நுண்ணயி ரூதை யுளற்றுந்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொலிதந்து
இயலின ளொல்கின ளாடு மடமகள்
வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்
பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி
அரவழங்கும் பெருந்தெய்வத்து
வளைஞரலும் பனிப்பௌவத்துக்
குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்த ரந்தரம் வேய்ந்து

வண்பிணி யவிழ்ந்த கண்போல் நெய்தல்
நனையுறு நறவின் நாடுடன் கமழச்
சுடர்நுதல் மடநோக்கின்
வாணகை யிலங்கெயிற்று
அமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வெள்வே லண்ணல் மெல்லியன் போன்மென
உள்ளுவர் கொல்லோநின் னுணரா
மழைதவழும் பெருங்குன்றத்துச்

தோரே

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்

515

செயிருடைய அரவெறிந்து
கடுஞ்சினத்த மிடல்தபுக்கும்
பெருஞ்சினப்புய லேறணையை

தாங்குநர், தடக்கை யானைத் தொடிக்கோடு துமிக்கும்
எஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்
மறங்கெழு போந்தை வெண்டோடு புனைந்து
நிறம்பெயர் கண்ணிப் பருந்தூ றளப்பத்
தூக்கணை கிழித்த மாக்கட் டண்ணுமை
கைவ லிளையர் கையலை யழுங்க
மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்
வலைவிரித் தன்ன நோக்கலை
கடியையால் நெடுந்தகை செருவகத் தானே.

51

திணை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.

வண்ணம்-ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - வடுவடு நுண்ணுயிர்.

1042. கொடிநுடங்கு நிலைய கொல்களிறு மிடைந்து
வடிமணி நெடுந்தேர் வேறுபுலம் பரப்பி
அருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கந் திசைதிரிந் தாங்கு
மையணிந் தெழுதரு மாயிரும் பல்தோல்
மெய்புதை யரண மெண்ணா தெஃகுசுமந்து
முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க
உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட

நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க்குக் கவித லல்லதை யிரைஇய
மலர்பறி யாவெனக் கேட்டிகு மினியே

சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை
சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ

யாகச்

நளிந்தனை வருத லுடன்றன ளாகி
உயலுங் கோதை யூரலந் தித்தி



ஈரிதழ் மழைக்கட் பேரிய லரிவை
ஒள்ளித ழவிழகங் கடுக்குஞ் சீறடிப்
பல்சில கிண்கிணி சிறுபர டலைப்பக்
கொல்புனற் றளிரி னடுங்குவனள் நின்றுநின்

எறிய ரோக்கிய சிறுசெங் குவளை
ஈயென விரப்பவு மொல்லாள் நீயெமக்கு
யாரை யோவெனப் பெயர்வோள் கையதை
கதுமென வுருத்த நோக்கமொ டதுநீ
பாஅல் வல்லா யாயினை பாஅல்
யாங்குவல் லினையோ வாழ்கநின் கண்ணி
அகலிரு விசும்பிற் பகலிடந் தரீஇயர்
தெறுகதிர் திகழ்தரு முருகெழு ஞாயிற்று
உருபுகிளர் வண்ணங் கொண்ட
வான்தோய் வெண்குடை வேந்தர்தம் எயிலே. 52

துறை - குரவைநிலை. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - சிறுசெங்குவளை.

1043. வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர்

வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப
நல்கினை யாகுமதி யெம்மென் றருளிக்
கல்பிறங்கு வைப்பிற் கடறரை யாத்தநின்
தொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும்
எந்திரத் தகைப்பி னம்புடை வாயிற்
கோள்வல் முதலைய குண்டுகண் ணகழி
வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை
ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயி லல்லது
முன்னும் பின்னும்நின் முன்னோ ரோம்பிய
எயில்முகப் படுத்தல் யாவது வளையினும்
பிறிதாறு சென்மதி சினங்கெழு குருசில்
எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணின்

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்

517

தேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா ஆங்குநின் களிறே.

53

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும்
அது. பெயர் - குண்டுகண்ணகழி.

1044. வள்ளியை யென்றலிற் காண்குவந் திசினே
உள்ளியது முடித்தி வாழ்கநின் கண்ணி
வீங்கிறைத் தடைஇய அமைமருள் பணைத்தோள்
ஏந்தெழில் மழைக்கண் வனைந்துவர விளமுலைப்
பூந்துகி லல்குற் றேம்பாய் கூந்தல்
மின்னிழை விறலியர் நின்மறம் பாட
இரவலர் புன்கண் தீர நாடொறும்
உரைசால் நன்கலம் வரைவில வீசி
அனையை யாகன் மாறே யெனையதூஉம்
உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்று
இருநில மருங்கி னெடிதுமன் னியரோ
நிலந்தப விடூஉ மேணிப் புலம்படர்ந்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்பத்
தோமர வலத்தர் நாமஞ் செய்ம்மார்
ஏவல் வியங்கொண் டிளையரொ டெழுதரும்
ஒல்லார் யானை காணின்
நில்லாத் தானை யிறைகிழ வோயே.

54

துறை - காட்சிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - நில்லாத்தானை.

1045. ஆன்றோள் கணவ சான்றோர் புரவல
நின்னயந்து வந்தனென் அடுபோர்க்
கொற்றவ
இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழுந் தாழைக் கானலம் பெருந்துறைத்



தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந
செவ்வூன் தோன்றா வெண்டுவை முதிரை
வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை
குடவர் கோவே கொடித்தே ரண்ணல்
வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நகைசால் வாய்மொழி யிசைசால் தோன்றல்
வேண்டுவ வளவையுள் யாண்டுபல கழியப்
பெய்துபுறந் தந்து பொங்க லாடி
விண்டுச் சேர்ந்த வெண்மழை போலாச்
சென்றா லியரோ பெரும அல்கலும்
நனந்தலை வேந்தர் தாரழிந் தலற
நீடுவரை யடுக்கத்த நாடுகைக் கொண்டு

பொருது சினந்தணிந்த செருப்புக லாண்மைத்
தாங்குநர்த் தகைத்த வொள்வாள்
ஓங்க லுள்ளத்துக் குருசில்நின் னாளே.

55

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - துஞ்சும்பந்தர்.

1046. விழவுவீற் றிருந்த வியலு ளாங்கண்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்க அவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்து
இலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே.

56

துறை - ஒள்வாளமலை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் -

வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சி.

1047.✓ ஓடாப் பூட்கை மறவர் மிடல்தப
இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்
குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்

519

துணங்கை யாடிய வலம்படு கோமான்
மெல்லிய வகுந்திற் சீறடி யொதுங்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புண ரின்னிசைத் தழிஞ்சி பாடி
இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆன்ற வறிவிற் றோன்றிய நல்லிசை
ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புன்க ணஞ்சும்
புரவெதிர் கொள்வனைக் கண்டனம்
வரற்கே. 57

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும்
தூக்கும் அது.
பெயர் - சில்வளை விறலி.

1048 ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்
வெண்தோட் டசைத்த
வாண்முகம் பொறித்த

ஒண்பூங் குவளையர்
மாண்வரி யாக்கையர்
செல்லுறழ் மறவர்தங் கொல்படைத்
தரீஇயர்
இன்றினிது நுகர்ந்தன மாயின் நாளை
மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்லது
உண்குவ மல்லேம் புகாவெனக் கூறிக்
கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்
பொய்படு பறியா வயங்குசெந் நாவின்

எயிலெறி வல்வில் ஏவிளங்கு தடக்கை
ஏந்தெழி லாகத்துச் சான்றோர் மெய்ம்மறை
வான வரம்ப னென்ப கானத்துக்
கறங்கிசைச் சிதடி பொரியரைப்
பொருந்திய
சிறியிலை வேலம் பெரிய தோன்றும்
புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி

காஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்



அலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே.

58

துறை - செந்துறைப்பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - எவிளங்குதடக்கை.

1049. பகல்நீ டாகா திரவுப்பொழுது பெருகி
மாசி நின்ற மாகூர் திங்கட்
பனிச்சுரம் படரும் பாண்மக னுவப்பப்
புல்லிருள் விடியப் புலம்புசே ணகலப்
பாயிருள் நீங்கப் பல்கதிர் பரப்பி
ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்கு
இரவல் மாக்கள் சிறுகுடி பெருக

உலகந் தாங்கிய மேம்படு கற்பின்
வில்லோர் மெய்ம்மறை வீற்றிருங் கொற்றத்துச்
செல்வர் செல்வ சேர்ந்தோர்க் கரணம்

அறியா தெதிர்ந்து துப்பிற் குறையுற்றுப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்
சினஞ்செலத் தணியுமோ வாழ்கநின் கண்ணி
பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய
மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கும்
ஆறுமுட் டுறாஅ தறம்புரிந் தொழுகும்
நாடல் சான்ற துப்பிற் பணைத்தோட்
பாடுசால் நன்கலந் தரூஉம்
நாடுபுறந் தருதல் நினக்குமார் கடனே.

**59**

இதுவுமது. பெயர் - மாகூர்திங்கள்.

**1050.** கொலைவினை மேவற்றுத் தானை தானே
இகல்வினை மேவலன் தண்டாது வீசுஞ்
செல்லா மோதில் பாண்மகள் காணியர்
மிஞிறுபுற மூசவுந் தீஞ்சுவை திரியாது
அரம்போழ் கல்லா மரம்படு தீங்கனி

அஞ்சே றமைந்த முண்டை விளைபழம்
ஆறுசெல் மாக்கட் கோய்தகை தடுக்கு.

மறாஅ விளையு ளறாஅ யாணர்த்
தொடைமடி களைந்த சிலையுடை மறவர்
பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி
வருங்கட லூதையிற் பனிக்குந்
துவ்வா நறவின் சாயினத் தானே.

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - மரம்படுதீங்கனி.

## 1050-a. பதிகம்

குடக்கோ நெஞ்சேர லாதற்கு வேஎள்
ஆவிக் கோமான் தேவி யீன்றமகன்
தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப்
பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து
வான வரம்பனெனப் பேரினிது விளக்கி

ஏனை மழவரைச் செருவிற் சுருக்கி
மன்னரை யோட்டிக்

குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து
நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்
ஆடுகோட் பாட்டுச் சேரலாதனை
யாத்த செய்யு ளடங்கிய கொள்கைக்
காக்கைபாடினியார் நச்செள்ளையார்
பாடினார் பத்துப் பாட்டு.

அவைதாம் : வடுவடுநுண்ணயிர், சிறுசெங்குவளை, குண்டுகண்ணகழி, நில்லாத்தானை, துஞ்சும்பந்தர், வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சி, சில்வளைவிறலி, ஏவிளங்குதடக்கை, மாகூர்திங்கள், மரம்படுதீங்கனி, இவைபாட்டின் பதிகம்-

பாடிப்பெற்ற பரிசில் : கலனணிகவென்று அவர்க்கு ஒன்பதுகாப் பொன்னும் நூறாயிரம் காணமுங்கொடுத்துத் தன்பக்கத்துக் கொண்டான் அக்கோ.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முப்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.



## 1051. புறநானூறு - 278.

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயின் உண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

திணை - தும்பை ; துறை - உவகைக்கலுழ்ச்சி.

## ௧௬௦. காசிபன்கீரன்

## 1052. நற்றிணை - 248. முல்லை

சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ
பொறிவரி நன்மான் புகர்முகங் கடுப்பத்
தண்புத லணிபெற மலர வண்பெயற்
கார்வரு பருவ மென்றனர் மன்னினிப்
பேரஞ ருள்ளம் நடுங்கல் காணியர்
அன்பின் மையிற் பண்பில பயிற்றும்
பொய்யிடி யதிர்குரல் வாய்செத் தாலும்
இனமயில் மடக்கணம் போல
நினைமருள் வேனோ வாழியர் மழையே.

பருவங்கண் டாற்றாளாகிய தலைமகளைத் தோழி மழைமேல் வைத்துப் பருவமறுத்தது.

௧௪௧. காட்டூர்கிழார்மகனார் கண்ணனார்

## 1053. அகநானூறு - 85. பாலை

நன்னுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும்
உண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்

இன்ன மாகவு மீங்குநத் துறந்தோர்
அறவ ரல்ல ரவரெனப் பலபுலந்து
ஆழல் வாழி தோழி சாரல்
ஈன்றுநா ளுலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேற் றிரையன் வேங்கட நெடுவரை

நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை

நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந் துணைதரு தண்கார்
வருதும் யாமெனத் தேற்றிய
பருவங் காணது பாயின்றால் மழையே.

தலைமகன் பிரிய வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தி யது. இப்பாட்டு எதிர்கால நோக்கிற்று.

## கசுஉ. காப்பியஞ்சேந்தனார்

### 1054. நற்றிணை - 246. பாலை இடூஉ

ஊங்க ணினிய படூஉம்
நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்றும் மனைமா
நொச்சி மீமிசை மாச்சினை
வினைமா ணிருங்குயில் பயிற்றலும் பயிற்றும் உரம்புரி

யுள்ளமொடு சுரம்பல நீந்திச்
செய்பொருட் ககன்றன ராயினும் பொய்யலர் வருவர்
வாழி தோழி புறவிற்
பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தலை யவிழ
இன்னிசை வான மிரங்குமவர்
வருது மென்ற பருவமோ விதுவே.

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

## கசரு. காப்பியாற்றுக் காப்பியனார்

### 1055—1064. பதிற்றுப்பத்து - நான்காம்பத்து. 31—40

1055. குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த
மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசல் மாதிரத்து
நால்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்
தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர
மணிநிற மையிரு ளகல நிலாவிரிபு
கோடுகூடு மதிய மியலுற் றாங்குத்

துளங்குகுடி விழுத்திணை திருத்தி முரசுகொண்டு
ஆண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு
கருவி வானந் தண்தளி தலைஇய
வடதெற்கு விலங்கி விலகுதலைத் தெழிலிய
பனிவார் விண்டு விறல்வரை யற்றே
கடவு ளஞ்சி வானத் திழைத்த
தூங்கெயிற் கதவங் காவல் கொண்ட

எழூஉநிவந் தன்ன பரேரெறுழ் முழவுத்தோள்
வெண்டிரை முந்நீர் வளைஇய வுலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து
வண்டன் அனையமன் நீயே வண்டுபட

ஒலிந்த கூந்த லறஞ்சால் கற்பிற்
குழைக்குவிளக் காகிய வொண்ணுதற் பொன்னின்
இழைக்குவிளக் காகிய அவ்வாங் குந்தி
விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த
செம்மீ னனையள்நின் தொன்னகர்ச் செல்வி
நிலனதிர் பிரங்கல வாகி வலனேர்பு
வியன்பணை முழங்கும் வேல்மூ சழூவத்து

அடங்கிய புடையற் பொலங்கழல் நோன்றாள்
ஒடுங்காத் தெவ்வ ரூக்கறக் கடைஇப்
புறக்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்
நகைவர்க் கரண மாகிப் பகைவர்க்குச்
சூர்நிகழ்ந் தற்றுநின் தானை
போர்மிகு குருசில்நீ மாண்டனை பலவே. 31

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - கமழ்குரற்றுழாய்.

1056. மாண்டனை பலவே போர்மிகு குருசில்நீ
மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையும்
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
ஈத்தான் றானா இடனுடை வளனும்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந

கொன்ஞென்று மருண்டனெ னடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்
பெருமலை யானையொடு புலங்கெட விறுத்துத்
தடந்தாள் நாரை படிந்திரை கவரும்
முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
பிழையா விளையுள் நாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத் தாயினுஞ்
சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே.

32

இதுவுமது. பெயர் - கழையமல்கழனி.

1057. இறும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல்
வடிமணி யணைத்த பணைமருள் நோன்றாட்
கடிமரத்தாற் களிறணைத்து
நெடுநீர துறைகலங்க
மூழ்த்திறுத்த வியன்தானையொடு



புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம்
வாள்மதி லாக வேல்மிளை யுயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பிற்
செவ்வா யெஃகம் வளைஇய வகழிற்

காரிடி யுருமி னுரறு முரசிற்
கால்வழங் காரெயில் கருதிற்
போரெதிர் வேந்த ரொரூஉப நின்னே.

33

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - வரம்பில் வெள்ளம்.

1058. ஒரூஉப நின்னை யொருபெரு வேந்தே
ஓடாப் பூட்கை யோண்பொறிக் கழற்கால்
இருநிலந் தோயும் விரிநூ லறுவையர்
செவ்வுளைய மாவூர்ந்து
நெடுங்கொடிய தேர்மிசையும்
ஓடை விளங்கு முருகெழு புகர்நுதற்
பொன்னணி யானை முரண்சே ரெருத்தினும்
மன்னிலத் தமைந்த ... ...
மாறா மைந்தர் மாறுநிலை தேய
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழ
அரசுபடக் கடக்கு மாற்றற்
புரைசால் மைந்தநீ யோம்பன் மாறே.

34

துறை - தும்பையரவம். வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - ஒண்பொறிக்கழற்கால்.

1059. புரைசால் மைந்தநீ யோம்பன் மாறே
உரைசான் றனவாற் பெருமைநின் வென்றி
இருங்களிற் றியானை யிலங்குவான் மருப்பொடு
நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்து
அளகுடைச் சேவற் கிளைபுகா வாரத்
தலைதுமிந் தெஞ்சிய மெய்யாடு பறந்தலை
அந்தி மாலை விசும்புகண் டன்ன



செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்துப்
பேஎ யாடும் வெல்போர்
வீயா யாணர் நின்வயி னானே.

துறை - வாகைத்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் அது.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - மெய்யாடுபறந்தலை.

1060. வீயா யாணர் நின்வயி னானே
தாவா தாகு மலிபெறு வயவே
மல்ல லுள்ளமொடு வம்பமர்க் கடந்து
செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று
பனைதடி புனத்திற் கைதடிபு பலவுடன்

யானை பட்ட வாண்மயங்கு கடுந்தார்
மாவு மாக்களும் படுபிண மூணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்

புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
நிலமிழி நிவப்பின் நீள்நிரை பலசுமந்து
உருவெழு கூளிய ருண்டுமகிழ்ந் தாடக்
குருதிச் செம்புன லொழுகச்
செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே.

## 36

துறை - களவழி. வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - வாண்மயங்குகடுந்தார்.

1061. வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புக ழேத்தப்
பகைவ ராரப் பழங்க ணருளி
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்
வான்றோய் நல்லிசை யுலகமொ டுயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
மாயிரும் புடையல் மாக்கழல் புனைந்து
மன்னெயி லெறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பி னின்னிழல் வாழ்நர்க்குக்



கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்றுபெரி துடையையால் நீயே
வெந்திறல் வேந்தேயிவ் வுலகத் தோர்க்கே.

37

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வலம்படுவென்றி.

1062. உலகத் தோரே பலர்மற் செல்வர்
எல்லா ருள்ளும்நின் நல்லிசை மிகுமே
வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
எயில்முகஞ் சிதையத் தோட்டி யேவலின்
தோட்டி தந்த தொடிமருப் பியானைச்
செவ்வுளைக் கலிமா ஈகை வான்கழற்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே
பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை
வாணுதல் கணவ மள்ள ரேறே
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ வான வரம்ப
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.

38

இதுவுமது. பெயர் - பரிசிலர்வெறுக்கை.

1063. பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே
எமக்கிலென் ஞர்நின் மறங்கூறு குழாத்தர்
துப்புத்துறை போகிய வெப்புடைத் தும்பைக்
கறுத்த தெவ்வர் கடிமுனை யலற
எடுத்தெறிந் திரங்கும் ஏவல் வியன்பணை
உருமென வதிர்பட்டு முழங்கிச் செருமிக்கு
அடங்கா ராரரண் வாடச் செல்லுங்
கால னனைய கடுஞ்சின முன்ப
காப்பியாற்றுக் காப்பியனர்

529

வாலிதின், நூலி னிழையா நுண்மயி ரிழைய
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புறப் புறவின் கணநிரை யலற
அலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
சிலம்பி கோலிய வலங்கற் போர்வையின்

இலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்து
அவிரிழை தைஇ மின்னுமிழ் பிலங்கச்
சீர்மிகு முத்தந் தைஇய
நார்முடிச் சேரல்நின் போர்நிழற் புகன்றே.

39

துறை - வாகை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - ஏவல் வியன்பணை.

1064. போர்நிழற் புகன்ற சுற்றமொ டூர்முகத்து

இரூஅ லியரோ பெருமநின் தானை
இன்னிசை யிமிழ்முர சியம்பக் கடிப்பிகூஉப்
புண்தோ ளாடவர் போர்முகத் திறுப்பக்
காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்திறை கொண்டன்று தானை யந்திற்
களைநர் யாரினிப் பிறரெனப் பேணி
மன்னெயில் மறவ ரொலியவிந் தடங்க

ஒன்னார் தேயப் பூமலைந் துரைஇ
வெண்தோடு நிரைஇய வேந்துடை யருஞ்சமங்
கொன்றுபுறம் பெற்று மன்பதை நிரப்பி
வென்றி யாடிய தொடித்தோள் மீகை

எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்

சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்
புன்கா லுன்னஞ் சாயத் தெண்கண்
வறிதுகூட் டரிய விரவலர்த் தடுப்பத்
தான்தர வுண்ட னனைநறவு மகிழ்ந்து
நீரிமிழ் சிலம்பின் நேரி யோனே
செல்லா யோதில் சில்வளை விறலி
34



மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து
மெல்லியல் மகளி ரெழில்நலஞ் சிறப்பப்
பாணர் பைம்பூ மலைய இளையர்
இன்களி வழாஅ மென்சொ லமர்ந்து

நெஞ்சுமலி யுவகையர் வியன்களம் வாழ்த்தத்
தோட்டி நீவாது தொடிசேர்பு நின்று

பாக ரேவலி னெண்பொறி பிசிரக்
காடுதலைக் கொண்ட நாடுகா ணவிர்சுடர்
அழல்விடுபு மரீஇய மைந்தின்
தொழில்புகல் யானை நல்குவன் பலவே.

40

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நாடுகாணவிர்சுடர்.

### 1064-a. பதிகம்

ஆராத் திருவிற் சேர லாதற்கு
வேள் ஆவிக் கோமான்
பதுமன் தேவி யீன்ற மகன்முனை
பனிப்பப் பிறந்து பல்புகழ் வளர்த்து
ஊழி னாகிய வுயர்பெருஞ் சிறப்பிற்
பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச்செருவி னாற்றலை யறுத்தவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சர மீர்ப்பச்
செருப்பல செய்து செங்களம் வேட்டுத்
துளங்குகுடி திருத்திய வளம்படு வென்றிக்
களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக்

காப்பியாற்றுக் காப்பியனார்
பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம் : கமழ்குரற்றுழாய், கழையமல்கழனி, வரம்பில்வெள்ளம், ஒண்பொறிக்கழற்கால், மெய்யாடுபறந்தலை, வாண்மயங்குகடுங்

காரிகிழார்

531

தார், வலம்படுவென்றி, பரிசிலர்வெறுக்கை, ஏவல்வியன்பணை, நாடு காணவிர்சுடர். இவைபாட்டின் பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: நாற்பதுநூறாயிரம் பொன் ஒருங்கு கொடுத் துத் தான் ஆள்வதிற் பாகங்கொடுத்தான் அக்கோ.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற் றிருந்தான்.

## கசச. காமஞ்சேர்குளத்தார்

### 1065. குறுந்தொகை - 4. நெய்தல்

நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுதல் நோமென் னெஞ்சே.

பிரிவிடை யாற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## க௬௫. காரிகிழார்

### 1066. புறநானூறு - 6

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது, முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது
ஆனிலை யுலகத் தானும் ஆனாது
உருவும் புகழு மாகி விரிசீர்த்
தெரிகோல் ஞமன்ன் போல வொருதிறம்
பற்ற லியலியரோ நிற்றிறஞ் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி யடர்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதி னேவிப்

பாசவற் படப்பை யாரெயில் பலதந்து
அவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்து கையெதிரே
வாடுக இறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே
செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
ஆங்க, வென்றி யெல்லாம் வென்றகத்
தண்டா ஈகைத் தகைமாண் குடுமி

தடக்கிய

தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசை யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ,
பொருண்
மொழிக் காஞ்சியுமாம், வாழ்த்தியலுமாம்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்

பெருவழுதியைப்
பாடியது.

கசசு. காவெறிகடிகையார்

1067. குறுந்தொகை - 267. பாலை

இருங்கண் ஞாலத் தீண்டுபயப் பெருவளம்
ஒருங்குட னியைவ தாயினுங் கரும்பின்
காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன
வாலெயி றூறிய வசையில் தீநீர்க்
கோலமை குறுந்தொடிக் குறுமக ளொழிய
ஆள்வினை மருங்கிற் பிரியார் நாளும்

காவட்டனார் 533

உறல்முறை மரபிற் கூற்றத்து

அறனில் கோள்நற் கறிந்திசி னோரே.

'மேனின்றும் ஆடவர் பொருட்குப் பிரிந்தாராகலின் நாமும்
பொருட்குப் பிரிதும்' என்னும் நெஞ்சிற்கு நாளது சின்மையும்
இளமையது அருமையும் கூறிச் செலவு அழுங்கியது.

## கசஎ. காவட்டனார்

## 1068. அகநானூறு - 378. குறிஞ்சி

நிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பின்
வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள
வங்கூ ழாட்டிய அங்குழை வேங்கை
நன்பொ னன்ன நறுந்தா துதிரக்
காமர் பீலி யாய்மயிற் றோகை
வேறுவே றினத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற் றிளந்தகர்ப் பாடுவிறந் தயல
ஆடுகள வயிரி னினிய ஆலிப்
பசும்புற மென்சீ ரொசிய விசும்புகந்து
இருங்க ணாடமைத் தயங்க விருக்கும்
பெருங்கல் நாடன் பிரிந்த புலம்பும்
உடன்ற அன்னை யமரா நோக்கமும்
வடந்தை தூக்கும் வருபனி யற்சிரச்
சுடர்கெழு மண்டில மழுங்க ஞாயிறு
குடகடல் சேரும் படர்கூர் மாலையும்
அனைத்து மடூஉநின்று நலிய வுஞற்றி
யாங்கனம் வாழ்தி யென்றி தோழி

நீங்கா வஞ்சினஞ் செய்துநத் துறந்தோர்
உள்ளா ராயினு முளேனே யவர்நாட்டு
அள்ளிலைப் பலவின் கனிகவர் கைய
கல்லா மந்தி கடுவனோ டுகளுங்
கடுந்திற லணங்கின் நெடும்பெருங் குன்றத்துப்



பாடின் அருவி சூடி
வான்தோய் சிமையந் தோன்ற லானே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலை மகள் சொல்லியது.

## 1069. புறநானூறு - 359.

பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி
விளரூன் தின்ற வெம்புலால் மெய்யர்
களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
ஈம விளக்கின் வெருவரப் பேருங்
காடுமுன் னினரே நாடுகொண் டோரும்
நினக்கும் வருதல் வைக லற்றே
வசையும் நிற்கும் இசையும் நிற்கும்
அதனால், வசைநீக்கி யிசைவேண்டியும்
நசைவேண்டாது நன்றுமொழிந்தும்
நிலவுக்கோட்டுப் பலகளிற்றொடு
பொலம்படைய மாமயங்கிட
இழைகிளர் நெடுந்தே ரிரவலர்க் கருகாது
கொள்ளென விடுவை யாயின் வெள்ளென

ஆண்டுநீ பெயர்ந்த பின்னும்
ஈண்டுநீடு விளங்கும்நீ யெய்திய புகழே.

திணை - காஞ்சி ; துறை - பெருங்காஞ்சி.
அந்துவன் கீரனைப் பாடியது.

## கசஅ. காவற்பெண்டு

சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினும் அறியே னோரும்



புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

திணை - வாகை ; துறை - ஏறாண்முல்லை.

## கசகூ. காவன்முல்லைப்பூதனார்

### 1071. அகநானூறு - 21. பாலை

மனையிள நொச்சி மௌவல் வான்முகைத்
துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
அவ்வயிற் றகன்ற அல்குற் றைஇத்
தாழ்மென் கூந்தற் றடமென் பணைத்தோள்
மடந்தை மாணலம் பசப்பச் சேய்நாட்டுச்
செல்ல லென்றியான் சொல்லவு மொல்லாய்
வினைநயந் தமைந்தனை யாயின் மனைநகப்
பல்வேறு வெறுக்கை தருகம் வல்லே
எழுவினி வாழியெ னெஞ்சே புரியிணர்

மெல்லவி ழுஞ்சினை புலம்ப வல்லோன்
கோடறை கொம்பின் வீயுகத் தீண்டி

மராஅ மலைத்த மணவாய்த் தென்றல்
சுரஞ்செல் மள்ளர் சுரியற் றாற்றும்
என்றூழ் நின்ற புன்றலை வைப்பிற்
பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை
இருங்கல் விடரகத் தீன்றிளைப் பட்ட
மென்புனிற் றம்பிணவு பசித்தெனப் பைங்கட்
செந்நா யேற்றை கேழல் தாக்க
இரியற் பிணவல் தீண்டலிற் பரீஇச்
செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்

பரல்மட் சுவல முரணில முடைத்த
வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவலர்

ஊறு திட்ட வுவலைக் கூவல்

வெண்கோடு நயந்த வன்பில் கானவர்
இகழ்ந்தியங் கியவி னகழ்ந்த குழிசெத்து

இருங்களிற் றினநிரை தூர்க்கும்
பெருங்க லத்தம் விலங்கிய காடே.

பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.

## 1072. அகநானூறு - 151. பாலை

தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாம்நயந்து
இன்னமர் கேளிரொ டேமுறக் கெழீஇ
நகுத லாற்றார் நல்கூர்ந் தோரென
மிகுபொருள் நினையும் நெஞ்சமொ டருள்பிறிது
ஆபமன் வாழி தோழி கால்விரிபு
உறுவளி யெறிதொறுங் கலங்கிப் பொறிவரிக்

கலைமான் தலையின் முதன்முதற் கவர்த்த
கோடலங் கவட்ட குறுங்கா லுழுஞ்சிற்

ரு றுசினை விளைந்த நெற்றம் ஆடுமகள்
அரிக்கோற் பறையி னையென வொலிக்கும்
பதுக்கைத் தாய செதுக்கை நீழற்
கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்கு
உறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்
மணியோர்த் தன்ன தெண்குரற்
கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

## 1073. அகநானூறு - 241. பாலை

துனியின் றியைந்த துவரா நட்பின்
இனிய ரம்ம அவரென முனியாது
நல்குவர் நல்ல கூறினும் அல்கலும்
பிரியாக் காதலொ டுழைய ராகிய
நமர்மன் வாழி தோழி யுயர்மிசை
மூங்கி லிளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியலகம் வெம்ப மழைமறந்து
அருவி யான்ற வெருவரு நனந்தலைப்



பேஎய் வெண்டேர்ப் பெயல்செத் தோடித்

தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை
புலம்பெயர்ந் துறைதல் செல்லா தலங்குதலை
விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்
அத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
வட்டக் கழங்கிற் றாஅய்த் துய்த்தலைச்
செம்முக மந்தி யாடும்
நன்மர மருங்கின் மலையிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

**1074.** அகநானூறு - **293.** பாலை

இலையொழித் துலறிய புன்றலை யுலவை
வலைவலந் தனைய வாகப் பலவுடன்

சிலம்பி சூழ்ந்த புலங்கெடு வைப்பின்
துகிலாய் செய்கைப் பாவிரிந் தன்ன
வெயிலவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரிக்
குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி
மணிக்கா சன்ன மாநிற விருங்கனி
உகாஅ மென்சினை யுதிர்வன கழியும்
வேனில் வெஞ்சுரம் தமியர் தாமே
செல்ப வென்ப தோழி யாமே

பண்பில் கோவலர் தாய்பிரித் தியாத்த
நெஞ்சமர் குழவி போல நொந்துநொந்து
இன்னு மொழிது மென்ப
என்மயங் கினர்கொல்நங் காத லோரே.

பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் குறிப்பறிந்து தலை
மகள் தோழிக்குச் சொல்லியது. தலைமகனுற் பிரிவுணர்த்தப்பட்ட
தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

## 1075. அகநானூறு - 391. பாலை

பார்வல் வெருகின் கூரெயிற் றன்ன

வரிமென் முகைய நுண்கொடி யதிரல்

மல்ககல் வட்டியர் கொள்விடம் பெறுஅர்

விலைஞ ரொழித்த தலைவேய் கான்மலர்
தேம்பாய் முல்லையொடு ஞாங்கர்ப் போக்கித்
தண்ணறுங் கதுப்பிற் புணர்ந்தோர் புனைந்தவென்
பொதிமாண் முச்சி காண்டொறும் பண்டைப்
பழவணி யுள்ளப் படுமால் தோழி
இன்றொடு சின்னாள் வரினுஞ் சென்றுநனி
படாஅ வாகுமெங் கண்ணே கடாஅ
வான்மருப் பசைத்தல் செல்லாது யானைதன்
வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை
குன்றுபுகு பாம்பிற் றோன்றும்
என்றூழ் வைப்பிற் சுரனிறந் தோரே.

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1076.** குறுந்தொகை - **104.** பாலை

அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்திற் றண்சித றுறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்

பிரியு நாளும் பலவா குபவே.

பிரிவின்கண் ஆற்ருளாகிய தலைமகள் தோழிக்குக் கூறியது; சிறிய உள்ளிப் பெரிய மறக்க வேண்டாவோ என்ற தோழிக்குக் கிழத்தி கூறியதூஉமாம்.

## 1077. குறுந்தொகை - 211. பாலை

அஞ்சி லோதி யாய்வளை நெகிழ
நொந்துநம் அருளார் நீத்தோர்க் கஞ்சல்
எஞ்சினம் வாழி தோழி யெஞ்சாது
தீய்ந்த மராஅத் தோங்கல் வெஞ்சினை
வேனி லோரிணர் தேனோ டூதி

காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்

539

ஆராது பெயருந் தும்பி
நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே.

இடைச்சுரத்துக் கவலுவனகண்டு நம்மை ஆற்ருரென நினைந்து மீள்வர்கொல் எனக் கவன்ற கிழத்திக்குத் தோழி சொல்லியது.

## 1078. நற்றிணை - 274, பாலை

நெடுவான் மின்னிக் குறுந்துளி தலைஇப்

படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து
உழைபடு மான்பிணை தீண்டலி னிழைமகள்
பொன்செய் காசி னொண்பழந் தாஅம்
குமிழ்தலை மயங்கிய குறும்ப லத்தம்
எம்மொடு வருதியோ பொம்ம லோதியெனக்
கூறின்று முடையரோ மற்றே வேறுபட்டு
இரும்புலி வழங்குஞ் சோலைப்
பெருங்கல் வைப்பிற் சுரனிறந் தோரே.

தோழி பருவமாறுபட்டது.

## கரு௦. காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்

### 1079. குறுந்தொகை - 342. குறிஞ்சி

கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழங்
காவல் மறந்த கானவன் ஞாங்கர்க்
கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டுங்
குன்ற நாட தகுமோ பைஞ்சுனைக்
குவளைத் தண்டழை யிவளீண்டு வருந்த
நயந்தோர் புன்கண் தீர்க்கும்
பயந்தலைப் படாஅப் பண்பினை யெனினே.

செறிப்பறிவுறுக்கப்பட்டான் வரைவின்கட் செல்லாது பின்னும் வரவு வேண்டின தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லி

வரைவுகடாயது.

௩௫௧. காவிரிப்பூம்பட்டினத்துக்

காரிக்கண்ணனார்

1080. அகநானூறு - 107. பாலை

நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்து
அன்பின் நெஞ்சத் தயாஅப்பொறை மெலிந்த
என்னகத் திடும்பை களைமார் நின்னொடு
கருங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்று
இரும்புலி துறந்த ஏற்றுமா னுணங்கல்
நெறிசெல் வம்பல ருவந்தன ராங்கண்
ஒலிகழை நெல்லி னரிசியொ டோராங்கு
ஆனிலைப் பள்ளி யளைபெய் தட்ட
வானிண முருக்கிய வாஅல் வெண்சோறு
புகரரைத் தேக்கின் அகலிலை மாந்துங்
கல்லா நீள்மொழிக் கதநாய் வடுகர்
வல்லா ணருமுனை நீந்தி யல்லாந்து
உகுமணூ றஞ்சு மொருகாற் பட்டத்து
இன்னா வேற்றத் திழுக்கி முடங்கூர்ந்து
ஒருதனித் தொழிந்த வுரனுடை நோன்பகடு
அங்குழை யிருப்பை யறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறாஅர் வில்லி னீக்கி
மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்
மாலை யின்றுணை யாகிக் காலைப்
பசுநனை நறுவீப் பரூஉப்பர லுறைப்ப
மணமனை கமழுங் கானந்
துணையீ ரோதியென் தோழியும் வருமே.

தோழி தலைமகள் குறிப்பறிந்துவந்து தலைமகற்குச் சொல்லியது.

**1081.** அகநானூறு - **123.** பாலை

உண்ணு மையி னுயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத் தான்றோர் போல
வரைசெறி சிறுநெறி நிரையுடன் செல்லுங்

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

**541**

கான யானை கவினழி குன்றம்
இறந்துபொருள் தருதலு மாற்றாய் சிறந்த
சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி
ஒழியின் வறுமை யஞ்சுதி யளித்தக
வுடைமதி வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவே லெஃகிலை யிமைக்கும்

மழைமருள் பல்தோல் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடல்மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
ஒன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.

தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1082.** அகநானூறு - **285.**

ஒழியச் சென்மார் செல்ப வென்றநாம்
அழிபட ருழக்கு மவல நெஞ்சத்து
எவ்வ மிகந்துசே ணகல வையெயிற்று
ஊனசைப் பிணவி னுறுபசி களைஇயர்
காடுதேர் மடப்பிணை யலறக் கலையின்
ஓடுகுறங் கறுத்த செந்நா யேற்றை
வெயில்புலந் திளைக்கும் வெம்மைய பயில்வரி
இரும்புலி வேங்கை கருங்கோ லன்ன
கல்லெடுத் தெறிந்த பல்கிழி யுடுக்கை
உலறுகுடை வம்பல ருயர்மர மேறி
ஏறுவேட் டெழுந்த இனந்தீ ரெருவை
ஆடுசெவி நோக்கு மத்தம் பணைத்தோட்
குவளை யுண்க ணிவளும் நம்மொடு
வரூஉ மென்றனரே காதலர்
வாராய் தோழி முயங்குகம் பலவே.

உடன்போக்குடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொல்லியது.



## 1083. குறுந்தொகை - 297. குறிஞ்சி

அவ்விளிம் புரீஇய கொடுஞ்சிலை மறவர்
வைவார் வாளி விறற்பகை பேணார்
மாறுநின் றெதிர்ந்த வாறுசெல் வம்பலர்
உவலிடு பதுக்கை யூரிற் றோன்றுங்
கல்லுயர் நனந்தலை நல்ல கூறிப்
புணர்ந்துடன் போதல் பொருளென
உணர்ந்தேன் மன்றவவ ருணரா வூங்கே.

*தோழி வரைவு மலிந்தது.*

## **1084.** நற்றிணை - **237.** பாலை

நனிமிகப் பசந்து தோளுஞ் சாஅய்ப்
பனிமலி கண்ணும் பண்டு போலா
இன்னுயி ரன்ன பிரிவருங் காதலர்
நீத்து நீடின ரென்னும் புலவி
உட்கொண் டூடின்று மிலையோ மடந்தை
உவக்காண் தோன்றுவ வோங்கி வியப்புடை
இரவலர் வரூஉ மளவை யண்டிரன்
புரவெதிர்ந்து தொகுத்த யானை போல
உலக முவப்ப வோதரும்
வேறுபல் லுருவி னேர்தரு மழையே.

*தோழி உரைமாறுபட்டது.*

## **1085.** புறநானூறு - **57.**

வல்லா ராயினும் வல்லுந ராயினும்

புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன
உரைசால் சிறப்பிற் புகழ்சால் மாற
நின்னொன்று கூறுவ துடையேன் என்னெனின்
நீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியும் நைக்க

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

543

மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு
ஒன்னார்ச் செகுப்பினுஞ் செருக்க
நெடுவேல் கடிமரந் தடித லோம்புநின்

என்னதூஉங்

நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.
பாண்டியன் இலவந்திகைத்துஞ்சிய நன்மாறனைப் பாடியது.

## 1086. புறநானூறு - 58.

நீயே, தண்புனற் காவிரிக் கிழவனை யிவனே
முழுமுதல் தொலைந்த கோளி யாலத்துக்
கொழுநிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது

நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ
இளைய தாயினுங் கிளையரா வெறியும்
அருநரை யுருமிற் பொருநரைப் பொறாஅச்
செருமாண் பஞ்சவ ரேறே நீயே
அறந்துஞ் சுறந்தைப் பொருநனை யிவனே
நெல்லும் நீரு மெல்லார்க்கு மெளியவென
வரைய சாந்தமுந் திரைய முத்தமும்
இமிழ்குரல் முரச மூன்றுட னாளுந்
தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே
பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்று
இருபெருந் தெய்வமு முடனின் றாஅங்கு
உருகெழு தோற்றமொ டுட்குவர விளங்கி
இன்னீ ராகலி னினியவு முளவோ
இன்னுங் கேண்மினும் இசைவா ழியவே
ஒருவீ ரொருவீர்க் காற்றுதி ரிருவீரும்
உடனிலை திரியீ ராயி னிமிழ்திரைப்
பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலங்
கையகப் படுவது பொய்யா காதே

அதனால், நல்ல போலவும் நயவ போலவுந் 544



தொல்லோர் சென்ற நெறிய போலவுங்
காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது

இன்றே போல்கநும் புணர்ச்சி
வென்றுவென்று
அடுகளத் துயர்கநும் வேலே கொடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண்விளங்கு
தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே.

திணை - பாடாண்டிணை ; துறை - உடனிலை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைப் பாடியது.

## 1087. புறநானூறு - 169.

நும்படை செல்லுங் காலை யவர்படை
எடுத்தெறி தானை முன்னரை யெனாஅ
அவர்படை வரூஉங் காலை நும்படைக்
கூழைதாங்கிய வகல்யாற்றுக்
குன்றுவிலங்கு சிறையி னின்றனை யெனாஅ
அரிதாற் பெருமநின் செவ்வி யென்றும்
பெரிதா லத்தையென் கடும்பின திடும்பை
இன்னே விடுமதி பரிசில் வென்வேல்

இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலின ரெறிந்த வகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்

பொருநர்க் குலையாநின் வலன்வா ழியவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
பிட்டங்கொற்றனைப் பாடியது.

## 1088. புறநானூறு - 171.

இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னும்

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர்

545

முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கலம் நிறைப்போன்

தான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப
அருந்தொழில் முடியரோ திருந்துவேற் கொற்றன்
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்
அருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
பிறர்க்கு மன்ன அறத்தகை யன்னே
அன்ன னாகலி னெந்தை யுள்ளடி
முள்ளும் நோவ வுறாற்க தில்ல
ஈவோ ரரியவிவ் வுலகத்து
வாழ்வோர் வாழவவன் தாள்வா ழியவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
பிட்டங்கொற்றனைப் பாடியது.

## 1089. புறநானூறு - 353.

ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்கா சணிந்த அல்குல்
ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇத்
தருமமொ டியல்வோள் சாயல் நோக்கித் தவிர்த்த
தேரை விளர்த்த கண்ணே
வினவ லானா வெல்போ ரண்ணல்
யார்மக ளென்போய் கூறக் கேளினிக்
குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு
நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை
வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத்

தொல்குடி மன்னன் மகளே முன்னுட் கூறி வந்த
மாமுது வேந்தர்க்கு

...          ...          ...

...யுழக்கிக் குருதி யோட்டிக்



கதுவாய் போகிய துதிவா யெஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ணர்
அஞ்சுதக வுடையரிவள் தன்னை மாரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## கநிஉ. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

### 1090. அகநானூறு - 103. பாலை

நிழலறு கனந்தலை யெழிலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்
விதிர்த்த போலு மந்நுண் பல்பொறிக்
காமர் சேவ லேமஞ் சேப்ப
முளியரில் புலம்பப் போகி முனூஅது
முரம்படைந் திருந்த மூரி மன்றத்து
அதர்பார்த் தல்கு மாகெழு சிறுகுடி
உறையுநர் போகிய வோங்குநிலை வியன்மனை
இறைநிழ லொருசிறைப் புலம்பயா வுயிர்க்கும்

வெம்முனை யருஞ்சுர நீந்தித் தம்வயின்
ஈண்டுவினை மருங்கின் மீண்டோர் மன்னென
நள்ளென் யாமத் துயவுத்துணை யாக
நம்மொடு பசலை தோன்றுக தம்மொடு
தானே சென்ற நலனும்
நல்கார் கொல்லோநாம் நயந்திசி னோரே.

*தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொற்றது*

.

## 1091. அகநானூறு - 271. பாலை

பொறிவரிப் புறவின் செங்காற் சேவல் சிறுபுன்
பெடையொடு சேட்புலம் போகி அரிமண வியவிற்
பரல்தேர்ந் துண்டு
வரிமரல் வாடிய வானீங்கு நனந்தலைக்

காவிரிப்பூம்பட்டினத்துச்
சேங்கண்ணனார் 547

குறும்பொறை மருங்கிற் கோட்சுரம் நீந்தி
நெடுஞ்சேண் வ்ந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்
பல்கா யஞ்சினை யகவு மத்தம்

சென்றுநீ ரவணி ராகி நின்றுதரு
நிலையரும் பொருட்பிணி நினைந்தனி ரெனினே
வல்வ தாகநுஞ் செய்வினை யிவட்கே
களிமலி கள்ளி னற்றே ரவியன்
ஆடிய விளமழை சூடித் தோன்றும்
பழந்தூங்கு விடரகத் தெழுந்த
கண்ணிடை புரைய நெடுமென்
காம்பின்
பணைத்தோட்
டிருந்துகோ லாய்தொடி ஞெகிழின்
மருந்து முண்டோ பிரிந்துறை நாட்டே.

செலவுணர்த்தியதோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.

## 1092. நற்றிணை - 389. குறிஞ்சி

வேங்கை யும்புலி யீன்றன அருவியும்
தேம்படு நெடுவரை மணியின் மானும்
அன்னையு மமர்ந்துநோக் கினளே என்னையும்
களிற்றுமுகந் திறந்த கல்லா விழுத்தொடை
ஏவ லிளையரொடு மாவழிப் பட்டெனச்
சிறுகிளி முரணிய பெருங்குர லேனல்
காவலின் நீயென் றோளே சேவலொடு

சிலம்பிற் போகிய சிதர்கால் வாரணம்
முதைச்சுவற் கிளைத்த பூழி மிகப்பல
நன்பொ னிமைக்கு நாடனொடு
அன்புறு காம மமைந்தனந் தொடர்பே.

பகற்குறிவந் தொழுகாநின்ற காலத்துத் தலைமகன் கேட்பச் சொல்லியது.

## க௫௩. காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணன்

### 1093. குறுந்தொகை - 347. பாலை

மல்குசுனை யுலர்ந்த நல்கூர் சுரமுதற்
குமரி வாகைக் கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்
கான நீளிடைத் தானும் நம்மொடு
ஒன்றுமணஞ் செய்தன ளிவளெனின்
நன்றே நெஞ்சம் நயந்தநின் துணிவே.

பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவு வழுங்கியது.

## க௫௪. காவிரிப்பூம்பட்டினத்துப்

பொன்வாணிகனார் மகனார்
நப்பூதனார்

**1094.** பத்துப்பாட்டு - **5**-வது
முல்லைப்பாட்டு

நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுய ரலமரல் நோக்கி யாய்மகள்
நடுங்குசுவ லசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர

காவிரிப்பூம்பட்டினத்து...நப்பூதனார்

இன்னே வருகுவர் தாய ரென்போள்
நன்னர் நன்மொழி கேட்டன மதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்

முனைகவர்ந்து கொண்ட திறையர்
வருதல் தலைவர் வாய்வது நீநின்

வினைமுடித்து

பருவர லெவ்வங் களைமா யோயெனக்
காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து
பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்பக்
கான்யாறு தழீஇய அகனெடும் புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
இடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி
உவலைக் கூரை யொழுகிய தெருவிற்
கவலை முற்றங் காவல் நின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணாது நுதல்துடைத்து
அயில்நுனை மருப்பிற்றங் கையிடைக் கொண்டெனக்

கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா இளைஞர் கவளங் கைப்பக்
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்

முக்கோ லசைநிலை கடுப்ப நற்போர்
ஓடா வல்விற் றூணி நாற்றிக்
கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவி லரணம் அரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண் வேறோர்
நெடுங்காழ்க் கண்டங் கோலி யகம்நேர்பு

குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து
இரவுபகற் செய்யுக் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்

நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்



கையமை விளக்கம் நந்துதொறு மாட்ட
நெடுநா வொண்மணி நிழத்திய நடுநாள்
அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்

துகில்முடித்துப் போர்த்த தூங்க
லோங்குநடைப்
பெருமூ தாள ரேமஞ் சூழப்
பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்

தொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி
எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப
மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்
திருமணி விளக்கங் காட்டித் திண்ஞாண்
எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்
உடம்பி னுரைக்கு முரையா நாவின்
படம்புகு மிலேச்ச ருழைய ராக
மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது
எடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோல்துமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்து

உண்ணா துயங்கு மாசிந் தித்தும்
ஒருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொள் நோன்விரல்
நகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
அரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை
இன்றுயில் வதியுநற் காணாள் துயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு

காவிரிப்பூம்பட்டினத்து...நப்பூதனர்

551

நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியும்
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்தும்
ஏவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து
பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல
இடஞ்சிறந் துயரிய எழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
இன்ப லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோள்

அஞ்செவி நிறைய ஆலின வென்றுபிறர்
வேண்டுபுலங் கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி யுயரி வலனேர்பு
வயிரும் வளையு மார்ப்ப அயிர
செறியிலைக் காயா அஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கானம் நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
றிரிமருப் பிரலையொடு மடமா னுகள
எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

**1094-a.** வண்டடைந்த கண்ணி வளராய்ச்சி வாணெடுங்கண்
சென்றடைந்த நோக்க மினிப்பெறுவ —தென்றுகொல்
கன்றெடுத் தோச்சிக் கனிவிளவின் காயுகுத்துக்
குன்றெடுத்து நின்ற நிலை.

1094-b. புனையும் பொலம்படைப் பொங்குளைமான்
திண்டேர் துனையுந் துனைபடைத் துன்னார்—முனையுள்
அடல்முகந்த தானை யவர்வாரா முன்னம்
கடல்முகந்து வந்தன்று கார்.

௧௫௫. கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார்

1095. நற்றிணை - 218. நெய்தல்

ஞாயிறு ஞான்று கதிர்மழுங் கின்றே
எல்லியும், பூவீ கொடியிற் புலம்படைந் தன்றே
வாவலும் வயின்றொறும் பறக்குஞ் சேவலும்
நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்
மாயாக் காதலொ டதர்ப்படத் தெளித்தோர்
கூறிய பருவங் கழிந்தன்று பாரிய
பராரை வேம்பின் படுசினை யிருந்த
குராஅற் கூகையு மிராஅ விசைக்கும்
ஆனா நோயட வருந்தி யின்னும்
தமியேன் கேட்குவென் கொல்லோ
பரியரைப் பெண்ணை யன்றிற் குரலே.

வரைவிடை மெலிந்த தலைமகள் வன்புறை எதிர்மொழிந் தது.

### ௧௬௫. கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்

**1096.** நற்றிணை - **364.** முல்லை

சொல்லிய பருவங் கழிந்தன் றெல்லையும்
மயங்கிருள் நடுநாள் மங்குலோ டொன்றி
ஆர்கலி வானம் நீர்பொதிந் தியங்கப்
பனியின் வாடையொடு முனிவுவந் திறுப்ப
இன்ன சின்னாட் கழியிற் பன்னாள்
வாழலேன் வாழி தோழி யூழின்
உருமிசை யறியாச் சிறுசெந் நாவின்
ஈர்மணி யின்குர லூர்நனி யியம்பப்
பல்லா தந்த கல்லாக் கோவலர்
கொன்றையந் தீங்குழல் மன்றுதோ றியம்ப
உயிர்செலத் துனைதரு மாலை
செயிர்தீர் மாரியொ டொருங்குதலை வரினே.

தலைமகள் பிரிவிடை மெலிந்தது.

### ௧௬௭. கிடங்கில் குலபதி நக்கண்ணனார்

**1097.** குறுந்தொகை - **252.** குறிஞ்சி

நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த
கொடிய னாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை யின்முகந் திரியாது
கடவுட் கற்பி னவனெதிர் பேணி
மடவை மன்ற நீயெனக் கடவுபு
துனியல் வாழி தோழி சான்றோர்
புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ காணுங் காலே.

தலைமகன் வரவறிந்த தோழி 'அவர் நம்மை வலிந்து போயினார்க்கு எம்பெருமாட்டி நீயனகடிந்து நன்காற்றினாய்' என்றாட்குக் கிழத்தி உரைத்தது.

### ௧௫௮. கிள்ளிமங்கலங்கிழார்

### 1098. குறுந்தொகை - 76. குறிஞ்சி

காந்தள் வேலி யோங்குமலை நன்னாட்டுச்
செல்வ வென்பவோ கல்வரை மார்பர்
சிலம்பிற் சேம்பி னலங்கல் வள்ளிலை
பெருங்களிற்றுச் செவியின் மானத் தைஇத்
தண்வரல் வாடை தூக்கும்
கடும்பனி யற்சிர நடுங்கஞ ருறவே.

பிரிவுணர்த்தச்சென்ற தோழிக்கு அவர் பிரிவுமுன்னர் உணர்ந்த தலைமகள் சொல்லியது.

### 1099. குறுந்தொகை - 110. முல்லை

வாரா ராயினும் வரினு மவர்நமக்கு
யாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல

பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்முள் ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த



வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்று
இன்னா வெறிதரும் வாடையொடு
என்னா யினள்கொ லென்னு தோரே.

பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது. தலைமகனைக் கொடுமைகூறித் தலைமகளைத் தோழி வற்புறீஇயதூஉமாம்.

1100. குறுந்தொகை - 152. குறிஞ்சி

யாவது மறிகிலர் கழறு வோரே
தாயில் முட்டை போல வுட்கிடந்து
சாயி னல்லது பிறிதெவ னுடைத்தே
யாமைப் பார்ப்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே.

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகள் நீ

ஆற்றுகின்

றிலையென்று நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.

**1101.** குறுந்தொகை - **181.** மருதம்

இதுமற் றெவனோ தோழி துனியிடை
இன்ன ரென்னு மின்னாக் கிளவி
இருமருப் பெருமை யீன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியி னகலாது
பாஅற் பைம்பயி ராரு மூரன்
திருமனைப் பல்கடம் பூண்ட
பெருமுது பெண்டிரே மாகிய நமக்கே.

தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள்

ஆற்றல்வேண்டித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் இயற்பட

மொழிந்தது.

கருக. கிள்ளிமங்கலங் கிழார்மகனார்

சேரகோவனார்

**1102.** நற்றிணை - **365.** குறிஞ்சி

அருங்கடி யன்னை காவல் நீவிப்
பெருங்கடை யிறந்து மன்றம் போகிப்

பகலே பலருங் காண வாய்விட்டு
அகல்வயற் படப்பை யவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி பன்னாட்
கருவி வானம் பெய்யா தாயினும்

அருவி யார்க்கு மயந்திகழ் சிலம்பின்
வான்தோய் மாமலைக் கிழவனைச்
சான்றோ யல்லை யென்றனம் வரற்கே.

தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்கு உரைப்பாளாய் இயற்பழித்து இன்னாது செய்து மென்பாளாய்ச் சொல்லியது.

## கசுo. கீரங்கீரனார்

### 1103. நற்றிணை - 78. நெய்தல்

கோட்சுறா வழங்கும் வாட்கே ழிருங்கழி
மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்
பொன்னேர் நுண்தாது புன்னை தூஉம்
வீழ்தாட் டாழைப் பூக்கமழ் கானற்
படர்வந்து நலியுஞ் சுடர்செல் மாலை
நோய்மலி பருவரல் நாமிவ ணுய்கம்
கேட்டிசின் வாழி தோழி தெண்கழி

வள்வா யாழி யுள்வாய்த் தோயினும்
புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா
வலவன் கோ லுற வறியா
உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே.

வரைவு மலிந்தது.

## கசுக. கீரந்தையார்

### 1104. பரிபாடல் - 2.

தொன்முறை யியற்கையின் மதியொ...
... ...மரபிற் றாகப்
பசும்பொ னுலகமு மண்ணும் பாழ்பட



விசும்பி னூழி யூழூழ் செல்லக்
கருவளர் வானத் திசையிற் றோன்றி
உருவறி வாரா வொன்ற னூழியும்
முந்துவளி கிளர்ந்த வூழூ ழூழியும்
செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய வூழியு மவையிற்று
உண்முறை வெள்ள மூழ்கி யார்தருபு
மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கும்
உள்ளீ டாகிய விருநிலத் தூழியும்
நெய்தலுங் குவளையு மாம்பலுஞ் சங்கமும்

மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டங் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி யொருவினை யுணர்த்தலின் முதுமைக்கு
ஊழி யாவரு முணரா
ஆழி முதல்வநிற் பேணுதுந் தொழுது;
நீயே, வளையொடு புரையும் வாலி யோற்கவன்
இளைய னென்போர்க் கிளையை யாதலும்
புதையிரு ளுடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு
முதியை யென்போர்க்கு முதுமை தோன்றலும்
வடுவில் கொள்கையி னுயர்ந்தோ ராய்ந்த
கெடுவில் கேள்வியுள் நடுவா குதலும்
இந்நிலைத் தெரிபொருள் தேரி னிந்நிலை
நின்னிலைத் தோன்றுநின் தொன்னிலைச் சிறப்பே
ஓங்குயர் வானின் வாங்குவிற் புரையும்
பூணணி கவைஇய வாரணி நித்திலம்
நித்தில மதாணி யத்தகு மதிமறுச்
செய்யோள் சேர்ந்தநின் மாசி லகலம்
வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்
வைவான் மருப்பிற் களிறு மணனயர்பு
புள்ளி நிலனும் புரைபட லரிதென
உள்ளுந ருரைப்போ ருரையொடு சிறந்தன்று
ஓடியா வுள்ளமொ டுருத்தொருங் குடனியைந்து

இடியெதிர் கழறுங் காலுறழ் பெழுந்தவர்
கொடியறு பிறுபு செவிசெவிடு படுபு
முடிக ளதிரப் படிநிலை தளர
நனிமுரல்வளை முடியழிபிழிபு
தலையிறுபு தாரொடு புரள

நிலைதொலைபு வேர்தூர்மடல்
குருகு பறியா நீளிரும் பனைமிசைப்
பலபதி னாயிரங் குலைதரை யுதிர்வபோல்
நில்லா தொருமுறை கொய்பு கூடி
ஒருங்குருண்டுபிளந்து நெரிந்துருள்புசிதறுபு
அளறுசொரிபு நிலஞ்சேரச்
சேரா ரின்னுயிர் செகுக்கும்
போரடு குருசில்நீ யேந்திய படையே
ஒன்னா ருடங்குண் ணுங் கூற்ற முடலே
பொன்னேர் பவிரழல் நுடக்கத னிறனே
நின்னது திகழொளி சிறப்பிருள் திருமணி
கண்ணே, புகழ்சால் தாமரை யலரிணைப் பிணையல்
வாய்மை வயங்கிய வைகல் சிறந்த
நோன்மை நாடி னிருநிலம் யாவர்க்கும்
சாயல் நினது வானிறை யென்னும்

நாவ லந்தண ரருமறைப் பொருளே
அவ்வும் பிறவு மொத்தனை யுவ்வும்
எவ்வயி னோயு நீயே
செவ்வா யுவணத் துயர்கொடி யோயே

கேள்வியுட் கிளந்த ஆசா னுரையும்
படிநிலை வேள்வியுட் பற்றியாடு கொளலும்
புகழியைந் திசைமறை யுறுகனல் முறைமூட்டித்
திகழொளி யொண்சுடர் வளப்பாடு கொளலும்
நின்னுரு புடனுண்டி
பிறருடம் படுவாரா
நின்னொடு புரைய
அந்தணர் காணும் வரவு
வாயடை யமிர்தம்நின் மனத்தகத் தடைத்தர



மூவா மரபு மோவா நோன்மையும்
சாவா மரபி னமரர்க்காச் சென்றநின்
... ...மரபினோய் நின்னடி
தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்

கலியி னெஞ்சினே மேத்தினேம் வாழ்த்தினேம்
கடும்பொடுங் கடும்பொடும் பரவுதும்
கொடும்பா டறியற்க எம்மறி வெனவே.

கடவுள் வாழ்த்து. நன்னாகனார் இசை. பண்ணுப் பாலையாழ்.

## கசாஉ. குடபுலவியனார்

## 1105. புறநானூறு - 18.

முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
ஒருதா மாகிய வுரவோ ரும்பல்
ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னாயுள் தானே
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉ மினவாளை
நுண்ணாரற் பருவராற்
குரூஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண்மதில்
மல்லல்மூதூர் வயவேந்தே
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
தகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே

குடபுலவியனார்

நீரும் நிலனும் புணரியோ ரீண்டு
உடம்பு முயிரும் படைத்திசி னோரே
வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி யாளும்
இறைவன் தாட்குத வாதே யதனால்
அடுபோர்ச் செழிய இகழாது வல்லே
நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவண்தட் டோரே
தள்ளா தோரிவண் தள்ளா தோரே.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி.
பாண்டியன் நெடுஞ் செழியனைப் பாடியது.

## 1106. புறநானூறு - 19.

இமிழ்கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து
மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய
இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய
பெருங்கல் லடாரும் போன்மென விரும்பி
முயங்கினே னல்லனோ யானே மயங்கிக்
குன்றத் திறுத்த குரீஇயினம் போல
அம்புசென் றிறுத்த அரும்புண் யானைத்
தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து
நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள
எறிந்துகளம் படுத்த வேந்துவாள் வலத்தர்

எந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வர்
இன்ன விறலு முளகொல் நமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்
கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை
எழுவர் நல்வலங் கடந்தோய்நின்

கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே.

திணை - வாகை; துறை - அரசவாகை.
பாண்டியன் நெடுஞ் செழியனைப் பாடியது.

## ௧௬௩. குடவாயிற் கீரத்தனார்

### **1107.** அகநானூறு - **44.** பாலை

வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவரும்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே
முரண்செறிந் திருந்த தானை யிரண்டும்
ஒன்றென அறைந்தன பணையே நின்தேர்
முன்னியங் கூர்தி பின்னிலை யீயாது
ஊர்க பாக வொருவினை கழிய
நன்ன னேற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி

பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்கு
அன்றவர் குழீஇய வளப்பருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனா னாகித் திண்டேர்க்
கணைய னகப்படக் கழுமலந் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி
அழும்பி லன்ன அறாஅ யாணர்ப்
பழம்பன் னெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகய மண்டிய பசுமிளைத்
தண்குட வாயி லன்னோள்
பண்புடை யாகத் தின்றுயில் பெறவே.

வினைமுற்றிமீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச்
சொல்லியது.

**1108.** அகநானூறு - **60.** நெய்தல்

பெருங்கடற் பரப்பிற் சேயிறா நடுங்கக்
கொடுந்தொழில் முகந்த செங்கோ லவ்வலை
நெடுந்திமிற் றொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண்டேர்ப் பொறையன் தொண்டி யன்னவெம்

ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய
ஊதை யீட்டிய வுயர்மண லடைகரைக்
கோதை யாயமொடு வண்டல் தைஇ
ஓரை யாடினும் உயங்கும்நின் னொளியெனக்
கொன்னுஞ் சிவப்போள் காணின் வென்வேற்
கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினுஞ் செறிய
அருங்கடிப் படுக்குவ ளறனில் யாயே.

தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

**1109. அகநானூறு - 79. பாலை**

தோட்பத னமைத்த கருங்கை யாடவர்
கனைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து
கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவிற்
பாருடை மருங்கி னூறல் மண்டிய
வன்புலந் துமியப் போகிக் கொங்கர்
படுமணி யாயம் நீர்க்குநிமிர்ந்து செல்லுஞ்
சேதா எடுத்த செந்நிலக் குரூஉத்துகள்
அகலிரு விசும்பி னூன்றித் தோன்றும்
நனந்தலை யழுவம் நம்மொடு துணைப்ப
வல்லாங்கு வருது மென்னா தல்குவர
வருந்தினை வாழியென் னெஞ்சே யிருஞ்சிறை
வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை

ஆடுதொறு கனையு மவ்வாய்க் கடுந்துடிக்
கொடுவி லெயினர் கோட்சுரம் படர
நெடுவிளி பயிற்றும் நிரம்பா நீளிடைக்
கல்பிறங் கத்தம் போகி
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்த நீயே.

பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.





## **1110.** அகநானூறு - **119.** பாலை

நுதலுந் தோளுந் திதலை யல்குலும்
வண்ணமும் வனப்பும் வரியும் வாட
வருந்துவ ளிவளெனத் திருந்துபு நோக்கி
வரைவுநன் றென்னா தகலினு மவர்வறிது
ஆறுசெல் மாக்க ளறுத்த பிரண்டை
ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப
நெறியயற் றிரங்கு மத்தம் வெறிகொள
உமண்சாத் திறந்த வொழிக லடுப்பின்
நோன்சிலை மழவ ரூன்புழுக் கயருஞ்
சுரன்வழக் கற்ற தென்னா துரஞ்சிறந்து
நெய்த லுருவி னிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு
தணியம ரழுவந் தம்மொடு துணைப்பத்
துணிகுவர் கொல்லோ தாமே துணிகொள
மறப்புலி யுழந்த வசிபடு சென்னி
உறுநோய் வருத்தமொ டுணீஇய மண்டிப்
படிமுழ மூன்றிய நெடுநல் யானை
கைதோய்த் துயிர்க்கும் வறுஞ்சுனை
மைதோய் சிமைய மலைமுத லாறே.

செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொற்றது. தோழி தலைமகட்குச் சொற்றதூஉமாம்.

**1111.** அகநானூறு - **129.** பாலை

உள்ளல் வேண்டு மொழிந்த பின்னென
நள்ளென் கங்குல் கடுங்குதுணை யாயவர்

நின்மறந் துறைதல் யாவது புல்மறைந்து
அலங்கல் வான்கழை யுதிர்நெல் நோக்கிக்
கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண்
கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பைத்

குடவாயிற் கீரத்தனார்

563

தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்
பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப்
போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்
நல்கூர் பெண்டி ரல்குற் கூட்டுங்
கலங்குழைச் சீறூர் கைதலை வைப்பக்
கொழுப்பா தின்ற கூர்ம்படை மழவர்
செருப்புடை யடியர் தெண்சுனை மண்டும்
அருஞ்சுர மரிய வல்ல வார்கோற்
றிருந்திழைப் பணைத்தோட் டேஎறு கதுப்பிற்
குவளை யுண்க ணிவளொடு செலற்கென
நெஞ்சுவா யவிழ்ந்தனர் காதலர்
அஞ்சி லோதி யாயிழை நமக்கே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

**1112.** அகநானூறு - **287.** பாலை

தொடியணி முன்கைத் தொகுவிரற் குவைஇப்
படிவ நெஞ்சமொடு பகல்துணை யாக

நோங்கொ லளியள் தானே தூங்குநிலை
மரையேறு சொறிந்த மாத்தாட் சந்தின்
சுரையிவர் பொதியி லங்குடிச் சீறூர்
நாட்பலி மறந்த நரைக்க ணிட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரியரை யாலத்து
ஒருதனி நெடுவீ ழுதைத்த கோடை
துணைப்புறா இரிக்குந் தூய்மழை நனந்தலைக்
கணைக்கா லம்பிணை யேறுபுறம் நக்க
ஒல்குநிலை யாஅத் தோங்குசினை பயந்த
அல்குறு வரிநிழ லசையின நோக்க
வரம்புவந் தலைக்கு மாலை
நிரம்பா நீளிடை வருந்துதும் யாமே.

பிரிந்துபோகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துநின்று தன் நெஞ்சிற்குச் சொல்லியது.



## 1113. அகநானூறு - 305. பாலை

கூழையுங் குறுநெறிக் கொண்டன முலையுஞ்
சூழி மென்முகஞ் செப்புட னெதிரின
பெண்துணை சான்றன ளிவளெனப் பன்மாண்
கண்துணை யாக நோக்கி நெருநையும்
அயிர்த்தன்று மன்னே நெஞ்சம் பெயர்த்தும்
அறியா மையிற் செறியேன் யானே
பெரும்பெயர் வழுதி கூட லன்னதன்
அருங்கடி வியனகர்ச் சிலம்புங் கழியாள்
சேணுறச் சென்று வறுஞ்சுனைக் கொல்கிப்
புறவுக்குயின் றுண்ட புன்காய் நெல்லிக்
கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய்
அறுநாற் பளிங்கின் துளைக்காசு கடுப்ப
வறுநிலத் ததிரு மத்தங் கதுமெனக்
கூர்வேல் விடலை பொய்ப்பப் போகிச்
சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்
அகலிலை கவித்த புதல்போல் குரம்பை
ஊன்புழுக் கயரு முன்றிற்
கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே.

மகட்போக்கிய தாய் சொல்லியது.

**1114.** அகநானூறு - **345.** பாலை

விசும்புதளி பொழிந்து வெம்மை நீங்கித்
தண்பதம் படுதல் செல்கெனப் பன்மாண்
நாஞ்செல விழைந்தன மாக வோங்குபுகழ்க்
கானமர் செல்வி யருளலின் வெண்காற்

பல்படைப் புரவி யெய்திய தொல்லிசை
நுணங்குநுண் பனுவற் புலவன் பாடிய
இனமழை தவழு மேழிற் குன்றத்துக்
கருங்கால் வேங்கைச் செம்பூம் பிணையல்
ஐதேந் தல்குல் யாமணிந் துவக்குஞ்.

குடவாயிற் கீரத்தனார் 565

சின்னாள் கழிக வென்று முன்னாள்
நம்மொடு பொய்த்தன ராயினுந் தம்மொடு
திருந்துவே லிளையர் சுரும்புண மலைமார்
மாமுறி யீன்று மரக்கொம் பகைப்ப
உறைகழிந் துலந்த பின்றைப் பொறைய
சிறுவெள் ளருவித் துவலையின் மலர்ந்த
கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூச்
செம்மணற் சிறுநெறி கம்மென வரிப்பக்
காடுகவின் பெறுக தோழி யாடுவளிக்கு
ஒல்குநிலை யிற்றி யொருதனி நெடுவீழ்
கல்கண் சீக்கு மத்தம்
அல்குவெயில் நீழ லசைந்தனர் செலவே.

தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1115.** அகநானூறு - **366.** மருதம்

தாழ்சினை மருதந் தகைபெறக் கவினிய
நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்பழித்துக்
கள்ளார் களமர் பகடுதலை மாற்றிக்

கடுங்காற் றெறியப் போகிய துரும்புடன்
காயற் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்
இருநீர்ப் பரப்பிற் பனித்துறைப் பரதவர்
தீம்பொழி வெள்ளுப்புச் சிதைதலிற் சினைஇக்
கழனி யுழவரொடு மாறெதிர்ந்து மயங்கி

இருஞ்சேற் றள்ள லெறிசெருக் கண்டு
நரைமூ தாளர் கைபிணி விடுத்து
நனைமுதிர் தேறல் நுளையர்க் கியும்
பொலம்பூ ணெவ்வி நீழ லன்ன
நலம்பெறு பணைத்தோள் நன்னுத லரிவையொடு
மணங்கமழ் தண்பொழி லல்கி நெருநை
நீதற் பிழைத்தமை யறிந்து
கலுழ்ந்த கண்ணளெம் அணங்கன் னோளே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டியவிடத்துத் தோழி சொல்லியது.



## 1116. அகநானூறு - 385. பாலை

தன்னோ ரன்ன ஆயமு மயிலியல்
என்னோ ரன்ன தாயருங் காணக்
கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர்
காவிரிப் படப்பை யுறந்தை யன்ன
பொன்னுடை நெடுநகர்ப் புரையோ ரயர
நன்மாண் விழவிற் றகர மண்ணி
யாம்பல புணர்ப்பச் சொல்லாள் காம்பொடு
நெல்லி நீடிய கல்லறைக் கவாஅன்
அத்த வாலத் தலந்தலை நெடுவீழ்
இத்திக் குறங்கிற் றிருந்த வுரிஞ
வளையுடை முன்கை யளைஇக் கிளைய
பயிலிரும் பிணையற் பசுங்காழ்க் கோவை
அகலமை யல்குல் பற்றிக் கூந்தல்
ஆடுமயிற் பீலியிற் பொங்க நன்றுந்
தானமர் துணைவ னூக்க வூங்கி
உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்ச்
சிறுவன் கண்ணி சிலம்புகழீஇ
அறியாத் தேஎத்த ளாகுதல் கொடிதே.

மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

## 1117. குறுந்தொகை - 79. பாலை

கானயானை தோல்நயந் துண்ட
பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
அலங்க லுலவை யேறி யொய்யெனப்

புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்
அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்ச்
சேர்ந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்கு
ஒல்லே மென்ற தப்பற்குச்
சொல்லா தேகல் வல்லு வோரே.

பொருள்வயிற் பிரிந்த தலைமகனை நினைந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## குடவாயிற் கீரத்தனார்

567

### 1118. குறுந்தொகை - 281. பாலை

வெண்மணற் பொதுளிய பைங்காற் கருக்கின்
கொம்மைப் போந்தைக் குடுமி வெண்டோடு
அத்த வேம்பி னமலை வான்பூச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
குன்றுதலை மணந்த கானம்
சென்றனர் கொல்லோ சேயிழை நமரே.

பிரிவிடை வேறுபட்டாளைக் கண்டு தோழி வற்புறுப்பாட்குக் கிழத்தி உரைத்தது.

### 1119. குறுந்தொகை - 369. பாலை

அத்த வாகை யமலை வானெற்று
அரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்

கோடை தூக்குங் கானஞ்
செல்வாந் தோழி நல்கினர் நமரே.

தோழி கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.

### 1120. நற்றிணை - 27. நெய்தல்

நீயும் யானும் நெருநற் பூவின்
நுண்தா துறைக்கும் வண்டின மோப்பி
ஒழிதிரை வரித்த வெண்மண லடைகரைக்
கழிசூழ் கான லாடிய தன்றிக்
கரந்துநாஞ் செய்ததொன் றில்லை யுண்டெனிற்
பரந்துபிற ரறிந்தன்று மிலரே நன்றும்
எவன்குறித் தனள்கொ லன்னை கயந்தோறு
இறவா ரினக்குரு கொலிப்பச் சுறவங்
கழிசேர் மருங்கிற் கணைக்கால் நீடிக்
கண்போற் பூத்தமை கண்டு நுண்பல
சிறுபா சடைய நெய்தல்
குறுமோ சென்றெனக் கூறு தோளே.

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇயது.



### 1121. நற்றிணை - 42. முல்லை

மறத்தற் கரிதாற் பாக பன்னாள்
அறத்தொடு வருந்திய அல்குதொழிற்
கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீ ரவல
நாநவில் பல்கிளை கறங்க மாண்வினை

மணியொலி கேளாள் வாணுத லதனால்
ஏகுமி னென்ற விளையர் வல்லே
இல்புக் கறியுந ராக மெல்லென
மண்ணாக் கூந்தல் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குர லழுத்திய
அந்நிலை புகுதலின் மெய்வருத் தாஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா வரிவை மகிழ்ந்தயர் நிலையே.

வினைமுற்றிமீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

**1122.** நற்றிணை - **212.** பாலை

பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்காற் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென விசைக்கும்
நரம்பொடு கொள்ளு மத்தத் தாங்கண்
கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்றம் நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொற் கழல்தொடி நோக்கி மாமகன்
கவவுக்கொ ளின்குரல் கேட்டொறும்
அவவுக்கொள் மனத்தே மாகிய நமக்கே.

பொருண்முடித்துத் தலைமகனோடு வந்த
வாயில்கள்வாய் வரவு
கேட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது.

**1123.** நற்றிணை - **379.** குறிஞ்சி

புன்றலை மந்திக் கல்லா வன்பறழ்

குன்றுழை நண்ணிய முன்றிற் போகாது
குட்டுவன் கண்ணனார் 569

எரியகைந் தன்ன வீததை யிணர
வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய
தேம்பெய் தீம்பால் வெளவலிற் கொடிச்சி
எழுதெழில் சிதைய அழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயில்
மாரியங் கிடங்கின் ஈரிய மலர்ந்த
பெயலுறு நீலம் போன்றன விரலே
பாஅ யவ்வயி றலைத்தலி னானாது
ஆடுமழை தவழுங் கோடுயர் பொதியில்
ஓங்கிருஞ் சிலம்பிற் பூத்த
காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே.

தோழி தலைமகற்குத் தலைமகளை மடமை கூறியது. காப்புக் கைம்மிக்க காலத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

## 1124. புறநானூறு - 242.

இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி யணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

ஒல்லையூர் கிழான்மகன் பெருஞ்சாத்தனைப் பாடியது.

## ௧௱௪. குட்டுவன் கண்ணனார்

### 1125. குறுந்தொகை - 179. குறிஞ்சி

கல்லென் கானத்துக் கடமா வாட்டி
எல்லு மெல்லின்று ஞமலியு மிளைத்தன
செல்ல லிஇய வுதுவெம் மூரே
ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்



பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே.

பகல் வருவானை இரவுக்குறி நேர்ந்தாள் போன்று வரைவு கடாயது.

## ௧௱௫. குட்டுவன்கீரனார்

### 1126. புறநானூறு - 240.

ஆடுநடைப் புரவியுங் களிறுந் தேரும்
வாடா யாணர் நாடு மூரும்
பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப

மேலோ ருலக மெய்தின னெனாஅப்
பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி
ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப்பிறர்
நாடுபடு செலவின ராயின ரினியே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
ஆயைப் பாடியது.

## கருரு. குண்டுகட்பாலியாதனார்

### 1127. நற்றிணை - 220. குறிஞ்சி

சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇக்
குறுமுகி ழெருக்கங் கண்ணி சூடி
உண்ணா நன்மாப் பண்ணி யெம்முடன்
மறுகுடன் றிரிதருஞ் சிறுகுறு மாக்கள்
பெரிதுஞ் சான்றோர் மன்ற விசிபிணி



முழவுக்கண் புலரா விழவுடை யாங்கண்
ஊரே மென்னுமிப் பேரே முறுநர்
தாமே யொப்புர வறியின் தேமொழிக்

கயலே ருண்கட் குறுமகட்கு
அயலோ ராகலென் றெம்மொடு படலே.

குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது. பின்னின்ற தலைமகன் தோழிகேட்பத் தலைமகளை ஓம்படுத்ததூஉமாம். தான் ஆற்றாளாய்ச் சொல்லியதூஉமாம்.

## 1128. புறநானூறு - 387.

வள்ளுகிர வயலாமை
வெள்ளகடு கண்டன்ன
வீங்குவிசிப் புதுப்போர்வைத்
தெண்கண் மாக்கிணை யியக்கி யென்றும்
மாறுகொண்டோர் மதிலிடறி
நீறாடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு பரந்தியங்கி
வேந்துடைமிளை யயல்பரக்கும்
ஏந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்
திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்

நகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன் சேவடியத்தையென்று

யானிசைப்பி னனிநன்றெனப்
பலபிற வாழ்த்த விருந்தோ ரென்கோ ...
மருவவினக ரகன்... ... ...
திருந்துகழற் சேவடி குறுகல் வேண்டி
வென்றிரங்கும் விறல்முரசினோன்
என்சிறுமையி னிழித்துநோக்கான்
தன்பெருமையின் தகவுநோக்கிக்
குன்றுறழ்ந்த களிறென்கோ



கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையும் நிரையென்கோ
மனைக்களமரொடு களமென்கோ
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவின்
நல்கி யோனே நகைசால் தோன்றல்
ஊழி வாழி பூழியர் பெருமகன்
பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாட்
செல்வக் கடுங்கோ வாழி யாதன்
ஒன்னாத் தெவ்வ ருயர்குடை பணித்திவண்
விடுவர் மாதோ நெடிதே நி...
புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்குங்
கல்லென் பொருநை மணலினு மாங்கண்
பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையும் நெல்லினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியா தனைப் பாடியது.

## கசுஎ. குதிரைத்தறியனார்

### 1129. நற்றிணை - 296. பாலை

என்னா வதுகொல் தோழி மன்னர்
வினைவல் யானைப் புகர்முகத் தணிந்த
பொன்செய் யோடை புனைநலங் கடுப்பப்
புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்
ஏகல் மீமிசை மேதக மலரும்
பிரிந்தோ ரிரங்கு மரும்பெறற் காலையும்
வினையே நினைந்த வுள்ளமொடு துனைஇச்
செல்ப வென்ப காதலர்
ஒழிது மென்பநாம் வருந்துபட ருழந்தே.

தோழியாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் சொல்லியது.

## கசுஅ. குப்பைக்கோழியார்

### 1130. குறுந்தொகை - 305. மருதம்

கண்டர வந்த காம வொள்ளெரி
என்புற நலியினு மவரொடு பேணிச்

சென்றுநா முயங்கற் கருங்காட் சியமே
வந்தனர் களைதலை யவராற் றலரே
உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியி னல்லது
களைவோ ரிலையா னுற்ற நோயே.

காப்பு மிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்பாளாகத் தனது ஆற்றாமை தோன்றத் தலைமகள் தன்னுள்ளே கூறியது.

## கக௱கூ. குமட்டூர்க் கண்ணனார்

**1131—1140.** பதிற்றுப்பத்து - இரண்டாம்பத்து.

**11—20** 1131. வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்குச்
செவ்வா யெஃகம் விலங்குந ரறுப்ப
அருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற இருங்கழி நீர்நிறம் பெயர்ந்து
மனாலக் கலவை போல அரண்கொன்று
முரண்மிகு சிறப்பி னுயர்ந்த வூக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்

கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரரி நறவின் ஆர மார்பிற்




போரடு தானைச் சேர லாத
மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே
கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே. 11

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - புண்ணுமிழ்குருதி.

1132. வயவர் வீழ வாளரில் மயக்கி
இடங்கவர் கடும்பி னரசுதலை பணிப்பக்
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்
அரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
தோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கு மறம்வீங்கு பல்புகழ்
கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறுங்
காண்டல் விருப்பொடு கமழுங் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய வாடுநடை
அண்ணல் மழகளி றரிஞிமி றோப்புங்
கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி
வந்தவ ணிறுத்த இரும்பே ரொக்கல்
தொல்பசி யுழந்த பழங்கண் வீழ
எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு
நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை

குமட்டூர்க் கண்ணனார்

நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்தோள்
வசையில் மகளிர் வயங்கிழை யணிய
அமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

12

இதுவுமது. பெயர் - மறம்வீங்கு பல்புகழ்.

1133. தொறுத்தவய லாரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு வுழாதுவித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்க ணெருமையின் நிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்ப லார்நவும்
ஒலிதெங்கி னிமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
ஊரிய நெருஞ்சி நீறாடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்து
உள்ள மழிய வூக்குநர் மிடல்தபுத்து

உள்ளுநர் பனிக்கும் பாழா யினவே
காடே கடவுள் மேன புறவே
ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
ஆறே யவ்வனைத் தன்றியும் ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி
அழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப



போரடு தானைச் சேர லாத
மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்

வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே
கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.

11

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் -

புண்ணுமிழ்குருதி. 1132. வயவர் வீழ வாளரில் மயக்கி
இடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்
அரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
தோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கு மறம்வீங்கு பல்புகழ்
கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறுங்
காண்டல் விருப்பொடு கமழுங் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய வாடுநடை
அண்ணல் மழகளி றரிஞிமி றோப்புங்
கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி

வந்தவ ணிறுத்த இரும்பே ரொக்கல்
தொல்பசி யுழந்த பழங்கண் வீழ
எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு
நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை

குமட்டூர்க் கண்ணனார் 575

நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்தோள்
வசையில் மகளிர் வயங்கிழை யணிய
அமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

12

இதுவுமது. பெயர் - மறம்வீங்கு பல்புகழ்.

1133. தொறுத்தவய லாரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு வுழாதுவித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்க ணெருமையின் நிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்ப லார்நவும்
ஒலிதெங்கி னிமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல

நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
ஊரிய நெருஞ்சி நீறாடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்து
உள்ள மழிய வூக்குநர் மிடல்தபுத்து
உள்ளுநர் பனிக்கும் பாழா யினவே
காடே கடவுள் மேன புறவே
ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
ஆறே யவ்வனைத் தன்றியும் ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி
அழல்சென்ற மருங்கின் வெள்ளி

யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப



நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே.

13

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - பூத்த நெய்தல்.

1134. நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரி யையே
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த ஈரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
அக்குர னனைய கைவண் மையையே
அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகல் முன்ப
கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே

எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற்றுத் தொழுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே
இலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழில்முழு தாண்டநின்
முன்திணை முதல்வர் போல நின்றுநீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ வியரோவிவ் வுலகமோ டுடனே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர் - சான்றோர் மெய்ம்மறை.

## குமட்டூர்க் கண்ணனூர் 577

1135. யாண்டு தலைப்பெயர வேண்டு புலத்திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதில்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர
அழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்
தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்
வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்
பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதற்
சிவந்த காந்தள் முதல்சிதை மூதிற்
புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பின்
அறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசினே

கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவறு பறியா முழவிமிழ் மூதூர்க்
கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்துச்
சீர்பெறு கலிமகி ழியம்பு முரசின்
வயவர் வேந்தே பரிசிலர் வெறுக்கை
தாரணிந் தெழிலிய தொடிசிதை மருப்பிற்
போர்வல் யானைச் சேர லாத

நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென
உண்டுரை மாறிய மழலை நாவின்

மென்சொற் கலப்பையர் திருந்துதொடை
வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்

வாழ்த்த

செய்தன மேவ லமர்ந்த சுற்றமோடு
ஒன்றுமொழிந் தடங்கிய கொள்கை
யென்றும்
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி
நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பின்
நீபுறந் தருதலி னோயிகந் தொரீஇய
37

யாணர்நன் னுடுங் கண்டுமதி மருண்டனென்
மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க் கெஞ்சாது
ஈத்துக்கை தண்டாக் கைகடுந் துப்பிற்
புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி
ஏம மாகிய சீர்கெழு விழவின்
நெடியோ னன்ன நல்லிசை
ஒடியா மைந்தநின் பண்புபல நயந்தே. 15

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - நிரையவெள்ளம்.

1136. கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி
நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கற்
றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப் புனிற்றுமகள்
பூணு ஐயவி தூக்கிய மதில
நல்லெழில் நெடும்புதவு முருக்கிக் கொல்லு
பேன மாகிய நுனைமுரி மருப்பிற்
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொல் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை யாகலிற் காண்குவந் திசினே
ஆறிய கற்பி னடங்கிய சாயல்
ஊடினு மினிய கூறு மின்னகை
அமிர்துபொதி துவர்வா யமர்த்த நோக்கிற்
சுடர்நுத லசைநடை யுள்ளலு முரியள்

பாய லுய்யுமோ தோன்றல் தாவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமோ டுறழ்ந்துபூண்
சுடர்வர
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
புரையோ ருண்கண் துயிலின் பாயல்
பாலுங் கொளாலும் வல்லோய்நின்
சாயல் மார்பு நனியலைத் தன்றே.

16

இதுவுமது. பெயர் - துயிலின் பாயல்.

குமட்டூர்க் கண்ணனார் 579

1137. புரைவது நினைப்பிற் புரைவதோ வின்றே
பெரிய தப்புந ராயினும் பகைவர்
பணிந்துதிறை பகரக் கொள்ளுநை யாதலின்
துளங்குபிசி ருடைய மாக்கடல் நீக்கிக்
கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை
ஆடுநர் பெயர்ந்துவந் தரும்பலி தூஉய்க்
கடிப்புக் கண்ணுறூஉந் தொடித்தோ ளியவர்

அரணங் காணாது மாதிரந் துழைஇய
நனந்தலைப் பைஞ்ஞிலம் வருகவிந் நிழலென
ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்
அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்
கடுங்கால் கொட்கும் நன்பெரும் பரப்பின்
விசும்புதோய் வெண்குடை நுவலும்
பசும்பூண் மார்ப பாடினி வேந்தே.

## 17

இதுவுமது. பெயர் - வலம்படு வியன்பணை.

1138. உண்மின் கள்ளே அடுமின் சோறே
எறிக திற்றி யேற்றுமின் புழுக்கே
வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிர்ப்ப

இருள்வண ரொலிவரும் புரியவி ழைம்பால்
ஏந்துகோட் டல்குல் முகிழ்நகை மடவரற்

கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே
பெற்ற துதவுமின் தப்பின்று பின்னும்
மன்னுயி ரழிய யாண்டுபல துளக்கி
மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட
தண்ணிய லெழிலி தலையாது மாறி

மாரி பொய்க்குவ தாயினும்
சேர லாதன் பொய்யலன் நசையே.

18

துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - கூந்தல்விறலியர்.

1139. கொள்ளை வல்சிக் கவர்காற் கூளியர்
கல்லுடை நெடுநெறி போழ்ந்துசுர னறுப்ப

ஒண்பொறிக் கழற்கால் மாறா வயவர்
திண்பிணி யெஃகம் புலியுறை கழிப்பச்
செங்கள விருப்பொடு கூல முற்றிய
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்
கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச
வம்புகளை வறியாச் சுற்றமோ டம்புதெரிந்து
அவ்வினை மேவலை யாகலின்
எல்லு நனியிருந் தெல்லிப் பெற்ற
அரிதுபெறு பாயற் சிறுமகி ழானும்
கனவினு ளுறையும் பெருஞ்சால் பொடுங்கிய
நாணுமலி யாக்கை வாணுத லரிவைக்கு
யார்கொ லளியை
இனந்தோ டகல வூருட னெழுந்து
நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ
வாழ்த லீயா வளனறு பைதிரம்
அன்ன வாயின பழனந் தோறும்
அழல்மலி தாமரை யாம்பலொடு மலர்ந்து
நெல்லின் செறுவின் நெய்தல் பூப்ப
அரிநர் கொய்வாள் மடங்க அறைநர்
தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த
இன்றோ வன்றோ தொன்றோர் காலை
நல்லம னளிய தாமெனச் சொல்லிக்
காணுநர் கைபுடைத் திரங்க
மாணா மாட்சிய மாண்டன பலவே.

துறை - பரிசிற்றுறைப் பாடாண் பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர் - வளனறுபைதிரம்.

1140. நுங்கோ யாரென வினவி னெங்கோ
இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச்சென்று
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்



நெடுஞ்சேர லாதன் வாழ்கவவன் கண்ணி
வாய்ப்பறி யலனே வெயிற்றுக ளனைத்தும்
மாற்றோர் தேஎத்து மாறிய வினையே
கண்ணி னுவந்து நெஞ்சவிழ் பறியா
நண்ணார் தேஎத்தும் பொய்ப்பறி யலனே
கனவினும், ஒன்னார் தேய வோங்கி நடந்து
படியோர்த் தேய்த்து வடிமணி யிரட்டும்
கடாஅ யானைக் கணநிரை யலற
வியலிரும் பரப்பின் மாநிலங் கடந்து
புலவ ரேத்த வோங்குபுகழ் நிறீஇ
விரியுளை மாவுங் களிறுந் தேரும்
வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசிக்

கடிமிளைக் குண்டுகிடங்கின்
நெடுமதில் நிலைவாயில்
அம்புடை யாரெயி லுள்ளழித் துண்ட
அடாஅ வடுபுகை அட்டுமலர் மார்பன்
எமர்க்கும் பிறர்க்கும் யாவ ராயினும்
பரிசில் மாக்கள் வல்லா ராயினும்
கொடைக்கட னமர்ந்த கோடா நெஞ்சினன்
மன்னுயி ரழிய யாண்டுபல மாறித்
தண்ணிய லெழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சிலீயரவ னீன்ற தாயே.

20

துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர் - அட்டுமலர் மார்பன்.

## 1140-a. பதிகம்

மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசி னுதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மாள் நல்லினி யீன்றமகன்

அமைவர லருவி யிமையம் விற்பொறித்து
இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்

தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபி னாரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ

அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்தாள்
இமையவரம்ப னெடுஞ்சேரலாதனைக்
குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம்: புண்ணுமிழ்குருதி, மறம்வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல், சான்றோர்மெய்ம்மறை, நிரையவெள்ளம், துயிலின்பாயல், வலம்படு வியன்பணை, கூந்தல்விறலியர், வளனறுபைதிரம், அட்டு மலர்மார்பன். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: உம்பற்காட்டு ஐஞ்ஞூறூர் பிரமதாயங் கொடுத்து முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகங் கொடுத்தான் அக்கோ.

இமயவரம்பனெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.

## ௧௭௦. குமுழிஞாழலார் நப்பசலையார்

## 1141. அகநானூறு - 160. நெய்தல்

ஒடுங்கீ ரோதி நினக்கு மற்றோ
நடுங்கின் றளித்தென் நிறையில் நெஞ்சம்
அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணற் பக்கஞ் சேர்த்தி
நிறைச்சூல் யாமை மறைத்தீன்று புதைத்த
கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க்
கணவ னோம்புங் கானலஞ் சேர்ப்பன்
முள்ளுறிற் சிறத்த லஞ்சி மெல்ல
வாவுடை மையின் வள்பிற் காட்டி

குளம்பனூர் 583

ஏத்தொழில் நவின்ற எழில்நடைப் புரவி
செழுநீர்த் தண்கழி நீந்தலின் ஆழி
நுதிமுகங் குறைந்த பொதிபுகிழ் நெய்தல்
பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப
இரவந் தன்றால் திண்டேர் கரவாது
தொல்லென வொலிக்கு மிளையரொடு

வல்வாய்
அரவச் சீறூர் காணப்

பகல்வந் தன்றாற் பாய்பரி சிறந்தே.

தோழி வரைவு மலிந்து சொல்லியது.

## ௱௭௧. குழற்றத்தனார்

### 1142. குறுந்தொகை - 242. முல்லை

கானங் கோழிக் கவர்குரற் சேவல்
ஒண்பொறி யெருத்திற் றண்சித றுறைப்பப்
புதல்நீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செலினும்
சேந்துவர லறியாது செம்மல் தேரே.

கற்புக்காலத்துக் கடிநகர் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.

## ௱௭௨. குளம்பனார்

### 1143. நற்றிணை - 288. குறிஞ்சி

அருவி யார்க்கு மணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்க ரிளவெயி லுணீஇய வோங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடும்
குன்ற நாடன் பிரிவிற் சென்று
நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின் வெற்பில்

ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரற்
சிறுகிளி கடிகஞ் சென்றுமின்
நெடுவே ளணங்கிற் றென்னுங்கொ லதுவே.

தோழி சிறைப்புறமாகத்
தலைமகட்குரைப்பாளாய் வெறியறி
வுறீஇ வரைவு கடாயது.

## க௱௩. குளம்பாதாயனார்

## 1144. புறநானூறு - 253.

என்றிறத் தவலங் கொள்ளல் இனியே
வல்வார் கண்ணி யிளையர் திளைப்ப
நகாஅலென வந்த மாறே யெழாநெற்
பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்
வளையில் வறுங்கை யோச்சிக்
கிளையு ளாய்வலோ கூறுநின் னுரையே.

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை.

## க௱௪. குறமகள் இளவெயினி

## 1145. புறநானூறு - 157.

தமர்தற் றப்பின் அதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தான்நா ணுதலும்
படைப்பழி தாரா மைந்தினை யாகலும்
வேந்துடை யவையத் தோங்குபு நடத்தலும்
நும்மோர்க்குத் தகுவன வல்ல எம்மோன்
சிலைசெல மலர்ந்த மார்பிற் கொலைவேற்
கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்
ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
எற்படு பொழுதின் இனந்தலை மயங்கிக்
கட்சி காணாக் கடமா னல்லேறு
மடமான் நாகுபிணை பயிரின் விடர்முழை
இரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்
பெருங்கல் நாடனெம் ஏறைக்குத் தகுமே.

குறியிறையார் 585

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஏறைக்கோனைப் பாடியது.

### ௩௨௫. குறமகள் குறியெயினி

## 1146. நற்றிணை - 357. குறிஞ்சி

நின்குறிப் பெவனோ தோழி யென்குறிப்பு
என்னொடு நிலையா தாயினும் என்றும்
நெஞ்சுவடுப் படுத்துக் கெடவறி யாதே
சேணுறத் தோன்றுங் குன்றத்துக் கவாஅற்
பெயலுழந் துலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலி மஞ்ஞை யாலுஞ் சோலை
அங்க ணறைய அகல்வாய்ப் பைஞ்சுனை
உண்க ணொப்பி னீல மடைச்சி
நீரலைக் கலைஇய கண்ணிச்
சாரல் நாடனொ டாடிய நாளே.

தலைமகன் வரைவு நீடிய விடத்து ஆற்றுவ லென்பது படச் சொல்லியது. மனைமருண்டு வேறுபாடாயினை யென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

### கஎரு. குறியிறையார்

### 1147. குறுந்தொகை - 394. குறிஞ்சி

முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி
நறவுமலி பாக்கத்துக் குறமக ளீன்ற
குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி
முன்னு ளினிய தாகிப் பின்னுள்
அவர்தினைப் புனமேய்ந் தாங்குப்

பகையா கின்றவர் நகைவிளை யாட்டே.

வரைவிடை ஆற்றாளாகிய கிழத்தியை ஆற்றுவிக்குந் தோழி தலைமகனை இயற்பழித்துக் கூறியது.

## ௧௱௭. குறுங்கீரனார்

### 1148. குறுந்தொகை - 382. முல்லை

தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை
முகைத்தலை இறந்த நாற்றம் புதல்மிசைப்
பூவமல் தளவமொடு தேங்கமழ்பு கஞல
வம்புப் பெய்யுமார் மழையே வம்பன்று
காரிது பருவ மாயின்
வாரா ரோநங் காத லோரே.

பருவ வரவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி பருவமன்று வம்பென்று வற்புறீஇயது.

## ௧௱௮. குறுங்குடி மருதனார்

### 1149. அகநானூறு - 4. முல்லை

முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய இரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானம்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் தோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரின் நாறும்
ஆய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே.

தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.

குறுங்கோழியூர்கிழார் 587

**1150.** குறுந்தொகை - **344.** முல்லை

நோற்றோர் மன்ற தோழி தண்ணெனத்
தூற்றுந் துவலைப் பனிக்கடுந் திங்கள்
புலம்பா யிருந்த அண்ண லேறொடு
நிலந்தூங் கணல வீங்குமுலைச் செருத்தல்
பால்வார்பு குழவி யுள்ளி நிரையிறந்து
ஊர்வயிற் பெயரும் புன்கண் மாலை
அரும்பெறற் பொருட்பிணிப் போகிப்
பிரிந்துறை காதலர் வரக்காண் போரே.

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் கூறியது.

### களஅ. குறுங்கோழியூர்கிழார்

### 1151. புறநானூறு - 17.

தென்குமரி வடபெருங்கற்
குணகுட கடலாவெல்லை
குன்றுமலை காடுநாடு
ஒன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோல்திருத்திப்
படுவதுண்டு பகலாற்றி

இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல
குலையிறைஞ்சிய கோட்டாழை
அகல்வயல் மலைவேலி
நிலவுமணல் வியன்கானற்
றெண்கழிமிசைத் தீப்பூவின்
தண்டொண்டியோ ரடுபொருந
மாப்பயம்பின் பொறைபோற்றாது
நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய எறுழ்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று

கிளைபுகலத் தலைக்கூடியாங்கு
நீபட்ட அருமுன்பிற்
பெருந்தளர்ச்சி பலருவப்பப்
பிறிதுசென்று மலர்தாயத்துப்
பலர்நாப்பண் மீக்கூறலின்
உண்டாகிய வுயர்மண்ணும்
சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடு மிவனெஞ் சுறப்பெறி னெனவும்
ஏந்துகொடி யிறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்பம்
இழந்துவைகுது மினிநாமிவன்
உடன்றுநோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்குநின்
ஆற்றலொடு புகழேத்திக்
காண்கு வந்திசிற் பெரும ஈண்டிய
மழையென மருளும் பல்தோல் மலையெனத்
தேனிறை கொள்ளு மிரும்பல் யானை
உடலுந ருட்க வீங்கிக் கடலென
வானீர்க் கூக்குந் தானை யானாது
கடுவொடுங் கெயிற்ற அரவுத்தலை பனிப்ப
இடியென முழங்கு முரசின்
வரையா ஈகைக் குடவர் கோவே.

திணை - வாகை ; துறை - அரசவாகை, இயன்மொழியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி

யனாற் பிணியிருந்த யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை வலிதிற் போய்க் கட்டிலெய்தினானைப் பாடியது.

## 1152. புறநானூறு - 20.

இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்கு



அவையளந் தறியினு மளத்தற் கரியை
அறிவு மீரமும் பெருங்க ணோட்டமும்
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் நிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மல்நின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா அருமண் ணினையே
அம்புதுஞ்சுங் கடியரணால்
அறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்
விதுப்புற வறியா ஏமக் காப்பினை

அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையைப் பாடியது.

## 1153. புறநானூறு - 22.

தூங்குகையான் ஓங்குநடைய
உறழ்மணியான் உயர்மருப்பின
பிறைநுதலாற் செறல்நோக்கின
பாவடியாற் பணையெருத்தின
தேன்சிதைந்த வரைபோல
மிஞிறார்க்குங் கமழ்கடாத்து
அயறுசோரு மிருஞ்சென்னிய
மைந்துமலிந்த மழகளிறு
கந்துசேர்பு நிலைஇவழங்கப்
பாஅல்நின்று கதிர்சோரும்



வானுறையும் மதிபோலும்

மாலைவெண் குடைநீழலான்
வாண்மருங்கிலோர் காப்புறங்க
அலங்குசெந்நெற் கதிர்வேய்ந்த
ஆய்கரும்பின் கொடிக்கூரை
சாறுகொண்ட களம்போல
வேறுவேறு பொலிவுதோன்றக்
குற்றானா வுலக்கையாற்
கலிச்சும்மை வியலாங்கண்
பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
ஓத நீரிற் பெயர்பு பொங்க
வாய்கா வாது பரந்து பட்ட
வியன்பாசறைக் காப்பாள
வேந்துதந்த பணிதிறையாற்
சேர்ந்தவர்தம் கடும்பார்த்தும்
ஓங்குகொல்லியோ ரடுபொருந
வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்
வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே
நிற்பாடிய வயங்குசெந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பா தீயு மாற்ற லெங்கோ

மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே
புத்தே ளுலகத் தற்றெனக் கேட்டுவந்து
இனிது கண்டிசின் பெரும முனிவிலை
வேறுபுலத் திறுக்குந் தானையொடு
சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே.

திணை - வாகை ; துறை - அரசவாகை, இயன்மொழியுமாம்.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையைப் பாடியது.

## க௮௦. குன்றம்பூதனார்

### 1154. பரிபாடல் - 9.

இருநிலந் துளங்காமை வடவயின் நிவந்தோங்கி
அருநிலை யுயர்தெய்வத் தணங்குசால் தலைகாக்கும்
உருமுச்சூழ் சேட்சிமை உயர்ந்தவ ருடம்பட
எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்நீ ;

மையிரு நூற் றிமையுண்கண் மான்மறிதோள் மணந்தஞான்று
ஐயிரு நூற்று மெய்ந்நயனத் தவன்மகள் மலருண்கண்
மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்
தணிமழை தலையின்று தண்பரங் குன்று;
நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது
காதற் காமங் காமத்துச் சிறந்தது
விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதான்
இரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்

பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்
தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே;
அதனால், அகற லறியா வணியிழை நல்லார்

இகல்தலைக் கொண்டு துனிக்குந் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்;
ஊழாரத் தோய்கரை நூக்கிப் புனல்தந்த

காழாரத் தம்புகை சுற்றிய தார்மார்பிற்
கேழாரம் பொற்ப வருவானைத் தொழாஅ
வாழிய மாயாநின் தவறிலை யெம்போலும்



கேழிலார் மாணல முண்கோ திருவுடையார்
மென்றோள் மேலல்கி நல்கலு மின்று
வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப்
பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய
கரையாவெங் நோக்கத்தாற் கைசுட்டிப்

பெண்டின்

இகலி னிகந்தானை யவ்வேள் தலைக்கண்ணி
திருந்தடி தோயத் திறைகொடுப் பானை
வருந்த லெனவவற்கு மார்பளிப் பானைக்
குறுகலென் றொள்ளிழை கோதைகோ லாக
இறுகிறுக யாத்துப் புடைப்ப
ஒருவர் மயிலொருவ ரொண்மயிலோ டேல
இருவர் வான்கிளி யேற்பனை மழலை
செறிகொண்டை மேல்வண்டு சென்றுபாய்ந் தன்றே
வெறிகொண்டான் குன்றத்து வண்டு ;

தார்தார் பிணக்குவார் கண்ணியோச்சித்
தடுமாறுவார்
மார்பணி கொங்கைவார் மத்திகையாப்
புடைப்பார்
கோதை வரிப்பந்து கொண்டெறிவார்

பேதை மடநோக்கம் பிறிதாக வூத
நுடங்கு நொசிநுசுப்பார் நூழில் தலைக்கொள்ளக்
கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்
வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்
தேரணி யணிகயிறு தெரிபு வருவார்
வரிசிலை வளைய மார்புற வாங்குவார்
வாளி வாளிகள் நிலைபெற மறலுவார்
தோள்வளை யாழி சுழற்றுவார்
மென்சீர் மயிலிய லவர் ;

வாள்மிகு வயமொய்ம்பின்
வரையகலத்தவனை வானவன்மகள்
மாணெழில் மலருண்கண்
மடமொழியவ ருடன்சுற்றிக்

கடிசுனையுட் குளித்தாடுநரும்
அறையணித்த வருஞ்சுனையான்

நறவுண் வண்டாய் நரம்புளர்நரும்
சிகைமயிலாய்த் தோகைவிரித்தாடுநரும்
கோகுலமாய்க் கூவுநரும்
ஆகுல மாகுநரும்
குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்
வித்தகத் தும்பை விளைத்தலான் வென்வேலாற்கு
ஒத்தன்று தண்பரங் குன்று ;

கடுஞ்சூர் மாமுதல் தடிந்தறுத்தவேல்
அடுபோ ராளநின் குன்றின்மிசை
ஆடல் நவின்றோ ரவர்போர் செறுப்பவும்
பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்
வல்லாரை வல்லார் செறுப்பவும்
அல்லாரை யல்லார் செறுப்பவு
மோர்சொல்லாய்ச்
செம்மைப் புதுப்புனற்
றடாக மேற்ற தண்சுனைப் பாங்கர்ப்
படாகை நின்றன்று
மேன எஃகினவை
வென்றுயர்த்தகொடி விறல்சான்றவை

கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர
வாழ்த்தினேம் பரவுதுந் தாழ்த்துத்தலை நினையா
நயத்தலிற் சிறந்தவெம் அடியுறை
பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே.

கடவுள்வாழ்த்து. மருத்துவன் நல்லச்சுதனார் இசை.

பண்ணுப் பாலையாழ்.

## 1155. பரிபாடல் - 18.

போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக்
காரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலிபோல்
நீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச்
சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்நின்
சீர்நிரந் தேந்திய குன்றொடு நேர்நிரந்து
ஏறுமா றேற்குமிக் குன்று;

ஒள்ளொளி மணிப்பொறி யால்மஞ்ஞை நோக்கித்தன்
உள்ளத்து நினைப்பானைக் கண்டனள் திருநுதலும்
உள்ளிய துணர்ந்தேனஃ துரையினி நீயெம்மை
எள்ளுதல் மறைத்தலோம் பென்பானைப் பெயர்த்தவன்
காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ்
பேதுற்ற இதனைக்கண் டியானோக்க நீயெம்மை
ஏதிலா நோக்குதி யென்றாங் குணர்ப்பித்தல்
ஆய்தேரான் குன்ற இயல்பு;

ஐவளம் பூத்த அணிதிகழ் குன்றின்மேல்
மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்
கைவளம் பூத்த வடுவொடு காணாய்நீ
மொய்வளம் பூத்த முயக்கம்யாங் கைப்படுத்தேம்
மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி
நைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வலம்
பூத்தன பாணனின் பாட்டு;

தண்தளிர் தருப்படுத் தெடுத்துரை இ
மங்குல் மழைமுழங்கிய விறல்வரையாற்
கண்பொருபு சுடர்ந்தடர்ந் திடந்து
இருள்போழுங் கொடிமின்னால்
வெண்சுடர் வேல்வேள் விரைமயில்மேல் ஞாயிறுநின்
ஒண்சுட ரோடைக் களிறேய்க்கும் நின்குன்றத்து
எழுதெழி லம்பலங் காமவே ளம்பின்
தொழில்வீற் றிருந்த நகர்;

ஆர்ததும்பும் அயிலம்பு நிறைநாழி
சூர்ததும்பு வரைய காவாற்
கார்ததும்பு நீர்ததும்புவன சுனை
ஏர்ததும்புவன பூவணி செறிவு;
போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ
கார்தோற்றும்
காந்தள் செறிந்த கவின்;

கவின்முகை கட்டவிழ்ப்ப தும்பிகட் டியாழின்

புரிநெகிழ்ப்பார் போன்றன கை;

குன்றியனூர் 595

அச்சிரக் காலார்த் தணிமழை கோவின்றே
வச்சிரத் தான்வான வில்லு;
வில்லுச்சொரி பகழியின் மென்மலர் தாயின
வல்லுப்போர் வல்லாய் மலைமேன் மரம்;
வட்டுருட்டு வல்லாய் மலைய நெட்டுருட்டுச்
சீர்ததும்பு மரவ முடன்சிறந்து
போர்ததும்பு மரவம் போலக்
கருவி யார்ப்பக் கருவிநின் றன குன்றம்;
அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை

குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை
எருவை கோப்ப வெழிலணி திருவில்
வானி லணித்த வரியூதும் பன்மலராற்
கூனி வளைத்த சுனை;

புரியுறு நரம்பு மியலும் புணர்ந்து
சுருதியும் பூவுஞ் சுடருங் கூடி
எரியுரு ககிலோ டாரமுங் கமழும்
செருவேற் றானைச் செல்வநின் அடியுறை
உரிதினி னுறைபதிச் சேர்ந்தாங்குப்
பிரியா திருக்கவெஞ் சுற்றமோ டுடனே.

கடவுள் வாழ்த்து. நல்லச்சுதனார் இசை. பண் காந்தாரம்.

## க௮க. குன்றியனார்

### 1156. அகநானூறு - 40. நெய்தல்

கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண் டார்க்கும் அல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பிணையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினு

மருஅ வியரோ அவருடைக் கேண்மை
அளியின் மையி னவணுறை முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்
இன்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழிக் கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

## 1157. அகநானூறு - 41. பாலை

வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்பக்
கருநனை யவிழ்ந்த ஊழுறு முருக்கின்
எரிமருள் பூஞ்சினை யினச்சித ரார்ப்ப
நெடுநெ லடைச்சிய கழனியேர் புகுத்துக்
குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்
ஓதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்
கோழிண ரெதிரிய மரத்த கவினிக்
காடணி கொண்ட காண்டகு பொழுதின்
நாம்பிரி புலம்பி னலஞ்செலச் சாஅய்
நம்பிரி பறியா நலனொடு சிறந்த

நற்றோள் நெகிழ வருந்தினள் கொல்லோ

மென்சிறை வண்டின் தண்கமழ் பூந்துணர்த்
தாதின் துவலை தளிர்வார்ந் தன்ன
அங்கலுழ் மாமை கிளைஇய
நுண்பல் தித்தி மாஅ யோளே.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்துக் கிழத்தியை நினைந்து சொல்லியது.

**1158.** குறுந்தொகை - **50.** மருதம்

ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்

குன்றியனூர்

597

துறையணிந் தன்றவ ளூரே இறையிறந்து
இலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே.

கிழவற்குப் பாங்காயின வாயில்கட்குக் கிழத்தி சொல்லியது.

**1159.** குறுந்தொகை - **51.** நெய்தல்

கூன்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலறு முத்திற் காலொடு பாறித்
துறைதொறும் பரிக்குந் தூமணற் சேர்ப்பனை
யானுங் காதலென் யாயுநனி வெய்யள்

எந்தையுங் கொடீஇயர் வேண்டும்
அம்ப லூரு மவனொடு மொழிமே.

வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி வரைவுமலிவு கூறியது.

### 1160. குறுந்தொகை - 117. நெய்தல்

மாரி யாம்ப லன்ன கொக்கின்
பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇய ரண்டர்
கயிறிரி யெருத்திற் கதழுந் துறைவன்
வாரா தமையினு மமைக
சிறியவு முளவீண்டு விலைஞர்கை வளையே.

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

### 1161. குறுந்தொகை - 238. மருதம்

பாசவ விடித்த கருங்கா ழுலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
தொண்டி யன்ன என்னலந் தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே.

தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில் வேண்டித் தோழி யிடைச்சென்று தெளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியது.

## 1162. குறுந்தொகை - 301. குறிஞ்சி

முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானாட் கங்குல்
மன்றம் போழு மின்மணி நெடுந்தேர்
வாரா தாயினும் வருவது போலச்
செவிமுத லிசைக்கு மரவமொடு
துயில்மறந் தனவால் தோழியென் கண்ணே.

வரைவிடைவைப்ப ஆற்றகிற்றியோ என்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

## 1163. குறுந்தொகை - 336. குறிஞ்சி

செறுவர்க் குவகை யாகத் தெறுவர
ஈங்கனம் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
இருங்கழி நெய்தல் போல
வருந்தினள் அளியள்நீ பிரிந்திசி னோளே.

தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தது.

## 1164. நற்றிணை - 117. நெய்தல்

பெருங்கடல் முழங்கக் கானல் மலர

இருங்கழி யோத மில்லிறந்து மலிர
வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேரச்
செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்
கல்சேர்பு நண்ணிப் படரடைபு நடுங்கப்
புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்ன ருன்னூர் கழியிற் பன்னாள்
வாழலேன் வாழி தோழி யென்கட்

குன்றூர்கிழார்மகனார்

599

பிணிபிறி தாகக் கூறுவர்
பழிபிறி தாகல் பண்புமா ரன்றே.

வரைவுநீட ஆற்றாளாய தலைவி
வன்புறையெதிரழிந்து சொல்
லியது. சிறைப்புறமுமாம்.

**1165.** நற்றிணை - **239.** நெய்தல்

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீ னெளிதினின் மாறி
அலவ னாடிய புலவுமணல் முன்றிற்
காமர் சிறுகுடிச் சென்னெறி வழியின்
ஆய்மணி பொதியவிழ்ந் தாங்கு நெய்தற்
புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கு
மல்ல லிருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்கு
அமைந்துதொழில் கேட்டன்றோ விலமே

முன்கை
வார்கோ லெல்வளை யுடைய வாங்கி
முயங்கெனக் கலுழ்ந்த இவ்வூர்
எற்றோ வதுகொல்யா மற்றொன்று செயினே.

தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

### கஅஉ. குன்றூர்கிழார்மகனார்

### 1166. நற்றிணை . 332. குறிஞ்சி

இகுளை தோழியிஃ தென்னெனப் படுமோ
குவளை குறுநர் நீர்வேட் டாங்கு
நாளு நாளுடன் அகலவுந் தோளே
தொன்னிலை வழீஇயநின் தொடியெனப் பன்மாண்
உரைத்த லான்றிசின் நீயே விடர்முகை ஈன்பிணை
வொடுக்கிய இருங்கேழ் வயப்புலி இரைநசைஇப் பரிக்கு

மலைமுதற் சிறுநெறி தலைநா ளன்ன
பேணலன் பலநாள்



ஆரிருள் வருதல் காண்பேற்கு
யாங்கா கும்மே யிலங்கிழை செறிப்பே.

பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி களவுக்காலத்து வற்புறுப்பத் தலைவி கூறியது. வன்புறை எதிர்மறுத்ததூஉமாம்.

## 1167. புறநானூறு - 338.

ஏர்பரந்தவயல் நீர்பரந்தசெறுவின்
நெல்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்
படுவண் டார்க்கும் பன்மலர்க் காவில்
நெடுவே ளாதன் போந்தை யன்ன
பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்றும்
மலைந்த சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன் வண்தோட்டுப்
பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்று
உணங்குகலன் ஆழியிற் றோன்றும்
ஓரெயில் மன்ன னொருமட மகளே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

### க௲அ௱. கூகைக்கோழியார்

### 1168. புறநானூறு - 364.

வாடா மாலை பாடினி யணியப்
பாணன் சென்னிக் கேணி பூவா
எரிமருள் தாமரைப் பெருமலர் தயங்க
மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
உண்டுந் தின்று மிரப்போர்க் கீய்ந்தும்
மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே
அரிய வாகலு மரிய பெரும

நிலம்பக வீழ்ந்த அலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
கூகைக் கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே.

திணை - பொதுவியல் ; துறை - பெருங்காஞ்சி.
அவனை (?)ப் பாடியது.

## கஅச. கூடலூர்கிழார்

### 1169. குறுந்தொகை - 166. நெய்தல்

தண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மாந்தை
ஒருதனி வைகிற் புலம்பா கின்றே.

காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்கு உரைத்தது.

### 1170. குறுந்தொகை - 167. முல்லை

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே.

கடிநகர்ச் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்கு உரைத்தது.

## 1171. குறுந்தொகை - 214. குறிஞ்சி

மரங்கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய
பிறங்குகுர லிறடி காக்கும் புறந்தாழ்
அஞ்சி லோதி யசையியற் கொடிச்சி

திருந்திழை யல்குற்குப் பெருந்தழை யுதவிச்
செயலை முழுமுத லொழிய அயல



தாலை மாலை சூட்டி
ஏமுற் றன்றிவ் வழுங்க லூரே.

தோழி வெறியாட் டெடுத்துக்கொண்ட இடத்து அறத்தொடு நின்றது.

## 1172. புறநானூறு - 229.

ஆடிய லழற்குட்டத்து
ஆரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்

கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனி யுய ரழுவத்துத்
தலைநாண்மீன் நிலைதிரிய
நிலைநாண்மீன் அதனெதி ரேர்தரத்
தொன்னாண்மீன் துறைபடியப்
பாசிச் செல்லா தூசித் துன்னாது
அளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் வீழ்ந்தன்றால் விசும்பி னானே
அதுகண்டு, யாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன் நோயில
னாயி னன்றுமன் னில்லென
அழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும் காவியற்
கலிமாக் கதியில வைகவும்
மேலோ ருலக மெய்தின னாகலின்
ஒண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாயம் மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்றல் நசைவர்க்கு
கூடவன்மைந்தன்

603

அளந்துகொடை யறியா ஈகை

மணிவரை யன்ன மாஅ யோனே.

திணை - பொதுவியல் ; துறை - ஆனந்தப்பையுள்.

கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இன்னநாளிற் றுஞ்சுமென அஞ்சி, அவன் றுஞ்சியவிடத்துப் பாடியது.

## கஅரு. கூடலூர்ப் பல்கண்ணஞர்

### 1173. நற்றிணை - 200. மருதம்

கண்ணி கட்டிய கதர லன்ன
ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யா றுகிடந் தன்ன அகநெடுந் தெருவிற்
சாறென நுவலு முதுவாய்க் குயவ
ஈது மாங்கண் நுவன் றிசின் மாதோ
ஆம்ப லமன் ற தீம்பெரும் பழனத்துப்
பொய்கை யூர்க்குப் போவோ யாகிக்
கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்
செய்த அல்லல் பல்குவ வையெயிற் று
ஐதக லல்குல் மகளிரிவன்
பொய்பொதி கொடுஞ்சொ லோம்புமி
னெனவே.

தோழி தலைமகளது குறிப்பறிந்து வாயிலாகப்புக்க பாணன்கேட்பக் குயவனைக்கூவி இங்ஙனஞ் சொல்லாயோவென்று குயவற்குச்

சொல்லியது.

கஅசு. கூவன்மைந்தன்

1174. குறுந்தொகை - 224. பாலை

கவலை யாத்த அவல நீளிடைச்
சென்றோர் கொடுமை யெற்றித் துஞ்சா
நோயினும் நோயா கின்றே கூவற்
குராலான் படுதுய ரிரவிற் கண்ட



உயர்திணை யூமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே.

பிரிவிடை இறந்துபடுமெனக் கவன்ற தோழி கேட்பக் கிழத்தி உரைத்தது.

கஅஎ. கூற்றங்குமரனார்

1175. நற்றிணை - 244. குறிஞ்சி

விழுந்த மாரிப் பெருந்தண் சாரற்
கூதிர்க் கூதளத் தலரி நாறு
மாதர் வண்டி னயவருந் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுண மோர்க்கும்
உயர்மலை நாடற் குரைத்த லொன்றோ
துயர்மருங் கறியா அன்னைக் கிந்நோய்

தணியுமா றிதுவென வுரைத்த லொன்றோ
செய்யா யாதலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த
செயலை யந்தளி ரன்னவென்
மதனின் மாமைப் பசலையுங் கண்டே.

அறத்தொடுநிலை வலித்த தோழியைத் தலைவி முகம்புக்கது.

## கஅஅ. கேசவனார்
## 1176. பரிபாடல் - 14.

கார்மலி கதழ்பெயல் தலைஇ யேற்ற
நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே
தண்ணறுங் கடம்பின் கமழ்தா தூதும்
வண்ணவண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே
அடியுறை மகளி ராடுந் தோளே
நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே
வாகை யொண்பூப் புரையு முச்சிய
தோகை யார்குரல் மணந்து தணந்தோரை

கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்

நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன் றனவே
நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன
மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
அழுகை மகளிர்க் குழுவை செப்ப
நீரயற் கலித்த நெரிமுகைக் காந்தள்

வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப்

பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மலிந் தன்றுநின் குன்று போர்மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே
கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையின் நறும்புகை நனியமர்ந் தோயே
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே
பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்து
ஒருபெய ரந்தண ரறனமர்ந் தோயே

அன்னை யாகலி னமர்ந்துயாம் நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்

இன்னு மின்னுமவை யாகுக
தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே.

பருவங்கண்டழிந்த தலைமகள் கேட்ப முருகவேளைப் பாவுவாளாய், இப்பருவத்தே தலைமகன் வருமென்பதுபடத் தோழி வற்புறுத்தியது.

இசையும் அவர்(?). பண் நோதிறம்.

## கஅகூ. கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்

### 1177. அகநானூறு - 179. பாலை

விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
வெண்டே ரோடுங் கடங்காய் மருங்கின்

துணைபெரி பரந்த துன்னரும் வியன்காட்டுச்
சிறுகண் யானை நெடுங்கை நீட்டி
வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது
கான்புலந் துகழியுங் கண்ணகன் பரப்பின்
விடுவாய்ச் செங்கணைக் கொடுவி லாடவர்
நன்னிலை பொறித்த கன்னிலை யதார
விரும்புகொள் பூசல் களையுநர்க் காணுச்
சுரஞ்செல விரும்பினி ராயின் இன்னகை
முருக்கெனத் திரண்ட முள்ளெயிற்றுத் துவர்வாய்க்
குவளை நாண்மலர் புரையு முண்கணிம்
மதியேர் வாணுதல் புலம்பப்
பதிபெயர்ந் துறைத லொல்லுமோ நமக்கே.

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச்சொல்லியது.

## 1178. அகநானூறு - 232. குறிஞ்சி

காணினி வாழி தோழி பானுள்
மழைமுழங் காவங் கேட்ட கழைதின்
மாஅல் யானை புலிசெத்து வெரீஇ
இருங்கல் விடரகஞ் சிலம்பப் பெயரும்
பெருங்கல் நாடன் கேண்மை யினியே
குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்
மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணியே ரரும்பிற் பொன்வீ தாஅய்
வியலறை வரிக்கு முன்றிற் குறவர்
மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்
ஆர்கலி விழவுக்களங் கடுப்ப நாளும்
விரவுப்பூம் பலியொடு விரைஇ யன்னை
கடியுடை வியனகர்க் காவல் கண்ணி
முருகென வேலற் றரூஉம்
பருவ மாகப் பயந்தன்றால் நமக்கே.

தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய்ச் சொல்லியது.

## ௧௧௦. கொட்டம்பலவனார்

### 1179. நற்றிணை - 95. குறிஞ்சி

கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
அதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்

கழைக்க ணிரும்பொறை யேறி விசைத்தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளங் கொட்டுமக்
குன்றகத் ததுவே குழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
விடுத்தற் காகா துபிணித்தவென் னெஞ்சே.

தலைமகன் பாங்கற்கு இவ்விடத்து இத்தன்மைத்தென வுரைத்தது.

### ௧௯௧. கொல்லன் அழிசி

### 1180. குறுந்தொகை - 26. குறிஞ்சி

அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்தீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனும் அறியுமக் கொடியோ னையே.

நற்றாயுஞ் செவிலித்தாயும் தலைமகளது வேறுபாடு கண்டு இஃது எற்றினானாயிற்றென்று கட்டுவிச்சியை வினவிக் கட்டுக் காண்கின்ற காலத்துத் தலைமகளது வேறுபாட்டிற்குக் காரணம் பிறிதோர் தெய்வமென்று கூறக்கேட்டுத் தோழி அறத்தொடு நின்றது.

### 1181. குறுந்தொகை - 138. குறிஞ்சி

கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே

எம்மி லயலது ஏழி லும்பர்



மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே.

குறிபிழைத்த தலைமகன் பிற்றைஞான்று இரவுக்குறி வந்துழித் தோழி சிறைப்புறமாகக் கூறியது. இரவுக்குறி நேர்ந்ததூஉமாம்.

## 1182. குறுந்தொகை - 145. நெய்தல்

உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி
கானலஞ் சேர்ப்பன் கொடுமை யேற்றி
ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்
துஞ்சா துறைநரோ டுசாவாத்
துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே.

வரைவிடை ஆற்றாது தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 1183. குறுந்தொகை - 240. முல்லை

பனிப்புத விவர்ந்த பைங்கொடி யவரைக்
கிளிவா யொப்பின் ஒளிவிடு பன்மலர்
வெருக்குப்பல் லுருவின் முல்லையொடு கஞலி
வாடை வந்ததன் றலையும் நோய்பொரக்
கண்டிசின் வாழி தோழி தெண்டிரைக்
கடலாழ் கலத்திற் றோற்றி
மாலை மறையுமவர் மணிநெடுங் குன்றே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக்
கிழத்தியுரைத் தது.

## கக௨. கொல்லிக் கண்ணன்

### 1184. குறுந்தொகை - 34. மருதம்

ஒறுப்ப ஓவலர் மறுப்பத் தேறலர்
தமிய ருறங்குங் கௌவை யின்றாய்
இனியது கேட்டின் புறுகவில் ஊரே
முனாஅது, யானையங் குருகின் கானலம்
பெருந்தோடு

## கோற்றங் கோற்றனூர் 609

அட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை யன்னஎங்
குழைவிளங் காய்நுதற் கிழவனு மவனே.

வரைவு மலிந்தமை ஊர்மேல் வைத்துத் தோழி
கிழத்திக்குச்

சொல்லியது.

### ககூ௩. கொள்ளம்பக்கனார்

### 1185. நற்றிணை - 147. குறிஞ்சி

யாங்கா குவமோ அணிநுதற் குறுமகள்
தேம்படு சாரற் சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவர நீமற்று
எவ்வாய்ச் சென்றனை யவணெனக் கூறி
அன்னை யானுள் கழற முன்னின்று
அருவி யார்க்கும் பெருவரை நாடனை
அறியலு மறியேன் காண்டலு மிலனே
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந் தாடிற்று மிலனென நினைவிலை
பொய்ய லந்தோ வாய்த்தனை யதுகேட்டுத்
தலையிறைஞ் சினளே யன்னை
செலவொழிந் தனையால் அளியைநீ புனத்தே.

சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

### ககூச. கொற்றங் கொற்றனார்

### 1186. அகநானூறு - 54. முல்லை

விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்

காரு மார்கலி தலையின்று தேரும்
ஓவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வா யாழி யுள்ளுறு புருளக்

கடவுக காண்குவம் பாக மதவுநடைத்
39



தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயம்
கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரும் நனைநகு மாலைத்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மக னொற்றி
வருகுவை யாயின் தருகுவென் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே.

வினைமுடித்து மீளுந்தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

**1187. நற்றிணை - 259. குறிஞ்சி**

யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன்வீ

வேங்கை யோங்கிய தேங்கமழ் சாரற்
பெருங்கல் நாடனொ டிரும்புனத் தல்கிச்
செவ்வாய்ப் பைங்கிளி யோப்பி யவ்வாய்ப்
பெருவரை யடுக்கத் தருவியாடிச்
சார லாரம் வண்டுபட நீவிப்
பெரிதமர்ந் தியைந்த கேண்மை சிறுநனி
அரிய போலக் காண்பேன் விரிதிரைக்
கடல்பெயர்ந் தனைய வாகிப்
புலர்பதங் கொண்டன ஏனற் குரலே.

தோழி தலைமகளைச் செறிப்பறிவுறீஇ

வரைவுகடாயது.

## ௧௧௫. கோக்குளமுற்றனார்

### 1188. குறுந்தொகை - 98. முல்லை

இன்ன ளாயினள் நன்னுத லென்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

## 1189. நற்றிணை - 96. நெய்தல்

இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை ததைந்த வெண்மண லொருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே உதுவே
பொம்மற் படுதிரை நம்மோ டாடிப்
புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்
துவரின ரருளிய துறையே அதுவே
கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்

அம்பகை நெறித்தழை யணிபெறத் தைஇத்
தமியர் சென்ற கானல் என்றாங்கு

உள்ளுதோ றுள்ளுதோ றுருகிப்
பைஇப் பையப் பசந்தனை பசப்பே.

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய் வரைவு கடாயது.

ககூசா.

## கோடைபாடிய பெரும்பூதனார்

## 1190. புறநானூறு - 259.

ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது

இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வில் மறவ ரொடுக்கங் காணாய்



செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே.

திணை - கரந்தை ; துறை - செருமலைதல் ; பிள்ளைப் பெயர்ச் சியுமாம்.

## ககஎ. கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான்

### 1191. அகநானூறு - 168. குறிஞ்சி

யாமம் நம்மொடு கழிப்பி நோய்மிகப்
பனிவார் கண்ணேம் வைகுது மினியே
ஆன்றல் வேண்டும் வான்றோய் வெற்ப
பல்லான் குன்றிற் படுநிழற் சேர்ந்த
நல்லான் பரப்பிற் குழுமூ ரங்கண்
கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சின்
உதியன் அட்டில் போல வொலியெழுந்து
அருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பின்
ஈன்றணி யிரும்பிடி தழீஇக் களிறுதன்

தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப
ஒடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்
வாள்வரி வயப்புலி கல்முழை யுரறக்
கானவர் மடிந்த கங்குல்
மானதர்ச் சிறுநெறி வருதல் நீயே.

இரவுக்குறிவந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது.

## ௧௧௮. கோட்டியூர் நல்லந்தையார்

### 1192. நற்றிணை - 211. நெய்தல்

யார்க்குநொந் துரைக்கோ யானே யூர்கடல்
ஓதஞ் சென்ற வுப்புடைச் செறுவிற்



கொடுங்கழி மருங்கி னிரைவேட் டெழுந்த
கருங்காற் குருகின் கோளுய்ந்து போகிய
முடங்குபுற இறவின் மோவா யேற்றை
எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடற் றலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉம்
துறைகெழு கொண்கன் துறந்தன னெனவே.

வரைவுநீட ஒருதலை ஆற்றாளாமென்றதோழி சிறைப்புறமாகத் தன்னுள்ளே சொல்லியது.

## ககூகூ. கோண்மாநெடுங் கோட்டனார்

### 1193. நற்றிணை - 40. மருதம்

நெடுநா ளொண்மணி கடிமனை யிரட்டக்
குரையிலைப் போகிய விரவுமணற் பந்தர்ப்
பெரும்பாண் காவல் பூண்டென வொருசார்த்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
வெறியுற விரிந்த அறுவை மெல்லணைப்
புனிறுநா றுசெவிலியொடு புதல்வன் றுஞ்ச
ஐயவி யணிந்த நெய்யாட் டீரணிப்
பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை யீரிமை பொருந்த
நள்ளென் கங்குற் கள்வன் போல
அகன்றுறை யூர னும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே.

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

## உ00. கோப்பெருஞ்சோழன்

### 1194. குறுந்தொகை - 20. பாலை

அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்

உரவோர் ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே.

செலவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## 1195. குறுந்தொகை - 53. மருதம்

எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
எக்கர் நண்ணிய எம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரோ டுற்ற சூளே.

வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்கு உரைத்தது.

## 1196. குறுந்தொகை - 129. குறிஞ்சி

எலுவ சிறாஅ ரேமுறு நண்ப
புலவர் தோழ கேளா யத்தை
மாக்கடல் நடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குந் திருநுதல்

புதுக்கோள் யானையிற் பிணித்தற்று
லெம்மே.

தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

**1197.** குறுந்தொகை - **147.** பாலை

வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன
மயிரேர் பொழுகிய அங்கலுழ் மாமை
நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல
இன்றுயி லெடுப்புதி கனவே
எள்ளா ரம்ம துணைப்பிரிந் தோரே.

தலைமகன் பிரிந்த விடத்துக் கனாக்கண்டு சொல்லியது.

கோப்பெருஞ்சோழன் 615

**1198.** புறநானூறு - **214.**

செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐய மறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே

குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால், உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனின்
தொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தல்தவத் தலையே.

துணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தான் சொற்றது.

## 1199. புறநானூறு - 215.

கவைக்கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்
தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
ஆய்மக ளட்ட அம்புளி மிதவை
அவரை கொய்யுந ரார மாந்தும்
தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
பிசிரோ னென்பவென் னுயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்

அல்லற் காலை நில்லலன் மன்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ் சோழன், பிசிராந்தையார் வாராரென்ற சான்றோர்க்கு அவர் வருவாரென்று சொல்லியது.



## 1200. புறநானூறு - 216.

கேட்டல் மாத்திரை யல்லது யாவதுங்
காண்ட லில்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராயினும்
அரிதே தோன்ற லதற்பட வொழுகலென்று
ஐயங் கொள்ளன்மி னாறி வாளீர்
இகழ்வில னினியன் யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
காதற் கிழமையு முடைய னதன்றலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவ னொழிக்கவவற் கிடமே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தான் பிசிராந்தையார்க்கு இடனொழிக்க வென்றது.

## உ0க. கோவர்த்தனார்

**1201.** குறுந்தொகை - **66.** முல்லை

மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிண ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே.

பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி பருவமன்றென வற்புறீஇயது.

**1202.** குறுந்தொகை - **194.** முல்லை

என்னெனப் படுங்கொல் தோழி மின்னுவர
வானேர் பிரங்கு மொன்றோ அதனெதிர்.



கான மஞ்ஞை கடிய ஏங்கும்
ஏதில கலந்த இரண்டற்கென்
பேதை நெஞ்சம் பெருமலக் குறுமே.

பருவ வரவின்கண் ஆற்றாளாமெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## உ0உ. கோவூர்கிழார்

**1203.** குறுந்தொகை - **65.** முல்லை

வன்பரற் றெள்ளறல் பருகிய இரலைதன்
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்
வாரா துறையுநர் வரனசைஇ
வருந்திநோந் துறைய விருந்திரோ வெனவே,

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

### 1204. நற்றிணை - 393. நெய்தல்

நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பிற்
கடுஞ்சூல் வயப்பிடி கன்றீன் றுயங்கப்
பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து
வாலா வேழம் வணர்குரல் கவர்தலிற்
கானவ னெறிந்த கடுஞ்செலல் ஞெகிழி
வேய்பயி லடுக்கஞ் சுடர மின்னி
நிலைகிளர் மீனிற் றோன்று நாடன்
இரவின் வருஉ மிடும்பை நாமுய
வரைய வந்த வாய்மைக் கேற்ப
நமர்கொடை நேர்ந்தன ராயி னவருடன்

நேர்வர்கொல் வாழி தோழிநங் காதலர்

புதுவ ராகிய வரவும்நின்
வதுவைநா ளொடுக்கமுங் காணுங் காலே.

வரைவு மலிந்தது.



### 1205. புறநானூறு - 31.

சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை
உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே
நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயும்நின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் புனைகழல் மறவர்

காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.

திணை - வாகை ; துறை - அரசவாகை ;
மழபுலவஞ்சியுமாம்.

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 1206. புறநானூறு - 32.

கடும்பி னடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியுந் தருகுவ னொன்றோ

வண்ணம் நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையுந் தருகுவ னெல்லாம்
பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்
தொன்னிலக் கிழமை சுட்டின் நன்மதி
வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த



பசுமட் குரூஉத்திரள் போலவவன்
கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 1207. புறநானூறு - 33.

கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன் மான்தசை
சொரிந்த வட்டியும் ஆய்மகள் தயிர்கொடு வந்த தசும்பும்
நிறைய
ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்

குளக்கீழ் விளைந்த களக்கோள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப வுவந்தனர் பெயருந்
தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
ஏழெயிற் கதவ மெறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை
பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை பொலியப்
புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்துஞ் செம்மற்
றம்மநின் வெம்முனை யிருக்கை வல்லோன் தைஇய
வரிவனப் புற்ற
அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்பக்
காம விருவ ரல்லது யாமத்துத்
தனிமகன் வழங்காப் பனிமலர்க் காவின்
ஓதுக்கின் திணிமணற் புதுப்பூம் பள்ளி
வாயில் மாடந்தொறு மைவிடை வீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 1208. புறநானூறு - 41.

காலனுங் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே
திசையிரு நான்கு முற்க முற்கவும்
பெருமரத்து, இலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்
எயிறுநிலத்து வீழவு மெண்ணெ யாடவும்
களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிறன் நோக்கி
மையல் கொண்ட ஏமமி லிருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்கு
எவ்வங் கரக்கும் பைதல் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றால் தானே காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவிற்
செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே.

திணை - வஞ்சி ; துறை - கொற்றவள்ளை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## 1209. புறநானூறு - 44.

இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ

திருந்தரை நோன்வெளில் வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து
அலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்

## கோவூர்கிழார்

621

இன்னா தம்ம ஈங்கினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்
அறவை யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான் ஆவூர் முற்றியிருந்த காலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியைப் பாடியது.

## 1210. புறநானூறு - 45.

இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
இருவீர் வேற லியற்கையு மன்றே, அதனாற்
குடிப்பொரு ளன்றுநுஞ் செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் பாடியது.

## 1211. புறநானூறு - 46.

நீயே, புறவி னல்ல லன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்

களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி

விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார் பாடி யுய்யக்கொண்டது.

## 1212. புறநானூறு - 47.

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்
மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி புழைநின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழிக் கோவூர்கிழார் பாடி உய்யக் கொண்டது.

## 1213. புறநானூறு - 68.

உடும்புரித் தன்ன என்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்து
ஈங்கெவன் செய்தியோ பாண பூண்சுமந்து
அம்பகட் டெழிலிய செம்பொறி யாகத்து



மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை
புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்
உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்கு
ஏவா னாகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்
தணிபறை யறையு மணிகொள் தேர்வழிக்
கடுங்கட் பருகுநர் நடுங்குகை யுகுத்த
நறுஞ்சே றாடிய வறுந்தலை யானை

நெடுநகர் வரைப்பிற் படுமுழா வோர்க்கும்
உறந்தை யோனே குருசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே.

திணை - பாடாண்டிணை ; துறை - பாணாற்றுப்படை.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## 1214. புறநானூறு - 70.

தேஎந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண
கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன
நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
இனிய காண்கிவண் தணிகெனக் கூறி
வினவ லானா முதுவா யிரவல
தைஇத் திங்கட் டண்கயம் போலக்
கொளக்கொளக் குறைபடாக் கூழுடை
அடுதீ யல்லது சுடுதீ யறியாது
வியனகர்
இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்
கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி

நாற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பல் ஞாங்க ரூதுங்
கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழு மோதி யொண்ணுதல்

இன்னகை விறலியொடு மென்மெல இயலிச்
செல்வை யாயிற் செல்வை யாகுவை
விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்
தலைப்பா டன்றவ னீகை
நினைக்க வேண்டா வாழ்கவன் றாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - பாணாற்றுப்படை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## 1215. புறநானூறு - 308.

பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே யென்னை

சார்ந்தா ரகல முளங்கழிந் தன்றே
உளங்கழி சுடர்ப்படை யேந்திநம்

பெருவிறல்
ஓச்சினன் துரந்த காலை மற்றவன்
புன்தலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத்த னவே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

## 1216. புறநானூறு - 373.

உருமிசை முரச முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா அழிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
இழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்தே
... ... ...தண்ட மாப்பொறி



மடக்கண் மயிலியல் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்தோள் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவ... ... ...
... ....யணியப் புரவி வாழ்கெனச்
சொன்னிழ வின்மையின் நன்னிழற் சேர

நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅர்
அம்பழி பொழுதிற் றமர்முகங் காணு
... ... ...ற் றெக்கான
வேந்து புறங்கொடுத்த வீய்ந்துகு பறந்தலை
மாட மயங்கெரி மண்டிக் கோடிறுபு
உருமெறி மலையி னிருநிலஞ் சேரச்
சென்றோன் மன்ற சொ... ...
... ...ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
அஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணைதன ற...ளம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ்
சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
கொண்டன ரென்ப பெரியோர் யானும்
அங்கண் மாக்கிணை யதிர வொற்ற
... ...லெனாயினுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் பிறரிவ ணின்மையின்
மன்னெயில் முகவைக்கு வந்திசின் பெரும

பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
கணநரி திரிதரூஉ மாங்கண் நிணனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - வாகை; துறை-மறக்களவழி, ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரெறிந்
தானைப் பாடியது.
40



1217. புறநானூறு - 382.

கடற்படை யடற்கொண்டி
மண்டுற்ற மலிர்நோன்றாட்
டண்சோழ நாட்டுப் பொருநன்
அலங்குளை யணியிவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் வேண்டேம்
அவற்பாடுதும் அவன்தாள் வாழியவென
நெய்குய்ய வூனவின்ற
பல்சோற்றான் இன்சுவைய
நல்குரவின் பசித்துன்பினின்
முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும்
யானும், ஏழ்மணியங் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவைநாவின்
நிறனுற்ற அராஅப்போலும்
வறனொரீஇ வழங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் தோன்றல்
நினதே, முந்நீ ருடுத்த விவ் வியனுல கறிய
எனதே, கிடைக்கா ழன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்
எறிதொறும் நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறும் நடுங்க ஏத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

**1218.** புறநானூறு - **386.**

நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடு கிழித்து வாடூன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை



ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோ னெந்தை யிசைதன தாக
வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, கால்தந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினை நிலைக்குத்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கல்நன் னாட் டுமணொலிக்குத்து
அன்ன நன்னாட்டுப் பொருநம் யாமே

பொராஅப் பொருநரேம்
குணதிசை நின்று குடமுதற் செலினும்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்
தென்திசை நின்று குறுகாது நீடினும்
யாண்டும் நிற்க வெள்ளியாம்
வேண்டிய துணர்ந்தோன் தாள்வா ழியவே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## 1219. புறநானூறு - 400.

மாகவிசும்பின் வெண்திங்கள்

மூவைந்தான் முறைமுற்றக்
கடல்நடுவட் கண்டன்னவென்
இயமிசையா மரபேத்திக்
கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர்துஞ்சவுந் தான்துஞ்சான்
உலகுகாக்கு முயர்ெ... ...க்
கேட்டோ னெந்தையென் தெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது

தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறு... ...
... ... ... லவான
கலிங்க மளித்திட் டென்னரை நோக்கி
நாரரி நறவின் நாண்மகிழ் தூங்குந்து
போதறியேன் பதிப்பழகவும்
தன்பகை கடிதலன்றியுஞ் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்தத... ... ...
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்து
இருங்கழி யிழிதரு... ...கலிவங்கந்
தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துத்
துறைதொறும் பிணிக்கு நல்லூர்
உறைவின் யாணர்... ...கிழவோனே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

## ௨௦௩. கோவேங்கைப் பெருங்கதவனார்

### 1220. குறுந்தொகை - 134. குறிஞ்சி

அம்ம வாழி தோழி நம்மொடு
பிரிவின் றாயின் நன்றுமன் றில்ல
குறும்பொறைத் தடைஇய நெடுந்தாள்
வேங்கைப்

பூவுடை யலங்குசினை புலம்பத் தாக்கிக்
கல்பொரு திரங்குங் கதழ்வீ ழருவி
நிலங்கொள் பாம்பி னிழிதரும்
விலங்குமலை நாடனொடு கலந்த நட்பே.

வரைவிடை ஆற்றாளாகிய தலைமகள் ஆற்றுவிக்குந் தோழிக்குச் சொல்லியது.

### உ௦௪. கோழிக் கொற்றனார்

### 1221. குறுந்தொகை - 276. குறிஞ்சி

பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவள்
உருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில் காப்போ ரறிதலும் அறியார்
முறையுடை யரசன் செங்கோல் அவையத்து
யான்தற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
அளிதோ தானேயிவ் வழுங்க லூரே.

தோழிக்குக் குறைமறாமல் தலைமகன் கூறியது.

### உ௦௫.

### கோளியூர்கிழார்மகனார்செழியனார்

### 1222. நற்றிணை - 383. குறிஞ்சி

கல்லயற் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கலந் தொடலை யன்ன குருளை
வயப்புனிற் றிரும்பிணப் பசித்தென வயப்புலி
புகர்முகஞ் சிதையத் தாக்கிக் களிறட்டு
உருமிசை யுரறும் உட்குவரு நடுநாள்
அருளினை போலினும் அருளா யன்றே
கனையிருள் புதைத்த அஞ்சுவரு மியவிற்
பாம்புடன் றிரிதரு முருமோடு
ஓங்குவரை நாட நீ வருத லானே.

தோழி ஆறுபார்த்துற்றுச் சொல்லியது.

## ௨௦௬. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்

### 1223. புறநானூறு - 54.

எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல இடையின்று குறுகிச்



செம்மல் நாளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே

---

இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வானம் நாண வரையாது சென்றோர்க்கு

ஆனா தீயுங் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி
மாசு ணுடுக்கை மடிவா யிடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
சேரமான் குட்டுவன் கோதையைப் பாடியது.

## 1224. புறநானூறு - 61.

கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்
சிறுமாண் நெய்த லாம்பலொடு கட்கும்
மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட
பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்
புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக

விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி
நீடுகதிர்க் கழனிச் சூடுதடு மாறும்

வன்கை வினைஞர் புன்றலைச் சிரூஅர்
தெங்குபடு வியன்பழ முனையின் தந்தையர்
குறைக்கண் நெடும்போ ரேறி விசைத்தெழுந்து
செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்
வைகல் யாணர் நன்னாட்டுப் பொருநன்
எஃகுவிளங்கு தடக்கை யியல்தேர்ச் சென்னி
சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனின்
தாமறி குவர்தமக் குறுதி யாமவன்
எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்

## கோனாட்டு...மாடலன் மதுரைக் குமரனார் 631

வாழக் கண்டன்று மிலமே தாழாது
திருந்தடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்ட லதனினு மிலமே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சோழன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னியைப் பாடியது.

## 1225. புறநானூறு - 167.

நீயே, அமர்காணின் அமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர்நிற்றலின்

வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்கின் னாயே
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே
அதனால், நீயுமொன் றினியை அவருமொன் றினியர்
ஒவ்வா யாவுள மற்றே வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகமஃது
என்னோ பெரும வுரைத்திசி னெமக்கே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

ஏனாதி திருக்கிள்ளியைப் பாடியது.

## 1226. புறநானூறு - 180.

நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந் தாங்கி யமரகத்து
இரும்புசுவைக் கொண்ட விழுப்பு ணோய்தீர்ந்து
மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்து
ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல

யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
உண்ணு மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை, பாணாற்றுப் படையுமாம்.

ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறனைப் பாடியது.

## 1227. புறநானூறு - 197.

வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரின ரெனாஅக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் களிற்றின ரெனாஅ
உருமுரற் றன்ன உட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றிய ரெனாஅ

மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்ன ராயினும் எம்வயிற்

பாடறிந் தொழுகும் பண்பி னோரே
மிகப்பே ரெவ்வ முறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய
பெருந்திருமாவளவன் பரி
சில் நீட்டித்தானைப் பாடியது.

## 1228. புறநானூறு - 394.

சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
ஒலிகதிர்க் கழனி வெண்குடைக் கிழவோன்

சங்கவருணர் என்னும் நாகரியர்

633

வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினும்
உள்ள லோம்புமின் உயர்மொழிப் புலவீர்

யானும், இருள்நிலாக் கழிந்த பகல்செய் வைகறை
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
அகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்

கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே அதற்கொண்டு
இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்
துன்னரும் பரிசில் தருமென
என்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
சோழிய ஏனாதி திருக்குட்டுவனைப் பாடியது.

## ௨௦௭. சங்கவருணர் என்னும் நாகரியர்

### 1229. புறநானூறு - 360.

பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்வினாற் பெருங்கொடையர்
கலுழ்நனையால் தண்டேறலர்

கனிகுய்யாற் கொழுந்துவையர்
தாழுவந்து தழூஉமொழியர்
பயனுறுப்பப் பலர்க்காற்றி

ஏம மாக இந்நிலம் ஆண்டோர்
சிலரே பெரும கேளினி நாளும்
பலரே தகையஃ தறியா தோரே



அன்னோர் செல்வமு மன்னி நில்லாது
இன்னு மற்றதன் பண்பே யதனால்
நிச்சமு மொழுக்க முட்டிலை பரிசில்
நச்சுவர் கையின் இரப்ப லோம்புமதி யச்சுவரப்
பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளில் நிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புல்மே லமர்ந்துண்டு
அழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பருத்துண் டோரே.

திணை - காஞ்சி; துறை - பெருங்காஞ்சி.
தந்துமாறனைப் பாடியது.

## உ௦அ. சத்தி நாதனார்

### 1230. குறுந்தொகை - 119. குறிஞ்சி

சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை
கான யானை யணங்கி யாஅங்கு
இளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையளெம் அணங்கி யோளே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

## உ௦கூ.

## சல்லியங்குமரனார்

### 1231. நற்றிணை - 141. பாலை

இருஞ்சே றாடிய கொடுங்கவுட் கயவாய்
மாரி யானையின் மருங்குல் தீண்டிப்
பொரியரை ஞெமிர்ந்த புழற்காற் கொன்றை
நீடிய சடையோ டாடா மேனிக்
குன்றுறை தவசியர் போலப் பலவுடன்
என்றூழ் நீளிடைப் பொற்பத் தோன்றும்

அருஞ்சுர மெளியமன் நினக்கே பருந்துபடப்
பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
ஏந்துகோட்டு யானை யிசைவெங் கிள்ளி
வம்பணி யுயர்கொடி யம்பர் சூழ்ந்த
அரிசிலந் தண்ணற லன்னவிவள்
விரியொலி கூந்தல் விட்டமை கலனே.

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் சொல்லிச் செலவழுங்கியது.

## உகO. சாகலாசனர்

### 1232. அகநானூறு - 16. மருதம்

நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யவிரிதழ் புரையும்
மாசி லங்கை மணிமரு ளவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூடெயிற் றரிவை குறுகினள் யாவருங்
காணுந ரின்மையிற் செத்தனள் பேணிப்

பொலங்கலஞ் சுமந்த பூண்தாங் கிளமுலை
வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமக ளெவன்பே துற்றனை
நீயுந் தாயை யிவற்கென யான்றற்
கரைய வந்து விரைவனள் கவைஇக்
களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்து
அணங்கருங் கடவு ளன்னோள்நின்
மகன்தா யாதல் புரைவதாங் கெனவே.

பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன் யாரையும் அறியே னென்றாற்குத் தலைமகள் சொல்லியது.



## 1233. அகநானூறு - 270. நெய்தல்

இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅல் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து
இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையும்
மெல்லம் புலம்ப நெகிழ்ந்தன தோளே
சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை
பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயுங்
கானலம் பெருந்துறை நோக்கி யிவளே
கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன
அம்மா மேனி தொன்னலந் தொலையத்
துஞ்சாக் கண்ணள் அலமரும் நீயே
கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை
இன்னா துயங்குங் கங்குலும்
நம்மூ ருள்ளுவை நோகோ யானே.

பகற்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

உகக. சாத்தந்தையார்

**1234.** நற்றிணை - **26.** பாலை

நோகோ யானே நெகிழ்ந்தன வளையே
சேவல் சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச்
சுடர்முழு தெறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவி னத்தம் நும்மொடு
கெடுதுணை யாகிய தவறோ வையெயிற்றுப்
பொன்பொதிந் தன்ன சுணங்கின்
இருஞ்சூ ழோதிப் பெருந்தோ ளாட்கே.

தலைவி பிரிவுணர்ந்து வேறுபட்டமை சொல்லித் தோழி செலவழுங்குவித்தது.

## சாத்தந்தையார் 637

### 1235. புறநானூறு - 80.

இன்கடுங் கள்ளின் ஆமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங் கின்றே ஒருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
நல்கினும் நல்கா னாயினும் வெல்போர்ப்
பொரலருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை யொசிய எற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே.

திணை - தும்பை ; துறை - எருமைமறம்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி முக்காவனாட்டுஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றானைப் பாடியது.

## 1236. புறநானூறு - 81.

ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழங்க லானாவே
யார்கொ லளியர் தாமே ஆர்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சோழன்போர்வைக்கோப் பெருநற்கிள்ளி முக்காவனாட்டுஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றானைப் பாடியது.

## 1237. புறநானூறு - 82.

சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற்
றுற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ



ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சோழன்போர்வைக்கோப் பெருநற்கிள்ளி முக்காவனாட்டுஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றானைப் பாடியது.

## 1238. புறநானூறு - 287.

துடியெறியும் புலைய
எறிகோல் கொள்ளும் இழிசின
கால மாரியின் அம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை யண்ணல் யானை
இலங்குவான் மருப்பின் நுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்
தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசில் மகளிர் மன்றல் நன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப அதனால்
வம்ப வேந்தன் தானை
இம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.

திணை - கரந்தை ; துறை - நீண்மொழி.

## உகஉ. சாத்தனார்

## 1239. குறுந்தொகை - 349. நெய்தல்

அடும்பவி ழணிமலர் சிதைஇய மீனருந்தித்
தடந்தாள் நாரை யிருக்கு மெக்கர்த்
தண்ணந் துறைவற் றொடுத்து நந்நலங்
கொள்வா மென்றி தோழி கொள்வாம்
இடுக்கண் அஞ்சி யிரந்தோர் வேண்டிய

சிறுவெண்டேரையார் 639

கொடுத்தவை தாவெனக் கூறலின்
இன்னா தோநம் மின்னுயி ரிழவே.

பரத்தை மாட்டுப் பிரிந்துவந்த தலைமகன் கேட்கும்
அண்மைய
ளாகத் தோழிக்குக் கிழத்தி கூறியது.

## உகஅ. சிறுமோலிகனார்

### 1240. நற்றிணை - 61. குறிஞ்சி

கேளா யெல்ல தோழி யல்கல்
வேணவா நலிய வெய்ய வுயிரா
ஏமான் பிணையின் வருந்தினெ னாகத்

துயர்மருங் கறிந்தனள் போல அன்னை

அஞ்சா யோவென் குறுமக ளென்றலிற்
சொல்வெளிப் படாமை மெல்லவென் னெஞ்சிற்
படுமழை பொழிந்த பாறை மருங்கிற்
சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்
கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்
கண்ணும் படுமோ என்றிசின் யானே.

தலைவன் வரவுணர்ந்து தலைவிக்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

## உகசா. சிறுவெண்டேரையார்

### 1241. புறநானூறு - 362.

ஞாயிற் றன்ன ஆய்மணி மிடைந்த
மதியுறழ் ஆரம் மார்பிற் புரளப்
பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்பப்
பொழிலகம் பரந்த பெ... ...
... ... ...கும விசய வெண்கொடி
அணங்குருத் தன்ன கணங்கொள் தானைக் கூற்றத்
தன்ன மாற்றரு முன்பின்
ஆக்குரற் காண்பி னந்த ணாளர்

நான்மறைக் குறி... ...யின்
அறங்குறித் தன்று பொருளா குதலின்
மருள்தீர்ந்து மயக்கொரீஇக்
கைபெய்தநீர் கடற்பரப்ப
ஆமிருந்த அடைநல்கிச்
சோறு கொடுத்து மிகப்பெரிதும்
வீறுசான ... ...நன்றுரு
சிறுவெள் ளென்பின் நெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கண்
காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொடு
இல்லென் றில்வயிற் பெயர மெல்ல
இடஞ்சிறி தொதுங்க லஞ்சி
உடம்பொடுஞ் சென்மா ருயர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல் ; துறை - பெருங்காஞ்சி.
அவனை(?)ப் பாடியது.

## உகரு. சிறைக்குடி ஆந்தையார்

**1242.** குறுந்தொகை - **56.** பாலை

வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கையள் எம்மொ டுணீஇயர்
வருகதில் லம்ம தானே
அளியளோ அளியளென் னெஞ்சமர்ந்

தோளே.

தலைமகன் கொண்டுதலைப்பிரிதலை மறுத்துத் தானே போகின்ற

வழி இடைச்சுரத்தின் பொல்லாங்கு கண்டு கூறியது.

**1243.** குறுந்தொகை - **57.** நெய்தல்

பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு

சிறைக்குடி ஆந்தையார்

641

உடனுயிர் போகுக தில்ல கடனறிந்து
இருவே மாகிய வுலகத்து
ஒருவே மாகிய புன்மைநாம் உயற்கே.

காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

தோழிக்குச்

**1244.** குறுந்தொகை - **62.** குறிஞ்சி

கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ டிடையிடுபு விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாய்வது முயங்கற்கு மினிதே.

தலைமகன் இடந்தலைப்பாட்டின்கட் கூடலுறும் சொல்லியது.

நெஞ்சிற்குச்

**1245.** குறுந்தொகை - **132.** குறிஞ்சி

கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே
யாங்குமறந் தமைகோ யானே ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பி னன்ன
சாஅய் நோக்கினள் மாஅ யோளே.

கழற்றெதிர்மறை.

**1246.** குறுந்தொகை - **168.** பாலை

மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து
பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே நன்மா மேனி

புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்
41



மணத்தலுந் தணத்தலு மிலமே
பிரியின் வாழ்த லதனினு மிலமே.

பொருள்வலிக்கும் நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

### 1247. குறுந்தொகை - 222. குறிஞ்சி

தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரிந் உறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே.

பெட்ட வாயில்பெற்று இரவு வலியுறுத்தது.

### 1248. குறுந்தொகை - 273. பாலை

அல்குறு பொழுதிற் றாதுமுகை தயங்கப்
பெருங்கா டுளரு மசைவளி போலத்
தண்ணிய கமழு மொண்ணுத லோயே
நொந்தனை யாயிற் கண்டது மொழிவல்

பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்பு
அறியா தேறிய மடவோன் போல
ஏமாந் தன்றிவ் வுலகம்
நாமுளே மாகப் பிரியலேந் தெளிமே.

பிரிவர் எனக்கவன்ற தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

**1249.** குறுந்தொகை - **300.** குறிஞ்சி

குவளை நாறுங் குவையிருங் கூந்தல்
ஆம்பல் நாறுந் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கொங்கி னன்ன
நுண்பல் தித்தி மாஅ யோயே
நீயே, அஞ்ச லென்றவென் சொல்லஞ் சலையே



யானே, குறுங்கா லன்னங் குவவுமணற் சேக்கும்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூ ழலன்யான் நின்னுடை நட்பே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சமும் வன்புறையும் கூறியது.

**1250.** நற்றிணை - **16.** பாலை

புணரிற் புணராது பொருளே பொருள்வயிற்
பிரியிற் புணராது புணர்வே ஆயிடைச்
செல்லினுஞ் செல்லா யாயினும் நல்லதற்கு
உரியை வாழியென் னெஞ்சே பொருளே
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியிற் கெடுவ யானே
விழுநீர் வியலகந் தூணி யாக
எழுமா ணளக்கும் விழுநெதி பெறினும்
கனங்குழைக் கமர்த்த சேயரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனென்
எனைய வாகுக வாழிய பொருளே.

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செல வழுங்கியது.

## உகசு. சீத்தலைச்சாத்தனார்

### 1251. அகநானூறு - 53. பாலை

அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளங்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய
நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற் றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சில்

உள்ளுநன் வாடிய சுரிமூக்கு நொள்ளை



பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுக லின்னிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை நீந்தி யென்றும்
இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காதல்
அருளே காதல ரென்றி நீயே.

வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1252.** அகநானூறு - **134.** முல்லை

வானம் வாய்ப்பக் கவினிக் கானங்
கமஞ்சூல் மாமழை கார்பயந் திறுத்தென
மணிமருள் பூவை யணிமல ரிடையிடைச்
செம்புற மூதாய் பரத்தலின் நன்பல
முல்லை வீகழல் தாஅய் வல்லோன்
செய்கை யன்ன செந்நிலப் புறவின்
வாஅப் பாணி வயங்குதொழிற் கலிமாத்
தாஅத் தாளிணை மெல்ல வொதுங்க
இடிமறந் தேமதி வலவ குவிமுகை
வாழை வான்பூ ஊழுறு புதிர்ந்த
ஒழிகுலை யன்ன திரிமருப் பேற்றொடு
கணைக்கா லம்பிணைக் காமர் புணர்நிலை
கடுமான் தேரொலி கேட்பின்
நடுநாட் கூட்ட மாகலு முண்டே.

வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகற்குரைத்தது.

## 1253. அகநானூறு - 229. பாலை

பகல்செய் பல்கதிர்ப் பருதியஞ் செல்வன்
அகல்வாய் வானத் தாழி போழ்ந்தென
நீரற வறந்த நிரம்பா நீளிடைக்
கயந்தலைக் குழவிக் கவியுகிர் மடப்பிடி

குளகுமறுத் துயங்கிய மருங்குல் பலவுடன்
பாழூர்க் குரம்பையிற் றோன்று மாங்கண்
நெடுஞ்சே ணிடைய குன்றம் போகிய
பொய்வ லாளர் முயன்றுசெய் பெரும்பொருள்
நம்மின் றுயினு முடிக வல்லெனப்
பெருந்துனி மேவல் நல்கூர் குறுமகள்
நோய்மலிந் துகுத்த நொசிவரற் சின்னீர்
பல்லிதழ் மழைக்கட் பாவை மாய்ப்பப்
பொன்னேர் பசலை யூர்தரப் பொறிவரி
நன்மா மேனி தொலைதல் நோக்கி
இனைய லென்றி தோழி சினைய
பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவி ழலரி கொழுதித் தாதருந்து
அந்தளிர் மாஅத் தலங்கல் மீமிசைச்
செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்
இன்னிள வேனிலும் வாரார்
இன்னே வருது மெனத்தெளித் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறையெதிரழிந்து சொல்லியது.

**1254.** அகநானூறு - **306.** மருதம்

பெரும்பெயர் மகிழ்ந பேணு தகன்மோ
பரந்த பொய்கைப் பிரம்பொடு நீடிய
முட்கொம் பீங்கைத் துய்த்தலைப் புதுவீ
ஈன்ற மாத்தி னிளந்தளிர் வருட
வார்குரு குறங்கு நீர்சூழ் வளவயற்
கழனிக் கரும்பின் சாய்ப்புற மூர்ந்து
பழன யாமை பசுவெயிற் கொள்ளும்
நெல்லுடை மறுகின் நன்ன ரூர
இதுவோ மற்றுநின் செம்மல் மாண்ட
மதியே ரொண்ணுதல் வயங்கிழை யொருத்தி
இகழ்ந்த சொல்லுஞ் சொல்லிச் சிவந்த



ஆயிதழ் மழைக்கண் நோயுற நோக்கித்
தண்ணறுங் கமழ்தார் பரீஇயினள் நும்மொடு
ஊடினள் சிறுதுனி செய்தெம்
மணல்மலி மறுகின் இறந்திசி னோளே.

தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.

**1255. அகநானூறு - 320. நெய்தல்**

ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇத்
திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்
தழையணி யல்குற் செல்வத் தங்கையர்
விழவயர் மறுகின் விலையெனப் பகருங்
கானலஞ் சிறுகுடிப் பெருநீர்ச் சேர்ப்ப
மலரே ருண்கணெந் தோழி யெவ்வம்
அலர்வாய் நீங்கநீ யருளாய் பொய்ப்பினும்
நெடுங்கழி துழைஇய குறுங்கா லன்னம்
அடும்பம ரெக்க ரஞ்சிறை யுளருந்
தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை
நடுங்கயிர் போழ்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
வண்டற் பாவை சிதைய வந்துநீ
தோள்புதி துண்ட ஞான்றைச்
சூளும் பொய்யோ கடலறி கரியே.

பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி
வரைவுகடாயது.

1256. குறுந்தொகை - 154. பாலை

யாங்கறிந் தனர்கொல் தோழி பாம்பின்
உரிநிமிர்ந் தன்ன வுருப்பவி ரமையத்து
இரைவேட் டெழுந்த சேவ லுள்ளிப்
பொறிமயி ரெருத்திற் குறுநடைப் பேடை
பொரிகாற் கள்ளி விரிகா யங்கவட்டுத்

அருஞ்சுர வைப்பிற் கானம்
பிரிந்துசே ணுறைதல் வல்லு வோரே.

பொருள்வயிற்பிரிந்த தலைமகனை நினைந்து தலைமகள் தோழிக்கு உரைத்தது.

**1257. நற்றிணை - 36. குறிஞ்சி**

குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
பூநுத லிரும்பிடி புலம்பத் தாக்கித்
தாழ்நீர் நனந்தலைப் பெருங்களி றடூஉங்
கல்லக வெற்பன் சொல்லிற் றேறி
5 யாமெந் நலனிழந் தனமே யாமத்து
அலர்வாய்ப் பெண்டி ரம்பலொ டொன்றிப்
புரையில் தீமொழி பயிற்றிய வுரையெடுத்து
ஆனுக் கௌவைத் தாகத்
தானென் னிழந்ததிவ் வழுங்க லூரே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழிசொல்லியது.

**1258. நற்றிணை - 127. நெய்தல்**

இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை
இறவெறி திவலையிற் பனிக்கும் பாக்கத்து
உவன்வரி னெவனோ பாண பேதை
கொழுமீ னார்கைச் செழுநகர் நிறைந்த
கல்லாக் கதவர் தன்னைய ராகவும்
வண்ட லாயமொடு பண்டுதா னாடிய
ஈனாப் பாவை தலையிட் டோரும்
மெல்லம் புலம்ப னன்றியுஞ்
செல்வா மென்னுங் கான லானே.

பாணர்க்குத் தோழி வாயின் மறுத்தது.

## 1259. நற்றிணை - 339. குறிஞ்சி

தோலாக் காதலர் துறந்துநம் அருளார்
அலர்வ தன்றுகொ லிதுவென் று நன்றும்

—

புலரா நெஞ்சமொடு புதுவ கூறி
இருவேம் நீந்தும் பருவரல் வெள்ளம்
அறிந்தனள் போலு மன்னை சிறந்த
சீர்கெழு வியனகர் வருவனள் முயங்கி
நீரலைக் கலைஇய ஈரிதழ்த் தொடையல்
ஒண்ணுதற் பெதும்பை நன்னலம் பெறீஇ
மின்னே ரோதி யிவளொடு நாளைப்
பன்மலர் கஞலிய வெறிகமழ் வேலித்
தெண்ணீர் மணிச்சுனை யாடின்
என்னோ மகளிர்தம் பண்பென் றோளே.

சிறைப்புறமாகத் தலைவன்கேட்பச் சொல்லியது-

**1260.** புறநானூறு - **59.**

ஆரந் தாழ்ந்த அணிகிளர் மார்பின்
தாள்தோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந் தளித்தல்
தேற்றாய் பெரும பொய்யே யென்றும்
காய்சினந் தவிராது கடலூர் பெழுதரும்
ஞாயி றனையைநின் பகைவர்க்குத்
திங்க ளனையை யெம்ம னோர்க்கே.

திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.
பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் பாடியது

## ௨௧௭. செங்கண்ணனார்

**1261.** அகநானூறு - **39.** பாலை

ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்து
உள்ளியு மறிதிரோ எம்மென யாழநின்.
முள்ளெயிற் றுத் துவர்வாய் முறுவ லழுங்க
நோய்முந் துறுத்து நொதுமல் மொழியல்நின்

ஆய்நல மறப்பெனோ மற்றே சேணிகந்து
ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி யொண்பொறி



படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுல் மீமிசை வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயி னோடலின்
அதர்கெடுத் தலறிய சாத்தொ டொராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்து
இனந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு
ஞான்றுதோன் றவிர்சுடர் மான்றோட் பட்டெனக்
கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி
அருஞ்செல வாற்றா வாரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாயல் நவ்வி பட்டென

இலங்குவளை செறியா இகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்டு
இன்னகை யினைய மாகவு மெம்வயின்

ஊடல் யாங்குவந் தன்றெனா யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்
ஏற்றேக் கற்ற வுலமரல்
போற்று யாகலிற் புலத்தியா லெம்மே.

பொருண் முற்றிய தலைமகன் தலைமகளைக் கண்டு சொல்லியது. இப்பாட்டு கிலத்தாற்பாலை.

## 1262. நற்றிணை - 122. குறிஞ்சி

இருங்க லடுக்கத் தென்னைய ருழுத
கருங்காற் செந்தினை கடியு முண்டன
கல்லக வரைப்பிற் கான்கெழு சிறுகுடி
மல்லல் மருங்கின் மௌவலும் அரும்பின
நகையுரு முரா று நாம நள்ளிருள்
வரையக நாடன் வரூஉ மென்பது

உண்டுகொ லன்றுகொல் யாதுகொல் மற்றென

நின்று, மதிவ லுள்ளமொடு மறைந்தவை யாடி
அன்னையு மமரா முகத்தினள் நின்னொடு

நீயே சூழ்தல் வேண்டும்
பூவேய் கண்ணியது பொருந்து மாறே.

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்த் தலைவன் கேட்பச் சொல்லியது.

## உசஅ. செம்பியனார்

### 1263. நற்றிணை - 102. குறிஞ்சி

கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி
அஞ்ச லோம்பி யார்பதங் கொண்டு
நின்குறை முடித்த பின்றை யென்குறை
செய்தல் வேண்டுமால் கைதொழு திரப்பல்
பல்கோட் பலவின் சார லவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயின்
அம்மலை கிழவோர்க் குரைமதி யிம்மலைக்
கானக் குறவர் மடமகள்
ஏனல் காவ லாயின ளெனவே.

காமமிக்க கழிபடர்கிளவி.

## உசகூ. செம்புலப் பெயனீரார்

### 1264. குறுந்தொகை - 40. குறிஞ்சி

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல

அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர்ப் பிரிவரெனக் கருதி யஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு தலைமகன் கூறியது.

## ௨௨0. செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார்

### 1265. அகநானூறு - 177. பாலை

தொன்னலஞ் சிதையச் சாஅ யல்கலும்
இன்னும் வாரா ரினியெவன் செய்கெனப்
பெரும்புலம் புறுத லோம்புமதி சிறுகண்
இரும்பிடித் தடக்கை மான நெய்யருந்து
ஒருங்குபிணித் தியன்ற வெறிகொ ளைம்பாற்
றேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்
கழையமல் சிலம்பின் வழைதலை வாடக்
கதிர்கதங் கற்ற வேகல் நெறியிடைப்
பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
அயிரியாற் றடைகரை வயிரின் நரலுங்

காடிறந் தகன்றோர் நீடின ராயினும்
வல்லே வருவர் போலும் வென்வேல்
இலைநிறம் பெயர வோச்சி மாற்றோர்
மலைமருள் யானை மண்டம ரொழித்த
கழற்காற் பண்ணன் காவிரி வடவயின்
நிழற்கயந் தழீஇய நெடுங்கால் மாவின்
தளிரே ராகந் தகைபெற முகைந்த
அணங்குடை வனமுலைத் தாஅயநின்
சுணங்கடை வரித்தல் தொய்யிலை நினைந்தே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

## உஉக. செய்திவள்ளுவன் பெருஞ்சாத்தன்

### 1266. குறுந்தொகை - 228. நெய்தல்

வீழ்தாழ் தாழை ஊழுறு கொழுமுகை
குருகுள ரிறகின் விரிபுதோ டவிழும்
கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்

திரைவந்து பெயரு மென்பநத் துறந்து
நெடுஞ்சே ணட்டா ராயினும்
நெஞ்சிற் கணியரோ தண்கடல் நாட்டே.

கடிநகர் வேறுபடாது நன்காற்றினாய் என்ற தோழிக்குக்கிழத்தி யுரைத்தது.

## ௨௨௨. செல்லூர்கிழார்மகனார் பெரும்பூதங் கொற்றனார்

### 1267. அகநானூறு - 250. நெய்தல்

எவன்கொல் வாழி தோழி மயங்குபிசிர்
மல்குதிரை யுழந்த வொல்குநிலைப் புன்னை
வண்டிமி ரிணர நுண்டாது வரிப்ப
மணங்கம ழிளமண லெக்கர்க் காண்வரக்
கணங்கொ ளாயமொடு புணர்ந்துவிளை யாடக்
கொடுஞ்சி நெடுந்தே ரிளையரொடு நீக்கித்
தாரன் கண்ணியன் சேரவந் தொருவன்
வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவது
மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன் அதற்கொண்டு
அரும்பட ரெவ்வமொடு பெருந்தோள் சாஅய்
அவ்வலைப் பரதவர் கானலஞ் சிறுகுடி
வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையிற் கலங்கி
இறைவளை நெகிழ்ந்த நம்மொடு
துறையுந் துஞ்சாது கங்கு லானே.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் கூறியது.

குறைநயப்பக்

### 1268. குறுந்தொகை - 218.

பாலை

விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணும் கைந்நூல் யாவாம்
புள்ளு மோராம் விரிச்சியும் நில்லாம்
உள்ளலு முள்ளா மன்றே தோழி
உயிர்க்குயி ரன்ன ராகலில் தம்மின்று

செல்லூர்கிழார்மகனார்...கோற்றனார்

653

இமைப்புவரை யமையா நம்வயின்
மறந்தாண் டமைதல் வல்லியோர் மாட்டே.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 1269. குறுந்தொகை - 358. முல்லை

வீங்கிழை நெகிழ விம்மி யீங்கே
யெறிகட் பேதுற லாய்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்றுநின் படர்சே ணீங்க
வருவே மென்ற பருவம் உதுக்காண்
தனியோ ரிரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் கோவலர் கண்ணிச்
சொல்லுப வன்ன முல்லைவெண் முகையே.

தலைமகன் பிரிவிடைக் கிழத்தியைத் தோழி

வற்புறுத்தியது.

## 1270. குறுந்தொகை - 363. பாலை

கண்ணி மருப்பின் அண்ணல் நல்லேறு
செங்காற் பதவின் வார்குரற் கறிக்கும்
மடக்கண் மரையா நோக்கி வெய்துற்றுப்
புல்லரை யுகாஅய் வரிநிழல் வதியும்
5 இன்னா அருஞ்சுர மிறத்தல்
இனிதோ பெரும இன்றுணைப் பிரிந்தே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி கிழவற்குச்
சொல்லியது.

## 1271. நற்றிணை - 30. மருதம்

கண்டனென் மகிழ்ந கண்டெவன் செய்கோ
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டி னிம்மென இமிரும்
ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கிநின்
மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்
கவலே மூற்ற வெய்துவீ ழரிப்பனி
காலே மூற்ற பைதரு காலைக்



கடல்மரங் கவிழ்ந்தெனக் கலங்கி யுடன்வீழ்பு
பலர்கொள் பலகை போல

வாங்க வாங்கநின் றூங்கஞர் நிலையே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் யாரையும் அறியேனென் றாற்குத் தோழி சொல்லியது.

௨௨௫. செல்லூர்க்கோசிகன் கண்ணனார்

## 1272. அகநானூறு - 66. மருதம்

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமு மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனந் தோழி
நிரைதார் மார்பன் நெருந லொருத்தியொடு
வதுவை யயர்தல் வேண்டிப் புதுவதின்
இயன்ற அணியன் இத்தெரு விறப்போன்
மாண்டொழில் மாமணி கறங்கக் கடைகழிந்து
காண்டல் விருப்பொடு தளர்புதளர் போடும்
பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தேர்
தாங்குமதி வலவவென் றிழிந்தனன் தாங்காது
மணிமருள் அவ்வாய் மார்பகஞ் சிவணப்
புல்லிப் பெரும செல்லினி யகத்தெனக்
கொடுப்போற் கொல்லான் கலுழ்தலின் தடுத்த
மாநிதிக் கிழவனும் போன்மென மகனொடு
தானே புகுதந் தோனே யானது

படுத்தனெ ஞகுதல் நாணி யிடித்திவற்
கலக்கினன் போலுமிக் கொடியோ னெனச்சென்று

அலேக்குங் கோலொடு குறுகத் தலேக்கொண்டு
இமிழ்கண் முழவி னின்சீ ரவர்மனேப்

பயிர்வன போலவந் திசைப்பவுந் தவிரான்
கழங்கா டாயத் தன்றுநம் அருளிய

சேந்தங்கண்ணனுர்

655

25 பழங்க ணேட்டமும் நலிய
அழுங்கின னல்லனே அயர்ந்ததன் மணனே.

பரத்தையிற்பிரிந்த தலேமகற்கு வாயிலாய்ப் புக்க
தோழிக்குத்
தலேமகள் சொல்லியது.

உஉச. சேந்தங்கண்ணனுர்

1273. அகநானூறு - 350. நெய்தல்

கழியே, சிறுகுரல் நெய்தலொடு காவிகூம்ப
எற்றிரை யோதந் தரலா னாதே
துறையே, மருங்கிற் போகிய மாக்கவை மருப்பின்
இருஞ்சேற் றீரளை யலவன் நீப்ப
வழங்குந ரின்மையிற் பாடான் றன்றே
கொடுநுகம் நுழைந்த கணைக்கா லத்திரி
வடிமணி நெடுந்தேர் பூண வேவாது
ஏந்தெழில் மழைக்க ணிவள்குறை யாகச்
சேந்தனை சென்மோ பெருநீர்ச் சேர்ப்ப
இலங்கிரும் பரப்பி னெறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்
ஒலிதலைப் பணில மார்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை யெதிர்கொள இழிதருங்
குவவுமணல் நெடுங்கோட் டாங்கண்
உவக்காண் தோன்றுமெஞ் சிறுநல் லூரே.

பகற்குறிவந்து நீங்குந் தலைமகற்குத் தோழிசொல்லியது.

**1274.** நற்றிணை - **54.** நெய்தல்

வளைநீர் மேய்ந்து கிளைமுதற் செலீஇ

வாட்பறை விரும்பினை யாயினுந் தூச்சிறை

இரும்புலா வருந்துநின் கிளையொடு
சிறிதிருந்து

கருங்கால் வெண்குரு கெனவ கேண்மதி
பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை



அதுநீ யறியின் அன்புமா ருடையை
நொதுமல் நெஞ்சங் கொள்ளா தென்குறை
இற்றுங் குணர வுரைமதி தழையோர்
கொய்குழை யரும்பிய குமரி ஞாழல்
தெண்டிரை மணிப்புறந் தைவருங்
கண்டல் வேலிநுந் துறைகிழ வோற்கே.

காமமிக்க கழிபடர்கிளவி.

## ௨௨௫. சேந்தம்பூதனார்

### 1275. அகநானூறு - 84. முல்லை

மலைமிசைக் குலைஇய வுருகெழு திருவிற்
பணைமுழங் கெழிலி பௌவம் வாங்கித்
தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ மாதிரம்
புதைப்பப் பொழிதலிற் காண்வர இருநிலங் கவினிய
ஏமுறு காலை
நெருப்பி னன்ன சிறுகட் பன்றி
அயிர்க்கட் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய நறுவீ

முல்லை நாண்மல ருதிரும்
புறவடைந் திருந்த அருமுனை யியவிற்
சீறா ரோளே யொண்ணுதல் யாமே
எரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தொறு மறுகுந்
தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயில்
அருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே.

தலைமகன் பாசறையிருந்து சொல்லியது.

சேந்தம்பூதனார்

657

**1276.** அகநானூறு - **207.** பாலை

அணங்குடை முந்நீர் பரந்த செறுவி
னுணங்குதிறம் பெயர்ந்த வெண்க லமிழ்தம்
குடபுல மருங்கி னுய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செ யாடவர்
நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்

குறைக்குளம்பு தைத்த கற்பிற ழியவின்
வெஞ்சுரம் போழ்ந்த அஞ்சுவரு கவலை
மிளிருர் கடாஅங் கரந்துவிடு கவுள
வெயில்தின வருந்திய நீடுமருப் பொருத்தல்
பிணரழி பெருங்கை புரண்ட கூவற்

றெண்க ணுவரிக் குறைக்குட முகவை
அறனி லாளன் தோண்ட வெய்துயிர்த்துப்
பிறைநுதல் வியர்ப்ப வுண்டனள் கொல்லோ

தேங்கலந் தளைஇய தீம்பா லேந்திக்
கூழை யுளர்ந்து மொழிமை கூறவும்
மறுத்த சொல்ல ளாகி
வெறுத்த வுள்ளமொ டுண்ணு தோளே.

மகட்போக்கிய தாய்சொல்லியது.

**1277.** குறுந்தொகை - **90.** குறிஞ்சி

எற்றோ வாழி தோழி முற்றுபு
கறிவள ரடுக்கத் திரவின் முழங்கிய
மங்குல் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி யருவி யுண்டுறைத் தரூஉங்
குன்ற நாடன் கேண்மை
மென்தோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே.

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது.

42



## 1278. குறுந்தொகை - 226. நெய்தல்

பூவொடு புரையுங் கண்ணும் வேயென
விறல்வனப் பெய்திய தோளும் பிறையென
மதிமயக் குறூஉம் நுதலும் நன்றும்
நல்லமன் வாழி தோழி அல்கலும்
தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை
விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 1279. குறுந்தொகை - 247. குறிஞ்சி

எழில்மிக வுடைய தீங்கனிப் படூஉம்
திறவோர் செய்வினை யறவ தாகும்
கிளையுடை மாந்தர்க்குப் புணையுமா ரிவ்வென
ஆங்கறிந் திசினே தோழி வேங்கை
வீயா மென்சினை வீயுக யானை
ஆர் துயி லியம்பு நாடன்
மார்புரித் தாகிய மறுவில் நட்பே.

கடிநகர்த் தெளிவு விலங்கினமை அறியத் தோழி கூறியது.

வரைவுடன்பட்ட தோழி தலைமகட்குக் கூறியதூஉமாம்.

## 1280. நற்றிணை - 69. முல்லை

பல்கதிர் மண்டிலம் பகல்செய் தாற்றிச்
சேயுயர் பெருவரைச் சென்றவண் மறையப்
பறவை பார்ப்புவயி னடையப் புறவின்
மாயெருத் திரலை மடப்பிணை தழூவ
முல்லை முகைவாய் திறப்பப் பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல்விளக் குறூஉ
மதர்வை நல்லான் மாசில் தெண்மணி
கொடுங்கோற் கோவலர் குழலோ டொன்றி



ஐதுவந் திசைக்கும் அருளில் மாலை
ஆள்வினைக் ககன்றோர் சென்ற நாட்டும்
இனைய வாகித் தோன்றின்
வினைவலித் தமைத லாற்றலர் மன்னே.

வினைவயிற்பிரித லாற்றாளாய தலைவி சொல்லியது.

## 1281. நற்றிணை - 261. குறிஞ்சி

அருளிலர் வாழி தோழி மின்னுவசிபு
இருள்தூங்கு விசும்பி னதிரும் ஏறொடு
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்
நெடும்பல குன்றத்துக் குறும்பல மறுகித்
தாவில் பெரும்பெயல் தலைஇய யாமத்துக்
களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்
வெளிறில் காழ்மரம் பிணித்துநனி மிளிர்க்குஞ்
சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை
எருவை நறும்பூ நீடிய
பெருவரைச் சிறுநெறி வருத லானே.

சிறைப்புறமாகத் தோழி இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது.

தலைமகள் இயற்பட மொழிந்ததூஉமாம்.

௨௨௪. சேந்தன்கீரனார்

**1282.** குறுந்தொகை - **311.** நெய்தல்

அலர்யாங் கொழிவ தோழி பெருங்கடற்
புலவுநா றகன்துறை வலவன் தாங்கவும்
நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்
யான்கண் டன்றோ விலனே பானாள்
ஓங்கல் வெண்மணற் றாழ்ந்த புன்னைத்
தாதுசேர் நிகர்மலர் கொய்யும்
ஆய மெல்லா முடன்கண் டன்றே.

அலரஞ்சிய தலைமகள் தலைவன் சிறைப்புறத்தானாகத்

தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

## உஉஎ. சேரமானெந்தை

### 1283. குறுந்தொகை - 22. பாலை

நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய
யாரோ பிரிகிற் பவரே சாரற்
சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து
வேனி லஞ்சினை கமழுந்
தேமூ ரொண்ணுதல் நின்னொடுஞ் செலவே.

செலவுக் குறிப்பறிந்து ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

## உஉஅ. சேரமான் இளங்குட்டுவன்

### 1284. அகநானூறு - 153. பாலை

நோகோ யானே நோதகு முள்ளம்
அந்தீங் கிளவி யாயமொடு கெழீஇப்
பந்துவழிப் படர்குவ ளாயினும் நொந்துநனி
வெம்புமன் அளியள் தானே யினியே
வன்க ணாளன் மார்புற வளைஇ
இன்சொற் பிணிப்ப நம்பி நங்கண்
உறுதரு விழும முள்ளா ளொய்யெனத்
தெறுகதி ரலைஇய வேனில் வெங்காட்டு
உறுவளி யொலிகழைக் கண்ணுறுபு தீண்டலிற்
பொறிபிதிர் பெடுத்த பொங்கெழு கூரெரிப்
பைதறு சிமையப் பயம்நீங் காரிடை
நல்லடிக் கமைந்த வல்ல மெல்லியல்
வல்லுநள் கொல்லோ தானே யெல்லி
ஓங்குவரை யடுக்கத் துயர்ந்த சென்னி
மீனொடு பொலிந்த வானிற் றோன்றித்
தேம்பாய்த் தார்க்குந் தெரியிணர்க் கோங்கின்
காலுறக் கழன்ற கண்கமழ் புதுமலர்

### சேரமான்......மாக்கோதை

661

கைவிடு சுடரிற் றோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

மகட்போக்கிய செவிலித்தாய் சொற்றது.

## உ௨௯. சேரமான் கணைக்காலிரும்பொறை

### 1285. புறநானூறு - 74.

குழவி யிறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
5 மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே.

திணை - பொதுவியல் ; துறை - முதுமொழிக்காஞ்சி.

சேரமான் கணைக்கா லிரும்பொறை சோழன் செங்கணானொடு திருப்போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையிற் கிடந்து தண்ணீர் தாவென்று பெறாது பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு.

## உ௩0. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

### 1286. புறநானூறு - 245.

யாங்குப்பெரி தாயினும் நோயள வெனைத்தே
உயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையின்

கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்து
ஒள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி



ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

தன் பெருங்கோப்பெண்டு துஞ்சிய காலைச் சொல்லிய பாட்டு.

## ௨௩௧. சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

### 1287. புறநானூறு - 181.

மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
கருங்கண் எயிற்றி காதல் மகனொடு
கான இரும்பிடிக் கன்று தலைக்கொள்ளும்
பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கை
புலாஅ வம்பிற் போருங் கடிமிளை
வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்
உண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டின்
இன்னே சென்மதி நீயே சென்றவன்
பகைப்புலம் படரா வளவைநின்
பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை ; துறை - பாணாற்றுப்படையுமாம்.

வல்லார் கிழான் பண்ணனைப் பாடியது.

## 1288. புறநானூறு - 265.

ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
கல்லா யினையே கடுமான் தோன்றல்
வானேறு புரையுநின் தாணிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்

சோழன் நலங்கிள்ளி

663 கடும்பகட்டு யானை வேந்தர்
ஒடுங்கா வென்றியும் நின்னொடு செலவே.

திணை - காஞ்சி ; துறை - கையறுநிலை.

## உ௫உ. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

### 1289. புறநானூறு - 173.

யான்வாழு நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி யரவந் தானுங் கேட்கும்
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி

முட்டை கொண்டு வற்புலஞ் சேருஞ்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் வீறுவீ றியங்கும்

இருங்கிளைச் சிறாஅர்க் காண்டுங் கண்டும்
மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவ னில்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சிறுகுடிகிழான் பண்ணனைப் பாடியது.

## ௨௫௫. சோழன் நலங்கிள்ளி

### 1290. புறநானூறு - 73.

மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்
இன்னுயி ராயினுங் கொடுக்குவென் இந்நிலத்து
ஆற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
உள்ள மெள்ளிய மடவோன் தெள்ளிதின்



துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே.

திணை - காஞ்சி ; துறை - வஞ்சினக்காஞ்சி.

### 1291. புறநானூறு - 75

மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால்தர வந்த பழவிறற் றாயம்
எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
சிறியோன் பெறினது சீர்ந்தன்று மன்னே
மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகுவ னாயின் தாழ்நீர்
அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடுவறல் போல நன்றும்
நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே.

திணை - பொதுவியல். துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## உ௯௪. சோழன் நல்லுருத்திரன்

### 1292. புறநானூறு - 190.

விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்

தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

665

வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு

இயைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுண்ணு தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து
இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைக லுளவா கியரோ.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## உ௩ரு. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

### 1293. நற்றிணை - 386. குறிஞ்சி

சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
துறுகட் கண்ணிக் கானவ ருழுத
குலவுக்குர லேனல் மாந்தி ஞாங்கர்
விடரளைப் பள்ளி வேங்கை யஞ்சாது
கழைவளர் சாரற் றுஞ்சு நாடன்
அணங்குடை யருஞ்சூள் தருகுவெ னெனநீ
நும்மோ ரன்னோர் துன்னா ரிவையெனத்

தெரிந்தது வியந்தனென் தோழி பணிந்துநங்
கல்கெழு சிறுகுடிப் பொலிய
வதுவை யென்றவர் வந்த ஞான்றே.

பரத்தையின் மறுத்தந்த தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகளை முகம்புகுவலென முற்பட்டாள் தலைமகண்மாட்டு நின்ற பொருமை நீங்காமை யறிந்து பிறிதொன்றன்மேல் வைத்துப் 'பாவியேன் இன்று பேதைமை செய்தேன்; எம்பெருமாட்டி குறிப்பு உணர்ந்து வழிப்படுவேனாவேன் மன்னோ' எனச்சொல்லியது.

## உ௩௬. தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்

### 1294. அகநானூறு - 48. குறிஞ்சி

அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி அதன்திறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாள்

மலிபூஞ் சாரலென் தோழி மாரோடு
ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூசல் தோன்ற
ஒண்செங் கழுநீர்க் கண்போ லாயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்டு
யாதோ மற்றம் மாதிறம் படரென
வினவி நிற்றந் தோனே அவற்கண்டு
எம்முள் ளெம்முள் மெய்ம்மறை பொடுங்கி
நாணி நின்றனெ மாகப் பேணி
ஐவகை வகுத்த கூந்த லாய்நுதல்
மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யு முளவோ என்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேர னெதிர்மறுத்து
நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகல்மா யந்திப் படுசுட ரமையத்து
அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள்
அதனள வுண்டுகோள் மதிவல் லோர்க்கே.

செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றது.

தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்

## 1295. அகநானூறு - 108. குறிஞ்சி

புணர்ந்தோர் புன்க ணருளலும் உணர்ந்தோர்க்கு
ஒத்தன்று மன்னா லெவன்கொல் முத்தம்
வரைமுதற் சிதறியவை போல யானைப்
புகர்முகம் பொருத புதுநீ ராலி
பளிங்குசொரி வதுபோற் பாறை வரிப்பக்
கார்கதம் பட்ட கண்ணகன் விசும்பின்
விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்குல்
ஆருயிர்த் துப்பிற் கோண்மா வழங்கும்
இருளிடைத் தமியன் வருதல் யாவது
மருளான் வாழி தோழி யல்கல்
விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை தோய நீடிப்
பல்துடுப் பெடுத்த அலங்குகுலைக் காந்தள்
அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டிற் றோன்றும்
மையாடு சென்னிய மலைகிழ வோனே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவா ளாய்த் தோழி சொல்லியது.

## 1296. அகநானூறு - 355. பாலை

மாவும் வண்டளி ரீன்றன குயிலும்
இன்றீம் பல்குரற் கொம்பர் நுவலும்
மூதிலை யொழித்த போதவிழ் பெருஞ்சினை
வல்லோன் றைவரும் வள்ளுயிர்ப் பாலை
நரம்பார்த் தன்ன வண்டின முரலுந்
துணிகயந் துன்னிய தூமண லெக்கர்த்
தாதுகு தண்பொழி லல்கிக் காதலர்
செழுமனை மறக்குஞ் செவ்வி வேனில்
தானே வந்தன் றாயின் ஆனது



இலங்குவளை நெகிழ்ந்த எவ்வங் காட்டிப்
புலந்தனம் வருகஞ் சென்மோ தோழி
யாமே யெமிய மாக நீயே
பொன்னயந் தருளிலை யாகி
இன்னை யாகுத லொத்தன் றாலெனவே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1297.** குறுந்தொகை - **217.** பாலை

தினைகிளி கடிதலிற் பகலு மெல்லும்
இரவுநீ வருதலின் ஊறு மஞ்சுவல்
யாங்குச்செய் வாமெம் மிடும்பை நோய்க்கென
ஆங்குயான் கூறிய அனைத்திற்குப் பிறிதுசெத்து
ஓங்குமலை நாட னுயிர்த்தோன் மன்ற
ஐதேய் கம்ம யானே
கழிமுதுக் குறைமையும் பழியுமென் றிசினே.

உடன்போக்கு நயப்பத் தோழி தலைமகட்குக் கூறியது.

## 1298. நற்றிணை - 313. குறிஞ்சி

கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்

பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்
தகைவனப் புற்ற கண்ணழி கட்டழித்து
ஒலிபல் கூந்த லணிபெறப் புனைஇக்
காண்டற் காதல் கைம்மிகக் கடீஇயாற்கு
யாங்கா குவங்கொல் தோழி காந்தட்
கமழ்குலை யவிழ்ந்த நயவருஞ் சாரற்
கூதள நறும்பொழில் புலம்ப ஊர்வயின்
மீள்குவம் போலத் தோன்றுந் தோடுபுலர்ந்து
அருவியி னொலித்த லாறு
கொய்பதங் கொள்ளும்நாங் கூஉந் தினையே.

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்ப் புனம்
அழிவுரைத்துச் செறிப்பறிவுறீஇயது.

## 1299. புறநானூறு - 326.

ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்
இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
உயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் றணியும்
அருமிளை யிருக்கை யதுவே மனைவியும்
வேட்டச் சிறாஅர் சேட்புலம் படராது
படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டொராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனும்
அருஞ்சமந் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்து
அண்ணல் யானை யணிந்த
பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.

## ௨௩௭. தனிமகனர்

## 1300. நற்றிணை - 153. பாலை

குணகடல் முகந்து குடக்கேர் பிருளி
மண் திணி ஞாலம் விளங்கக் கம்மியர்
செம்புசொரி பானையின் மின்னி யெவ்வாயுந்
தன்தொழில் வாய்த்த இன்குர லெழிலி
தென்புல மருங்கிற் சென்றற் றாங்கு
நெஞ்ச மவர்வயிற் சென்றென ஈண்டொழிந்து
உண்ட லளித்தெ னுடம்பே விறற்போர்
வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேரூர்ப்
பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே.

பிரிவிடைமெலிந்த தலைவிசொல்லியது.

உ ந அ. தாமப்பல்கண்ணனார்

**1301.** புறநானூறு - **43.**

நிலமிசை வாழ்ந ரலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை யுரவோன் மருக
நேரார்க் கடந்த முரண்மிகு திருவின்
தேர்வண் கிள்ளி தம்பி வார்கோற்
கொடுமர மறவர் பெரும கடுமான்
கைவண் தோன்ற லைய முடையேன்

ஆர்புனை தெரியல்நின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர் மற்றிது
நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவாய் என்னினும்
நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமெனக்
காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின்
யானே பிழைத்தனென் சிறக்கநின் ஆயுள்
மிக்குவரு மின்னீர்க் காவிரி
எக்க ரிட்ட மணலினும் பலவே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும் தாமப்பல் கண்ணனும் வட்டுப் பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக்கொண் டெறிந்தானைச் 'சோழன்மக னல்லை'யென நாணியிருந்தானைப் பாடியது.

## ௨௩௧. தாமோதரனார்

### 1302. குறுந்தொகை - 92. நெய்தல்

ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து
அளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற வோங்கிய நெறியயல் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
இரைகொண் டமையின் விரையுமாற் செலவே.

காமமிக்க கழிபடர் கிளவியாற் பொழுதுகண்டு சொல்லியது.

## ௨௪௦. தாயங்கண்ணனார்

### 1303. அகநானூறு - 105. பாலை

அகலறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை
ஒள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென
நல்வரை நாடன் தற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொல் தானே தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி

ஈனாத் தாயர் மடுப்பவு முண்ணாள்
நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமு முள்ளாள் பொய்ம்மருண்டு
பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
சில்பரிக் குதிரைப் பல்வே லெழினி
கெடலருந் துப்பின் விடுதொழில் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவ லம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய வேற்றினந் தரூஉம்
முகைதலை திறந்த வேனிற்
பகைதலை மணந்த பல்லதர்ச் செலவே.
மகட்போக்கிய தாய் சொல்லியது.



## 1304. அகநானூறு - 132. குறிஞ்சி

ஏனலு மிறங்குகுர லிறுத்தன நோய்மலிந்து
ஆய்கவின் தொலைந்தவிவள் நுதலும் நோக்கி
ஏதில மொழியுமிவ் வூரு மாகலிற்
களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி
வால்நிணப் புகவிற் கானவர் தங்கை
அம்பணை மென்றோ ளாயிதழ் மழைக்கண்
ஒல்கியற் கொடிச்சியை நல்கினை யாயிற்
கொண்டனை சென்மோ நுண்பூண் மார்ப

துளிதலைத் தலைஇய சாரல் நளிசுனைக்
கூம்புமுகை யவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை
வேங்கை விரியிண ரூதிக் காந்தட்
டேனுடைக் குவிகுலைத் துஞ்சி யானை
இருங்கவுட் கடாஅங் கனவும்
பெருங்கல் வேலிநும் உறைவி னூர்க்கே.

தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று வரைவுகடாயது.

### 1305. அகநானூறு - 149. பாலை

சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த
நெடுஞ்செம் புற்றத் தொடுங்கிரை முனையிற்
புல்லரை யிருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை யெண்கி னிருங்கிளை கவரும்
அத்த நீளிடைப் போகி நன்றும்

அரிதுசெய் விழுப்பொரு ளெளிதினிற் பெறினும்
வாரேன் வாழியெ னெஞ்சே சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி யார்ப்பெழ வளைஇ
அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை யடுபோர்ச் செழியன்

தாயங்கண்ணனூர்

கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய

ஓடியா விழவின் நெடியோன் குன்றத்து
வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்து
எதிர்மலர்ப் பிணைய லன்னவிவள்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச்
செலவழுங்கியது.

**1306.** அகநானூறு - **213.** பாலை

வினைநவில் யானை விறற்போர்த்
தொண்டையர்

இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்டு
ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்
கொய்குழை யதிரல் வைகுபுல ரலரி
சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவி னாட்பலி கொடுக்கும்
வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து
நிழற்கவி னிழந்த நீரில் நீளிடை
அழலவி ரருஞ்சுரம் நெடிய வென்னாது
அகற லாய்ந்தன ராயினும் பகல்செலப்
பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்துப்
பெருமரங் கொன்ற கால்புகு வியன்புனத்து

எரிமருள் கதிர திருமணி யிமைக்கும்
வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்
பெருங்கவின் சிதைய நீங்கி யான்றோர்
அரும்பெற லுலக மமிழ்தொடு பெறினும்
சென்றுதாம் நீடலோ விலரே யென்றும்
கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கை
வலம்படு வென்றி வாய்வாட் சோழர்

இலங்குநீர்க் காவிரி யிழிபுனல் வரித்த





அறலென நெறிந்த கூந்தல்
உறலின் சாயலொ டொன்றுதல் மறந்தே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

**1307.** அகநானூறு **237.** பாலை

புன்காற் பாதிரி யரிநிறத் திரள்வீ
நுண்கொடி யதிரலொடு நுணங்கறல் வரிப்ப
அரவெயிற் றன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்
குயில்குரல் கற்ற வேனிலுந் துயில்துறந்து
இன்னா கழியுங் கங்கு லென்றுநின்
நன்மா மேனி யணிநலம் புலம்ப
இனைத லான்றிசி னாயிழை கனைதிறற்
செந்தீ யணங்கிய செழுநிணக் கொழுங்குறை
மென்றினைப் புன்க முதிர்த்த மண்டையொடு
இருங்கதி ரலமருங் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அந்தீஞ் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவற் பகுக்கும்
புனல்பொரு புதவி னுறந்தை யெய்தினும்
வினைபொரு ளாகத் தவிர்விலர் கடைசிவந்து
ஐய அமர்த்த வுண்கணின்
வையேர் வாலெயி றூறிய நீரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

## 1308. அகநானூறு - 319. பாலை

மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை
பிணிவீ ழாலத் தலங்குசினை யேறிக்
கொடுவி லெயினர் குறும்பிற் கூக்குங்
கடுவினை மறவர் வில்லிடத் தொலைந்தோர்

படுபிணங் கவரும் பாழ்படு நனந்தலை
அணங்கென வுருத்த நோக்கின் ஐயென



நுணங்கிய நுசுப்பின் நுண்கேழ் மாமைப்
பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய
நன்னிறத் தெழுந்த சுணங்கணி வனமுலைச்
சுரும்பார் கூந்தற் பெருந்தோ ளிவள்வயிற்
பிரிந்தனி ரகறல் சூழின் அரும்பொருள்
எய்துக மாதோ நுமக்கே கொய்தழைத்
தளிரே ரன்ன தாங்கரு மதுகையள்
மெல்லிய ளிளையள் நனிபே ரன்பினள்
செல்வே மென்னு நும்மெதிர்
ஒழிவே மென்னு மொண்மையோ விலளே.

செலவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொல்லியது.

**1309.** அகநானூறு - **357.** பாலை

கொடுமு ளீங்கை சூரலொடு மிடைந்த
வான்முகை யிறும்பின் வயவொடு வதிந்த
உண்ணாப் பிணவி னுயக்கந் தீரிய
தடமருப் பியானை வலம்படத் தொலைச்சி

வியலறை சிவப்ப வாங்கி முணங்குநிமிர்ந்து
புலவுப்புலி புரண்ட புல்சாய் சிறுநெறி
பயிலிருங் கானத்து வழங்கல் செல்லாது
பெருங்களிற் றினநிரை கைதொடூஉப் பெயருந்
தீஞ்சுளைப் பலவின் தொழுதி யும்பற்
பெருங்கா டிறந்தன ராயினும் யாழநின்
திருந்திழைப் பணைத்தோள் வருந்த நீடி
உள்ளா தமைதலோ இலரே நல்குவர
மிகுபெயல் நிலைஇய தீநீர்ப் பொய்கை
அடையிறந் தவிழ்ந்த தண்கமழ் நீலங்
காலொடு துயல்வந் தன்னநின்
ஆயிதழ் மழைக்கண் அமர்த்த நோக்கே.

பிரிவிடைவேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.



## 1310. குறுந்தொகை - 319. முல்லை

மானேறு மடப்பிணை தழீஇ மருள்கூர்ந்து
கானம் நண்ணிய புதல்மறைந் தொடுங்கவும்
கையுடை நன்மாப் பிடியொடு பொருந்திய
மையணி மருங்கின் மலையகஞ் சேரவும்
மாலைவந் தன்று மாரி மாமழை
பொன்னேர் மேனி நன்னலஞ் சிதைத்தோர்
இன்னும் வாரா ராயின்
என்னாந் தோழிநம் இன்னுயிர் நிலையே.

பருவ வரவின்கண் வேறுபட்ட கிழத்தி வன்புறையெதிரழிந்து சொற்றது.

## 1311. நற்றிணை - 219. நெய்தல்

கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும்
பழநல மிழந்து பசலை பாய
இன்னுயிர் பெரும்பிறி தாயினும் என்னதூஉம்
புலவேன் வாழி தோழி சிறுகால்
அலவனொடு பெயரும் புலவுத்திரை நளிகடற்
பெருமீன் கொள்ளுஞ் சிறுகுடிப் பரதவர்
கங்குல் மாட்டிய கனைகதி ரொண்சுடர்
முதிரா ஞாயிற் றெதிரொளி கடுக்குங்
கானலம் பெருந்துறைச் சேர்ப்பன்
தானே யானே புணர்ந்த மாறே.

வரைவிடைவைத்துப்பிரிய ஆற்றளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 1312. புறநானூறு - 356.

களரியரந்து கள்ளி போகிப்
பகலுங் கூஉங் கூகையொடு பிறழ்பல்
ஈம விளக்கிற் பேஎய் மகளிரொடு
அஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதல ரழுத கண்ணீர்



என்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.

திணை - காஞ்சி ; துறை - காடுவாழ்த்து.

## 1313. புறநானூறு - 397.

வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன பையயச்
சுடருஞ் சுருங்கின் றொளியே பாடெழுந்து
இரங்குரல் முரசமொடு வலம்புரி யார்ப்ப
இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
எஃகிரு ளகற்று மேமப் பாசறை
வைகறை யரவங் கேளியர் பலகோட்

செய்தார் மார்ப எழுமதி துயிலெனத்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் தோன்றி யேனே அதுநயந்து
உள்ளி வந்த பரிசில னிவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க
அருங்கலம் நல்கி யோனே யென்றுஞ்
செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
அறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம்பூண் வளவன்
எறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினும்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
என்னென் றஞ்சலம் யாமே வென்வேல்



அருஞ்சமங் கடக்கு மாற்றலவன்
திருந்துகழல் நோன்றாட் டண்ணிழ லேமே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை ; கடைநிலை விடையுமாம்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## உசக. தாயங்கண்ணியார்

### 1314. புறநானூறு - 250.

குய்குரல் மலிந்த கொழுந்துவை யடிசில்
இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லி யுணவின் மனைவியொ டினியே
புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.

திணை - பொதுவியல்; துறை - தாபதநிலை.

## உசஉ. திப்புத்தோளார்

### 1315. குறுந்தொகை - 1. குறிஞ்சி

செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட்டு யானைக்
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.

தோழி கையுறை மறுத்தது.

## உசங. திருத்தாமனார்

### 1316. புறநானூறு - 398.

மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர
வகைமா ணல்லிற்... ...

## திருத்தாமனர் 679

பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
இரவுப்புறம் பெற்ற ஏம வைகறைப்
பரிசிலர் விசைய... ...
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்சன்
நகைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்
புலியின மடிந்த கல்லளை போலத்

துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்னவென் அரிக்குரற் றடாரி
இரவுரை நெடுவ ரரிப்ப வட்டித்து
உள்ளி வருநர் கொள்கலம் நிறைப்போய்
தள்ளா நிலைமை யாகிய ரெமக்கென
என்வர வறீஇச்
சிறிதிற்குப் பெரிதுவந்து

விரும்பிய முகத்த னாகி யென்னரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்

புகைவிரிந் தன்ன பொங்குதுகி லுடீஇ
அழல்கான் றன்ன அரும்பெறல் மண்டை
நிழல்காண் தேறல் நிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுண்
மண்டை கண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிர லொக்க லார
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரும் அரவுற ழாரமொடு
புரையோன் மேனிப் பூத்தசல... ...
முரைசெல வருளி யோனே
... ...
...யருவிப் பாயற் கோவே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
சேரமான் வஞ்சனைப் பாடியது.

## ௨௪௪. தீன்மதி நாகனார்

### 1317. குறுந்தொகை - 111. குறிஞ்சி

மென்றோள் நெகிழ்த்த செல்லல் வேலன்
வென்றி நெடுவே ளென்னும் அன்னையும்
அதுவென வுணரு மாயின் ஆயிடைக்
கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன
கேழிருந் துறுகற் கெழுமலை நாடன்
வல்லே வருக தோழிநம்
இல்லோர் பெருநகை காணிய சிறிதே.

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் வேறுபாடு கண்டு வெறி யெடுப்பக் கருதிய தாயது நிலைமை தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது.

## ௨௪௫. தும்பிசேர்கீரனார்

### 1318. குறுந்தொகை - 61. மருதம்

தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்
ஈர்த்தின் புறூஉம் இளையோர் போல
உற்றின் புறேஎ மாயினும் நற்றேர்ப்
பொய்கை யூரன் கேண்மை
செய்தின் புற்றனெஞ் செறிந்தன வளையே.

தோழி தலைமகன் வாயில்கட்கு உரைத்தது.

## 1319. குறுந்தொகை - 315. குறிஞ்சி

எழுதரு மதியங் கடற்கண் டாஅங்கு
ஒழுகுவெள் ளருவி யோங்குமலை நாடன்
ஞாயி றனையன் தோழி
நெருஞ்சி யனையவென் பெரும்பணைத் தோளே.

வரைவிடை வேறுபடுகின்றாய் என்ற தோழிக்குக் கிழத்தி
உரைத்தது.

தும்பிசேர்கீரனார் 681

## 1320. குறுந்தொகை - 316. நெய்தல்

ஆய்வளை ஞெகிழவும் அயர்வுமெய் நிறுப்பவும்
நோய்மலி வருத்தம் அன்னை யறியின்
உளெனோ வாழி தோழி விளியாது
உரவுக்கடல் பொருத விரவுமண லடைகரை
ஓரை மகளி ரோராங்குக் காட்ட
வாய்ந்த வலவன் வள்புறு நுனைப்பரி
ஓங்குவரல் விரிதிரை களையுந்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

வரைவிடை வேறுபடுகின்றாய் என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 1321. குறுந்தொகை - 320. நெய்தல்

பெருங்கடற் பரதவர் கோண்மீ னுணங்கலின்
இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு
நிலவுநிற வெண்மணல் புலவப் பலவுடன்
எக்கர்தொறும் பரிக்குந் துறைவனொ டொருநாள்
நக்கதோர் பழியு மிலமே போதவிழ்
பொன்னிணர் மரீஇய புள்ளிமிழ் பொங்கர்ப்
புன்னையஞ் சேரி யிவ்வூர்
கொன்னலர் தூற்றுந்தன் கொடுமை யானே.

அலரஞ்சி ஆற்றாளாகிய தலைமகள் தலைவன் கேட்பானாகத் தோழிக்குக் கூறியது.

## 1322. குறுந்தொகை - 392. குறிஞ்சி

அம்ம வாழியோ மணிச்சிறைத் தும்பி
நன்மொழிக் கச்ச மில்லை யவர்நாட்டு
அண்ணல் நெடுவரைச் சேறி யாயிற்
கடவை மிடைந்த துடவையஞ் சிறுதினைத்
துளரெறி நுண்துகட் களைஞர் தங்கை
தமரிற் றீரா ளென்மோ அரசர்



நிரைசெல் நுண்தோல் போலப்

பிரசந் தூங்கு மலைகிழ வோர்க்கே.

வரைவிடைக் கிழத்தியது நிலைமை தும்பிக்குச் சொல்லுவா
ளாய்ச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

### 1323. நற்றிணை - 277. பாலை

கொடியை வாழி தும்பி இந்நோய்
படுகதில் லம்ம யானினக் குரைத்தென
மெய்யே கருமை யன்றியுஞ் செவ்வன்
அறிவுங் கரிதோ அறனிலோய் நினக்கே
மனையுறக் காக்கு மாண்பெருங் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட

நாற்ற மின்மையிற் பசலை யூதாய்
சிறுகுறும் பறவைக் கோடி விரைவுடன்
நெஞ்சுநெகிழ் செய்ததன் பயனே அன்பிலர்
வெம்மலை யருஞ்சுர மிறந்தோர்க்கு
என்னிலை யுரையாய் சென்றவண் வரவே.

'பட்ட பின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற் பிரிய' ஆற்றாளாகிய தலைமகள் 'தும்பிக்குச் சொல்லியது.

## 1324. புறநானூறு - 249.

கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ
எரிப்பூம் பழனம் நெரித்துடன் வலைஞர்
அரிக்குரற் றடாரியின் யாமை மிளிரப்
பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொடு
உறழ்வே லன்ன வொண்கயல் முகக்கும்
அகனாட் டண்ணல் புகாவே நெருநைப்
பகலிடங் கண்ணிப் பலரொடுங் கூடி
ஒருவழிப் பட்டன்று மன்னே யின்றே



அடங்கிய கற்பின் ஆய்நுதல் மடந்தை
உயர்நிலை யுலக மவன்புக...வரி
நீறுடு சுளகிற் சீறிடம் நீக்கி
அழுத லானாக் கண்ணள்
மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே.

இணை - பொதுவியல் ; துறை - தாபதநிலை.

## ௨௬௬. துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனார்

### 1325. நற்றிணை - 286. பாலை

உலச வொண்குழை யுடைவாய்த் தன்ன
அத்தக் குமிழின் ஆயித ழலரி
கல்லறை வரிக்கும் புல்லென் குன்றஞ்
சென்றோர் மன்ற செலீஇயரென் னுயிரெனப்
புனையிழை நெகிழ விம்மி நொந்துநொந்து
இனைத லான்றிசின் ஆயிழை நினையின்
நட்டோ ராக்கம் வேண்டியும் ஒட்டிய
நின்றோ ளணிபெற வரற்கும்
அன்றோ தோழியவர் சென்ற திறமே.

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தது.

## உ௬எ. துறையூர் ஓடைகிழார்

### 1326. புறநானூறு - 136.

யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பல்துன்னத்து
இடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
பேஎற்பகையென் வொன்றென்கோ

உண்ணாமையின் ஊன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவென் பல்கிளையொடு



பசியலைக்கும் பகையொன்றென்கோ
அன்னதன்மையும் அறிந்தீயார்
நின்னதுதாவென நிலைதளர
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன்றென்கோ
ஆஅங்கு, எனைப்பகையும் அறியுநன் ஆய்
எனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் இசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
இவண்வந்த பெருநசையேம்
எமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
அனைத்துரைத்தனன் யானாக
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசி லல்கலும்
தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினும் ஏத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
ஆயைப் பாடியது.

## உசஅ. தூங்கலோரியார்

### 1327. குறுந்தொகை - 151. பாலை

வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
குழலிசைக் குரல குறும்பல அகவுங்
குன்றுறு சிறுநெறி யரிய வென்னாது
மறப்பருங் காதலி யொழிய
இறப்ப லென்பதீண் டிளமைக்கு முடிவே.

பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

## தேய்புரிப் பழங்கயிற்றினார்

685

### 1328. குறுந்தொகை - 295. மருதம்

உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
ஓரான் வல்சிச் சீறில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே.

வாயில் வேண்டிச் சென்ற கிழவற்குத் தோழி உரைத்தது.

### 1329. நற்றிணை - 60. மருதம்

மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பிற்
பெருநெற் பல்கூட் டெருமை யுழவ
கண்படை பெறாஅது தண்புலர் விடியற்
கருங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை யரிசிப் பொம்மற் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீருறு செறுவின் நாறுமுடி யழுத்தநின்
நடுநரொடு சேறி யாயி னவண
சாயும் நெய்தலு மோம்புமதி யெம்மில்
மாயிருங் கூந்தல் மடந்தை
ஆய்வளைக் கூட்டு மணியுமா ரவையே.

சிறைப்புறமாக உழவர்க்குச் சொல்லுவாளாய்த் தோழி செறிப் பறிவுறீஇயது.

## உசச. தேய்புரிப் பழங்கயிற்றினார்

### 1330. நற்றிணை 284. பாலை

புறந்தாழ் பிருண்ட கூந்தற் போதின்
நிறம்பெறு மீரிதழ்ப் பொலிந்த வுண்கண்
உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்கஞ் செல்வா மென்னும்

செய்வினை முடியா தெவ்வஞ் செய்தல்
எய்யா மையயோ டிளிவுதலைத் தருமென
உறுதி தூக்காத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரைய லென்னும் ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமா று பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே.

பொருண்முடியாநின்ற தலைமகன் ஆற்றானாகிச் சொல்லியது:

## ௨௫௦. தேரதரன்

### 1331. குறுந்தொகை - 195. நெய்தல்

சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேரப்
படர்சுமந் தெழுதரு பையுள் மாலை
யாண்டுளர் கொல்லோ வேண்டுவினை முடிநர்
இன்னா திரங்கு மென்னா ரன்னோ
தைவர லசைவளி மெய்பாய்ந் தூர்தரச்
செய்வுறு பாவை யன்னவென்
மெய்பிறி தாகுத லறியா தோரே.

பிரிவிடைப் பருவ வரவின்கட் கிழத்தி மெலிந்து கூறியது.

## உருக. தேவகுலத்தார்

### 1332. குறுந்தொகை - 3. குறிஞ்சி

நிலத்தினும் பெரிதே வானினும்
உயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே.

தலைமகன் சிறைப்புறமாக அவன் வரைந்து கொள்வது வேண்டித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் இயற்பட மொழிந்தது.

## உருஉ. தேவனார்

### 1333. நற்றிணை - 227. நெய்தல்

அறிந்தோ ரறனில ரென்றல் சிறந்த
இன்னுயிர் கழியினும் நனியின் னாதே
புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த
பின்னீ ரோதியென் தோழிக் கன்னோ
படுமணி யானைப் பசும்பூட் சோழர்

கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட் டாங்கண்
கள்ளுடைத் தடவிற் புள்ளொலித் தோவாத்

தேர்வழங்கு தெருவி னன்ன
கௌவையா கின்ற தையநின் னருளே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தோழி தலைமகனை வரைவு முடுகச்சொல்லியது.

## ௨௫௩. தொடித்தலை விழுத்தண்டினார்

### 1334. புறநானூறு - 243.

இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொடு

உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட கல்லா விளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய எமக்கே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

## ௨௫௪. தொண்டி ஆமூர்ச்சாத்தனார்

### 1335. அகநானூறு - 169. பாலை

மரந்தலை கரிந்து நிலம்பயம் வாட
அலங்குகதிர் வேய்ந்த அழல்திகழ் நனந்தலைப்
புலிதொலைத் துண்ட பெருங்களிற் றொழியூன்
கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை
ஞெலிகோற் சிறுதீ மாட்டி யொலிதிரைக்
கடல்விளை யமிழ்தின் கணஞ்சா லுமணர்
சுனைகொள் தீநீர்ச் சோற்றுலைக் கூட்டுஞ்
சுரம்பல கடந்த நம்வயிற் படர்ந்துநனி
பசலை பாய்ந்த மேனியள் நெடிதுநினைந்து
செல்கதிர் மழுகிய புலம்புகொள் மாலை
மெல்விரல் சேர்த்திய நுதலள் மல்கிக்
கயலுமிழ் நீரிற் கண்பனி வாரப்
பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு
வருந்துமா லளியள் திருந்திழை தானே.

தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## ௨௫௫. தொல்கபிலர்

### 1336. அகநானூறு - 282. குறிஞ்சி

பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை யம்பின் வல்விற் கானவன்

பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்
கண்பொரு திமைக்குந் திண்மணி கிளர்ப்ப
வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க
தெண்ணீ ராலி கடுக்கு முத்தமொடு
மூவே றாரமு மொருங்குடன் சாற்றிச்
சாந்தம் பொறைமர மாக நறைநார்
வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு

## தோல்கபிலர் 689

இன்றீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையு மெதிர்ந்தனன் கொடையே அலர்வாய்

அம்ப லூரு மவனொடு மொழியும்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
யாயு மவனே யென்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாளென
நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை கடவுட்கு ஆக்குதும் பலியே.

இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலை மகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தலைமகன் பிரிவின்கண்

தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

## 1337. குறுந்தொகை - 14. குறிஞ்சி

அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த
வார்ந்திலங்கு வையெயிற் றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே பெற்றாங்கு
அறிகதில் லம்மவிவ் வூரே மறுகில்
நல்லோள் கணவ னிவனெனப்
பல்லோர் கூறயா அம் நாணுகஞ் சிறிதே.

'மடன்மாகூறு மிடனுமாருண்டே' என்பதனான் தோழி குறை மறுத்துழித் தலைமகன் மடலேறுவ லென்பதுபடச் சொல்லியது.

## 1338. நற்றிணை - 114. குறிஞ்சி

வெண்கோடு கொண்டு வியலறை வைப்பவும்
பச்சூன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்
மறுகுதொறு புலாவஞ் சிறுகுடி யரவம்
வைகிக் கேட்டுப் பையாந் திசினே

அளிதோ தானே தோழி யல்கல்
வந்தோன் மன்ற குன்ற நாடன்
துளிபெயல் பொறித்த புள்ளித் தொல்கரை
பொருதிரை நிவப்பின் வரும்யா றஞ்சுவல்
ஈர்ங்குர லுருமி னார்கலி நல்லேறு





பாம்புகவி னழிக்கு மோங்குவரை பொத்தி
மையின் மடப்பிடி யிணையக்
கையூன் றிழிதரு களிறெறிந் தன்றே.

ஆறுபார்த்துற்ற அச்சத்தால் தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது.

## 1339. நற்றிணை - 276. குறிஞ்சி

கோடு துவையாக் கோள்வாய் நாயொடு

காடுதேர்ந் தசைஇய வயமான் வேட்டு
வயவர் மகளி ரென்றி யாயிற்
குறவர் மகளிரேங் குன்றுகெழு கொடிச்சியேம்
சேணோ னிழைத்த நெடுங்காற் கழுதிற்
கான மஞ்ஞை கட்சி சேக்குங்
கல்லகத் ததுவெம் மூரே செல்லாது
சேந்தனை சென்மதி நீயே பெருமலை
வாங்கமைப் பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே.

பகற்குறிவந்துபெயருந் தலைமகனை உலகியல் சொல்லியது.

## 1340. நற்றிணை - 328. குறிஞ்சி

கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேற் றூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைகிளி கடியும் பெருங்கல் நாடன்
பிறப்போ ரன்மை யறிந்தனம் அதனால்
அதுவினி வாழி தோழி ஒருநாள்
சிறுபல் கருவித் தாகி வலனேர்பு
பெரும்பெயல் தலைக புனனே இனியே
எண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது
சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்
விலங்குமலை யடுக்கத் தானுங்
கலம்பெறு விறலி யாடுமிவ் வூரே.

தோழி வரைவிடை யாற்றாளாகிய தலைமகளை வற்புறுத்தது.

**1341.** நற்றிணை - **399.** குறிஞ்சி

அருவி யார்க்கும் பெருவரை யடுக்கத்துக்
குருதி யொப்பின் கமழ்பூங் காந்தள்
வரியணி சிறகின் வண்டுண மலரும்
வாழியஞ் சிலம்பிற் கேழல் கெண்டிய
நிலவரை நிவந்த பலவுறு திருமணி
ஒளிதிகழ் விளக்கத் தீன்ற மடப்பிடி
களிறுபுறங் காப்பக் கன்றொடு வதியும்
மாமலை நாடன் நயந்தனன் வரூஉம்
பெருமை யுடைய ளென்பது
தருமோ தோழிநின் திருநுதற் கவினே.

நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாமை வேறுபடுகின்ற தலைமகளைத் தோழி 'எம்பெருமான் இதற்காய நல்லது புரியும்' என்று தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது. இதற்காய நல்லது

புரியும் பெருமான் திறம்வேண்டு மென்றாட்குத் தலைமகள் சொல்லி

யதூஉமாம்.

உருசா. நக்கண்ணையார்

**1342.** அகநானூறு - **252.** குறிஞ்சி

இடம்படு பறியா வலம்படு வேட்டத்து
வாள்வரி நடுங்கப் புகல்வந் தாளி
உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி
வெண்கோடு புய்க்குந் தண்கமழ் சோலைப்
பெருவரை யடுக்கத் தொருவே லேந்தித்
தனியன் வருத லவனும் அஞ்சான்
பனிவார் கண்ணே ணாகி நோயட
எமியே னிருத்தலை யானும் ஆற்றேன்
யாங்குச் செய்வாங்கொல் தோழி யீங்கைத்
துய்யவிழ் பனிமல ருதிர வீசித்
தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்



பெருங்குளங் காவலன் போல
அருங்கடி யன்னையுந் துயில்மறந் தனளே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

**1343.** நற்றிணை - **19.** நெய்தல்

இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பி னன்ன அரும்புமுதிர்பு
நன்மா னுழையின் வேறுபடத் தோன்றி
விழவுக்களங் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப
இனமணி நெடுந்தேர் பாக னியக்கச்
செலீஇய சேறி யாயின் இவளே

வருவை யாகிய சின்னாள்
வாழா ளாதல்நற் கறிந்தனை சென்மே.

புணர்ந்து நீங்கிய தலைவனைத் தோழி வரைவுகடாயது.

## 1344. நற்றிணை - 87. நெய்தல்

உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கு வஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழ ரழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு
அதுகழிந் தன்றே தோழி யவர்நாட்டுப்
பனியரும் புடைந்த பெருந்தாட் புன்னை
துறைமே யிப்பி யீர்ம்புறத் துறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்
பெருந்தண் கானலும் நினைந்தவப் பகலே.

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாய தலைவி கனாக்கண்டு தோழிக்குரைத்தது.

## நக்கண்ணையார் 693

## 1345. புறநானூறு - 83

அடிபுனை தொடுகழல் மையணற் காளைக்கென்

தொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
அடுதோள் முயங்க லவைநா ணுவலே
என்போற் பெருவிதுப் புறுக என்றும்
ஒருபாற் படாஅ தாகி
இருபாற் பட்டவிம் மைய லூரே.

திணை - கைக்கிளை ; துறை - பழிச்சுதல்.
சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

## 1346. புறநானூறு - 84.

என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே
போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்
ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு
உமணர் வெரூஉந் துறையன் னன்னே.

திணை - கைக்கிளை ; துறை - பழிச்சுதல்.
சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

## 1347. புறநானூறு - 85.

என்னைக் கூரிஃ தன்மை யானும்

என்னைக்கு நாடிஃ தன்மை யானும்
ஆடா டென்ப வொருசா ரோரே
ஆடன் றென்ப வொருசா ரோரே
நல்ல பல்லோ ரிருநன் மொழியே
அஞ்சிலம் பொலிப்ப வோடி யெம்மில்
முழாவரைப் போந்தை பொருந்தி நின்று
யான்கண் டனனவன் ஆடா குதலே.

திணை - கைக்கிளை ; துறை - பழிச்சுதல்.
சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

## உருஎ. நக்கீரர்

### 1348. அகநானூறு - 36. மருதம்

பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்
கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து
அரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு

நாட்கயம் உழக்கும் பூக்கே ழூர
வருபுனல் வையை வார்மண லகன்றுறைத்
திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்
நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை யயர்ந்தனை யென்ப அலரே
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங் கானத் தகன்றலை சிவப்பச்
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி
நாரரி நறவி னெருமை யூரன்
தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப் பொருநனென்று
எழுவர் நல்வல மடங்க வொருபகல்
முரசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே.

தலைமகள் பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனொடு புலந்து சொல்லியது.

## 1349. அகநானூறு - 57. பாலை

சிறுபைந் தூவிச் செங்காற் பேடை
நெடுநீர் வானத்து வாவுப்பறை நீந்தி

வெயிலவி ருருப்பொடு வந்துகனி பெறுஅது
பெறுநாள் யாண ருள்ளிப் பையாந்து
புகலேக் கற்ற புல்லெ னுலவைக்
குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ்
இரும்பிணர்த் துறுகற் றீண்டி வளிபொரப்
பெருங்கை யானை கிவப்பிற் றூங்குங்
குன்ற வைப்பி னென்றூழ் நீளிடை
யாமே யெமிய மாகத் தானே

பசுநிலா விரிந்த பல்கதிர் மதியிற்
பெருநல் லாய்கவி னொரீஇச் சிறுபீர்
வீயேர் வண்ணங் கொண்டன்று கொல்லோ

கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக்
களிறுபட வெருக்கிய கல்லென் ஞாட்பின்
அரும்புண் ணுறுநரின் வருந்தினள் பெரிதழிந்து
பானாட் கங்குலும் பகலும்
ஆனு தழூவோ ளாய்சிறு நுதலே.

பொருள்வயிற் பிரிந்த தலைமகன் கிழத்தியை நினைந்து சொல் லியது.

**1350. அகநானூறு - 78. குறிஞ்சி**

நனந்தலைக் கானத் தாளி யஞ்சி

இனந்தலைத் தரூஉம் எறுழ்கிளர் முன்பின்
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப்
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்
இரும்பிணர்த் தடக்கையி னேமுறத் தழுவக்
கடுஞ்சூல் மடப்பிடி நடுங்குஞ் சாரல்
தேம்பிழி நறவின் குறவர் முன்றில்
முந்தூ ழாய்மல ருதிரக் காந்தள்
நீடிதழ் நெடுந்துடுப் பொசியத் தண்ணென
வாடை தூக்கும் வருபனி யற்சிரம்
நம்மில் புலம்பின் தம்மூர்த் தமியர்
என்னா குவர்கொல் அளியர் தாமென



எம்விட் டகன்ற சின்னாட் சிறிதும்
உள்ளிய மறிதிரோ வோங்குமலை நாட
உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தா ளாம்பல் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையாது
ஆளிடூஉக் கடந்து வாளம ருழக்கி
ஏந்துகோட்டு யானை வேந்த ரோட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த
தேங்கமழ் புதுமலர் நாறுமிவள் நுதலே.

களவுக்காலத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத்தோழி சொல்லியது.

## 1351. அகநானூறு - 93. பாலை

கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவும்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவும்
ஆள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்து
ஆரங் கண்ணி யடுபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை யுறந்தை யன்ன
பெறலரு நன்கல னெய்தி நாடுஞ்
செயலருஞ் செய்வினை முற்றின மாயின்
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறு நறுநுதல்
நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்
வயந்திகழ் பிமிழ்தரும் வாய்புகு கடாஅத்து

மீளி மொய்ம்பொடு நிலனெறியாக் குறுகி
ஆட்கோட் பிழையா அஞ்சுவரு தடக்கைக்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீ ருயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.

வினைமுற்றி மீளலுறுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1352.** அகநானூறு - **120.** நெய்தல்

நெடுவேள் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டி மீனருந்தும்
பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப
எல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழில் மழைக்கண் கலுழ இவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயல்
மாணலஞ் சிதைய ஏங்கி யானாது
அழல்தொடங் கினளே பெரும அதனாற்
கழிச்சுறா வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வி லிளையரொ டெல்லிச் செல்லாது
சேந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
அன்றி லகவு மாங்கண்
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே.

தோழி பகற்குறிக்கண் தலைமகளையிடத்துய்த்துவந்து தலை
மகனை யெதிர்ப்பட்டு நின்று சொல்லியது.

### 1353. அகநானூறு - 126. மருதம்

நின்வாய் செத்து நீபல வுள்ளிப்
பெரும்புன் பைதலை வருந்த லன்றியும்



மலைமிசைத் தொடுத்த மலிந்துசெல னீத்தந்
தலைநாண் மாமலர் தண்டுறைத் தயங்கக்
கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்று
அறல்வார் நெடுங்கயத் தருநிலை கலங்க
மாலிருள் நடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு
அவ்வாங் குந்தி யஞ்சொற் பாண்மகள்
நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகிற்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறாஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி
நயம்புரி நன்மொழி யடக்கவு மடங்கான்
பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்

திதியனொடு பொருத வன்னி போல
விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்
சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய
கயலென வமர்த்த வுண்கட் புயலெனப்
புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்
மின்னேர் மருங்குற் குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே.

1. உணர்ப்புவயின்வாரா வூடற்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. 2. அல்லகுறிப்பட்டழிந்ததூஉமாம். 3. தோழியைப் பின்னின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.

## 1354. அகநானூறு - 141. பாலை

அம்ம வாழி தோழி கைம்மிகக்
கனவுங் கங்குல்தோ றினிய நனவும்
புனைவினை நல்லிற் புள்ளும் பாங்கின
நெஞ்சு நனிபுகன் றுறையு மெஞ்சாது
உலகுதொழி லுலந்து நாஞ்சில் துஞ்சி
மழைகால் நீங்கிய மாக விசும்பிற்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து



அறுமீன் சேரு மகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய

விழவுட னயர வருகதில் லம்ம
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகர நாறுந் தண்ணறுங் கதுப்பிற்
புதுமண மகடூஉ வயினிய கடிநகர்ப்
பல்கோட் டடுப்பிற் பாலுலை யிரீஇக்
கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செந் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவ லிடிக்கு மிருங்கா ழுலக்கைக்
கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை யோங்குமட லிராது
நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழ னிடையாற் றன்ன
நல்லிசை வெறுக்கை தருமார் பல்பொறிப்
புலிக்கே ழுற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாண்மல ருதிரக்
கலைபாய்ந் துகளுங் கல்சேர் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய

வேங்கட வைப்பிற் சுரனிறந் தோரே.

பிரிவிடையாற்றாளெனக் கவன்ற தோழிக்குக்

தது.
கிழத்தி யுரைத்

## 1355. அகநானூறு - 205. பாலை

உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்
தையல் நின்வயிற் பிரியலம் யாமெனப்
பொய்வ லுள்ளமொடு புரிவுணக் கூறித்
துணிவில் கொள்கைய ராகி யினியே

நோய்மலி வருத்தமொடு நுதல்பசப் பூர
நாமழத் துறந்தன ராயினுந் தாமே



வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி
பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும்பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன

செழுநகர் நல்விருந் தயர்மார் ஏமுற
விழுநிதி யெளிதினி னெய்துக தில்ல
மழைகா லற்சிரத்து மாவிருள் நீங்கி
நீடமை நிவந்த நிழல்படு சிலம்பிற்
கடாஅ யானைக் கவுள்மருங் குறழ
ஆமூர் பிழிதரு காமர் சென்னிப்
புலியுரி வரியதள் கடுப்பக் கலிசிறந்து
நாட்பூ வேங்கை நறுமல ருதிர
மேக்கெழு பெருஞ்சினை யேறிக் கணக்கலை
கூப்பிடூஉ வுகளுங் குன்றகச் சிறுநெறிக்
கற்பிறங் காரிடை விலங்கிய
சொற்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.

### 1356. அகநானூறு - 227. பாலை

நுதல்பசந் தன்றே தோள்சா யினவே
திதலை யல்குல் வரியும் வாடின
என்னு குவள்கொல் இவளெனப் பன்மாண்
நீர்மலி கண்ணொடு நெடிதுநினைந் தொற்றி
இனையல் வாழி தோழி நனைகவுட்

காய்சினஞ் சிறந்த வாய்புகு கடாத்தொடு முன்னிலை
பொரூஅது முரணிப் பொன்னிணர்ப் புலிக்கேழ்
வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்
செந்நிலப் படுநீ ரூடிச் செருமலைந்து
களங்கொள் மள்ளரின் முழங்கு மத்தம்

## நக்கீரர் 701

பலவிறந் தகன்றன ராயினும் நிலைஇ
நோயில ராகநங் காதலர் வாய்வாட்
டமிழகப் படுத்த இமிழிசை முரசின்
வருநர் வரையாப் பெருநா ளிருக்கைத்
தூங்கல் பாடிய வோங்குபெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பி னூணூ ரும்பர்
விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
எல்லுமி ழாவணத் தன்ன
கல்லென் கம்பலை செய்தகன் றோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

## 1357. அகநானூறு - 249. பாலை

அம்ம வாழி தோழி பன்னாள்
இவ்வூ ரம்ப லெவனோ வள்வார்
விசிபிணித் தியாத்த அரிகோற் றெண்கிணை
இன்குர லகவுந ரிரப்பின் நாடொறும்
பொன்கோட்டுச் செறித்துப் பொலந்தார் பூட்டிச்
சாந்தம் புதைத்த ஏந்துதுளங் கெழிலிமில்
ஏறுமுந் துறுத்துச் சால்பதங் குவைஇ
நெடுந்தேர் களிற்றொடு சுரக்குங் கொடும்பூட்
பல்வேல் முசுண்டை வேம்பி யன்னவென்
நல்லெழி லிளநலந் தொலையினும் நல்கார்
பல்பூங் கானத் தல்குநிழ லசைஇத்
தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்
நாகா வீழ்த்துத் திற்றி தின்ற
புலவுக்களந் துழைஇய துகள்வாய்க் கோடை
நீள்வரைச் சிலம்பின் இரைவேட் டெழுந்த
வாள்வரி வயப்புலி தீண்டிய விளிசெத்து



வேறுவேறு கவலைய ஆறுபரிந் தலறி
உழைமா னினநிரை யோடுங்
கழைமாய் பிறங்கல் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது
வேறுபாடு கண்டு ஆற்றானாகிய தோழிக்குத் தலைமகள்

சொல்லியது.

## 1358. அகநானூறு - 253. பாலை

வைகல் தோறும் பசலை பாயவென்
மெய்யும் பெரும்பிறி தாகின் றெய்யென
அன்னையு மமரா முகத்தினள் அலரே
வாடாப் பூவிற் கொங்க ரோட்டி
நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்
பொன்மலி நெடுநகர்க் கூட லாடிய

இன்னிசை யார்ப்பினும் பெரிதே யீங்கியான்
சிலநா ளுய்யலென் போன்மெனப் பலநினைந்து
ஆழல் வாழி தோழி வடாஅது
ஆரிருள் நடுநா ளேரா வுய்யப்
பகைமுனை யறுத்துப் பல்லினஞ் சாஅய்க்
கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்து
இனந்தலைத் தரூஉந் துளங்கிமில் நல்லேற்றுத்
தழூஉப்பிண ரெருத்தந் தாழப் பூட்டிய
அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழூவறை வெளவிக்
கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்
நேரா வன்தோள் வடுகர் பெருமகன்
பேரிசை யெருமை நன்னாட் டுள்ளதை

அயிரியா றிறந்தன ராயினு மயரிறந்து
உள்ளுப தில்ல தாமே பணைத்தோட்
குரும்பை மென்முலை யரும்பிய சுணங்கின்
நசுப்பழித் தொலிவருந் தாழிருங் கூந்தல்
மாக விசும்பிற் றிலகமொடு பதித்த

நக்கீரர் 703

திங்க ளன்னநின் திருமுகத்து
ஒண்சூட் டவிர்குழை மலைந்த நோக்கே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 1359. அகநானூறு - 290. நெய்தல்

குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை
இருஞ்சேற் றள்ளல் நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்
நுண்ஞா ணவ்வலைச் சேவல் பட்டென
அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது
பைதற் பிள்ளை தழீஇ யொய்யென

அங்கட் பெண்ணை யன்புற நாலுஞ்
சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்
கழிசேர் புன்னை யழிபூங் கானற்
றணவா நெஞ்சமொடு தமியன் வந்துநம்
மணவா முன்னு மெவனோ தோழி
வெண்கோட்டு யானை விறற்போர்க் குட்டுவன்
தெண்டிரைப் பரப்பிற் றொண்டி முன்றுறைச்
சுரும்புண மலர்ந்த பெருந்த ணெய்தல்
மணியேர் மாணல மொரீஇப்
பொன்னேர் வண்ணங் கொண்டவென் கண்ணே.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

## 1360. அகநானூறு - 310. நெய்தல்

கடுந்தே ரிளையரொடு நீக்கி நின்ற
நெடுந்தகை நீர்மையை யன்றி நீயுந்
தொழூதகு மெய்யை யழிவுமுந் துறுத்துப்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றலிற்
குவளை யுண்கண் கலுழ நின்மாட்டு
இவளும் பெரும்பே துற்றன ளோருந்

தாயுடை நெடுநகர்த் தமர்பா ராட்டக்
காதலின் வளர்ந்த மாத ராகலிற்
பெருமட முடையரோ சிறிதே யதனாற்
குன்றிற் றோன்றுங் குவவுமணற் சேர்ப்ப
இன்றிவண் விரும்பா தீமோ சென்றப்
பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்
கூஉங்க ணஃதே தெய்ய ஆங்க
உப்பொய் யுமண ரொழுகையொடு வந்த
இளைப்படு பேடை யிரியக் குரைத்தெழுந்து
உருமிசைப் புணரி யுடைதரும்
பெருநீர் வேலியெஞ் சிறுநல் லூரே.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி சொல்லியது.

## 1361. அகநானூறு - 340. நெய்தல்

பன்னா ளெவ்வந் தீரப் பகல்வந்து
புன்னையம் பொதும்பின் இன்னிழற் கழிப்பி
மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து
வலவன் வண்தே ரியக்க நீயும்

செலவுவிருப் புறுத லொழிகதில் லம்ம
செல்லா நல்லிசைப் பொலம்பூட் டிரையன்
பல்பூங் கானற் பவத்திரி யன்னவிவள்
நல்லெழி லிளநலந் தொலைய ஒல்லெனக்
கழியே யோத மல்கின்று வழியே
வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்குஞ்
சென்றோர் மன்ற மான்றின்று பொழுதென
நின்றிறத் தவலம் வீட இன்றிவண்
சேப்பி னெவனோ பூக்கேழ் புலம்ப
பசுமீ னொடுத்த வெண்ணெல் மாஅத்
தயிர்மிதி மிதவை யார்த்துவம் நினக்கே
வடவர் தந்த வான்கேழ் வட்டங்
குடபுல வுறுப்பிற் கூட்டுபு நிகழ்த்திய
வண்டிமிர் நறுஞ்சாந் தணிகுவந் திண்டிமில் நக்கீரர்.



எல்லுத்தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்
கூருளிக் கடுவிசை மாட்டலிற் பாய்புடன்
கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை
தண்கட லசைவளி யெறிதொறும் வினைவிட்டு
முன்றிற் றாழைத் தூங்குந்
தெண்கடற் பரப்பினெம் உறைவி னூர்க்கே.

பகற்குறிக்கண் தோழி தலைமகற்குச் சொல்லியது.

**1362.** அகநானூறு - **346.** மருதம்

நகைநன் றம்ம தானே யிறைமிசை
மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்தோ டன்ன கயல்குறித்துக்
கள்ளா ருவகைக் கலிமகி ழுழவர்
காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை
மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து
பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி
வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை
மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்
பார்வ லிருக்கும் பயங்கே ழூர
யாமது பேணின்றோ விலமே நீநின்
பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணதிர்ந் தியம்ப
மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி
எம்மனை வாரா யாகி முன்னாள்
நும்மனைச் சேர்ந்த ஞான்றை யம்மனைக்
குறுந்தொடி மடந்தை யுவந்தனள் நெடுந்தேர்
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகிற் கூட லாங்கண்
வெள்ளத் தானையொடு வேறுபுலத் திறுத்த
கிள்ளி வளவ னல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி

ஏதில் மன்ன ரூர்கொளக்
கோதை மார்ப னுவகையிற் பெரிதே.

தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.

### **1363.** அகநானூறு - **369.** பாலை

கண்டிசின் மகளே கெழீஇ யினையவை
ஒண்டொடி செறித்த முன்கை யூழ்கொள்பு
மங்கையர் பலபா ராட்டச் செந்தார்க்
கிள்ளையுந் தீம்பா லுண்ணா மயிலியற்
சேயிழை மகளி ராயமும் அயரா
தாழியு மலர்பல அணியா கேழ்கொளக்
காழ்புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப்
பாவையும் பலியெனப் பெறாஅ நோய்பொர
இவைகண் டினைவதன் றலையும் நினைவிலேன்
கொடியோள் முன்னிய துணரேன் தொடியோய்
இன்றுநின் னொலிகுரல் மண்ணா லென்றதற்கு
எற்புலந் தழிந்தன ளாகித் தற்றகக்
கடலந் தானைக் கைவண் சோழர்
கெடலரு நல்லிசை யுறந்தை யன்ன
நிதியுடை நன்னகர்ப் புதுவது புனைந்து
தமர்மண னயரவு மொல்லாள் கவர்முதல்

ஓமை நீடிய வுலவை நீளிடை
மணியணி பலகை மாக்காழ் நெடுவேற்
றுணிவுடை யுள்ளமொடு துதைந்த முன்பின்
அறியாத் தேஎத் தருஞ்சுர மடுத்த
சிறியோற் கொத்தவென் பெருமடத் தகுவி
சிறப்புஞ் சீரு மின்றிச் சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓரா யாத்த வொருதூண் மூன்றில்
ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ
மேயினள் கொல்லென நோவல் யானே.

மகட்போக்கிய செவிலி சொல்லியது.

## நக்கீரர் 707

### 1364. அகநானூறு - 389. பாலை

அறியாய் வாழி தோழி நெறிகுரற்
சாந்தார் கூந்த லுளரிப் போதணிந்து
தேங்கமழ் திருநுதற் றிலகந் தைஇயும்
பல்லித ழெதிர்மலர் கிள்ளி வேறுபட
நல்லிள வனமுலை யல்லியொ டப்பியும்
பெருந்தோட் டொய்யில் வரித்துஞ் சிறுபரட்டு
அஞ்செஞ் சீறடிப் பஞ்சி யூட்டியும்
எற்புறந் தந்து நிற்பா ராட்டிப்
பல்பூஞ் சேக்கையிற் பகலும் நீங்கார்
மனைவயி னிருப்பவர் மன்னே துணைதந்து
இரப்போ ரேந்துகை நிறையப் புரப்போர்
புலம்பி லுள்ளமொடு புதுவதந் துவக்கும்
அரும்பொருள் வேட்ட மெண்ணிக் கறுத்தோர்
சிறுபுன் கிளவிச் செல்லல் பாழ்பட
நல்லிசை தம்வயின் நிறுமார் வல்வேல்
வான வரம்பன் நன்னாட் டும்பர்
வேனில் நீடிய வெங்கடற் றடைமுதல்
ஆறுசெல் வம்பலர் வேறுபிரிந் தலறக்
கொலைவெம் மையின் நிலைபெயர்ந் துறையும்
பெருங்களிறு தொலைச்சிய இருங்கே ழேற்றை
செம்புல மருங்கிற் றன்கால் வாங்கி
வலம்படு வென்றியொடு சிலம்பகஞ் சிலம்பப்
படுமழை யுருமின் முழங்கும்
நெடுமர மருங்கின் மலையிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்கும்

தோழிக்குச் சொல்லியது.

**1365.** குறுந்தொகை - **78.** குறிஞ்சி

பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பிச்
சிலம்பி னிழிதரும் இலங்குமலை வெற்ப



நோதக் கன்றே காமம் யாவதும்
நன்றென வுணரார் மாட்டுஞ்
சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே.

பாங்கன் தலைமகற்குச் சொல்லியது.

**1366.** குறுந்தொகை - **105.** குறிஞ்சி

புனவன் துடவைப் பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட சில்குரல்
அறியா துண்ட மஞ்ஞை ஆடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்குஞ்
சூர்மலை நாடன் கேண்மை
நீர்மலி கண்ணொடு நினைப்பா கின்றே.

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச்
சொல்லி
யது.

**1367.** குறுந்தொகை - **131.** பாலை

ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோட்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே
நெடுஞ்சே ணாரிடை யதுவே நெஞ்சே
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து
ஓரே ருழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே.

வினைமுற்றிய தலைமகன் பருவவரவின்கண் சொல்லியது.

1368. குறுந்தொகை - 143. குறிஞ்சி

அழிய லாயிழை அன்புபெரி துடையன்
பழியு மஞ்சும் பயமலை நாடன்
நில்லா மையே நிலையிற் றாகலின்
நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்



தங்குதற் குரிய தன்றுநின்
அங்கலுழ் மேனிப் பாஅய பசப்பே.

வரைவிடைவைத்துப் பிரிந்த விடத்துத் தலைமகட்குத் தோழி கூறியது.

**1369.** குறுந்தொகை - **161.** குறிஞ்சி

பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது
கழுதுகண் பனிப்ப வீசும் அதன்றலைப்
புலிப்பற் றாலிப் புதல்வற் புல்லி
அன்னா வென்னும் அன்னையும் மன்னோ
என்மலைந் தனன்கொல் தானே தன்மலை
ஆரம் நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே.

இரவுக்குறிக்கண் வந்த தலைமகனைக் காப்பு மிகுதியான் எதிர்ப்படப்பெறாத தலைமகள் பிற்றைஞான்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

**1370.** குறுந்தொகை - **266.** பாலை

நமக்கொன் றுரையா ராயினுந் தமக்கொன்று
இன்னா இரவி னின்றுணை யாகிய
படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ
மறப்பரும் பணைத்தோள் மரீஇத்
துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே.

வரையாது பிரிந்த இடத்துத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

**1371.** குறுந்தொகை - **280.** குறிஞ்சி

கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
நெஞ்சு பிணிக்கொண்ட அஞ்சி லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாகம்

ஒருநாள் புணரப் புணரின்
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென்
யானே.

கழற்றெதிர்மறை.



## 1372. குறுந்தொகை - 368. மருதம்

மெல்லிய லோயே மெல்லிய லோயே
நன்னாள் நீத்த பழிதீர் மாமை
வன்பி னாற்றுத லல்லது செப்பிற்
சொல்ல கிற்றா மெல்லிய லோயே
சிறியரும் பெரியரும் வாழு மூர்க்கே
நாளிடைப் படாஅ நளிநீர் நீத்தத்து
இடிகரைப் பெருமரம் போலத்
தீதில் நிலைமை முயங்குகம் பலவே.

வரைவுமலிந்த தோழிக்குக் கிழத்தி கூறியது.

## 1373. நற்றிணை - 31. நெய்தல்

மாயிரும் பரப்பகந் துணிய நோக்கிச்
சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை
பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்காற்
றான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்குஞ்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
பெரும்புலம் புற்ற நெஞ்சமொடு பலநினைந்து
யானு மினையே னாயின் ஆனாது
வேறுபன் னாட்டிற் கால்தர வந்த
பலவுறு பண்ணிய மிழிதரு நிலவுமணல்
நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு
உலவுத்திரை யோதம் வெரூஉம்
உரவுநீர்ச் சேர்ப்பனொடு மணவா வூங்கே.

தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி வன்புறை எதிரழிந்தது.

## 1374. நற்றிணை - 86. பாலை

அறவர் வாழி தோழி மறவர்
வேலென விரிந்த கதுப்பிற் றோல
பாண்டி லொப்பிற் பகன்றை மலருங்
கடும்பனி யற்சிரம் நடுங்கக் காண்டக்

நக்கீரர்



கைவல் வினைவன் தையுபு சொரிந்த
சுரிதக வுருவின வாகிப் பெரிய
கோங்கங் குவிமுகை யவிழ ஈங்கை

நற்றளிர் நயவர நுடங்கும்
முற்றா வேனில் முன்னிவந் தோரே.

குறித்த பருவத்தின் வினைமுடித்து வந்தமைகேட்ட தோழி தலைவிக்குரைத்தது.

## 1375. நற்றிணை - 197. பாலை

தோளே தொடிநெகிழ்ந் தனவே நுதலே
பீரிவர் மலரிற் பசப்பூர்ந் தன்றே
கண்ணுந் தண்பனி வைகின அன்னோ
தெளிந்தன மன்ற தேயரென் னுயிரென
ஆழல் வாழி தோழி நீநின்
தாழ்ந்தொலி கதுப்பின் வீழ்ந்த காலொடு
வண்டுபடு புதுமல ருண்டுறைத் தரீஇய
பெருமட மகளிர் முன்கைச் சிறுகோற்
பொலந்தொடி போல மின்னிக் கணங்கொள்
இன்னிசை முரசி னிரங்கி மன்னர்
எயிலூர் பல்தோல் போலச்
செல்மழை தவழுமவர் நன்மலை நாட்டே.

வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

## 1376. நற்றிணை - 258. நெய்தல்

பல்பூங் கானற் பகற்குறி மரீஇச்
செல்வல் கொண்க செறித்தனள் யாயே

கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்

திருவுடை வியனகர் வருவிருந் தயர்மார்
பொற்றொடி மகளிர் புறங்கடை யுகுத்த
கொக்குகிர் நிமிரல் மாந்தி யெற்பட
அகலங் காடி யசைநிழற் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங்கட் காக்கை



தூங்கல் வங்கத்துக் கூம்பிற் சேக்கும்
மருங்கூர்ப் பட்டினத் தன்னவிவள்
நெருங்கே ரெல்வளை யோடுவ கண்டே.

தோழி செறிப்பறிவுறீஇயது.

1377. நற்றிணை - 340. மருதம்

புல்லேன் மகிழ்ந புலத்தலு மில்லேன்
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குள மடைநீர் விட்டெனக்
காலணைந் தெதிரிய கணைக்கோட்டு வாளை
அள்ளலங் கழனி யுள்வா யோடிப்
பகடுசே றுதைத்த புள்ளிவெண் புறத்துச்

செஞ்சா லுழவர் கோற்புடை மதரிப்
பைங்காற் செறுவி னணைமுதற் பிறழும்
வாணன் சிறுகுடி யன்னவென்
கோல்நேர் எல்வளை நெகிழ்த்த நும்மே.

பரத்தையின் மறுத்தந்த தலைமகனைத் தலைமகள் நொந்து சொல்லியது.

### 1378. நற்றிணை - 358. நெய்தல்

பெருந்தோள் நெகிழ அவ்வரி வாடச்
சிறுமெல் லாகம் பெரும்பசப் பூர
இன்னே மாக எற்கண்டு நாணி
நின்னொடு தெளித்தன ராயினும் என்னதூஉம்
அணங்க லோம்புமதி வாழிய நீயெனக்
கணங்கெழு கடவுட் குயர்பலி தூஉய்ப்
பரவினம் வருகஞ் சென்மோ தோழி
பெருஞ்சே யிறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்
பசும்பூண் வழுதி மருங்கை யன்னவென்



அரும்பெற லாய்கவின் தொலையப்
பிரிந்தாண் டுறைதல் வல்லி யோரே.

பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்த காலத்துத் தோழி 'இவள் ஆற்றாளாயினாள்; இவளை இழந்தேன்' எனக் கவன்றாள் வற்புறுத்தது. அக்காலத்து ஆற்றாளாய் நின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

## 1379. நற்றிணை - 367. முல்லை

கொடுங்கட் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்காற்
கூழுடை நன்மனைக் குழுவின விருக்கும்
மூதி லருமன் பேரிசைச் சிறுகுடி
மெல்லிய லரிவைநின் பல்லிருங் கதுப்பிற்
குவளையொடு தொடுத்த நறுவீ முல்லைத்
தளையவி ழலரித் தண்ணறுங் கோதை
இளையருஞ் சூடி வந்தனர் நமரும்
விரியுளை நன்மாக் கடைஇப்
பரியாது வருவரிப் பனிபடு நாளே.

வரைவுமலிந்தது.

## 1380. பத்துப்பாட்டு - முதலாவது திருமுருகாற்றுப்படை

க. திருப்பரங்குன்றம்

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை

வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்தார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த இணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்துத்

துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்தளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்

## நக்கீரர் - திருமுருகாற்றுப்படை

715

சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியும் அறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பும் மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச்

சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்

கண்தொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணந்தின் வாயள் துணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து

மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்



கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்கும்
குன்றமர்ந் துறைதலு முரியன் ; அதாஅன்று

## உ. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பின்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்டு
ஐவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப

நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருள் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம், ஒருமுகம்
ஆர்வல ரேத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே, ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே, ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே, ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே, ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே
ஆங்கம், மூவிரு முகனு முறைநவின் றொழுகலின்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்





செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலல் மரபி னையர்க் கேந்தியது

ஒருகை, யுக்கஞ் சேர்த்தியது ஒருகை,
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை
அங்குசங் கடாவ ஒருகை, யிருகை
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய, ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, ஒருகை
பாடின் படுமணி யிரட்ட, ஒருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட
ஆங்கப், பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
உரந்தலைக் கொண்ட உருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே ; அதாஅன்று

## ௩. திருவாவினன்குடி

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசற இமைக்கு முருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோ ரறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை

யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையு மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குல்
மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்று
அழலென வுயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலம்வயி னுயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
எருத்த மேறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்

பலர்புகழ் மூவருந் தலைவ ராக
ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்றும் இகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்



மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
உருமிடித் தன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவி னன்குடி யசைதலு முரியன் ; அதாஅன்று

௩. திருவேரகம்

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி யிளமை நல்யாண்டு
ஆறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி

விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்து
ஏரகத் துறைதலு முரியன் ; அதாஅன்று

ரு. குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்

நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறல்

குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர

•



விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்கான்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை யணைத்த கூந்தல்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வாலிண ரிடையிடுபு

சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே ; அதாஅன்று

### ௬. பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பி யைதுரைத்துக்

குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவின் இரண்டுடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை யருவியொ டின்னியங் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனகர்
ஆடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி

ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த வாறே
ஆண்டாண் டாயினு மாக காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவரு ளொருவ னங்கை யேற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ

செருவி லொருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்தும் இசைபே ராள
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையின் ஏத்தி யானாது
நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி யுள்ளி வந்தனென் நின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் தானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்தோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
அணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி

அஞ்ச லோம்புமதி யறிவல்நின் வரவென
அன்புடை நன்மொழி யளைஇ விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய வுலகத்து
ஒருநீ யாகித் தோன்ற விழுமிய

## நக்கீரர் - திருமுருகாற்றுப்படை

723

பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்
வேறுபல் துகிலி னுடங்கி அகில்சுமந்து

ஆர முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு

விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கம ழலரிறால் சிதைய நன்பல

ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு

மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று

முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா

வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்

கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்லேறு சிலைப்பச் சேணின்று
இழுமென இழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

குமரவேளைப் பாடியது.

a. குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையா யழகியா யேறூர்ந்தா னேறே
உளையாயென் னுள்ளத் துறை.

b. குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்

கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்.

c. வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை.

d. இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

e.

உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்-பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

f.

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்

ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன்.

g. முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவே னான்.

h. காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்கா யினி.

i. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன்
பாதம்

கரங்கூப்பிக் கண்குளிரக்
கண்டு—சுருங்காமல்

நக்கீரர் - நெடுநல்வாடை

725.

ஆசையால் நெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

j. நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

**1381.** பத்துப்பாட்டு - 7-வது நெடுநல்வாடை

வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென
ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்
ஏறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்
புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்
நீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ
மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க
மாமேயல் மறப்ப மந்தி கூரப்
பறவை படிவன வீழக் கறவை

கன்றுகோ ளொழியக் கடிய வீசிக்
குன்றுகுளிர்ப் பன்ன கூதிர்ப் பானாள்
புன்கொடி முசுண்டைப் பொதிப்புற வான்பூப்
பொன்போற் பீரமொடு புதற்புதல் மலரப்
பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
இருங்களி பரந்த ஈர வெண்மணற்
செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக்
கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப்
பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை
அகலிரு விசும்பிற் றுவலை கற்ப
அங்க ணகல்வய லார்பெயற் கலித்த
வண்டோட்டு நெல்லின் வருகதிர் வணங்க
முழுமுதற் கமுகின் மணியுற ழெருத்திற்
கொழுமட லவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை,

நுண்ணீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு
தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற
நளிகொள் சிமைய விரவுமலர் வியன்காக்
குளிர்கொள் சினைய குரூஉத்துளி தூங்க
மாட மோங்கிய மல்லல் மூதூர்
ஆறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்
படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
வண்டுமூசு தேறல் மாந்தி மகிழ்சிறந்து

துவலைத் தண்துளி பேணார் பகலிறந்து
இருகோட் டறுவையர் வேண்டுவயின் திரிதர
வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோள்
மெத்தென் சாயல் முத்துறழ் முறுவற்
பூங்குழைக் கமர்ந்த ஏந்தெழில் மழைக்கண்
மடவரல் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து
அவ்வித ழவிழ்பதங் கமழப் பொழுதறிந்து
இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ
நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது
மல்ல லாவண மாலை யயர

மனையுறை புறவின் செங்காற் சேவல்
இன்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணாது
இரவும் பகலு மயங்கிக் கையற்று
மதலைப் பள்ளி மாறுவன இருப்பக்
கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்
கொள்ளுறழ் நறுங்கற் பலகூட்டு மறுக
வடவர் தந்த வான்கேழ் வட்டம்
தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்பக்
கூந்தல் மகளிர் கோதை புனையார்
பல்லிருங் கூந்தற் சின்மலர் பெய்ம்மார்
தண்ணறுந் தகர முளரி நெருப்பமைத்து
இருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்பக்
கைவல் கம்மியன் கவின்பெறப் புனைந்த



செங்கேழ் வட்டஞ் சுருக்கிக் கொடுந்தறிச்
சிலம்பி வானூல் வலந்தன தூங்க
வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம்
நேர்வாய்க் கட்டளை திரியாது திண்ணிலைப்
போர்வாய் கதவந் தாழொடு துறப்பக்

கல்லென் துவலை தூவலின் யாவரும்
தொகுவாய்க் கன்னற் றண்ணீ ருண்ணார்
பகுவாய்த் தடவிற் செந்நெருப் பார
ஆடல் மகளிர் பாடல்கொளப் புணர்மார்
தண்மையிற் றிரிந்த இன்குரற் றீந்தொடை

கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇக்
கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்பக்
காதலர்ப் பிரிந்தோர் புலம்பப் பெயல்கனைந்து
கூதிர்நின் றன்றாற் போதே மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்பு
ஒருதிறஞ் சாரா அரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வம் நோக்கிப்

பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து
ஒருங்குடன் வளைஇ யோங்குநிலை வரைப்பிற்
பருவிரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇத்
துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு
நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்
போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்
தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்
கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்த்து
ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை
வென்றெழு கொடியொடு வேழஞ்
சென்றுபுகக்
குன்றுகுயின் றன்ன ஓங்குநிலை வாயிற்
றிருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து

நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை
குறுங்கா லன்னமோ டுகளு முன்கடைப்
பணைநிலை முனைஇய பல்லுளைப் புரவி
புல்லுணாத் தெவிட்டும் புலம்புவிடு குரலொடு
நிலவுப்பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்துக்
கிம்புரிப் பகுவா யம்பண நிறையக்
கலிழ்ந்துவீ ழருவிப் பாடுவிறந் தயல
ஒலிநெடும் பீலி யொல்க மெல்லியற்
கலிமயி லகவும் வயிர்மரு ளின்னிசை
நளிமலைச் சிலம்பிற் சிலம்புங் கோயில்
யவன ரியற்றிய வினைமாண் பாவை
கையேந் தையகல் நிறையநெய் சொரிந்து
பருஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி
அறுவறு காலைதோ றமைவரப் பண்ணிப்
பல்வேறு பள்ளிதொறும் பாயிருள் நீங்கப்
பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை யல்லது
ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்
வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு
வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்
வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ
மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்
செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்
உருவப் பல்பூ வொருகொடி வளைஇக்
கருவொடு பெயரிய காண்பின் நல்லில்
தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்
இகல்மீக் கூறு மேந்தெழில் வரிநுதற்

பொருதொழி நாகம் ஒழியெயி றருகெறிந்து
சீருஞ் செம்மையு மொப்ப வல்லோன்
கூருளிக் குயின்ற ஈரிலை யிடையிடுபு
தூங்கியல் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடைதிரண் டிருந்த குடத்த இடைதிரண்டு
உள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப்
பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்



மடைமா ணுண்ணிழை பொலியத்
தொடைமாண்டு
முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப்
புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்
தகடுகண் புதையக் கொளீஇத் துகள்தீர்ந்து
ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்
வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து
முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து
மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்
துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
இணையணை மேம்படப் பாயணை யிட்டுக்
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடமை தூமடி விரித்த சேக்கை

ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்துப்
பின்னமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து
நன்னுத லுலறிய சின்மெல் லோதி
நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண்
வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதின்
பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்துப்
பூந்துகில் மரீஇய ஏந்துகோட் டல்குல்
அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு
புனையா ஓவியங் கடுப்பப் புனைவில்
தளிரேர் மேனித் தாய சுணங்கின்

அம்பணைத் தடைஇய மென்றோள் முகிழ்முலை
வம்புவிசித் தியாத்த வாங்குசாய் நுசுப்பின்
மெல்லியல் மகளிர் நல்லடி வருட

நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி
இன்னே வருகுவ ரின்றுணை யோரென
உகத்தவை மொழியவு மொல்லாள்

மிகக்கலுழ்ந்து



நுண்சேறு வழித்த நோனிலைத் திரள்கால்
ஊரு வறுமுலை கொளீஇய கால்திருத்திப்
புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசைத்
திண்ணிலை மருப்பின் ஆடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
உரோகிணி நினைவனள் நோக்கி நெடிதுயிரா
மாயிதழ் புலந்திய மலிந்துவீ ழரிப்பனி
செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியாப்
புலம்பொடு வதியும் நலங்கிள ரரிவைக்கு
இன்னா அரும்படர் தீர விறல்தந்து
இன்னே முடிகதில் லம்ம மின்னவிர்
ஓடையொடு பொலிந்த வினைநவில் யானை
நீள்திரள் தடக்கை நிலமிசைப் புரளக்
களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவர்
ஒளிறுவாள் விழுப்புண் காணிய புறம்போந்து
வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கித்
தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல்
பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல
வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா

இருஞ்சுறறுத [illegible]
புடைவீ ழந்துகி லிடவயின் தழீஇ
வாள்தோட் கோத்த வன்கட் காளை
சுவல்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே.

பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது.

## நக்கீரர் 731

**1381-a.** வாடை நலிய வடிக்கண்ணாள்
தோள்நசைஇ
ஓடை மழகளிற்றா னுள்ளான்கொல்—கோடல்
முகையோ டலமர முற்றெரிபோற் பொங்கிப்
பகையோடு பாசறையு ளான்.

### 1382. புறநானூறு - 56.

ஏற்றுவல னுயரிய எரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும் கடல்வளர்
புரிவளை புரையு மேனி
அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்

மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும் மணிமயி
லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென ஞாலங்
காக்குங் கால முன்பின்
தோலா நல்லிசை நால்வ ருள்ளுங்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்
வலியொத் தீயே வாலி யோனைப்
புகழொத் தீயே இகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலின்
ஆங்காங் கவரவ ரொத்தலின் யாங்கும் அரியவு
முளவோ நினக்கே யதனால்
இரவலர்க் கருங்கலம் அருகா தீயா
யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல் பொன்செய்
புனைகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து ஆங்கினி
தொழுகுமதி யோங்குவாள் மாற அங்கண் விசும்பி
னாரிரு ளகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவுங் குடதிசைத்

தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇய ருலகமோ டுடனே.

திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.
பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனைப் பாடியது.

## 1383. புறநானூறு - 189.

தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## 1384. புறநானூறு - 395.

மென்புலத்து வயலுழவர்
வன்புலத்துப் பகடுவிட்டுக்
குறுமுயலின் குழைச்சூட்டொடு
நெடுவாளைப் பல்லுவியற்
பழஞ்சோற்றுப் புகவருந்திப்
புதற்றளவின் பூச்சூடி
... ... ...
... ... அரியலாருந்து
மனைக்கோழிப் பைம்பயிரின்னே
கானக்கோழிக் கவர்குரலொடு
நீர்க்கோழிக் கூய்ப்பெயர்க் குந்து
வேயன்ன மென்றோளால்

மயிலன்ன மென்சாயலார்
கிளிகடியின்னே
அகலள்ளற் புள்ளிரீஇயுந்து
ஆங்கப், பலநல்ல புலனணியுஞ்
சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செல்லா நல்லிசை யுறந்தைக் குணாது
நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும

முன்னாள் நண்பகற் சுரனுழந்து வருந்திக்
கதிர்நனி செ... ... ... மாலைத்
தன்கடைத் தோன்றி யென்னுற விசைத்தலின்
தீங்குரல்... ...கி னரிக்குரற் றடாரியொடு
ஆங்குநின்ற வெற்கண்டு
சிறிதுநில்லான் பெரிதுங்கூறான்
அருங்கலம் வரவே யருளினன் வேண்டி
...யென வுரைத்தன்றி நல்கித் தன்மனைப்
பொன்போல் மடந்தையைக் காட்டி யிவனை
என்போற் போற்றென் றோனே யதற்கண்டு
அவன்மறவ லேனே பிறருள்ள லேனே
அகன்ஞாலம் பெரிதுவெம்பினும்
மிகவானு ளெரிதோன்றினும்
குளமீனொடுந் தாட்புகையினும்
பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி
விளைவொன் றோ வெள்ளங்கொள்கென
உள்ளது மில்லது மறியாது
ஆங்கமைந் தன்றால் வாழ்கவன் தாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.

சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனைப் பாடியது.

## உ௫அ. நப்பசலையார்

## 1385. நற்றிணை - 243. பாலை

தேம்படு சிலம்பிற் றெள்ளறல் தழீஇய
துறுக லயல தூமண லடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகற லோம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற விருந்து மேவர நுவல
இன்னா தாகிய காலைப் பொருள்வயிற்
பிரித லாடவர்க் கியல்பெனின்
அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே.

பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

## ௨௫௯. நப்பண்ணனார்

## 1386. பரிபாடல் - 19.

நிலவரை யழுவத்தான் வானுறை புகல்தந்து
புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து
அருமுனி மரபி னான்றவர் நுகர்ச்சிமன்
இருநிலத் தோரு மியைகென ஈத்தநின்
தண்பரங் குன்றத் தியலணி நின்மருங்கு
சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலு மயிற்கொடி வதுவை
புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்

கலப்போ டியைந்த விரவுத்தி ரெல்லை
அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
சிறந்தோ ருலகம் படருநர் போல
உரிமாண் புனைகல மொண்டுகில் தாங்கிப்
புரிமாண் புரவியர் போக்கமை தேரர்

## நப்பண்ணனார்

735

தெரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்பநின்
குன்றொடு கூட விடையெல்லா மொன்றுபு
நேர்பூ நிறைபெய் திருநிலம் பூட்டிய
தார்போலு மாலைத் தலைநிறையால் தண்மணல்
ஆர்வேலை யாத்திரைசெல் யாறு ;

சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் புலமாண் வழுதி
மடமயி லோரு மனையவ ரோடும்
கடனறி காரியக் கண்ணவ ரோடும்நின்
சூருறை குன்றிற் றடவரை யேறிமேற்
பாடு வலந்திரி பண்பிற் பழமதிச்

சூடி யசையுஞ் சுவல்மிசைத் தானையிற்
பாடிய நாவிற் பரந்த வுவகையின்
நாடு நகரு மடைய அடைந்தனைத்தே

படுமணி யானை நெடியாய்நீ மேய
கடிநகர் சூழ்நுவலுங் கால் ;
தும்பி தொடர்கதுப்ப தும்பி தொடராட்டி
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரனசைப்பார்
வண்டார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்
திண்டேர் வழியிற் செலநிறுப்பார் கண்டக்
கரும்பு கவழ மடுப்பார் நிரந்து
பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே
குருகெறி வேலோய்நின் குன்றக்கீழ் நின்ற
இடைநிலம் யாமேத்து மாறு ;

குரங்கருந்து பண்ணியங் கொடுப்போரும்
கரும்பு கருமுகக் கணக்களிப் போரும்
தெய்வப் பிரமஞ் செய்கு வோரும்
கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரும்
யாழி னிளிகுரல் சமங்கொள் வோரும்
வேள்வியி னழகியல் விளம்பு வோரும்
கூர நாண்குரல் கொம்மென வொலிப்ப
ஊழுற முரசி னொலிசெய் வோரும்

என்றா ழூறவரு மிருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை யுள்படு வோரும்
இரதி காம னிவளிவ னெனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை யிவளக லிகையிவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல வெழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவுஞ் சுட்டறி வுறுத்தவும்
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச்
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅல் மருகன் மாட மருங்கு
பிறந்த தமரிற் பெயர்ந்தொரு பேதை
பிறங்க லிடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியு மறந்தேன் சிறந்தவர்
ஏஎ யோஒ வெனவிளி யேற்பிக்க
ஏஎ யோஒவென் றேலா அவ்விளி
அவ்விசை முழையேற் றழைப்ப அழைத்துழிச்
செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை
மீட்சியுங் கூஉக்கூஉ மேவு மடமைத்தே
வாழ்த்துவப்பான் குன்றின் வகை ;

நனிநனி நயவரு சாய்ப்பின் நாறிணர்ச்
சினைபோழ் பல்லவந் தீஞ்சுனை யுதிர்ப்ப
உதிர்த்த சுனையி னெடுத்த தலைய
அலர்முகிழுற அவைகிடப்பத்
தெரிமலர் நனையுறுவ
ஐந்தலை யவிர்பொறி யரவ மூத்த
மைந்த னருகொன்று மற்றிளம் பார்ப்பென
ஆங்கிள மகளிர் மருளப் பாங்கர்
பசும்பிடி யிளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல்
கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்
எருவை நறுந்தோ டெரியிணர் வேங்கை
உருவமிகு தோன்றி யூழிணர் நறவம்



பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்
நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க
மணந்தவை போல வரைமலை யெல்லாம்
நிறைந்தும் உறழ்ந்தும் நிமிர்ந்தும் தொடர்ந்தும்
விடியல் வியல்வானம் போலப் பொலியும்
நெடியாய்நின் குன்றின் மிசை ;

நினையானைச் சென்னி நிறங்குங்கு மத்தாற்
புனையாப்பூ நீரூட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவழப் பூங்காம்பிற் பொற்குடை யேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியுட்
பன்மண மன்னு பின்னிருங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத் தார்நின்
கொடியேற்று வாரணங் கொள்கவழ மிச்சில்
மறுவற்ற மைந்தர்தோ ளெய்தார் மணந்தார்
முறுவற் றலையளி யெய்தார்நின் குன்றங்
குறுகிச் சிறப்புணாக் கால் ;
குறப்பிணாக் கொடியைக் கூடியோய்
வாழ்த்துச்
சிறப்புணாக் கேட்டி செவி ;
உடையு மொலியலுஞ் செய்யைமற் றாங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவு முருவத்தீ யொத்தி முகனும்
விரிகதிர் முற்றா விரிசுட ரொத்தி

எவ்வத் தொவ்வா மாமுதல் தடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவே லழுத்தி
அவ்வரை யுடைத்தோய்நீ யிவ்வரை மருங்கிற்
கடம்பம ரணிநிலை பகர்ந்தேம்
உடங்கம ராயமொ டேத்தினந் தொழுதே.

கடவுள் வாழ்த்து. மருத்துவன் நல்லச்சுதனார்
இசை. பண் -

காந்தாரம்.

47

## உகூ௦. நப்பாலத்தனார்

### 1387. நற்றிணை - 52. பாலை

மாக்கொடி யதிரற் பூவொடு பாதிரித்

தூத்தகட் டெதிர்மலர் வேய்ந்த கூந்தல்
மணங்கமழ் நாற்ற மரீஇ யாமிவள்
சுணங்கணி யாகம் அடைய முயங்கி
வீங்குவர்க் கவவின் நீங்கல் செல்லேம்
நீயே, ஆள்வினை சிறப்ப எண்ணி நாளும்
பிரிந்துறை வாழ்க்கை புரிந்தமை யலையே
அன்பிலை வாழியென் னெஞ்சே வெம்போர்
மழவர் பெருமகன் மாவள் ளோரி
கைவளை மியைவ தாயினும்
ஐதே கம்ம இயைந்துசெய் பொருளே.

தலைமகன் செலவழுங்கியது.

**1388.** நற்றிணை - **240.** பாலை

ஐதே கம்மஇவ் வுலகுபடைத் தோனே
வையேர் வாலெயிற் றொண்ணுதற் குறுமகள்
கைகவர் முயக்க மெய்யுறத் திருகி
ஏங்குயிர்ப் பட்ட வீங்குமுலை யாகந்
துயிலிடைப் படூஉந் தன்மைய தாயினும்

வெயில்வெய் துற்ற பரல்வ லொதுக்கிற்
கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி
ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்
யானை யினநிரை வௌவுங்
கானந் திண்ணிய மலைபோன் றிசினே.

பிரிவிடைமெலிந்த தலைமகள் சொல்லியது.
நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியதூஉமாம்.

## உ௱க. நம்பிகுட்டுவன்

**1389.** குறுந்தொகை - **109.** நெய்தல்

மூட்கா விறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி யிகுதிரை தரூஉந் துறைவன்
புணரிய இருந்த ஞான்றும்
இன்னது மன்னோ நன்னுதற் கவினே.

தலைவன் சிறைப்புறமாகத் தலைவி வேறுபாடு கண்ட புறத்தார் அலர் கூறுகின்றமை தோன்றத் தோழி தலைமகட்குக் கூறுவா

ளாய்க் கூறியது.

**1390.** குறுந்தொகை - **243.** நெய்தல்

மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
தார்மணி யன்ன வொண்பூக் கொழுதி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை
5 உள்ளேன் தோழி படீஇயரென் கண்ணே.

வன்புறை எதிரழிந்து சொல்லியது.

**1391.** நற்றிணை - **145.** நெய்தல்

இருங்கழி பொருத ஈர வெண்மணல்
மாக்கொடி யடும்பின் மாயித ழலரி

கூந்தல் மகளிர் கோதைக் கூட்டுங்
காமர் கொண்க ஞைமவெங் கேண்மை

ஐதேய்ந் தில்லா ஊங்கும் நம்மொடு
புணர்ந்தனன் போல உணரக் கூறித்
தான்யாங் கென்னும் அறனில் அன்னை
யானெழி லறிதலு முரியள் நீயும்நம்
பராரைப் புன்னைச் சேரி மெல்ல



நள்ளென் கங்குலும் வருமரோ
அம்ம வாழியவூர் தேர்மணிக் குரலே.

இரவுக்குறி வந்து தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி வரைவுகடாயது.

## 1392. நற்றிணை - 236. குறிஞ்சி

நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
ஒய்யெனச் சிறிதாங் குயிரியர் பையென
முன்றிற் கொளினே நந்துவள் பெரிதென
நிரைய நெஞ்சத் தன்னைக் குய்த்தாண்டு
உரையினி வாழி தோழி புரையின்
நுண்ணே ரெல்வளை நெகிழ்த்தோன் குன்றத்து
அண்ணல் நெடுவரை யாடித் தண்ணென
வியலறை மூழ்கிய வளியென்
பசலை யாகந் தீண்டிய சிறிதே.

தலைமகன் சிறைப்புறமாக வற்புறுக்குந் தோழிக்குத்

தலைமகள்

சொல்லியது.

**1393.** நற்றிணை - **345.** நெய்தல்

கானற் கண்டற் கழன்றுகு பைங்காய்,
நீனிற இருங்கழி யுடம்பட வீழ்ந்தென
உறுகால் தூக்கத் தூங்கி யாம்பல்
சிறுவெண் காக்கை யாவித் தன்ன
வெளிய விரியுந் துறைவ என்றும்
அளிய பெரிய கேண்மை நும்போற்
சால்பெதிர் கொண்ட செம்மை யோருந்
தேறா நெஞ்சங் கையறுபு வாட
நீடின்று விரும்பா ராயின்
வாழ்தல்மற் றெவனோ தேய்கமா தெளிவே.

தெளிவிடைவிலக்கியது.

## ௨௯௨. நரிவெரூஉத்தலையார்

**1394.** குறுந்தொகை - **5.** நெய்தல்

அதுகொல் தோழி காம நோயே
வதிகுருகு உறங்கும் இன்னிழற் புன்னை
உடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்

மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்வித ழுண்கண் பாடொல் லாவே.

பிரிவிடை யாற்ருளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

## 1395. குறுந்தொகை - 236. நெய்தல்

விட்டென விடுக்குநாள் வருக அதுநீ
நொந்தனை யாயின் தந்தனை சென்மோ
குன்றத் தன்ன குவவுமண லடைகரை
நின்ற புன்னை நிலந்தோய் படுசினை
வம்ப நாரை சேக்கும்
தண்கடற் சேர்ப்பநீ யுண்டவென் னலனே.

வரைவிடைவைத்துப் பிரிவான் இவள் வேறுபடாமை ஆற்றுவி என்ருற்குத் தோழி நகையாடி உரைத்தது.

## 1396. புறநானூறு - 5.

எருமை யன்ன கருங்கல் லிடைதோறு
ஆனிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்
அருளு மன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்ருது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ ; பொருண்மொழிக்காஞ்சியுமாம்.



சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும்பொறையைக் கண்டஞான்று நின்உடம்பு பெறுவாயாகென, அவனைச் சென்றுகண்டு தம்முடம்பு பெற்றுநின்ற நரிவெரூஉத்தலையார் பாடியது.

## 1397. புறநானூறு - 195.

பல்சான் றீரே பல்சான் றீரே
கயல்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனில் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமின் அதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

## ௨௬௩. நரைமுடி நெட்டையார்

## 1398. அகநானூறு - 339. பாலை

வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந்தேர்
நோன்கதிர் சுமந்த ஆழியாழ் மருங்கிற்
பாம்பென முடுகுநீ ரோடக் கூம்பிப்
பற்றுவிடு விரலிற் பயறுகா யூழ்ப்ப
அற்சிரம் நின்றன்றாற் பொழுதே முற்பட
ஆள்வினைக் கெழுந்த அசைவி லுள்ளத்து
ஆண்மை வாங்கக் காமந் தட்பக்
கவைபடு நெஞ்சங் கட்க ணகைய
இருதலைக் கொள்ளி யிடைநின் றுவருந்தி
ஒருதலைப் படாஅ வுறவி போன்றனம்
நோங்கோல் அளியள் தானே யாக்கைக்கு
உயிரியைந் தன்ன நட்பி னவ்வுயிர்



வாழ்த லன்ன காதல்
சாத லன்ன பிரிவரி யோளே.

போகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## ௨௬௬. நல்லச்சுதனார்
## 1399. பரிபாடல் - 21.

ஊர்ந்ததை, எரிபுரையோடை
யிடையிமைக்குஞ்சென்னிப்
பொருசமங் கடந்த புகழ்சால் வேழம் ;
தொட்டதை, தைப்பமை சருமத்திற் றுளியை

தாமரை
துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய
வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த
வரிமலி யரவுரி வள்புகண் டன்ன
புரிமென் பீலிப் போழ்புனை யடையல் ;

கையதை, கொள்ளாத் தெவ்வர்கொள் மாமுதல் தடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்புடை திறந்தவேல் ;

பூண்டதை, சுருளுடை வள்ளி யிடையிடு பிழைத்த
உருளிணர்க் கடம்பி னொன்றுபடு கமழ்தார் ;

அமர்ந்ததை, புரையோர் நாவிற் புகழ்நல முற்றி
நிரையே ழடுக்கிய நீளிலைப் பாலை

அரைவரை மேகலை யணிநீர்ச் சூழித்
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம் ;

குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வநிற் றொழுது ;

சுடுபொன் ஞெகிழத்து முத்தரிசென் றார்ப்பத்
துடியின் அடிபெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி
அடுநறா மகிழ்தட்ப ஆடுவாள் தகைமையின்
நுனையிலங் கெஃகெனச் சிவந்த நோக்கமொடு
துணையணை கேள்வனைத் துனிப்பவள் நிலையும்
நிழல்காண் மண்டிலம் நோக்கி



அழல்புனை யவிரிழை திருத்துவாள் குறிப்பும்
பொதிர்த்த முலையிடைப் பூசிச் சந்தனம்
உதிர்த்துப் பின்னுற வூட்டுவாள் விருப்பும்
பல்லூ ழிவையிவை நினைப்பின் வல்லோன்
ஓவத் தெழுதெழில் போலு மாதடிந்
திட்டோய்நின் குன்றின் மிசை ;

மிசைபடு சாந்தாற்றி போல எழிலி
இசைபடு பக்க மிருபாலுங் கோலி
விடுபொறி மஞ்ஞை பெயர்புட னாட
விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப

முரல்குரற் றும்பி யவிழ்மல ரூத
யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்
பாணி முழவிசை யருவிநீர் ததும்ப
ஒருங்கு பரந்தவை யெல்லா மொலிக்கும்
இரங்கு முரசினான் குன்று ;
தாழ்நீ ரிமிழ்சுனை நாப்பண் குளித்தவண்
மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை
வேய்நீ ரழுந்துதன் கையின் விடுகெனப்
பூநீர்பெய் வட்ட மெறியப் புனைபெறாது
அருநிலை நீரி னவள் துயர் கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல்வீழ்ந்து
தழுவுந் தகைவகைத்துத் தண்பரங் குன்று ;
வண்டார் பிறங்கல் மைந்தர் நீவிய
தண்கமழ் சாந்தந் தைஇய வளியும்
கயல்புரை கண்ணியர் கமழ்துக ளுதிர்த்த
புயல்புரை கதுப்பக முளரிய வளியும்
உருளிணர்க் கடம்பி னெடுவேட் கெடுத்த
முருகு கமழ்புகை நுழைந்த வளியும்
அசும்பு மருவி யருவிடர்ப் பரந்த
பசும்பூட் சேஎய்நின் குன்றம்நன் குடைத்து ;

கண்ணொளிர் திகழட ரிடுசுடர் படர்கொடி மின்னுப்போல்
ஒண்ணகை தகைவகை நெறிபெறஇடையிடையிழைத்தியாத்த

செண்ணிகைக் கோதை கதுப்போ டியல
மணிமருள் தேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழப் பைந்துகில் நோக்கஞ் சிவப்பூரப்
பூங்கொடி போல நுடங்குவாள் ஆங்குத்தன்
சீர்தகு கேள்வ னுருட்டுந் துடிச்சீராற்
கோடணிந்த முத்தார மொல்க ஓசிபவளேர்
ஆடை யசைய அணியசையத் தானசையும்
வாடை யுளர்கொம்பர் போன்ம் ;

வாளி புரள்பவை போலுந் துடிச்சீர்க்குத்
தோளூழ் பெயர்ப்பவள் கண் ;

மாறம ரட்டவை மறவேல் பெயர்ப்பவை

ஆறிரு தோளவை யறுமுகம் விரித்தவை
நன்றம ராயமோ டொருங்குநின் அடியுறை
இன்றுபோ லியைகெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வநிற் றொழுதே.

கடவுள் வாழ்த்து. கண்ணகனூர் இசை. பண் - காந்தாரம்.

## உசுரு. நல்லந்துவனூர்

## 1400. அகநானூறு - 43. பாலை

கடல்முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை
சுடர்நிமிர் மின்னொடு வலனேர் பிரங்கி
என்றூழ் உழந்த புன்றலை மடப்பிடி
கைமாய் நீத்தங் களிற்றொடு படீஇய
நிலனும் விசும்பும் நீரியைந் தொன்றிக்
குறுநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது
கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்

தளிமயங் கின்றே தண்குர லெழிலி, யாமே,
கொய்யகை முல்லை காலொடு மயங்கி
மையிருங் கானம் நாறு நறுநுதற்
பல்லிருங் கூந்தல் மெல்லியல் மடந்தை
நல்லெழி லாகஞ் சேர்ந்தன மென்றும்



அளியரோ அளியர் தாமே யளியின்று
ஏதில் பொருட்பிணிப் போகித்தம்
இன்றுணைப் பிரியு மடமை யோரே.

தலைமகன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

**1401.** கலித்தொகை - **1.** கடவுள் வாழ்த்து - ௩.

**1402.** கலித்தொகை - **118.** நெய்தல் : 1

வெல்புகழ் மன்னவன் விளங்கிய
ஒழுக்கத்தால்
நல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர

டெழுந்தாற்போற்

5 ஆனாது கலுழ்கொண்ட வுலகத்து மற்றவன்
ஏனையா னளிப்பான்போல் இகலிருள் மதிசீப்பக்
குடைநிழ லாண்டாற்கும் ஆளிய வருவாற்கும்
இடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருள்மாலை ;

9

மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் எழினலம் எள்ளுவாய்
ஆய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போல் தளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய் ;

13

மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார்
பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்
;
17 மாலைநீ, தகைமிக்க
தாழ்சினைப்பதிசேர்ந்துபுள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா
ராட்டுவாய்
தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங்
கடிகல்லாய் ;

எனவாங்கு,
22 மாலையும் மலரும் நோனா தெம்வயின்
நெஞ்சமு மெஞ்சுமற் றில்ல எஞ்சி



உள்ளா தீமைந்தோ ருள்ளும்
உள்ளி லுள்ள முள்ளு ளுவந்தே.

பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு அதனோடு புலம்பித் தோழிகேட்ப அதனோடு புலந்தது.

### **1403.** கலித்தொகை - **119.** நெய்தல் : **2**

அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகப்
பகல்நுங்கி யதுபோலப் படுசுடர் கல்சேர
இகல்மிகு நேமியா னிறம்போல விருள்வர
நிலவுக்காண் பதுபோல அணிமதி யேர்தரக்
கண்பாயல் பெற்றபோற் கணைக்கால மலர்கூம்பத்
தம்புகழ் கேட்டார்போல் தலைசாய்த்து மரந்துஞ்ச
முறுவல்கொள் பவைபோல முகையவிழ்பு புதல்நந்தச்
சிறுவெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் திம்மெனப்
பறவைதம் பார்ப்புள்ளக் கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர
மாவதி சேர மாலை வாள்கொளா
அந்தி யந்தண ரெதிர்கொள அயர்ந்து
செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை
வாலிழை மகளி ருயிர்பொதி யவிழ்க்குங்
காலை யாவ தறியார்
மாலை யென்மனார் மயங்கி யோரே.

பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்கு உரைத்தது.

### **1404.** கலித்தொகை - **120.** நெய்தல் : **3**

அருள்தீர்ந்த காட்சியா னறனோக்கான் நயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
இருள்தூர்பு புலம்பூரக் கனைசுடர் கல்சேர
உரவுத்தகை மழுங்கித்தன் இடும்பையா லொருவனை
இரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போல் மரமெல்லாம் இலைகூம்பத்



தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதி யெயிறாக
நாற்றிசையும் நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை;
மாலைநீ, உள்ளங்கொண் டகன்றவர் துணைதாராப் பொழுதின்கண்
வெள்ளமா னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போல்
அல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ;

மாலைநீ, ஈரமில் காதல ரிகந்தருளா இடநோக்கிப்
போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போல்
ஆரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ ;

மாலைநீ, கந்தாதல்சான்றவர் களைதாராப்பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போற்
காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ ;

எனவாங்கு,

இடனின் றலைத்தரும் இன்னாசெய் மாலை
துனிகொள் துயர்தீரக் காதலர் துனைதர
மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
ஒல்லென நீக்கி யொருவாது காத்தாற்றும்
நல்லிறை தோன்றக் கெட்டாங்கு
இல்லா கின்று விருளகத் தொளித்தே.

பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுதுகண்டு கழிய ஆற்றாளாயின இடத்துத் தலைவன் வரவும் அவளது அகமலர்ச்சியுங் கண்டார் கூறியது.

**1405.** கலித்தொகை - **121.** நெய்தல் : **4**

ஒண்சுடர் கல்சேர உலகூருந் தகையது
தெண்கட லழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉந்
தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்
புள்ளின மிரைமாந்திப் புகல்சேர ஒலியான்று
5 வள்ளிதழ் கூம்பிய மணிமரு ளிருங்கழி
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப



7 தாங்கருங் காமத்தைத் தணந்துநீ புறமாறத்
தூங்குநீ ரிமிழ்திரை துணையாகி யொலிக்குமே
உறையொடு வைகிய போதுபோ லொய்யென
நிறையாற்று திழிதரூஉ நீர்நீந்து கண்ணாட்கு ;

11 வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்கு
ஆரிருட் டுணையாகி யசைவளி யலைக்குமே

கமழ்தண்டா துதிர்ந்துக ஊழுற்ற கோடல்வீ
இதழ்சோருங் குலைபோல இறைநீவு வளையாட்கு

15 இன்றுணை நீநீப்ப இரவினுட் டுணையாகித்
தன்றுணைப் பிரிந்தயாஅந் தனிக்குரு குசவுமே

ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தா னொளிசாம்பும்
நண்பகல் மதியம்போல் நலஞ்சாய்ந்த அணியாட்கு

எனவாங்கு,
எறிதிரை தந்திட இழிந்தமீ னின்றுறை
மறிதிரை வருந்தாமற் கொண்டாங்கு
நெறிதாழ்ந்து
சாயினள் வருந்தியா ளிடும்பை
பாய்பரிக் கடுந்திண்டேர் களையினோ இடனே.

தலைவன் ஒருவழித் தணந்தவிடத்துத் தலைவி ஆற்றாமைகூறி வரையக் கருதினையாயின் இஃதிடமெனச் சொல்லியது.

## 1406. கலித்தொகை - 122. நெய்தல் : 5

கோதை யாயமு மன்னையும் அறிவுறப்
போதெழி லுண்கண் புகழ்நல னிழப்பக்
காதல்செய் தருளாது துறந்தார்மாட் டேதின்றிச்
சிறிய துனித்தனை துன்னுசெய் தமர்ந்தனை
பலவுநூ றடுக்கினை யினைபேங்கி யழுதனை
அலவலை யுடையை யென்றி தோழீ ;

கேளினி,

8

மாணெழில் மாதர் மகளிரோ டமைந்தவன்

கா ணும்பண் பிலனுதல் அறிவேன்மன் அறியினும்



பேணி யவன்சிறி தளித்தக் காலென்
நாணில் நெஞ்சம் நெகிழ்தலுங் காண்பல் ;

12 இருளுற ழிருங்கூந்தல் மகளிரோ டமைந்தவன்
தெருளும்பண் பிலனுதல் அறிவேன்மன் அறியினும்
அருளி யவன்சிறி தளித்தக் காலென்
மருளி நெஞ்ச மகிழ்தலுங் காண்பல் ;

16 ஒள்ளிழை மாதர் மகளிரோ டமைந்தவன்
உள்ளும்பண் பிலனுதல் அறிவேன்மன்
புல்லி யவன்சிறி தளித்தக் காலென்

அறியினும்

அல்லல் நெஞ்ச மடங்கலுங் காண்பல் ;
அதனால்,
21 யாம நடுநாள் துயில்கொண் டொளித்த
காம நோயிற் கழீஇய நெஞ்சம்
தானவர் பாற்பட்ட தாயின்
நாமுயிர் வாழ்தலோ நகைநனி யுடைத்தே.
காமஞ்சாலா இளமையோள்வயிற் பின் களவொழுக்கம்
ஒழுகிய

தலைவன் இடையிட்டுப் பிரிந்து தொன்முறை மனை
வியரொடு
புணர்ச்சியெய்தி இருந்தானாக, அதனையறிந்து ஆற்றாளாய
தலைவி
ஆற்றாமையைக்கண்டு வினவிய தோழிக்கு அத்தலைவி
அவனொழுகு
கின்றவாறும் தன்னெஞ்சு அவன் வயத்ததாயவாறும்
கூறியது.
"மறையின்வந்த மனையோள் செய்வினை, பொறையின்று
பெருகிய
பருவாற்கண்ணும்" என்பதனானும் "பின்முறை யாக்கிய
பெரும்
பொருள் வதுவை" என்னும் சூத்திரத்தானுமுணர்க.

1407. கலித்தொகை - 123. நெய்தல் : 6

கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை
மிசைதொறுஞ்
சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி
யிசைபூத
ஒருங்குட னிம்மென இமிர்தலிற் பாடலோடு
அரும்பொருள்
மரபின்மால்யாழ்கேளாக்கிடந்தான்போற்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டிமிர்
நறுங்கானல்; நல்லந்துவனார்

6

காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான் 9
மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே ;

கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருள்மாலை
அல்லனோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே ;

12

வெறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினாற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
அறியவும் பெற்றாயோ அறியாயோ மடநெஞ்சே ;

எனவாங்கு,

16

எல்லையும் இரவுந் துயில்துறந்து பல்லூழ்
அரும்பட ரவலநோய் செய்தான்கட் பெறல்நசைஇ

இருங்கழி யோதம்போல் தடுமாறி
வருந்தினை யளியவென் மடங்கெழு நெஞ்சே.

காப்புமிகுதிக்கண் ஆற்றாத தலைவி தலைவன்பாற்சென்ற நெஞ்சினை நோக்கி அழிந்து கூறியது.

### **1408.** கலித்தொகை - **124.** நெய்தல் : **7**

ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியான் அணிபெறத் தைஇய

நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப

ஊரல ரெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற்
கூரநந்தன் எவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்

கா்ரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால் ;

9

இணைபிவ்வூ ரலர்தூற்ற எய்யாய்நீ துறத்தலிற்
பணையில்லா எவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்

துணையாருட் டகைபெற்ற தொன்னல மிழந்தினி
அணிவனப் பிழந்ததன் அணைமென்றோ ளல்லாக்கால்



13 இன்றிவ்வூ ரலர்தூற்ற எய்யாய்நீ துறத்தலின்
நின்றதன் எவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்
வென்றவேல் நுதியேய்க்கும் விறனல
னிழந்தினி

நின்றுநீ ருகக்கலுழு நெடும்பெருங்க
ணல்லாக்கால் ;

அதனால்,

18 பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற்
றெளித்தக்கால், அரிதென்னாள் துணிந்தவ
ளாய்நலம் பெயர்தரப்
புரியுளைக் கலிமான்றேர் கடவுபு
விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே.

"வெளிப்பட வரைதல் படாமை வரைதலென், றாயிரண் டென்ப வரைத லாறே" என்பதனால், களவு வெளிப்பட்ட பின் வரையாது பொருள்வயிற் பிரிந்துவந்தானைத் தோழி எதிர்ப்பட்டு நின்று தலைவி யது ஆற்றாமை கூறி வரைவுகடாயது.

## 1409. கலித்தொகை - 125. நெய்தல் : 8

கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்
வண்பரி நவின்ற வயமான் செல்வ
நன்கதை யறியினும் நயனில்லா நாட்டத்தால்
அன்பிலை யெனவந்து கழறுவல் ஐயகேள் ;

8 மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை
முகிழ்செய முள்கிய தொடர்பவ ளுண்கண்
அவிழ்பனி யுறைப்பவும் நல்காது விடுவாய்

இமிழ்திரைக் கொண்க கொடியை காணீ ;
12 இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவாய்
இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காணீ ;

நல்லந்துவனர் 753

16 இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற்
பின்னொடு கெழீஇய தடவர வல்குல்
நுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ ;

எனவாங்கு,

21 அனையளென் றளிமதி பெரும நின்னின்று
இறைவரை நில்லா வளைய ளிவட்கினிப்
பிறையேர் சுடர்நுதற் பசலை
மறையச் செல்லும்நீ மணந்தனை விடினே.

வரைவுநீட ஆற்றாத தலைவிநிலைமை தலைவற்குத் தோழி கூறி அவனை நெருங்கி வரைவுகடாயது.

**1410. கலித்தொகை - 126. நெய்தல் : 9**

பொன்மலை சுடர்சேரப் புலம்பிய இடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்

செக்கர்கொள் பொழுதினு ளொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போல்
எக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப !

6 அணிச்சிறை யினக்குரு கொலிக்குங்கால்நின் றிண்டேர்
மணிக்குர லெனஇவள் மதிக்குமன் மதித்தாங்கே
உள்ளான்ற வொலியவா யிருப்பக்கண் டவைகானற்
புள்ளென உணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே ;

10

நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கால் நின்மார்பின்
தார்நாற்ற மெனஇவள் மதிக்குமன் மதித்தாங்கே
அலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென உணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே ;

14 நீணகர் நிறையாற்றாள் நினையுநள் வதிந்தக்கால்
தோள்மேலா யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
நனவெனப் புல்லுங்காற் காணாளாய்க் கண்டது
கனவென உணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே ; 48

எனவாங்கு,

19 பலநினைந் தினையும் பைதல் நெஞ்சின்
அலமரல் நோயுள் உழக்குமென் தோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநல மேர்தரப் பூண்கநின் தேரே.

தோழி தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவுகடாயது.

## 1411. கலித்தொகை - 127.

நெய்தல் : 10

தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப இருந்தும்பி யிசைபூதச்
செருமிகு நேமியான் தார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப !

6 கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
நடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிகு கயலேர்கண் பனிமல்க
இடும்பையோ டினைபேங்க இவளைநீ துறந்ததை ;

10 குறியின்றிப் பன்னாள்நின் கடுந்திண்டேர் வருபதங்கண்டு
எறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ
அறிவஞ ருழந்தேங்கி யாய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர இவளைநீ துறந்ததை ;

காண்வர இயன்றவிக் கவின்பெறு பணித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ
வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றாள்
வாணுதல் பசப்பூர இவளைநீ துறந்ததை ;

அதனால்,

இறைவளை நெகிழ்ந்த எவ்வநோ யிவள்தீர
விரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபு தன்
கரையம லடும்பளித் தாஅங்கு
உரவுநீர்ச் சேர்ப்ப அருளினை யளிமே.

இதுவுமது.

நல்லந்துவனார் 755

1412. கலித்தொகை - 128. நெய்தல் : 11

தோள்துறந் தருளா தவர்போல் நின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
ஆடுகோட் டிருந்த அசைநடை நாரை
நளியிருங் கங்குல் நந்துய ரறியாது
அளியின்று பிணியின்று விளியாது நரலும்

கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை யென்றி யாயின்
நனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டுயான் செய்தது கேளினி;

10 அலந்தாங் கமையலெ னென்றானைப் பற்றியென்
நலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவும்

கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென அளிப்பான் போலவும்;

14 முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்;

18 கோதை கோலா இறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்
யாதென் பிழைப்பென நடுங்கி யாங்கே
பேதையைப் பெரிதெனத் தெளிப்பான் போலவும்
ஆங்கு,

; 23 கனவினாற் கண்டேன் தோழி காண்டகக்
கனவின் வந்த கானலஞ் சேர்ப்பன்
நனவின் வருதலு முண்டென
அனைவரை நின்றதென் அரும்பெற லுயிரே.

வரைவிடையாற்றாளாய்ச் செல்கின்ற தலைவியது கவின்கண்டு வினாய தோழிக்கு அவன் தான்கண்ட கனவுநிலை யுரைத்தது.



## 1413. கலித்தொகை - 129. நெய்தல் : 12

தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம்படைத்தான்கட்பெயர்ப்பான்போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட அரசன்பின்
5 அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர
எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள்மாலை ;

8 பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்திறம்
நோய்தெற வுழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ ;

12 மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றில்
நன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய
என்றுய ரறிந்தனை நரறியோ எம்போல
இன்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ ;

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்
இனிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ எம்போல
இனியசெய் தகன்றாரை யுடையையோ நீ;

எனவாங்கு,

அழிந்தய லறிந்த எவ்வ மேற்படப்
பெரும்பே துறுதல் களைமதி பெரும
வருந்திய செல்லல் தீர்த்த திறனறி யொருவன்
மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்
அருந்தியோர் நெஞ்சம் அழிந்துக விடினே.

"தன்னுட் கையாறெய்திடு கிளவி"யால் தலைவி ஆற்றாளாயின வாறு தோழி தலைவற்குக் கூறியது.

## நல்லந்துவனார் 757

### 1414. கலித்தொகை - 130. நெய்தல் : 13

நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்
இவனிற் றோன்றிய இவையென இரங்கப்

புரைதவ நாடிப் பொய்தபுத் தினிதாண்ட
அரைசனோ டுடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போல்
நிரைகதிர்க் கனலி பாடொடு பகல்செலக்
கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா
நெஞ்சம்போற்
புல்லிருள் பரத்தரூஉம் புலம்புகொள் மருள்மாலை
;

8 இம்மாலை,
ஐயர் அவிரழல் எடுப்ப அரோவென்
கையறு நெஞ்சங் கனன்றுதீ மடுக்கும் ;

11 இம்மாலை,
இருங்கழி மாமலர் கூம்ப அரோவென்
அரும்படர் நெஞ்சம் அழிவொடு கூம்பும் ;

14 இம்மாலை,
கோவலர் தீங்குழ லினைய அரோவென்
பூவெழி லுண்கண் புலம்புகொண் டினையும் ;

எனவாங்கு,
18 படுசுடர் மாலையொடு பைதல்நோ யுழப்பாளைக்

குடிபுறங் காத்தோம்புஞ் செங்கோலான் வியன்தானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே.

பிரிவிடையாற்றாத தலைவியது ஆற்றாமை தலைவன்வந்து

சார் தலின் நீங்கினமைகண்டு வாயில்கள் தம்முள்ளே கூறியது.

**1415. கலித்தொகை - 131. நெய்தல் : 14**

பெருங்கடற் றெய்வநீர் நோக்கித் தெளித்தென்
திருந்திழை மென்றோள் மணந்தவன் செய்த
அருந்துயர் நீக்குவேன் போல்மன் பொருந்துபு

பூக்கவின் கொண்ட புகழ்சா லெழிலுண்கண்



நோக்குங்கா ணோக்கின் அணங்காக்குஞ் சாயலாய் தாக்கி
இனமீன் இகல்மாற வென்ற சினமீன்
எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த
நெய்தல் நெடுநார்ப் பிணித்தியாத்துக் கையுளர்வின்
யாழிசை கொண்ட இனவண் டிமிர்ந்தார்ப்பத்
தாழா துறைக்குந் தடமலர்த் தண்தாழை
வீழூசல் தூங்கப் பெறின்;

12 மாழை, மடமான் பிணையியல் வென்றாய்நின்
னூசல்
கடைஇயான் இகுப்பநீ டுங்காய் தடமென்றோள்
நீத்தான் திறங்கள் பகர்ந்து;

நாணினகொல் தோழி நாணினகொல் தோழி
இரவெலாம் நற்றோழி நாணின என்பவை
வாணிலா எய்க்கும் வயங்கொளி யெக்கர்மேல்
ஆனுப் பரிய அலவன் அளைபுகூஉங்
கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் துறை ;

மாரிவீ ழிருங்கூந்தல் மதைஇயநோக் கெழிலுண்கண்
தாழ்நீர முத்தின் தகையேய்க்கு முறுவலாய்
தேயாநோய் செய்தான் திறங்கிளந்து நாம்பாடுஞ்
சேயுய ரூசற்சீர் நீயொன்று பாடித்தை ;
பார்த்துற் றனதோழி பார்த்துற் றனதோழி
இரவெலாம் நற்றோழி பார்த்துற்றன என்பவை
தன்றுணை யில்லாள் வருந்திஞள் கொல்லென
இன்றுணை யன்றில் இரவி னகவாவே
அன்றுதான் ஈர்த்த கரும்பணி வாடவென்
மென்றோள் ஞெகிழ்த்தான் துறை ;
கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினந்
திறையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை
இரையுயிர் செகுத்துண்ணாத் துறைவனை
யாம்பாடும்

அசைவர லூசற்சீர் அழித்தொன்று பாடித்தை ;
நல்லந்துவனார்

759

35 அருளினகொல் தோழி யருளினகொல் தோழி
இரவெலாந் தோழி யருளின என்பவை
கணங்கொ ளிடுமணற் காவி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் தளிக்கும்
மணங்கம ழைம்பாலார் ஊடலை யாங்கே
வணங்கி யுணர்ப்பான் துறை ;
எனநாம்,
42 பாட மறைநின்று கேட்டனன் நீடிய
வானீர்க் கிடக்கை வயங்குநீர்ச் சேர்ப்பனை
யாரென வுணர்ந்து நீநனி மருளத்
தேனிமிர் புன்னை பொருந்தித்
தானூக் கினனவ் வூசலை வந்தே.

வரைவுநீட ஆற்றாளாய தலைவியைத் தோழி அவன் முன்

அருமைசெய்து அயர்த்தகாலத்து அவன் வரைவினை யானறிந்து

ஊசலாட நின்னைக் கொண்டுபோய் ஆடுகின்ற காலத்து யான் இயற்

பழிக்க நீ இயற்படமொழிவது கேட்டுவந்து ஊசலை ஊக்கியவன்

இக்காலத்து வருந்தவிடாது வருத்தமறிந்து வரைந்துகொள்வனென

ஆற்றுவித்த து.

1416. கலித்தொகை - 132. நெய்தல் :

உரவுநீர்த் திரைபொர ஓங்கிய எக்கர்மேல்
விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக
இரைதேர்ந் துண் டசாவிடூஉம் புள்ளின மிறைகொள

முரைசுமூன் றாள்பவர் முரணியோர் முரண்தப
நிரைகளி றிடைபட நெறியாத்த இருக்கைபோற்
சிதைவின்றிச் சென்றுழிச் சிறப்பெய்தி வினைவாய்த்துத்
துறையகலம் வாய்சூழுந் துணிகடற்
றண்சேர்ப்ப !

8 புன்னைய நறும்பொழிற் புணர்ந்தனை
யிருந்தக்கால்
நன்னுதால் அஞ்சலோம் பென்றதன்
பயனன்றோ
பாயின பசலையாற் பகற்கொண்ட
சுடர்போன்றாள்
மாவின தளிர்போலு மாணல மிழந்ததை ;



12

பன்மலர் நறும்பொழிற் பழியின்றிப் புணர்ந்தக்கால்
இன்மொழி தெளியெனத் தேற்றிய சிறப்பன்றோ

வாடுபு வனப்போடி வயக்குறா மணிபோன்றாள்
நீடிறை நெடுமென்றோள் நிரைவளை நெகிழ்ந்ததை

;

16

அடும்பிவ ரணியெக்க ராடிநீ தணந்தக்கால்
கொடுங்குழாய்தெளியெனக்கொண்டதன்கொளையன்றோ

பொறையாற்றா நுசுப்பினாற் பூவீந்த கொடிபோன்றாள்
மறைபிற ரறியாமை மாணாநோ யுழந்ததை ;

21

எனவாங்கு,

வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்கண்
கழியுநோய் கைம்மிக அணங்காகி யதுபோலப்
பழிபரந் தலர்தூற்ற என்தோழி
அழிபட ரலைப்ப அகறலோ கொடிதே.

வரைவு நீட்டித்தழிப் பகற்குறிவந்து நீங்குந் தலைவனை எதிர்ப் பட்டுத் தோழி அவனை நாணுநெஞ்சலைப்ப
வரைவுகடாயது.

, **1417**. கலித்தொகை - **133**. நெய்தல் : **16**

மாமலர் முண்டகந் தில்லையோ
டொருங்குடன்
கான லணிந்த உயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு
முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந்
துறைவகேள் ;

ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்;

நல்லந்துவனார்

761

ஆங்கதை யறிந்தனி ராயினென் தோழி
நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க

தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைதல்
நின்றலை வருந்தியாள் துயரஞ்
சென்றனை களைமோ பூண்கநின் தேரே.

"வரைவுடம் பட்டோர்க் கடாவல் வேண்டினும்" என்பதனால் தலைவன் தெருளாதவனைத் தெருட்டி வரைவுகடாயது.

**1418.** கலித்தொகை - **134.** நெய்தல் : **17**

மல்லரை மறஞ்சாய்த்த மலர்த்தண்டா

ரகலத்தோன்

ஒல்லாதா ருடன்றோட உருத்துட னெறிதலிற்
கொல்யானை யணிநுத லழுத்திய ஆழிபோற்
கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலின்
5 இருங்கட லொலித்தாங்கே இரவுக்காண் பதுபோலப்
பெருங்கட லோதநீர் வீங்குபு கரைசேரப்
போழய வண்டினாற் புல்லென்ற துறையவாய்ப்
பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப
ஒருநிலையே நடுக்குற்றிவ் வுலகெலாம் அச்சுற
இருநிலம் பெயர்ப்பன்ன எவ்வங்கூர் மருள்மாலை;

11 தவலினோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்
இகலிடும் பனிதின எவ்வத்துள் ஆழ்ந்தாங்கே
கவலைகொள் நெஞ்சினேன் கலுழ்தரக் கடல்நோக்கி
அவலமெய்க் கொண்டது போலுமஃ தெவன்கொலோ;

15 நடுங்குநோய் செய்தவர் நல்காமை நினைத்தலிற்
கடும்பனி கைம்மிகக் கையாற்றுள் ஆழ்ந்தாங்கே
நடுங்குநோ யுழந்தவென் னலனழிய மணல்நோக்கி
இடும்பைநோய்க் கிகுவன போலுமஃ தெவன்கொலோ;

19 வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலிற்
கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்தாங்கே
மையல்கொள் நெஞ்சொடு மயக்கத்தான் மரனோக்கி
எவ்வத்தா லியன்றபோல் இலைகூம்ப லெவன்கொலோ;

எனவாங்கு,

24 கரைகாணுப் பௌவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்
திரைதரப் புணைபெற்றுத் தீதின்றி யுய்ந்தாங்கு
விரைவனர் காதலர் புகுதர
நிரைதொடி துயரம் நீங்கின்றால் விரைந்தே.

பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி 'இவ்வகைப் பட்டனவும் நமதிடுக்கண் கண்டு எவ்வங் கொண்டனபோன்ற; அவரும் நமக்கருளுவார் கொல்லோ' எனச் சொல்லிய நேரத்துக்கண் தலைவன் புக, அவ்வளவில் அவள் அவலம் நீங்கினமை கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறியது.

**1419.** கலித்தொகை - **135.** நெய்தல் : **18**

துணைபுணர்ந் தெழுதருந் தூநிற வலம்புரி
இணை திரள்
அயில்திணி

மருப்பாக எறிவளி பாகனு
நெடுங்கத வமைத்தடைத் தணிகொண்ட
எயிலிடு களிறேபோ லிடுமணல்
நெடுங்கோட்டைப்
பயில்திரை நடுநன்னாட் பாய்ந்துறாஉந்
துறைவகேள் ;

6 கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்

தொடிநெகிழ்ந்த தோளளாத் துறப்பாயால்
மற்றுநின்
குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க்
கிடவாதோ ;
9 ஆய்மலர்ப் புன்னைக்கீழ் அணிநலந் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயால் மற்றுநின்
வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க்
கிடவாதோ ;

12 திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயால் மற்றுநின்
புகழ்மைக்கட் பெரியதோர் புகராகிக் கிடவாதோ ;

எனவாங்கு,
16 சொல்லக் கேட்டனை யாயின் வல்லே
அணிகிளர் நெடுவரை யலைக்குநின் அகலத்து
மணிகிள ராரந் தாரொடு துயல்வர

நல்லந்துவனூர் 763

உயங்கின ளுயிர்க்குமென் தோழிக்கு
இயங்கொலி நெடுந்திண்டேர் கடவுமதி
விரைந்தே.

வரையாது வந்தொழுகுந் தலைவனைத் தோழி நெருங்கி
வரைவு கடாயது.

**1420.** கலித்தொகை - **136.** நெய்தல் : **19**

இவர்திமில் எறிதிரை யீண்டிவந் தலைத்தக்கால்
உவறுநீ ருயரெக்கர் அலவனு டளைவரித்
தவலில்தண் கழகத்துத் தவிராது வட்டிப்பக்
கவறுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப !

5 முத்துறழ் மணலெக்க ரளித்தக்கால் முன்னாயம்
பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியாள்
அத்திறத்து நீநீங்க அணிவாடி யவ்வாயம்
வித்தத்தால் தோற்றான்போல் வெய்துய ருழப்பவோ ;

9

முடத்தாழை முடுக்கரு ளளித்தக்கால் வித்தாயம்
இடைத்தங்கக் கண்டவன் மனம்போல நந்தியாள்
கொடைத்தக்காய் நீயாயின் நெறியல்லாக் கதியோடி
உடைப்பொதி யிழந்தான்போ லுறுதுய ருழப்பவோ ;

13 நறுவீதாழ் புன்னைக்கீழ் நயந்துநீ யளித்தக்கால்
மறுவித்த மிட்டவன் மனம்போல நந்தியாள்
அறிவித்து நீநீங்கக் கருதியாய்க் கப்பொருள்
சிறுவித்த மிட்டான்போற் செறிதுய ருழப்பவோ

;

ஆங்கு,

கொண்டுபலர் தூற்றுங் கௌவை யஞ்சாய்
தீண்டற் கருளித் திறனறிந் தெழீஇப்
பாண்டியஞ் செய்வான் பொருளினும்
ஈண்டுக இவணலம் ஏறுக தேரே.

வரைவிடை வைத்துப் பிரியக் கருதிய தலைவனைத் தோழி தலைவியாற்றாமை கூறிச் செலவுவிலக்கி வரைவுகடாயது.



## 1421. கலித்தொகை - 137. நெய்தல் : 20

அரிதே தோழிநாண் நிறுப்பாமென் றுணர்தல்
பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
பலவே யாமம் பையுளு முடைய
சிலவே நம்மோ டுசாவும் அன்றில்
அழலவிர் வயங்கிழை யொலிப்ப வுலமந்து
எழிலெஞ்சு மயிலி னடுங்கிச் சேக்கையின்
அழலா கின்றவர் நக்கதன் பயனே ;

மெல்லிய நெஞ்சு பையுள் கூரத்தஞ்
சொல்லினான் எய்தமை யல்ல தவர்நம்மை
வல்லவன் தைஇய வாக்கமை கடுவிசை
வில்லினான் எய்தலோ இலர்மன் ஆயிழை
வில்லினுங் கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய் ;

13 நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையின் நலித லல்ல தவர்நம்மை
வகைமையின் எழுந்த தொல்முரண் முதலாகப்
பகைமையின் நலிதலோ இலர்ம னாயிழை
பகைமையிற் கடிதவர் தகைமையி னலியும்நோய்

;

18 நீயலேன் என்றென்னை யன்பினாற் பிணித்துத்தஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
பாயிருள் அறநீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினாற் சுடுதலோ இலர்ம னாயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலும்நோய் ;

ஆங்கு,

24 அன்னர் காதல ராக அவர்நமக்கு
இன்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொல் தோழி யெனையதூஉந்

தாங்குதல் வலித்தன் றாயின்
நீங்கரி துற்றன் றவ ருறீஇய நோயே.

வரைவுநீட ஆற்றாளாயின இடத்துத் தலைவி யாற்றாமையை அவள் தன்னானே தலைவற்கு அறிவிக்கலுற்ற தோழி, தலைவன்

சிறைப்புறத்தானாகத் தலைவியை வற்புறுக்க, அவள் வன்புறை எதிரழிந்து கூறியது.

## 1422. கலித்தொகை - 138. நெய்தல் : 21

எழில்மருப் பெழில்வேழம் இகுதரு கடாத்தால்
தொழில்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்கு
அறிவும்நம் அறிவாய்ந்த அடக்கமும் நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவும் நகுபுடன்
மின்னவிர் நுடக்கமுங் கனவும்போல் மெய்காட்டி
என்னெஞ்ச மென்னோடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தானைத் தலைப்படுமா றெவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
அணிப்பூளை யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்கண் இவட்பாடும் இஃதொத்தன்
எல்லீருங் கேட்டீமி னென்று ;

12 படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
நல்கியாள் நல்கி யவை ;

14 பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த
நிறையழி காமநோய் நீந்தி யறையுற்ற
உப்பியல் பாவை யுறையுற் றதுபோல
உக்கு விடுமென் னுயிர் ;

18 பூளை பொலமல ராவிரை வேய்வென்ற

தோளாள் எமக்கீத்த பூ ;

20 உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
பரிசழி பைதல்நோய் மூழ்கி யெரிபரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது பைபயத்
தேயு மளித்தென் னுயிர் ;

24 இளையாரு மேதி லவரு முளையயான்
உற்ற துசாவுந் துணை ;

26 என்றியான் பாடக் கேட்டு



அன்புறு கிளவியாள் அருளிவந் தளித்தலின்
துன்பத்திற் றுணையாய மடலினி யிவட்பெற
இன்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்று
30 அடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்
உடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே.

மடலூர்ந்து தலைவியை எய்திய தலைவன் தான் மடலூர்ந்த வாறும் அவளை எய்தியவாறும் தனக்குப் பாங்காயினார்க்குக் கூறியது.

## 1423. கலித்தொகை - 139. நெய்தல் : 22

சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனால் இவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி யொருத்தி
ஒளியோ டுருவென்னைக் காட்டி அளியளென்
நெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சேன்
அணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் எவ்வநோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து ;

14 யாமத்து மெல்லையும் எவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
தேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு ;

18 உய்யா அருநோய்க் குயவாகும் மையல்
உறீஇயா ளீத்தவிம் மா ;

20 காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தென்

நாணெழில் முற்றி யுடைத்துள் ளழித்தரு



மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை ;
24 காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேமம்
எழினுத லீத்தவிம் மா ;

26 அகையெரி யானாதென் ஆருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையால் தலைக்கொண்ட நெஞ்சு ;
30 அழல்மன்ற காம அருநோய் நிழல்மன்ற
நேரிழை யீத்தவிம் மா ;
ஆங்கதை,
33 அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்தவம்
ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோர்
உள்ளிடப் பட்ட அரசனைப் பெயர்த்தவர்

உயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே.

மடலேறுகின்ற தலைவன் சான்றோர்க்குக் கூறியது.

1424. கலித்தொகை - 140. நெய்தல் : 23

கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குவீர் கொண்டது
மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
அடர்பொன் னவிரேய்க்கும் ஆவிரங் கண்ணி
நெடியோன் மகனயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்சம்
இடிய இடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்கு
அடியுறை காட்டிய செல்வேன் மடியன்மின்
அன்னே னொருவனேன் யான் ;



13 என்னானும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
ஆடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ
என்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா ;
17 திங்க ளரவுறின் தீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாயல்
ஒண்டொடி நோக்கிற்பட்ட வென்னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர் ;

தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி லுய்யுமாம் பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காமம்
உணர்ந்து முணராதிவ் வூர் ;
வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்றார்
அஞ்சலென் றாலு முயிர்ப்புண்டா மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காமம்
அறிந்து மறியாதிவ் வூர் ;
ஆங்க,
என்க ணிடும்பை யறீஇயினென் நுங்கண்
தெருளுற நோக்கித் தெரியுங்கா லின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல
இருளுறு கூந்தலா ளென்னை
அருளுறச் செயின்நுமக் கறனுமா ரதுவே.

மடலேறுவேனென்ற தலைவன் கண்டார்க்குக் கூறியது.

**1425.** கலித்தொகை - **141.** நெய்தல் : **24**

அரிதினிற் றோன்றிய யாக்கை புரிபுதாம்
வேட்டவை செய்தாங்குக் காட்டிமற் றாங்கே
அறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன்
திறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன்று
அணிகிளைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி
அணிநலம் பாடி வரற்கு ;

7 ஓரொருகா லுள்வழிய ளாகி நிறைமதி
நீருள் நிழற்போற் கொளற்கரியள் போருள்
அடல்மாமே லாற்றுவே னென்னை மடல்மாமேல்
மன்றம் படர்வித் தவள் ; வாழி சான்றீர் ;

11 பொய்தீ ருலக மெடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம் வேட்டனள் வையம்
புரவூக்கு முள்ளத்தே னென்னை இரவூக்கும்
இன்னா விடும்பைசெய் தாள் ; அம்ம சான்றீர் ;

15 கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு ;

17 இடியுமிழ் வானத் திரவிருள் போழுங்
கொடிமின்னுக் கொள்வேனென் றன்னள் வடிநாவின்
வல்லார்முற் சொல்வல்லே னென்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள் ; வாழி சான்றீர் ;

21 என்றாங்கே,
வருந்தமா வூர்ந்து மறுகின்கண் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர்.

இரந்துபின்னின்ற தலைவன் மடலேறியவழி அவள் தமர்

அஞ் சித் தலைவியைக் கொண்டுவந்து கொடுத்தலைக் கண்டோர் கூறியது.

## 1426. கலித்தொகை - 142. நெய்தல் : 25

புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
அருகுவித் தொருவரை யகற்றலின் தெரிவார்கண்
செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது
நயம்நின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காம மிவள்மன்னும்
ஒண்ணுத லாயத்தா ரோராங்குத் திளைப்பினும்





முண்ணுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்
கண்ணினு முகத்தினு நகுபவள் பெண்ணின்றி
யாவருந் தண்குரல் கேட்ப நிரைவெண்பல்
மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே
பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்கண்
ஆயிதழ் மல்க அழும் ;

ஒஒ ! அழிதகப் பாராதே அல்லல் குறுகினம்
காண்பாங் கனங்குழை பண்பு ;

என்று, எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற

அல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின் ;

எல்லாநீ, உற்ற தெவனோமற் றென்றீரேல் எற்சிதை
செய்தா னிவனென உற்ற திதுவென
எய்த வுரைக்கு முரனகத் துண்டாயிற்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
நெய்தல் மலரன்ன கண் ;

கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே
ஆடையான் மூஉ யகப்படுப்பேன் சூடிய
காணான் திரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன் ;

தெள்ளியே மென்றுரைத்துத் தேரா தொருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ
உள்ளி வருகுவர் கொல்லோ வளைந்தியான்
எள்ளி யிருக்குவேன் மற்கொலோ
நள்ளிருள்
மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினான்
தோன்றின னாகத் தொடுத்தேன்மன்
யான்தன்னைப்

பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து ;

நல்லந்துவனார்

771

37 கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயின்
அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின் தவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ ;

41 மையில் சுடரே மலைசேர்தி நீயாயிற்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராயென்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு ;

45 சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ
எம்மை
நயந்து நலஞ்சிதைத் தான் ;

47 மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ
மென்றோள் நெகிழ்த்தான் தகையல்லால்
யான்காணேன்
நன்றுதீ தென்று பிற ;

51 நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்
ஆயித ழுள்ளே கரப்பன் கரந்தாங்கே

நோயுறு வெந்நீர் தெளிப்பின் தலைக்கொண்டு
வேவ தளித்திவ் வுலகு;
மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையும் என்றிவ்
வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழும மிரண்டு;
எனப்பாடி,
இனைந்துநொந் தழுதனள் நினைந்துநீ டுயிர்த்தனள்
எல்லையு மிரவுங் கழிந்தன வென்றெண்ணி யெல்லிரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிவாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு
தேற்றக்



கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்
நல்லெழின் மார்பனைச் சார்ந்து.

“ பொழுது தலைவைத்த கையறுகாலை, யிறந்தபோலக் கிளக்குங் கிளவி, மடனே வருத்த மருட்கை மிகுதியொ, டவைநாற் பொருட்க ணிகழு மென்ப.” இச்சூத்திரம் ‘பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே’ என்ற சிறப்புடைப் பெருந்திணையன்றிப் பெருந்திணைக் குறிப்பாகக் கந்தருவத்துட்பட்டு வழுவிவரும் ‘ஏறிய மடற்றிறம்’ முதலிய நான்கனுள் ஒன்ருய் முன்னர் நிகழ்ந்த கந்தருவம் பின்னர் வழுவிவந்த ‘தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்’ ஆகிய பெருந்திணை வழுவமைக்கின்றது. ஓதலுந் தூதும் ஒழிந்த பகைவயிற்பிரிவாகிய வாளாணெதிரும் பிரிவும் முடியுடை வேந்தர்க்கும் அவர் ஏவலிற் பிரியும் அரசர்க்கும் இன்றியமையாமையின் அப்பிரிவிற் பிரிகின்றுன் ‘வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்’ என்பதனுற் கற்புப்போல நீ இவ்வாருெழுகி யான் வருந்துணையும் ஆற்றியிருவென ஆற்றுவித்துப் பிரிதல் இலக்கணமன்மையின், வாளா பிரியுமன்றே? அங்ஙனம் பிரிந்தழி அவன் கூறிய கூற்றினையே கொண்டு ஆற்றுவிக்குந் தோழிக்கும் ஆற்றுவித்த லரிதாகலின், அவட்கு அன்பின்றி நீங்கினுனென்று ஆற்ருமை மிக்கு ஆண்டுப் பெருந்திணைப்பகுதி நிகழுமென்று உணர்க.

(இ - ள்) பொழுது - அந்திக் காலத்தே, கையறுகாலை - ‘ புறஞ்செயச் சிதைதல் ’ என்னும் சூத்திரத்தில் ‘ அதனிணூங்கின்று ’ எனக் கூறிய கையற வுரைத்தலென்னும் மெய்ப்பாடு எய்திய

காலத்தே, தலைவைத்த - அந்த ஆருமறுதியின் இகந்தனவாக முடி

விலே வைக்கப்பட்ட மெய்ப்பாடுகள், மிகுதியொடு மடனே வருத்

தம் மருட்கை நாற்பொருட்கண் நிகழும்-தன்வனப்பு மிகுதியுடனே மடப்பமும் ஆற்றுமையும் வியப்புமாகிய நான்கு பொருட்கண்ணே நடக்கும் ; அவை இறந்தபோலக் கிளக்குங் கிளவி என்ப - அங்ஙனம் அவை நடக்கின்ற நான்கு பொருளும் கூற்று நிகழுங்கால் தன்னைக் கைகடந்தனபோலக் கூறுங் கூற்றாய் நிகழுமென்று கூறுவர் புலவர். எ - று.

தலைவைத்த மெய்ப்பாடாவன :—'ஆறும் அறுதியினும் ஒப்பத்

தோன்றுதற்குரிய மெய்ப்பாடுகளாய் மன்றத்திருந்த சான்றோ

நல்லந்துவனுர்

773

ாறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியும் அவனோடு புணர்ந்த

மையும் தோன்றக்கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு

புலம்பியும் ஞாயிறு முதலியவற்றோடு கூறத்தகாதன கூறுதலும்

பிறவுமாம்' என்னும் விதிபற்றி வரைவிடைப்பிரிந்து நீட்டித்துழித்

தலைவி பிரிவாற்றகில்லாது நாணு வரையிறந்து கலங்கி மொழிந்து

அறிவழிந்துழி அவன் வந்து சாரத்தெளிந்தமை கண்டார் கூறிற்

றென்று கூறியது.

## 1427. கலித்தொகை - 143.

நெய்தல் : 26

அகலாங்கண் இருள்நீங்கி அணிநிலாத் திகழ்ந்தபிற்
பகலாங்கண் பையென்ற மதியம்போல் நகலின்று
நன்னுதல் நீத்த திலகத்தள் மின்னி
மணிபொரு பசும்பொன்கொல் மாவீன்ற தளிரின்மேற்
கணிகாரங் கொட்குங்கொல் என்றாங் கணிசெல
மேனி மறைத்த பசலையள் ஆனாது
நெஞ்சம் வெறியா நினையா நிலனோக்கா
அஞ்சா அழாஅ அரற்றா இஃதொத்தி
என்செய்தாள்கொல்லென் பீர்கேட்டீமின் பொன்செய்தேன் ;
மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளாது
அறைகொன்று மற்றத னாருயி ரெஞ்சப்
பறையறைந் தாங்கொருவன் நீத்தா னவனை
அறைநவ நாட்டினீர் கொண்டுதரின் யானும்
நிறையுடையே னாகுவேன் மன்ற மறையினென்
மென்றோள் நெகிழ்த்தானை மேஎ யவனாங்கண்
சென்றுசேட் பட்டதென் னெஞ்சு ;

ஒன்றி முயங்குமென் றென்பின் வருதிர்மற் றாங்கே
உயங்கின ளென்றாங் குசாதிர்மற் றந்தோ
மயங்கின ளென்று மருடிர் கலங்கன்மின்
நின்னுயி ரன்னாற் கெனைத்தொன்றுந் தீதின்மை
என்னுயிர் காட்டாதோ மற்று ;

பழிதபு ஞாயிறே பாடறியா தார்கண்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை 774



வழிபட் டிரக்குவேன்
அழியத் துறந்தானைச்

வந்தேனென் னெஞ்சம்
சீறுங்கா லென்னை
ஒழிய விடாதீமோ வென்று ;
அழிதக, மாஅந் தளிர்கொண்ட போழ்தினான்
இவ்வூரார்
தாஅந் தளிர்சூடித் தங்கலம் பாடுப
ஆஅந் தளிர்க்கு மிடைச்சென்றார் மீடரின்
யாஅந் தளிர்க்குவே மன் ;

31 நெய்தல் நெறிக்கவும் வல்லன் நெடுமென்றோட்
பெய்கரும் பீர்க்கவும் வல்லன் இளமுலைமேல்
தொய்யி லெழுதவும் வல்லன்றன் கையிற்
சிலைவல்லான் போலுஞ் செறிவினன் நல்ல
பலவல்லன் தோளாள் பவன் ;

36 நினையுமென் னுள்ளம்போல் நெடுங்கழி மலர்கூம்ப
இனையுமென் னெஞ்சம்போ லினங்காப்பார் குழல்தோன்றச்
சாயவென் கிளவிபோற் செவ்வழியா ழிசைநிற்பப்

போயவென் னொளியேபோ லொருநிலையேபகல்மாயக்
காலன்போல் வந்த கலக்கத்தோ டென்றலை
மாலையும் வந்தன் றினி ;

42

இருளொடுயான் ஈங்குழப்ப என்னின்றிப் பட்டாய்
அருளிலை வாழி சுடர் ;

44 ஈண்டுநீர் ஞாலத்துள் எங்கேள்வ ரில்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசில் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையேன் இசை ;

48 ஊரலர் தூற்றுமிவ் வுய்யா விழுமத்துப்
பீரலர் போலப் பெரிய பசந்தன

நீரலர் நீல மெனவவர்க் கஞ்ஞான்று
பேரஞர் செய்தவென் கண் ;
52 தன்னுயிர் போலத் தழீஇ யுலகத்து
மன்னுயிர் காக்குமிம் மன்னனு மென்கொலோ



இன்னுயி ரன்னானைக் காட்டி
யெனைத்தொன்றும்
என்னுயிர் காவா தது ;
57

எனவாங்கு,
மன்னிய நோயொடு மருள்கொண்ட மனத்தவள்
பன்மலை யிறந்தவன் பணிந்துவந் தடிசேரத்
தென்னவற் றெளிந்த தேஎம்போல
இன்னகை யெய்தினள் இழந்ததன் னலனே.

இதுவுமது.

## 1428. கலித்தொகை - 144. நெய்தல் : 27

நன்னுதால் காண்டை நினையா நெடிதுயிரா
என்னுற்றாள் கொல்லோ இஃதொத்தி பன்மாண்

நகுதரும் தன்னாணுக் கைவிட் டிகுதரும்
கண்ணீர் துடையாக் கவிழ்ந்து நிலனோக்கி

5 அன்ன விடும்பை பலசெய்து தன்னை
வினவுவார்க் கேதில சொல்லிக் கனவுபோல்

தெருளும் மருளும் மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று ;

9 எல்லாநீ, என்னணங் குற்றனை யார்நின் இதுசெய்தார்
நின்னுற்ற அல்ல லுரையென என்னை
வினவுவீர் தெற்றெனக் கேண்மின் ஒருவன்
குரற்கூந்தா லென்னுற்ற எவ்வம் நினக்கியான்
உரைப்பனைத் தங்கிற்றென் இன்னுயி ரென்று
மருவூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவுழிப் பட்டதென் னெஞ்சு ;

16 எங்குத் தெரிந்தது கொள்வேன் அவனுள் வழி

;

17 பொங்கிரு முந்நீ ரகமெல்லாம் நோக்கினை
திங்களுள் தோன்றி யிருந்த குறுமுயால்
எங்கேள் இதனகத் துள்வழிக் காட்டீமோ

காட்டீயா யாயிற் கதநாய் கொளுவுவேன்

வேட்டுவ ருள்வழிச் செப்புவேன் ஆட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த
என்னல்லல் தீரா யெனின் ;

24 என்றாங்கே, உண்ணின்ற எவ்வ முரைப்ப
வெண்மழை யோடிப் புகுதி சிறிதென்னைக்

மதியொடு

கண்ணோடி னாய்போறி நீ ;

27 நீடிலைத் தாழைத் துவர்மணற் கானலுள்
ஓடுவே னோடி யொளிப்பேன் பொழில்தொறும்
நாடுவேன் கள்வன் கரந்திருக்கற் பாலன்கொல்
ஆய்பூ அடும்பி னலர்கொண் டுதுக்காணங்
கோதை புனைந்த வழி ;

32 உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாமாடும்
பாவைகொண் டோடி யுழி ;

34 உதுக்காண், தொய்யில் பொறித்த வழி ;

35 உதுக்காண், தையால் தேறெனத் தேற்றி
யறனில்லான்
பைய முயங்கி யுழி ;

37 அளியவென் னுள்ளத் துயவுத்தே றோர்ந்து
விளியாநோய் செய்திறந்த அன்பி லவனைத்
தெளிய விசும்பினும் ஞாலத் தகத்தும்
வளியே யெதிர்போம் பலகதிர் ஞாயிற்று

ஒளியுள் வழியெல்லாஞ் சென்று முனிபெம்மை
உண்மை நலனுண் டொளித்தானைக் காட்டீமோ
காட்டாயேல், மண்ணக மெல்லா மொருங்கு சுடுவேனென்
கண்ணீ ரழலால் தெளித்து ;
45 பேணான், துறந்தானை நாடு மிடம்விடா யாயிற்
பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப்
புறங்காலிற் போக இறைப்பேன் முயலின்
அறம்புணை யாகலு முண்டு ;
49 துறந்தானை, நாடித் தருகிற்பா யாயின் நினக்கொன்று
பாடுவேன் என்றோ யுரைத்து ;



51

புல்லிய கேளிர் புணரும் பொழுதுணரேன்
எல்லியா கெல்லையென் றாங்கே பகல்முனிவேன்
எல்லிய காலை யிராமுனிவேன் யானுற்ற
அல்லல் களைவா ரிலேன் ;

55 ஓஒகடலே,தெற்றெனக்கண் ணுள்ளேதோன் றவிமையெடுத் துப்
பற்றுவே னென்றுயான் விழிக்குங்கால் மற்றுமென்
நெஞ்சத்து ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யும் அறனில் லவன் ;

59 ஓஒ கடலே, ஊர்தலைக் கொண்டு கனலுங் கடுந்தீயுள்
நீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ
ஈரமில் கேள்வ னுழீஇய காமத்தீ
நீருட் புகினுஞ் சுடும் ;

63 ஓஒகடலே, எற்றமிலாட்டியென்னைமுற்றுளென்றிந்நோய்
உற்றறியா தாரோ நகுக நயந்தாங்கே
இற்று அறியின் முயங்கலேன் மற்றென்னை
அற்றத்திட் டாற்றறுத்தான் மார்பு ;

ஆங்கு,

68 கடலொடு புலம்புவோள் கலங்கஞர் தீரக்
கெடலருங் காதலர் துனைதரப் பிணிநீங்கி
அறனறிந் தொழுகு மங்க ணாளனைத்
திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லாம்
நல்லவை யுட்படக் கெட்டாங்கு
இல்லா கின்றவ ளாய்நுதற் பசப்பே.

இதுவுமது.

**1429.** கலித்தொகை - **145.** நெய்தல் : 28

துணையுநர் விழைதக்க சிறப்புப்போற் கண்டார்க்கு
நனவினு ளுதவாது நள்ளிருள் வேறாகுங்
கனவின் நிலையின்றாற் காம மொருத்தி
உயிர்க்கும் உசாஅம் உலம்வரு மோவாள்
கயல்புரை யுண்க ணரிப்ப அரிவாரப்



பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்
பலவொலி கூந்தலாள் பண்பெல்லாந் துய்த்துத்
துறந்தானை யுள்ளி யழூஉம் அவனை
மறந்தாள்போல் ஆலி நகூஉம் மருளும்
சிறந்ததன் னாணும் நலனும் நினையாது
காம முனைஇயா ளலந்தாளென் றெனைக்காண
நகான்மின் கூறுவேன் மாக்காள் மிகாஅது
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்
நீள்சுரம் போகியார் வல்லைவந் தளித்தலும்

ஊழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி
வீழ்வார்கண் தோன்றுந் தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் வரும் ;

18 தாழ்பு, துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய

காணம
இறங்தர் நையாமற பாஅய முழுஙக
வறங்தென்னை செய்தியோ வானஞ் சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து ;

23 நுமக்கெவன் போலுமோ வூழி ரெமக்குமெங்
கண்பாயல் கொண்டுள்ளாக் காத லவன்செய்த

பண்பு தரவந்த என்தொடர் நோய்வேது
கொள்வது போலுங் கடும்பகல் ஞாயிறே
எல்லாக் கதிரும் பரப்பிப் பகலொடு
செல்லாது நின்றீயல் வேண்டுவல் நீசெல்லிற்
புல்லென் மருள்மாலைப் போழ்தின்று
வந்தென்னைக்
கொல்லாது போத லரிதால் அதனெடுயான்
செல்லாது நிற்ற லிலேன் ;

32 ஒல்லையெங், காதலர்க் கொண்டு கடலூர்ந்து
காலைநாட்
போதரிற் காண்குவேன் மன்னோ பனியொடு
மாலைப் பகைதாங்கி யான் ;

35 இனியனென்று, ஓம்படுப்பல் ஞாயி றினி ;

36

ஒள்வளை யோடத் துறந்து துயர்செய்த
கள்வன்பாற் பட்டன் றொளித்தென்னை யுள்ளிப்
பெருங்கடல் புல்லெனக் கானல் புலம்ப
இருங்கழி நெய்த லிதழ்பொதிந்து தோன்ற
விரிந்திலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினான்
யான்வேண் டொருவனென் அல்ல லுநீஇயான்
தான்வேண்டு பவரோடு துஞ்சுங்கொல் துஞ்சாது
வானும் நிலனுந் திசையுந் துழாவுமென்
ஆனாப் படர்மிக்க நெஞ்சு ;

45 ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகியென்
ஆருயி ரெஞ்சுமன் அங்குநீ சென்றீ
நிலவுமிழ் வான்திங்காள் ஆய்தொடி கொட்ப
அளிபுற மாறி யருளான் துறந்தவக்
காதலன் செய்த கலக்குறுநோய்க் கேதிலார்
எல்லாருந் தேற்றார் மருந்து ;
51 வினைக்கொண்டென் காமநோய் நீக்கிய வூரீர்
எனைத்தானு மெள்ளினு மெள்ளலன் கேள்வன்
நினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று

மனைத்தற்கே

ஏமரா தேமரா வாறு ;
கனையிருள் வானங் கடல்முகந் தென்மேல்
உறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரால்
இறையிறை பொத்திற்றுத் தீ ;

எனப்பாடி,

நோயுடை நெஞ்சத் தெறியா இனைபேங்கி
யாவிரு மெங்கேள்வற் காணீரோ என்பவட்கு
ஆர்வுற்ற பூசற் கறம்போல வெய்தந்தார்
பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பிற் றிருப்போல் அவள்சேர



ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
ஆயிழை யுற்ற துயர்.

இதுவமது.

**1430.** கலித்தொகை - **146.** நெய்தல் : **29**

உரைசெலவுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை
யொருநிலையே
வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத்
அரைசினு மன்பின்றுங் காமம் புரைதீர

தெறல்மாலை

அன்னமென் சேக்கையு ளாரா தளித்தவன்

5 துன்னி யகலத் துறந்த அணியளாய்
நாணும் நிறையு முணர்கல்லாள் தோள்ஞெகிழ்பு
பேரம ருண்கண் நிறைமல்க அந்நீர்தன்

கூரெயி ருடிக் குவிமுலைமேல் வார்தாத்
தேர்வழி நின்று தெருமரு மாயிழை
கூறுப கேளாமோ சென்று;
11 எல்விழாய், எற்றி வரைந்தானை நாணு
மறந்தாளென்று
உற்றனிர் போல வினவுதிர் மற்றிது
கேட்டீமி னெல்லீரும் வந்து;
14 வறந்தெற மாற்றிய வானமும் போலும்
நிறைந்தென்னை மாய்ப்பதோர் வெள்ளமும்
போலும்
சிறந்தவன் தூவற நீப்பப் பிறங்கிவந்
தென்மேல் நிலைஇய நோய்;
18 நக்கு நலனு மிழந்தா ளிவளென்னுந்
தக்கவிர் போலு மிழந்திலேன் மன்னே
மிக்கவென் னாணும் நலனுமென் னுள்ளமும்
அக்கா லவனுழை யாங்கே யொழிந்தன
உக்கா ணிஃதோ உடம்புயிர்க் கூற்றாகச்
செக்கரம் புள்ளித் திகிரி யலவனொடியான்

நக்கது பன்மாண் நினைந்து;

25 கரைகாணு நோயு ளழுந்தா தவனைப்
புரைதவக் கூறிக் கொடுமை நுவல்வீர்
வரைபவ னென்னி னகலான் அவனைத்
திரைதரு முந்நீர் வளாஅக மெல்லாம்
நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன்

யானும்

உரைகேட் புழியெல்லாஞ் செல்வேன் புரைதீர்ந்தான்
யாண்டொளிப் பான்கொல்லோ மற்று ;
32

மருள்கூர் பிணிபோல் மயங்கவெந் நோய்செய்யும்
மாலையும் வந்து மயங்கி யெரிநுதி
யாமந் தலைவந்தன் றாயி னதற்கென்னோய்
பாடுவேன் பல்லாருட் சென்று ;
36 யானுற்ற எவ்வ முரைப்பிற் பலர்த்துயிற்றும்
யாமம்நீ துஞ்சலை மன் ;
38

எதிர்கொள்ளு ஞாலந் துயிலாரா தாங்கண்
முதிர்பென்மேன் முற்றிய வெந்நோ யுரைப்பிற்
கதிர்கள் மழுங்கி மதியு மதிர்வதுபோல்
ஓடிச் சுழல்வது மன் ;

42 பேரூர் மறுகிற் பெருந்துயிற் சான்றீரே
நீரைச் செறுத்து நிறைவுற ஓம்புமின்
கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது
போலாதென் மெய்க்கனலும் நோய் ;

46 இருப்பினும் நெஞ்சங் கனலுஞ் செலினே
வருத்துறும் யாக்கை வருந்துத லாற்றேன்
அருப்ப முடைத்தென்னு ளெவ்வம் பொருத்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிதுயங்கிச்
செல்வேன் விழும முழந்து ;

51 எனவாங்குப் பாட அருளுற்று ;
வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்
புள்ளிற் கதுபொழிந் தாஅங்கு மற்றுத்தன்

நல்லெழில் மார்பன் முயங்கலின்
அல்லல் தீர்ந்தன் றாயிழை பண்பே.

இதுவுமது.

## 1431. கலித்தொகை - 147. நெய்தல் : 30

ஆறல்ல மொழிதோற்றி அறவினை கலக்கிய
தேறுகள் நறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேறொருபாற் றனது கொல்லோ சீறடிச்
சிலம்பார்ப்ப இயலியாள் இவள்மன்னோ இனிமன்னும்
புலம்பூரப் புல்லென்ற வனப்பினாள் விலங்காக
வேல்நுதி யுறநோக்கி வெயிலுற உருகுந்தன்
தோணல முண்டானைக் கெடுத்தாள்போல் தெருவிற்பட்டு
ஊண்யாது மிலளாகி யுயிரினுஞ் சிறந்ததன்
நாண்யாது மிலளாகி நகுதலு நகூஉ மாங்கே
பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉந் தோழியோர்
ஒண்ணுத லுற்ற துழைச்சென்று கேளாமோ ;

12 இவர்யாவ ரேமுற்றார் கண்டீரே ஓஓ
அமையுந் தவறிலீர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப அம்மா

புதுநலம் பூவாடி யற்றுத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை ;

17 என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து
;

18 கலைஇய கண்புருவந் தோள்நுசுப் பேனர்
சிலமழைபோல் தாழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவள மாற அறியா தொருவன்
வலையகப் பட்டதென் னெஞ்சு ;

22 வாழிய கேளிர் ;

23 பலவுஞ்சூள் தேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
கொலைவனைக் காணேன்கொல் யான் ;

•

## நல்லந்துவனார்

783

26 காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
ஆங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டுமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ ;

30 ஆரிருள் நீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு ;

33 நல்கா வொருவனை நாடியான் கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்டீமோ
செல்கதிர் ஞாயிறே நீ ;

36 அறாஅ லின்றரி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கண் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ எருமைய காடிறந்தான் கொல்லோ
உறாஅத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
40 செறாஅ துளவுயிற் கொள்வே னவனைப்
பெறாஅதியா னேவே னவனையெற் காட்டிச்
சுறாஅக் கொடியான் கொடுமையை நீயும்
உறாஅ அரைசநின் ஓலைக்கட் கொண்டீ
மறாஅ அரைசநின் மாலையும் வந்தன்று
அறாஅ தணிகவிந் நோய் ;

46 தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கும்
அன்னவோ காமநின் னம்பு ;

48 கையாறு செய்தானைக் காணிற் கலுழ்கண்ணாற்
பையென நோக்குவேன் றாழ்தானை பற்றுவேன்
ஐயங்கொண் டென்னை யறியான் விடுவானேல்
ஒய்யெனப் பூச விடுவேன்மன் யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று ;

53 வினவன்மி னூரவி ரென்னையெஞ் ஞான்றும்

மடாஅ நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் தொடர்பு ;



57 கனவினுற் காணிய கண்படா வாயின்
நனவினுன் ஞாயிறே காட்டாய்நீ யாயின்
பனியின்ற மாவூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு ;

எனவாங்கு,

62 கண்ணிணைபு கலுழ்பேங்கினள்
தோள்ஞெகிழ்பு வளைநெகிழ்ந்தனள்
அன்னையோ எல்லீரும் காண்மின் மடவரல்
மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த
அன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொண்ணுதல்
காதலன் மன்ற அவனை வரக்கண்டாங்கு
ஆழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப இறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தாள் நகையாக
நல்லெழில் மார்ப னகத்து.

இதுவுமது.

**1432.** கலித்தொகை - **148.** நெய்தல் : **31**

தொல்லியல் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிரூன்றிக் கண்பயங் கெடப்பெயர
அல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
5 மல்லல்நீர்த் திரையூர்பு மாவிருள் மதிசேப்ப
இல்லவ ரொழுக்கம்போ லிருங்கழி மலர்கூம்பச்
செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருள்மாலை ;

8 மாலை நீ,
இன்புற்றார்க் கிறைச்சியா யினையவே செய்தாய்மன்
அன்புற்று ரழநீத்த அல்லலுட் கலங்கிய
துன்புற்றார்த் துயர்செய்தல் தக்கதோ நினக்கு ;

12 மாலை நீ,
கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்மன்

நல்லந்துவனார்

785

நலங்கொண்டு நல்காதார் நனிநீத்த
புலம்பின்கண்
அலந்தவர்க் கணங்காதல் தக்கதோ நினக்கு
;

16 மாலை நீ,
எங்கேள்வற் றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு ;

எனவாங்கு,

21

ஆயிழை மடவர லவலம் அகலப்
பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் மண்வௌவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

“வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு,
ஞாங்கர்க்
கிளந்த மூன்று பொருளாக, வரையாது பிரிதல் கிழவோற் கில்லை ”
என்பதனான் அரசன் மண்கோடற்கு ஏவுதலின் வாளாணெதிரும்
பிரிவின்கண், தலைவன் வரைவிடை வைத்து வேந்தற் குற்றுழிப்
பிரிந்துழி அவள் வருத்தமிகுதி கண்டார் கூறியது.

**1433.** கலித்தொகை - **149.**

நெய்தல் : **32**

நிரைதிமில் களிறாகத் திரையொலி
பறையாகக்

கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
அரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர்ச்
சேர்ப்பகேள் ;

4 கற்பித்தான் நெஞ்சழுங்கப்
பகர்ந்துண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே
தேயுமால்
ஒற்கத்து ளுதவியார்க் குதவாதான்
மற்றவன்
எச்சத்து ளாயினுமஃ தெறியாது
விடாதேகாண் ;

8 கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற
செல்வங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண் ;





ஆங்கு,
13 அணைத்தினிப் பெரும அதனிலை
நினைத்துக்காண்
சினைஇய வேந்தன் எயிற்புறத் திறுத்த

வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள்

பெரிதே.

வரைவு நீட்டித்துழித் தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை
வரைவு கடாயது.

## 1434. கலித்தொகை - 150. நெய்தல் : 33

அயந்திகழ் நறுங்கொன்றை யலங்கலந் தெரியலான்
இயங்கெயி லெயப்பிறந்த எரிபோல எவ்வாயுங்
கனைகதிர் தெறுதலிற் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழல்
5 மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம் ;
7

இறந்துதா மெண்ணிய எய்துதல் வேட்கையால்
அறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தான் அணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினையையாய் நீத்தலும் நீப்பவோ ;
11 கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த

காட்டகம்

வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவர்
உருவவேற் றார்தியா னெள்ளணிக் கன்னநின்
உருவிழந் தினையையா யுள்ளலு முள்ளுபவோ ;
கொதித்துராய்க்குன்றிவர்த்து
கொடிக்கொண்டகோடையால்
ஒதுக்கரிய நெறியென்னா ரொண்பொருட்ககன்றவர்
புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங்
காண்பவோ ;
ஆங்கு,
அரும்பெற லாதிரையான் அணிபெற மலர்ந்த

பெருந்தண் சண்பகம் போல ஒருங்கவர்



பொய்யா ராகுதல் தெளிந்தனம்
மையீ ரோதி மடமொழி யோயே.

பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

**1435.** நற்றிணை - **88.** குறிஞ்சி

யாம்செய் தொல்வினைக் கெவன்பே துற்றனை

வருந்தல் வாழி தோழி யாஞ்சென்று
உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக்
கடல்விளை யமுதம் பெயற்கேற் றாஅங்கு
உருகி யுகுத லஞ்சுவல் உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் எற்றி
நயம்பெரி துடைமையின் தாங்கல் செல்லாது
கண்ணீ ரருவி யாக
அழுமே தோழியவர் பழமுதிர் குன்றே.

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சொல்லியது.

## 1436. பரிபாடல் - 6.

நிறைகடல் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்
பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்
நிலமறை வதுபோல் மலிர்புனல் தலைத்தலைஇ
மலைய இனங்கலங்க மலைய மயிலகவ
மலைமாசு கழியக் கதழு மருவி யிழியும்
மலிநீ ரதர்பல கெழுவு தாழ்வரை
மாசில் பனுவற் புலவர் புகழ்புல
நாவிற் புனைந்த நன்கவிதை மாறுமை
மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்;
புகைபூ, அவியா ரதனை யழல்பல ஏந்தி
நகையமர் காதலரை நாளணிக் கூட்டும்
வகைசாலும் வையை வரவு;

தொடிதோள் செறிப்பத் தோள்வளை யியங்கக்
கொடிசே ராத்திருக் கோவை காழ்கொளத்
தொகுகதிர் முத்துத் தொடைகவிழ்பு மழுக
உகிருங் கொடிறும் உண்டசெம் பஞ்சியும்
நகிலணி யளறு நனிவண்டல் மண்ட
இலையு மயிரு மீர்ஞ்சாந்து நிழத்த
முலையு மார்பு முயங்கணி மயங்க
விருப்பொன்று பட்டவ ருளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்
திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை யறைகெனும்
உரைச்சிறைப் பறையெழ ஊரொலித் தன்று ;

அன்று, போரணி யணியிற் புகர்முகஞ் சிறந்தென
நீரணி யணியின் நிரைநிரை பிடிசெல
ஏரணி யணியின் இளையரு மினியரும்
ஈரணி யணியின் இகல்மிக நவின்று
தணிபுன லாடுந் தகைமிகு போர்க்கண்
துணிபுன லாகத் துறைவேண்டு மைந்தின்
அணியணி யாகிய தாரர் கருவியர்
அடுபுன லதுசெல அவற்றை யிழிவர்
கைம்மான் எருத்தர் கலிமட மாவினர்
நெய்ம்மாண் சிவிறியர் நீர்மணக் கோட்டினர்
வெண்கிடை மிதவையர் நன்கிடைத் தேரினர்
சாரிகை மறுத்துத் தண்டா உண்டிகை
ஓரிய வுறுத்தர வூரூர் பிடந்திரீஇச்
சேரி யிளையர் செலவரு நிலையர்
வலிய ரல்லோர் துறைதுறை யயர

மெலிய ரல்லோர் விருந்துபுன லயரச்
சாறுஞ் சேறும் நெய்யும் மலரும்
நாறுபு நிகழும் யாறுவர லாறு ;
நாறுபு நிகழும் யாறுகண் டழிந்து
வேறுபடு புனலென விரைமண் ணுக் கவிழைப்
புலம்புரி யந்தணர் கலங்கினர் மருண்டு ;



மாறுமென் மலருந் தாருங் கோதையும்
வேருந் தூருங் காயுங் கிழங்கும்
பூரிய மாக்க ளுண்பது மண்டி
நாரரி நறவ முகுப்ப நலனழிந்து
வேறா கின்றிவ் விரிபுனல் வரவெனச்
சேறாடு புனலது செலவு ;

வரையழி வாலருவி வாதா லாட்டக்
கரையழி வாலருவிக் கால்பா ராட்ட
இரவிற் புணர்ந்தோ ரிடைமுலை யல்கல்
புரைவது பூந்தாரான் குன்றெனக் கூடார்க்கு
உரையோ டிழிந்துரா யூரிடை யோடிச்
சலப்படை யானிரவிற் றாக்கிய தெல்லாம்
புலப்படப் புன்னம் புலரியின் நிலப்படத்
தான்மலர்ந் தன்றே
தமிழ்வையைத் தண்ணம் புனல் ;

விளியா விருந்து விழுவார்க்குக் கொய்தோய்
தளிரறிந் தாய்தா மிவை;
பணிபொசி பண்பபண் டெல்லா நனியுருவத்
தென்னே துவள்கண்டீ
எய்துங் களவினி நின்மார்பிற் றூர்வாடக்
கொய்ததும் வாயாளோ கொய்தழை கைபற்றிச்
செய்ததும் வாயாளோ செப்பு;
புனைபுணை யேறத் தாழ்த்ததை தளிரிவை
நீரிற் றுவண்ட சேஎய்குன் றங் காமர்
பெருக்கன்றே வையை வரவு;

ஆமா மதுவொக்குங் காதலங் காமம்
ஒருக்க வொருதன்மை நிற்குமோ ஒல்லைச்
சுருக்கமு மாக்கமுஞ் சூளுறல் வையைப்
பெருக்கன்றே பெற்றாய் பிழை;

அருகு பதியாக அம்பியிற் றூழ்ப்பிக்குங்
குருகிரை தேரக் கிடக்கும் பொழிகாரில்



இன்னிள வேனி லிதுவன்றே வையைநின
வையை வயமாக வை;

செல்யாற்றுத் தீம்புனலிற் செல்மரம் போல
வவ்வுவல் லார்புணை யாகிய மார்பினை
என்னும் பனியா யிரவெல்லாம் வைகினை
வையை யுடைந்த மடையடைத்தக் கண்ணும்
பின்னு மலிரும் பிசிர்போல இன்னும்

அனற்றினை துன்பவிய நீயடைந்தக் கண்ணும்
பனித்துப் பனிவாரும் கண்ணவர் நெஞ்சங்
கனற்றுபு காத்தி வரவு ;

நல்லாள் கரைநிற்ப நான்குளித்த பைந்தடத்து
நில்லாள் திரைமூழ்கி நீங்கி யெழுந்தென்மேல்
அல்லா விழுந்தாளை எய்தியெழுந் தேற்றியான்
கொள்ளா வளவை எழுந்தேற்றாள் கோதையின்
உள்ளழுத்தி யாளெவளோ தோய்ந்தது யாதெனத்
தேறித் தெரிய வுணர்நீ பிறிதுமோர்
யாறுண்டோ இவ்வையை யாறு ;

இவ்வையை யாறென்ற மாறென்னை கையால்
தலைத்தொட்டேன் தண்பரங் குன்று.

சினவல்நின் னுண்கண் சிவப்பஞ்சு வாற்குத்
துனிநீங்கி யாடல் தொடங்கு துனிநனி
கன்றிடிற் காமங் கெடூஉ மகளிவன்

அல்லா நெஞ்ச முறப்பூட்டக் காய்ந்தே
வல்லிருள் நீய லதுபிழை யாகுமென
இல்லவ ராட இரந்து பரந்துழந்து
வல்லவ ரூட லுணர்த்தர நல்லாய்
களிப்பர் குளிப்பர் காமங் கொடிவிட
அளிப்ப துனிப்ப ஆங்காங் காடுப
ஆடுவார் நெஞ்சத் தலர்ந்தமைந்த காமம்
வாடற்க வையை நினக்கு.

வையைநீர் விழவணியிற் காதற்பரத்தை இற்பரத்தையுடன் நீராடினன் தலைமகனெனக் கேட்டுப் புலந்தாளைப் புலவி நீக்கிப்



புணர்ந்தானெனக் கேட்ட தலைமகள் வாயிலாகப் புக்க விறலிக்கு அவ்வையைநீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியுங்கூறி வாயின் மறுத்தது.

மருத்துவன் நல்லச்சுதனூர் இசை. பண்ணுப் பாலையாழ்.

## 1437. பரிபாடல் - 8.

மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புள்மிசைக் கொடியோனும் புங்கவ
மூர்வோனும்

மலர்மிசை முதல்வனும் மற்றவ
னிடைத்தோன்றி
உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்
மருந்துரை யிருவருந் திருந்துநூ லெண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரும் நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்றாகின்றுநின் காரண மாகப்
பரங்குன் றிமயக் குன்றம் நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த்தாமரை

மின்னீன்ற விளங்கிணருழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்குநின் குன்றின்
அருவிதாழ் மாலைச் சுனை ;

முதல்வநின் யானை முழக்கங் கேட்ட
கதியிற்றே காரின் குரல் ;

குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ
மதநனி வாரணம் மாறுமா றதிர்ப்ப

எதிர்குதி ராகின் றதிர்ப்பு மலைமுழை
ஏழ்புழை யைம்புழை யாழிசைகேழ்த் தன்ன

வினம்

வீழ்தும்பி வண்டொடு மிஞிறூர்ப்பச் சுனைமலரக்
கொன்றை கொடியிண ரூழ்ப்பக் கொடிமலர்
மன்றல மலர மலர்காந்தள் வாய்நாற
நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத்



தென்ற லசைவரூஉஞ் செம்மற்றே அம்மநின்
குன்றத்தாற் கூடல் வரவு ;

குன்ற முடைத்த ஒளிர்வேலோய் கூடல்
மன்றல் கலந்த மணிமுரசி னார்ப்பெழக்
காலொடு மயங்கிய கலிழ்கடலென
மால்கடல் குடிக்கு மழைக்குரலென
ஏறதிர்க்கு மிந்திர னிருமுரு மென
மன்ற லதிரதிர மாறுமா றதிர்க்குமநின்
குன்றங் குமுறிய வுரை ;

தூதேய வண்டின் தொழுதி முரல்வவர்
காதல்மு தூர்மதில் கம்பலைத் தன்று
வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி

நெடுமென் பணைத்தோட் குறுந்தொடி மகளிர்
ஆராக் காம மார்பொழிற் பாயல்
வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி
முடியா நுகர்ச்சி முற்றாக் காதல்
அடியோர் மைந்த ரகலத் தகலா
அலர்ஞெமல் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி
புலரா மகிழ்மறப் பறியாது நல்குஞ்
சிறப்பிற்றே தண்பரங் குன்று ;
இனிமன்னு மேதிலர் நாறுதி ஆண்டுப்
பனிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர்
மாலைக்கு மாலை வரூஉம் வரைசூள்நிற்
காலைப்போய் மாலை வரவு ;

இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்
பனிபொழி சாரலும் பார்ப்பாரும்...
துனியல் மலருண்கண் சொல்வேறு நாற்றங்
கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது
துனியல் நனிநீநின் சூள் ;
என்பாணி நில்நில் எலாஅ பாணி நீநின்சூள்

## நல்லந்துவனார் 793

சான்றாள ரீன்ற தகாஅத் தகாஅ மகாஅன்
ஈன்றாட் கொருபெண் இவள் ;

இருண்மையீ ருண்க ணிலங்கிழை யீன்ருட்கு
அரியளோ ஆவ தறிந்திலேன் ஈதா
வருபுனல் வையைமணல் தொட்டேன்
தருமணவேள்
தண்பரங் குன்றத் தடிதொட்டே னென்பாய்
கேளிர் மணலின் கெழுவு மிதுவோ
ஏழுலகு மாளி திருவரைமேல் அன்பளிதோ
என்னை யருளி யருள்முருகு சூள்சூளின்
நின்னை யருளி லணங்கான்மெய் வேல்தின்னும்
விறல்வெய்யோ னூர்மயில் வேல்நிழல் நோக்கி
அறவ ரடிதொடினு மாங்கவை சூளேல்
குறவன் மகளாணை கூறேலா கூறேல்
ஐய சூளி னடிதொடு குன்றொடு
வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்
யார்பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு
நீருரைசெய் நீர்மையில் சூளென்றி நேரிழாய்
கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை

நயவரு நறவிதழ் மதருண்கண் வாணுதல்
முகைமுல்லை வென்றெழில் முத்தேய்க்கும் வெண்பல்
நகைசான்ற கனவன்று நனவன்று நவின்றதை

இடுதுனி கையாறு எற்றுயர் கூரச்
சுடுமிறை யாற்றிசின் அடிசேர்ந்து சாற்றுமின்
மிக, ஏற்றுதுமல ரூட்டுது மவி
கேட்டுதும் பாணி யெழுதுங் கிணைமுருகன்
தாட்டொழு தண்பரங் குன்று ;
தெரியிழாய் செல்கென்று யெல்லாயாம் பெற்றேம்
ஒருவர்க்கும் பொய்யாநின் வாயிற்சூள் வெளவல்
பருவத்துப் பன்மாண்நீ சேறலிற் காண்டை
எருமை யிருந்தோட்டி யெள்ளீயுங் காளை
செருவஞ் செயற்கென்னை முன்னைத்தன் சென்னி
அருள்வயிறுற் றாங்கு மணிகையால் தாக்கி
நிரைவளை யாற்றிருஞ் சூள் ;

வளிபொரு சேட்சிமை வரையகத்தால்
தளிபெருகுந் தண்சினைய
பொழில்கொளக் குறையாமலரக்
குளிர்பொய்கை யளறுநிறைய
மருதநளி மணல் ஞெமர்ந்த
நனிமலர்ப் பெருவழிச்
சீறடியவர் சாறுகொள வெழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயுங் கூறுமிசை முழவமும்
மணியுங் கயிறு மயிலுங் குடாரியும்
பிணிமுக மூளப்படப் பிறவு மேந்தி
அருவரைச் சேராத் தொழுநர்
கனவிற் றொட்டது கைபிழை யாகாது
நனவிற் சேஎப்பநின் நளிபுனல் வையை

வருபுன லணிகென வரங்கொள் வோரும்
கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்துவோரும்

ஐயம ரடுகென அருச்சிப் போரும்
பாடுவார் பாணிச்சீரு மாடுவா ரரங்கத் தாளமும்
மஞ்சாடு மலைமுழக்கும்
துஞ்சாக் கம்பலைப்
பைஞ்சுனைப் பாஅ யெழுபாவையர்
ஆயித ழுண்க ணலர்முகத் தாமரை
தாட்டா மரைத்தோட் டமணியக் கயமலர்
எங்கைப் பதுமங் கொங்கைக் கயமுகைச்
செவ்வா யாம்பல் சென்னீர்த் தாமரை
புனற்று மரையொடு புலம்வேறு பாடுருக்
கூரெயிற்றூர் குவிமுலைப் பூவொடு
மாரனொப்பார் மார்பணி கலவி
அரிவைய ரமிர்தபானம்

உரிமை மாக்க ளுவகையமிர் துய்ப்ப



மைந்தர் மார்வம் வழிவந்த
செந்தளிர் மேனியார் செல்லல் தீர்ப்ப
எனவாங்கு,
உடம்புணர் காதலரு மல்லாருங்கூடிக்
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த
நெறிநீ ரருவி யசும்புறு செல்வம்
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா

தண்பரங் குன்றம் நினக்கு.

கடவுள் வாழ்த்து, மருத்துவன் நல்லச்சுதனார் இசை.
பண்ணுப் பாலையாழ்.

## 1438. பரிபாடல் - 11.

விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருள்தெரி
புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்
அங்கி யுயர்நிற்ப அந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்குப்பா லெய்த இறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியில் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனில்
எதிர்வரவு மாரி யியைகெனவிவ் வாற்றால்
புரைகெழு சையம் பொழிமழை தாழ
நெறிதரூஉம் வையைப் புனல்;

வரையன புன்னாகமும்
கரையன சுரபுன்னையும்
வண்டறைஇய சண்பகநிரை தண்பதம்
மனைமாமரம் வாள்வீரம்

சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்
தாய தோன்றி தீயென மலரா
ஊதை யவிழ்த்த வுடையித ழொண்ணீலம்
வேய்பயில் சோலை யருவி தூர்த்தரப்
பாய்திரை யுந்தித் தருதலா னுய்கோல்
வயவ ரரிமலர்த் துறையென்கோ

அரிமலர் மீப்போர்வை யாரந்தாழ் மார்பிற்
றிரைநுரை மென்பொகுட்டுத் தேமணச்
சாந்தின்
அரிவை யதுதானை யென்கோகள்
பருகு படிமிட றென்கோ பெரிய

ளுண் ணூஉப்

திருமருத நீர்ப்பூந் துறை ;

ஆநாள் நிறைமதி யலர்தரு பக்கம்போல்
நாளி ளுளின் நளிவரைச் சிலம்புதொட்டு
நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி
உலகுபயம் பகர வோம்புபெரும் பக்கம்

வழியது பக்கத் தமர ருண்டி
மதிநிறை வழிவதின் வரவு சுருங்க
எண்மதி நிறையுவா இருள்மதி போல
நாள்குறை படுதல் காணுநர் யாரே
சேணிகந்து கல்லூர்ந்த மாணிழை வையை
வயத்தணிந் தேகுநின் யாணரிரு நாள்பெற
மாமயி லன்னார் மறையிற் புணர்மைந்தர்
காமங் களவிட்டுக் கைகொள்கற் புற்றென
மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்
இல்லத்து நீதனிச் சேற விளிவரல்
எனவாங்கு,
கடையழிய நீண்டகன்ற கண்ணுளைக் காளை
படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்

இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப அடல்மதுரை
ஆடற்கு நீரமைந்த தியாறு ;

ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர்
மிளிர்குந்தமேந்துவோர்
கொள்வார்கோல்
கொள்ளக்கொடித்திண்டேரேறுவோர்

நல்லந்துவனார் 797

புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை

வெள்ளநீர் நீத்தத்து ளூர்பூர் புழக்குகரும்
கண்ணுருஞ் சாயற் கழித்தூப் போரை
வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரும்
மணம்வரு மாலையின் வட்டிப் போரைத்
துணிபிணர் மருப்பி னீரெக்கு வோரும்
தெரிகோதை நல்லார்தங் கேளிர்த் திளைக்கும்
உருகெழு தோற்ற முரைக்குங்கால் நாளும்
பொருகளம் போலுந் தகைத்தே பரிகவரும்
பாய்தேரான் வையை யகம் ;

நீரணி வெறிசெறி மலருறு கமழ்தண்
தார்வரை யகலத்தவ் வேரணி நேரிழை
ஒளிதிகழ்தகை வகைசெறி பொறி
புனைவினைப்பொலங் கோதையவரொடு
பாக ரிறைவழை மதுநுகர்பு களிபரந்து
நாகரினல் வளவினை வயவேற நளிபுணர்மார்
காரிகைமது வொருவரினொருவர் கண்ணிற் கவர்புறச்
சீரமை பாடற் பயத்தாற் கிளர்செவிதெவி
உம்ப ருறையு மொளிகிளர்வா னூர்பாடும்
அம்பி கரவா வழக்கிற்றே யாங்கதை
காரொவ்வா வேனில் கலங்கித் தெளிவரல்
நீரொவ்வா வையை நினக்கு ;

கனைக்கு மதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந்திங்கள் மறுநிறை யாதிரை

விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியின்



ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையல் மகளி ரீரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று
மையாட லாடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்
நீயுரைத்தி வையை நதி ;

ஆயிடை, மாயிதழ் கொண்டோர் மடமாதர் நோக்கினள்
வேயெழில் வென்று வெறுத்ததோள் நோக்கிச்
சாய்குழை பிண்டித் தளிர்காதிற் றையினள்
பாய்குழை நீலம் பகலாகத் தையினள்
குவளை குழைக்காதின் கோலச் செவியின்

இவள்செரீஇ நான்கு விழிபடைத்தா ளென்று
நெற்றி விழியா நிறைதிலக மிட்டாளே
கொற்றவைகோ லங்கொண்டோர் பெண் ;

பவள வளைசெறித்தாட் கண்டணிந்தாள்
குவளைப் பசுந்தண்டு கொண்டு ;

பச்சைக்

கல்லகா ரப்பூவாற் கண்ணி தொடுத்தாளை
நில்லிகா வென்பாள்போல் நெய்தற் றொடுத்தாளே
மல்லிகா மாலை வளாய் ;

தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள்
கண்டபொழுதிற் கடும்புனல் கைவாங்க
நெஞ்ச மவள்வாங்க நீடு புணைவாங்க

நேரிழை நின்றுழிக் கண்ணிற்ப நீரவன்
தாழ்வுழி யுய்யாது தான்வேண்டு மாறுய்ப்ப

ஆயத் துடனில்லா ளாங்கவன் பின்றொடரூஉத்
தாயத் திறமறியாள் தாங்கித் தனிச்சேறல்
ஆயத்திற் கூடென் றாற்றெடுப்பத் தாக்கிற்றே
சேயுற்ற கார்நீர் வரவு ;

## நல்லந்துவனார்

799

நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தா யென்மாரும்
கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல
விழுத்தகை பெறுகென வேண்டுது மென்மாரும்
பூவீ ழரியிற் புலம்பப் போகாது
யாம்வீழ்வா ரேம மெய்துக வென்மாரும்
கிழவர் கிழவிய ரென்றேழ் காறும்
மழலீன்று மல்லற்கேள் மன்னுக வென்மாரும்
கண்டார்க்குத் தாக்கணங்கிக் காரிகை காண்மின்
பண்டாரங் காமன் படையுவள் கண்காண்மின்
நீனெய்தாழ் கோதை யவர்விலக்க
பூவூது வண்டினம் யாழ்கொண்ட

நில்லாது
கொளைகேண்மின்

கொளைப்பொருள் தெரிதரக்கொளுத்தாமற்குரல்கொண்ட
கிளைக்குற்றவுழைச்சுரும்பின் கேழ்கெழுபாலையிசையோர்மின்
பண்கண்டு திறனெய்தாப் பண்டாளம்
பெறப்பாடிக்
கொண்டவின் னிசைத்தாளங் கொளைசீர்க்கும்
விரித்தாடுந்
தண்டும்பி யினங்காண்மின் தான்வீழ்பூ
நெரித்தாளை
முனைகெழு சினநெஞ்சின் முன்னெறிந்து
பின்னும்
கணைவர லொருதும்பி காய்சினத்
தியல்காண்மின் ;

எனவாங்கு,

இன்ன பண்பின் நின்றைந்நீ ராடல்
மின்னிழை நறுநுதல் மகள்மேம் பட்ட
கன்னிமை கனியாக் கைக்கிளைக் காம
இன்னியல்மாண் டேர்ச்சி யிசைபரி பாடல்
முன்முறை செய்தவத்தின் இம்முறை
யியைந்தேம்
மறுமுறை யமையத்து மியைக
நறுநீர் வையை நயத்தகு நிறையே.

வரைவுமலிந்ததோழி கன்னிப்பருவத்துத் தைந் நீராடத்

தவம் தலைப்பட்டேமென வையையைநோக்கித் தலைமகன் கேட்பச் சொல்லியது.

நாகனார் இசை. பண்ணுப் பாலையாழ்.



## 1439. பரிபாடல் - 20

கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்து
உடலே றுருமின மார்ப்ப மலைமாலை
முற்றுபு முற்றுபு பெய்துசூல் முதிர்முகில்
பொருதிகல் புலிபோழ்ந்த பூநுத லெழில்யானைக்
குருதிக்கோட் டழிகறை தெளிபெறக் கழீஇயின்று
காலைக் கடல்படிந்து காய்கதிரோன் போயவழி
மாலை மலைமணந்து மண்துயின்ற கங்குலான்
வானாற்று மழைதலைஇ மரனாற்று மலர்நாற்றம்
தேனாற்று மலர்நாற்றம் செறுவெயி லுறுகால
கானாற்றுங் கார்நாற்றம் கொம்புதிர்த்த கனிநாற்றம்
தானாற்றங் கலந்துடன் தழீஇவந்து தரூஉம் வையை ;

தன்னாற்ற மீது தடம்பொழில் தான்யாற்று
வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப
ஊரூர் பறையொலி கொண்டன் றுயர்மதிலில்
நீரூ ரரவத்தால் துயிலுணர் பெழீஇத்
திண்டேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப்பாண்டியிற் றிண்டே ரூரவும்
வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும்
கயமாப் பேணிக் கலவா ஊரவும்

மகளிர் கோதை மைந்தர் புனையவும்
மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்
முந்துறல் விருப்பொடு முறைமறந் தணிந்தவர்
ஆடுவார் பொய்த லணிவண் டிமிர்மணற்
கோடேற் றெருத்தத் திரும்புன லிற்குறுகி
மாட மறுகின் மருவி மறுகுறக்
கூடல் விழையுந் தகைத்துத் தகைவையை ;

புகைவகை தைஇயினார் பூங்கோதை நல்லார்
தகைவகை தைஇயினார் தார் ;

வகைவகை தைஇயினார் மாலை மிகமிகச்
சூட்டுங் கண்ணியு மோட்டு வலயமும்

நல்லந்துவனார்

இயலணி யணிநிற்ப வேறி யமர்பரப்பின்
அயலய லணிநோக்கி யாங்காங்கு வருபவர்
இடுவளை யாரமோ டீத்தா னுடனாகக்
கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு
நொந்தவள் மாற்றா ளிவளென நோக்கத்
தந்த கள்வன் சமழ்ப்பு முக்ங்காண்மின்
செருச்செய்த வாளி சீற்றத் தவையன்ன
நேரித ழுண்கணார் நிரைகா டாக
ஓடி யொளித்தொய்யப் போவாள் நிலைகாண்மின்
எனவாங்கு,
ஒய்யப்போ வாளை யுறழ்ந்தோளிவ் வாணுதல்
வையை மடுத்தாற் கடலெனத் தெய்ய
நெறிமணல் நேடினர் செல்லச் சொல் லேற்று
செறிநிரைப்பெண் வல்லுறழ்பு யாது
தொடர்பென்ன மறலினாள் மாற்றாள் மகள் ;
வாய்வாளா நின்றாள்
செறிநகை சித்தந் திகைத்து ;

ஆயத் தொருத்தி யவளை யமர்காமம்
மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை
பெண்மைப் பொதுமைப் பிணையிலி யைம்புலத்தைத்
துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த்தொட்டி
முற்றா நறுநறா மொய்புன லட்டிக்
காரிகைநீ ரேர்வயற் காமக் களிநாஞ்சில்

மூரி தவிர முடுக்கு முதுசாடி
மடமத ருண்கண் கயிறுக வைத்துத்
தடமென்றோட் டொட்டுத் தகைத்து மடவிரலால்
இட்டார்க்கு யாழார்த்தும் பாணியில் எம்மிழையைத்
தொட்டார்த்து மின்பத் துறைப்பொதுவி கெட்டதைப்
பொய்தல் மகளிர்கண் காண இருத்தந்திவ்
வையைத் தொழுவத்துத் தந்து அடித்திடித்து
மத்திகை மாலையா மோதி யவையத்துத்
தொடர்ந்தேம் எருது தொழில்செய்யா தோட





விடுங்கடன் வேளாளர்க் கின்று படர்ந்துயாம்

தன்மார்பந் தண்டந் தருமாரத் தாள்மார்பும்
நின்மார்பும் ஓரொத்த நீர்மையகொல் என்றுமுன்
தேடினு ளேசச் சிலமகளிர் மற்றதற்கு
ஊடினர் வையை யகத்து ;

சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க
மைந்துற்றாய் வெஞ்சொல் மடமயிற் சாயலை
வந்திக்க வாரென மனத்தக்க நோயிது

வேற்றாரை வேற்றார் தொழுத விளிவரவு
போற்றாய்கா ணன்னை புரையோய் புரையின்று
மாற்றாளை மாற்றாள் வரவு ;

அ... ...சொல் நல்லவை நாணாமல்
தந்து முழவின் வருவாய் நீ வாய்வாளா
எந்தையெனக் கீத்த இடுவளை யாரப்பூண்

வந்த வழிநின்பால் மாயக் களவன்றேல்
தந்தானைத் தந்தே தருக்கு ;

மாலை யணிய விலைதந்தான் மாதர்நின்
கால சிலம்புங் கழற்றுவான் சால
அதிரலங் கண்ணிநீ யன்பனெற் கன்பன்
கதுவா யவன்கள்வன் கள்விநா னல்லேன்
எனவாங்கு,
வச்சிய மானே மறலினை மாற்றுமக்கு
நச்சினா ரீபவை நாடறிய நும்மவே
சேக்கை யினியார்பாற் செல்வான் மனையாளாற்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா
தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்
இகழினுங் கேள்வரை யேத்தி யிறைஞ்சுவார்
நிகழ்வ தறியாது நில்லுநீ நல்லாய்
மகளிரை மைந்துற் றமர்புற்ற மைந்தர்

அகலங் கடிகுவே மென்பவை யார்க்கானும்
முடிபொரு ளன்று முனியல் முனியல்
கடவரை நிற்குமோ காமங் கொடியியலாய்

### நல்லழிசியார்

803

எனவாங்கு,
இன்ன துனியும் புலவியும் ஏற்பிக்கும்
தென்னவன் வையைச் சிறப்பு;

கொடியியலார் கைபோற் குவிந்த முகை
அரவுடன் றவைபோல் விரிந்த குலை
குடைவிரிந் தவைபோலக் கோளு மலர்
சுனைகழிந்து தூங்குவன நீரின் மலர்
சினைவிரிந் துதிர்ந்தவீப் புதல்விரி போதொடும்
அருவிசொரிந்த திரையிற் றுரந்து
நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
கடுமா களிறணத்துக் கைவிடுநீர் போலும்
நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடற்
கடிமதில் பெய்யும் பொழுது;
நாம மருடலும் நட்பும் தணப்பும்
காமமுங் கள்ளுங் கலந்துடன் பாராட்டத்
தாமமர் காதலரொ டாடப் புணர்வித்தல்
பூமலி வையைக் கியல்பு.

பருவவரவின்கண் தலைமகளாது ஆற்றாமைகண்டு தூதுவிடச்
சென்ற பாணன் தலைமகற்குக் கார்ப்பருவமும் வையை நீர்விழவணியும் கூறியது.

நல்லச்சுதனார் இசை. பண் காந்தாரம்.

## உகூகூ. நல்லழிசியார்

## 1440. பரிபாடல் - 16.

கரையே, கைவண் தோன்றல் ஈகை போன்மென
மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடும்
நெய்க்குடை தயிரின் நுரையொடும் பிறவொடும்
எவ்வயி னானு மீதுமீ தழியும்;
துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்
பொலம்புனை யவிரிழை கலங்கலம் புனல்மணி

வலஞ்சுழி யுந்திய இணைபிரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோ டொருங்குடன் ஆடுந்
தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே ;

செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலிற்
படுகண் இமிழ்கொளை பயின்றன ராடுங்
களிநா ளரங்கின் அணிநலம் புரையும் ;

காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉம்
நரந்த நறுமலர் நன்களிக் கும்மே
கரைபொழுகு தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோல் ;

கானலங் காவுங் கயமுந் துருத்தியுந்தேன்
தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்
பூத்தன்று வையை வரவு ;

சுருங்கையின் ஆயத்தார் சுற்று மெறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக் கண்டே
இருந்துகிற் றானையி னொற்றிப் பொருந்தலை
பூத்தனள் நீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்

தோற்றமோ ரொத்த மலர்கமழ் தண்சாந்தின்
நாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்து

இருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்
மகிழக் களிப்பட்ட தேன்தேறல் மாற்றிக்

குருகி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தனள் நங்கை பொலிகென நாணுதல்
வாய்த்தன்றால் வையை வரவு ;
மலையி னிழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி மடவார்
நனைசேர் கதுப்பினுள் தண்போது மைந்தர்
மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீனாரம் பூத்த வியன்கங்கை நந்திய



வானம் பெயர்ந்த மருங்கொத்தல் எஞ்ஞான்றும்
தேனிமிர் வையைக் கியல்பு ;

கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா வொளிகிளருண் கட்கெண்டை

பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்
செல்நீர் வீவயின் தேன்சோரப் பன்னீர்

அடுத்தடுத் தாடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தா ரகலத்தான்
எடுத்தவே யெக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றம்
கொடித்தேரான் வையைக் கியல்பு ;

வரையார்க்கும் புயல்கரை
திரையார்க்குமித் தீம்புனல்
கண்ணியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய ஈகைப் பயன்கொள்வான் ஆடலால்
நாணு ளுறையும் நறுஞ்சாந்துங் கோதையும்
பூத்த புகையு மவியும் புலராமை
மறுஅற்க வான மலிதந்து நீத்தம்
வறுஅற்க வையை நினக்கு.

காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில் வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயின்மறுத்தது.

நல்லச்சுதனார் இசை. பண் நோதிறம்.

1441. பரிபாடல் - 17.

தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை யசைத்த வேலன் கடிமரம்
பரவின ருரையொடு பண்ணிய இசையினர்
விரிமலர் மதுவின் மரம்நனை குன்றத்துக்
கோவெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
மாலை மாலை யடியுறை யியைநர்
மேலோ ருறையுளும் வேண்டுநர் யாஅர்



ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரலெழ
ஒருதிறம், யாணர் வண்டின் இமிரிசையெழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத
ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ
ஒருதிறம், அண்ணல் நெடுவரை யருவிநீர் ததும்ப
ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க
ஒருதிறம், வாடை யுளர்வயிற் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை யரிக்குரல் தோன்ற
மாறுமா றுற்றனபோல் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்ற முடைத்து ;

பாடல் சான்று பல்புகழ் முற்றிய
கூடலொடு பரங்குன்றினிடைக்
கமழ்நறுஞ் சாந்தின் அவரவர் திளைப்ப
நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து
மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியிற்
சோர்ந்தவிழ் இதழின் இயங்குமா றின்று
வசைநீங்கிய வாய்மையால் வேள்வியால்
திசைநாறிய குன்றமர்ந் தாண்டாண்டு
ஆவி யுண்ணு மகில்கெழு கமழ்புகை
வாய்வாய் மீபோ யும்பரிமை பிறப்ப
தேயா மண்டிலங் காணுமா றின்று
வளைமுன்கை வணங்கிறையார்
அணைமென்தோள் அசைபொத்தார்
தார்மார்பிற் றகையியலார்
ஈரமாலை யியலணியார்
மனமகிழ் தூங்குநர் பாய்புட னாடச்
சுனைமலர்த் தாதூதும் வண்டூத லெய்தா

அனையபரங் குன்றி னணி ;
கீழோர்,வயல்பரக்கும்வார்வெள்ளருவிபரந்தானாதீரா
மேலோர், இயங்குதலால் வீழ்மணி நீலஞ் செறுவுழக்குமரோ

நல்லாவூர்கிழார்

தெய்வ விழவுந் திருந்து விருந்தயர்வும்
அவ்வெள் ளருவி யணிபரங் குன்றிற்கும்
தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்கும்
கொய்யுளை மான்றேர்க் கொடித்தேரான் கூடற்கும்
கையூழ் தடுமாற்றம் நன்று ;

எனவாங்கு,
மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ
பணியொரீஇ நின்புக ழேத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்
ஏம வைகல் பெறுகயா மெனவே.

கடவுள் வாழ்த்து. நல்லச்சுதனார் இசை. பண் கோதிறம்.

## உ௱௭. நல்லாவூர்கிழார்

### 1442. அகநானூறு - 86. மருதம்

உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கட்

கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரித ழலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்



கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து

பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குற்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
இன்னகை யிருக்கைப் பின்யான் வினவலிற்
செஞ்சூட் டொண்குழை வண்கா து துயல்வர
அகமலி யுவகைய ளாகி முகன்இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீ ரோதி மாஅ யோளே.

வாயின் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக்கூடி யின்புற்றிருந்த தலைமகன் பண்டுநிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததூஉமாம்.

## 1443. நற்றிணை - 154. குறிஞ்சி

கானமுங் கம்மென் றன்றே வானமும்
வரைகிழிப் பன்ன மையிருள் பரப்பிப்
பல்குரல் எழிலி பாடோ வாதே
மஞ்சுதவ ழிறும்பிற் களிறுவலம் படுத்த
வெஞ்சின உழுவைப் பேழ்வா யேற்றை
அஞ்சுதக வுரறு மோசை கேளாது

துஞ்சுதி யோவில தூவி லாட்டி
பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்
நீரடு நெருப்பிற் றணிய இன்றவர்
வாரா ராயினோ நன்றே சாரல்
விலங்குமலை யாரா றுள்ளுதொறும்
நிலம்பரந் தொழுகுமென் நிறையில் நெஞ்சே.

இரவுக்குறித் தலைவன் சிறைப்புறமாக வரைவுகடாயது.



